# இந்தியா-சீன-பாகிஸ்தான்

ப. ராமஸ்வாமி

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
158, பவழக்காரத் தெரு · சென்னை-1.

# உள்ளுறை

## இமயமால்வரையும் இந்திய எல்லைகளும்

'உலகத்திலேயே உயர்ந்த மலைகளின் உறைபனி நிறைந்த கணவாய்களிலும் கொடுமுடிகளிலும் சுதந்தர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு பெரும் அரசியல் போராட்டம் வலுத்து வருகின்றது. சாதாரண மொழியில் அது எல்லைப் போராட்டம்; ஆழ்ந்து பார்த்தால் அது உலக ஆதிக்கியத்திற்கான நீண்ட காலப் போராட்டமேயாகும்.'

—ஜான் ஃபிரேஸர்

---

இந்தியாவின் எழில்முடி இமயமால்வரை; திருவடி கன்னியாகுமரி. தமிழ் நாட்டின் தலைநகரான சென்னையிலிருந்து 1,700 மைல் தூரத்திலுள்ளது இமயம். உலகின் மலையரசாக விளங்கும் இம்மலைத் தொடர் மேற்கிலிருந்து கிழக்கே 1,500 மைல் நீளம் பரவியுள்ளது. ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கடுக்காக விளங்கும் மலைகளின் குறுக்களவு 200 மைல்கள். மலைகளின் சிகரங்கள் பல ஐந்து மைலுக்கு மேல் உயரமுள்ளவை. 24,000 அடிகளுக்கும் மேலாக உயர்ந்துள்ள சிகரங்கள் 163 இருப்பதாகக் கணக்கெடுத் திருக்கிறார்கள். இயற்கையில் தானாகவே எழுந்து நிற்கும் இமயமால் வரை பல்லாயிரம் ஆண்டுகளாக வடதிசையில் நம் பாரத நாட்டின் பாதுகாப்புக் கோட்டையாக அமைந்துள்ளது.

**கௌரி சங்கர்**

இமாலயச் சிகரங்களில் 'எவரெஸ்ட்' என்று புகழ் பெற்ற **கௌரி சங்கர்** சிகரம் 29,028 அடி உயரமுள்ளது. இதைத் திபேத்தியர் 'உலக மாதா' என்று அழைப்பர். வையகத்திலேயே இதற்கு ஈடுமில்லை, எடுப்புமில்லை. இதன் உச்சியைக் கண்டு வெற்றி பெற வேண்டுமென்று பலர் பல்லாண்டுகளாக முயன்று வந்தனர். இதில் ஏறினோர் பலர், திரும்பி வந்தவர் சிலரே. இதன் ஐந்தரை மைல் உயரத்தையும் கடந்து உச்சியைக் காண்பது அரிது என்னும்படி, இந்த வெள்ளிப் பனிவரை ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக நிமிர்ந்து நின்றுகொண்டிருக்கிறது.

33 ஆண்டுகளாக 11 கூட்டத்தார் அரும்பெரும் முயற்சிகள் செய்து, இதில் ஏறிப் பார்த்தனர். இவர்களில் பெரும்பாலோர் ஆங்கிலேயர்; இரண்டு முறை மட்டும் ஸ்விட்சர்லாந்து வீரர்கள் படையெடுத்துப் பார்த்தார்கள். செங்குத்தான பாறைகள், பசுமையான பள்ளத்தாக்குகள், பனியாலும், மழையாலும், பனிப்புயலாலும் கணந்தோறும் மாறிமாறிக் காட்சியளிக்கும் குன்றுகள் ஆகியவற்றையெல்லாம் தாண்டிச் செல்வது செயற்கரும் செயலாகும். பனிக்கட்டிப் பாறைகளின்மீது பாதை கிடையாது. ஏறுவோர் பனிக்கட்டியில் தாமே கோடரியால் வெட்டிப் பாதையமைத்துக்கொள்ள வேண்டும். இடையில் சிறிது வெய்யில் அடித்தால், பனிக்கட்டி உருகிப் பாய்ந்து வெட்டிய பாதையை விரைவிலே அழித்து விடும். உயரே போகப் போகக் காற்று மென்மையாகி, மனித உயிருக்கு வேண்டிய பிராணவாயு குறைவாக இருக்கும். பிராணவாயு முதல், உணவுப் பொருள்கள், நடுக்கும் குளிருக்கு ஏற்ற உடைகள், மற்றும் தேவையான கருவிகள் முதலிய எல்லா

வற்றையும் மலையேறுவோர் தம்முடன் எடுத்துச் செல்ல வேண்டும். 20,000 அடிக்குமேல் செடிகள் முளைப்பதில்லை. மலைக் கழுகுகள்கூட 25,000 அடிக்கு மேலே பறந்து செல்வதில்லை. ஒருவகைச் செங்கால் காகங்கள் மட்டும் அதற்கு மேலும் 2,000 அடி பறப்ப தாகச் சொல்லுகிறார்கள். எனவே உயிர்ப் பிராணி களே இல்லாத உயரத்தில் மனிதன் ஏறுவதற்கு நவீன விஞ்ஞான வசதிகள் இன்றியமையாதவை.

கௌரி சங்கர் நேப்பாளம்-திபேத்து எல்லையிலுள் ளது. வடக்கே திபேத்திலிருந்தும், தெற்கே நேப்பா ளத்திலிருந்தும் அதன்மீது ஏறலாம். பதினோராவது தடவையாக 1953-இல் நேப்பாளத்திலிருந்து அதில் ஏறிய ஆங்கிலேயர் கூட்டத்தில் டென்சிங் என்ற நேப் பாளத்து 'ஷெர்ப்பா' வகுப்பைச் சேர்ந்த வீரரும் ஒருவர். அவரும் ஹில்லேரி என்ற ஆங்கிலேயரும், பலவித இன்னல்களையும் இடையூறுகளையும் தாண்டி, இறுதியாக மலையின் உச்சியை அடைந்தனர். உலகி லேயே முதன்முதலாகக் கௌரி சங்கர் சிகரத்தின் உச்சி யில் ஏறிப் பார்த்தவர் இவ்விருவரே. அம்முகட்டிலே அவர்கள் பதினைந்து நிமிடங்கள் தங்கி நின்றனர். டென்சிங் மலைச்சிகரத்தின் பனிக்கட்டியில் ஒரு துவாரம் செய்தார். புத்த பகவானைத் துதித்துக் கொண்டு, அதில் சில மிட்டாய்களையும், ஒரு நீலவண் ணப் பென்சிலையும் காணிக்கையாக அவர் போட்டு வைத்தார். பென்சில் அவருடைய அருமைப் பெண் குழந்தையின் அன்பளிப்பாம்.

டென்சிங் கூட்டத்தார் அடைந்த வெற்றிக்கு முன்னால் மலையேறிய கூட்டத்தார்களின் அநுபவங்கள் உதவியா யிருந்தன. எனினும், அசைவிலாத ஊக்க முடையவரை ஆக்கம் தானாகவே சென்றடையும் என்பதற்கு டென்சிங் கூட்டத்தாரின் வெற்றி

எடுத்துக் காட்டாகும். அவர்கள் வெள்ளிப் பனி வரையின் உச்சியைக் கண்டது உலகம் போற்றும் வெற்றியாயிற்று.

1965 மே மாதம் மூன்று இந்திய-நேப்பாளக் குழுவினர்கள் மும்முறை கௌரி சங்கரின் உச்சிவரை வெற்றியுடன் ஏறி இறங்கியுள்ளனர். மே மாதம் 20-ந் தேதி காப்டென் ஏ. எஸ். சீசமா, நவாங்கோம்பு என்ற இருவரும் அச்சிகரத்தின் உச்சியில் அரைமணி நேரம் தங்கியிருந்தனர். மே மாதம் 22-ந் தேதி சோனம் கியாட்சோ, சோனம் வங்கியால் என்ற இருவர் 50 நிமிடங்கள் உச்சியில் இருந்தனர். மூன்ருவது குழுவினரான ஸி. பி. வோராவும், அங்க் காமியும் மே 24-ந் தேதி காலை 10-45 மணிக்குச் சிகரத்தின் உச்சியிலேறிக் காட்சி யளித்தனர். இந்த அரிய வெற்றிகளை நம் ராஷ்டிரபதி யவர்களும், அமெரிக்காவும், சோவியத் ரஷ்யாவும், மற்றும் பிற நாட்டவர்களும் மிகவும் பாராட்டிப் புகழ்ந்துள்ளனர்.

இந்தக் கௌரி சங்கர் மலைக்கு 'எவரெஸ்ட்' என்ற பெயர் எப்படி உண்டாயிற்று? சென்ற நூற்ருண்டின் நடுவே இந்தியாவில் ஆங்கில ஆட்சி நடந்துகொண்டிருக்கையில், அரசாங்கத்தில் 'சர்வேயர் ஜெனர'லாக வேலை பார்த்தவரின் பெயர் ஸர் ஜியார்ஜ் எவரெஸ்ட் (1790-1866). அவர் இமயமலைத் தொடர்களைப் பற்றியும், அந்தப் பிரதேசத்தைப் பற்றியும் விரிவாக ஆராய்ந்து தெரிந்துகொள்ள ஏற்பாடுகள் செய்தவர். அவரை நன்றியுடன் நினைவு கொள்வதற்காக இமாலயத்தின் இணையற்ற சிகரத்திற்கு அவர் பெயரே சூட்டப்பெற்றது. அது முதல் உலகத்தார் அதை 'எவரெஸ்ட்' என்றே வழங்கலாயினர். ஆனல் பாரத மக்கள் அதற்கு இறைவன் பெயரையே சூட்டிக் கௌரி சங்கர் என்று அதனைப் போற்றிப் பரவி வருகின்றனர்.

## புனிதத் தலங்கள்

செடிகள் மரங்களை இந்தியர் சரியாகப் போற்றுவதில்லை யென்று ஓர் ஐரோப்பியர் ஒரு சமயம் குறை சொன்னார். அதற்குத் தமிழ் அறிஞர் ஒருவர், 'நீங்கள் போற்றுகிறீர்கள். நாங்கள் அவைகளை விழுந்து வணங்குகிறோம். எங்கள் தலவிருட்சங்களை வந்து பாருங்கள்!' என்று மறுமொழி கூறினாராம். நம்மவர்களுக்கு வாவியெல்லாம் தீர்த்தம், மலையெல்லாம் தெய்வம், கடற்கரைகளும், நதிக்கரைகளும் புனிதத் தலங்கள்! எனவே வானளாவி நிற்கும் இமயமால்வரை நம் நாடு முழுதுமே புனிதமாகப் போற்றப்படுவதில் வியப்பில்லை. நந்தா தேவி, பஞ்சசூலி, திரிசூலி, நங்க பர்வதம் முதலிய இமயச் சிகரங்கள் யாவும் புனிதமானவை. கௌரி சங்கரும் கயிலாய மலையும் அவைகளைவிட மேலான தெய்விகத் தலங்கள். சிந்து, கங்கை, யமுனை, பிரம்மபுத்திரா முதலிய புனித ஆறுகள் இமயத்திலேதான் உற்பத்தியாகின்றன. திருக்கேதாரம், பதிரிகாசிரமம், கங்கோத்திரி, யமுனோத்திரி, அமரநாதம், பசுபதிநாதம், துங்கநாதம் முதலிய இந்துக்களுக்கு முக்கியமான புனிதத் தலங்கள் பலவும் இமயத்தின் சாரல்களிலே அமைந்துள்ளன.

திருக்கயிலாயத்தில் கோயிலுமில்லை, தெய்வச் சிலையுமில்லை. அம் மலையையே இறைவன் வடிவமாக மக்கள் போற்றுகின்றனர். தொலைவில் நின்று அதை வாழ்த்தி வணங்குவதும், அதனைச் சுற்றி வருவதும் இம்மையில் பெறற்கரிய பேறு என்று கருதுகின்றனர்.

இமயமலைத் தொடர்கள் சிறிய இமயம், பேரிமயம், எல்லை கடந்த இமயம் என்று மூன்று பிரிவுகளாக உள்ளவை. இவைகளில் கயிலையங்கிரி எல்லை கடந்த இமயப் பகுதியைச் சேர்ந்தது. அது மேற்குத் திபேத்தின் எல்லையில் மானஸ சரோவர் என்னும்

மாபெரும் தடாகத்திற்கு வடபால் உள்ளது. அதன் சுற்றளவு 32 மைல், உயரம் 22,028 அடி. கண்டால் கண்குளிரும், எண்ணிஞல் உள்ள முருகும் அதன் திருக்கோலத்தைத் தரிசிப்பதற்காக ஆயிரக் கணக்சான இந்திய யாத்திரிகர்கள் ஆண்டுதோறும் ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் புனித யாத்திரை செய்வதுண்டு. இந்திய எல்லேயிலுள்ள அல்மோராவிலிருந்து கயிலாயம் போய்வர 500-மைல் நடக்கவேண்டும். சுமார் ஏழு வாரங்களில் இந்த யாத்திரையை முடிக்கலாம். காஷ்மீரிலிருந்தும் திபேத்திலிருந்தும் வேறு பாதைகளும் கயிலேக்குச் செல்கின்றன.

வெண்மையான உறை பனியால் மூடப் பெற்று, மோனத்தில் அமர்ந்துள்ள சிவபெருமாஞகக் காட்சியளிக்கும் கயிலேயைப் பற்றி,

> 'காவும் பொழிலும் கடுங்கற்சுனைசூழ்
> கயிலேமலேயாரே'

என்றும்,

> 'கண்ணுய் உலகுக்கு நின்ருய் போற்றி !
> கயிலே மலேயானே, போற்றி, போற்றி!'

என்றும், சம்பந்தரும் நாவுக்கரசரும் போற்றிப் பாடியுள்ளனர். கயிலேயைச் சிவவடிவாகவும், மானஸ சரோவரைச் சக்தி வடிவாகவும் வழிபடுவது மரபு. கயிலே மலேயிலிருந்து மானஸ சரோவர் 40 மைல் தொலேவிலுள்ளது. இத்தடாகத்தின் பரப்பு 200 சதுர மைல். இது கடல் மட்டத்திற்கு 15,000 அடி உயரே அமைந்துள்ளது. வடகோடியிலுள்ள கயிலேமால் வரையையும், கடல் போன்ற இத்தடாகத்தையும் இந்தியாவின் தென்கோடியிலுள்ள இந்துக்களும்கூட இறைவஞகவும் இறைவியாகவும் தொன்று தொட்டு இன்றுவரை பக்தியுடன் பரவி வருகின்றனர்.

## புதிய நிலைமைகள்

இமயத்தின் வட சாரலில் திபேத்து நாடும், தென் சாரலில் மேற்கே காஷ்மீரும், நடுவில் நேப்பாளம், சிக்கிம், பூட்டான் ராஜ்யங்களும், கிழக்கே வடகிழக்கு எல்லைப்புறப் பிரதேசமும் இருக்கின்றன. இவையெல்லாம் முற்காலத்தைவிட இப்போது இந்திய சரித்திரத்தையும் உலக சரித்திரத்தையுமே பாதிக்கக் கூடிய முக்கியத்துவம் பெற்றுள்ளன. பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியாவின் வட எல்லையைத் தாண்டிப் பகைவர்கள் உள்ளே வர முடியாதென்று எண்ணியிருந்தோம். இந்தியாவின் வடமேற்கில் மலைகளின் நடுவிலுள்ள கைபர் கணவாய் ஒன்றின் வழியாகவே ஆப்கானிஸ்தானம் முதலிய நாடுகளிலிருந்து அந்நியர் நுழைய முடியுமென்று, ஆங்கில ஆட்சிக் காலத்தில் அது ஒன்றையே பாதுகாத்துவந்தனர். நிலப்பகுதியில் இந்தியப் பாதுகாப்பு என்றால், கைபர் கணவாயின் பாதுகாப்பு என்றிருந்தது. நம் நாட்டின் மேற்கிலும், கிழக்கிலும், தெற்கிலும் கடல்கள் சூழ்ந்திருப்பதால், கடற்கரைகளைப் பாதுகாக்க ஆங்கிலேயர் தங்களுடைய திறமையுள்ள கடற் படையை நம்பியிருந்தனர். பர்மாவும், அதற்கும் தெற்கே மலாயும், சிங்கப்பூரும் அவர்களுடைய கைக்குள் ளிருந்தன. வடமேற்கில் ஆப்கானிஸ்தானுடன் போர் தொடுத்து, அதனுடன் அவர்கள் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தனர். எனவே சுமார் இரண்டு நூற்றாண்டுகளாக இந்திய எல்லைகளுக்குள் எந்தப் பெரிய யுத்தமும் ஏற்படாமல் அமைதி நிலவியிருந்தது.

## பாகிஸ்தான்

ஆங்கிலேயர் இந்தியாவைவிட்டு வெளியேறுகையில் நிலைமைகளெல்லாம் மாறிவிட்டன. மேற்

கிலும், கிழக்கிலும் இந்தியப் பூமியில் இரண்டு துண்டுகள் வெட்டப்பெற்று, மேற்குப் பாகிஸ்தான், கிழக்குப் பாகிஸ்தான் என்ற இரு பகுதிகள் ஒரு ராஜ்யமாக அமைக்கப்பெற்றன. இரண்டு பகுதிகளும் நீங்கலாக எஞ்சி யிருந்ததுதான் இந்தியா அல்லது பாரதம். இந்தப் பிரிவினை இந்தியாவின் பாதுகாப்பு முறையையே அடியோடு மாற்ற வேண்டிய நிலையை உண்டாக்கிவிட்டது. வடமேற்கில் முன்போல் கைபர் கணவாயைக் காக்கவேண்டிய. பொறுப்பு நீங்கிவிட்டது. அந்தக் கணவாய் பாகிஸ்தானுக்கு உரியதாகி விட்டது. பாகிஸ்தானின் இரு பகுதிகளுக்கும் இந்தியாவுக்கும் இடையிலுள்ள ஆயிரக்கணக்கான மைல் நீளமுள்ள எல்லைகளைப் பாதுகாக்கும் புதிய பொறுப்பு இந்தியாவுக்கு ஏற்பட்டது. பாகிஸ்தான் இந்தியாவுடன் நேசப்பான்மையோடு பரஸ்பரப் பாதுகாப்பு ஒப்பந்தம் முதலியவை செய்துகொள்வதா யிருந்தால், எல்லைப் பாதுகாப்பு சற்று எளிதா யிருந்திருக்கும். ஆனால் அவ்வாறில்லை. தோன்றும்போதே மதத்தை அடிப்படையாகக்கொண்டு பாகிஸ்தான் தனி இஸ்லாமிய நாடாகத் தோன்றிற்று. வேறு சில முஸ்லிம் நாடுகளுடன் நெருங்கிய உறவுகொண்டதோடு, மேலை நாடுகளின் இராணுவ முகாமிலும் அது சேர்ந்துள்ளது. இந்தியா எந்த முகாமிலும் சேராமல் நடுநிலை வகித்து வருகின்றது. இக்காரணங்களுக் கெல்லாம் மேலாக, விடுதலை பெற்ற ஒன்றரை மாதத்திற்குள்ளாகவே, காஷ்மீர் சம்பந்தமாக இரு நாடுகளுக்கும் பெரிய முரண்பாடும், பகைமையும், சண்டையும் தோன்றிப் பதினெட்டு ஆண்டுகளாக நிலைத்து நிற்கின்றன.

பாகிஸ்தானின் மொத்தப் பரப்பு 3,64,737 சதுர மைல். 1961-இல் அதன் மொத்த ஜனத்தொகை 9,38,12,000. நிலப்பரப்பில் மேற்குப் பாகிஸ்தான்

கிழக்குப் பாகிஸ்தானைப்போல் ஐந்தரை மடங்கு பெரிது. எனினும், கி. பாகிஸ்தானிலேயே ஜனத் தொகை அதிகம். மேற்கில் 4 கோடிக்கு மேலும், கிழக்கில் 5 கோடிக்கு மேலும் மக்கள் வசித்து வரு கின்றனர். ஆட்சி முறைக்காக மே. பா. 10 டிவிஷன் களாகவும், கி. பா. 3 டிவிஷன்களாகவும் பிரிக்கப் பெற்றுள்ளன.

1947 முதல் இதுவரை பாகிஸ்தானில் நிலையான அரசாங்கம் ஏற்படவில்லை. அரசியலில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. இந்தியாவில் வயது வந்த மக்கள் அனைவரும் வாக்குரிமை பெற்று, ஐந் தாண்டுகளுக்கு ஒரு முறையாக மூன்று பொதுத் தேர்தல்கள் அமைதியாக நடந்திருக்கின்றன. ஆனால் பாகிஸ்தானில் அவ்விதம் தேர்தலே நடைபெறவில்லை. மேலும், 1958 முதல் அங்கே இராணுவ ஆட்சி நிறுவப்பெற்று, சேனாபதியான தளபதி முகம்மது அயூப் கான் தலைவராக இருந்து வந்தார். 1965-இல் மீண்டும் அவரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளார்.

பாகிஸ்தான் நிறுவப்பெற்றது முதல் அது பல இன்னல்களைக் கடந்துவர நேர்ந்தது. இந்தியாவைப் போலவே அதுவும் இலட்சக் கணக்கான அகதிகளுக்கு வாழ வழி செய்யவேண்டியிருந்தது. இரண்டு திசை களில் இரு ராஜ்யங்களாக அமைந்திருப்பதால், இரண்டும் இணைந்து இயங்குவதில் இடையிடையே வேற்றுமைகள் தோன்றின. பாகிஸ்தானில் ஏராள மான பருத்தியும் சணலும் உற்பத்தியாகின்றன. ஆனால் அவைகளைப் பயன்படுத்தும் ஆலைகள் இந்தி யாவில் இருக்கின்றன. பெருந்தொழில் வளர்ச்சிக்கும், விவசாய அபிவிருத்திக்கும் மிகுந்த மூலதனம் தேவை. ஆனால் செல்வத்தில் பெரும்பகுதி இந்தியாவிலுள்ளது. ஆயினும் அமெரிக்காவின் பொருளுதவியும், இராணு

வத் தளவாட உதவியும்கொண்டு, பாகிஸ்தான் ஓரளவு வல்லமையுடன் விளங்குகின்றது. நாட்டின் வளர்ச்சிக்கு வேண்டிய தொழில்களின் அபிவிருத்தியைக் காட்டிலும், அமெரிக்கா முதலிய நாடுகளிலிருந்து போர்க் கருவிகளை வாங்கிக் குவித்துக்கொள்வதிலேயே பாகிஸ்தான் அரசாங்கம் கவனமாயிருந்து வருகிறது. மக்கள் பொருளாதார நிலையில் மேலோங்கிச் செழிப்புடன் வாழ்க்கை நடத்துவதற்கு இனிப் பல்லாண்டுகள் பாடுபட்டால்தான் முடியும்.

## காஷ்மீர்

இந்தியாவின் வடகோடி ராஜ்யமாகவுள்ளது **காஷ்மீர்**. இதன் பரப்பு சுமார் லட்சம் சதுரமைல். இது ஜம்மு, காஷ்மீர் என்ற இரு பகுதிகளைக் கொண்டது. காஷ்மீர் வெகு காலமாக ஒரு தனிச் சமஸ்தானமாக இருந்தது. 40 லட்சத்திற்கு மேற்பட்ட அதன் ஜனத்தொகையில் முக்கால் பகுதியினர் முஸ்லிம்கள் ; கால் பகுதியினர் இந்துக்கள். இந்து மன்னர் ஒருவர் அதை ஆண்டு வந்தார். 1947 ஆகஸ்ட் 15-ந் தேதி இந்தியாவும் பாகிஸ்தானும் சுதந்தரம் பெற்றபின், அக்டோபர் மாதத்தில் மலைவாசிகளான பாகிஸ்தானிகள் திடீரென்று காஷ்மீர்மீது படையெடுத்தார்கள். பின்னர் பாகிஸ்தானின் படைகளும் அவர்களுடன் சேர்ந்து தாக்கி வந்தன. இடையில் காஷ்மீர் மகாராஜா இந்திய அரசாங்கத்தின் உதவியை நாடினார். அக்டோபர் 26-ந் தேதி அவர் காஷ்மீர் இந்தியாவுடன் சேர்ந்து கொள்ள இசைவதாக உறுதிப்பத்திரத்தில் கையெழுத்திட்டார். அன்றே காஷ்மீருக்கு உதவியாக அதன் தலைநகரான ஸ்ரீநகருக்குத் தன் படைகளை அனுப்ப இந்திய அரசாங்கம் தீர்மானித்தது. காஷ்மீர் செல்வதற்குப் பாதைகள் சரியாயில்லாததால், விமானங்

களின் மூலம் போர் வீரர்களையும், ஆயுதங்களையும் அனுப்ப வேண்டியிருந்தது. வியக்கத் தகுந்த முறையில் அரசாங்கம் மிக விரைவிலே இப் பணியை நிறைவேற்றி வெற்றி கண்டது. மலைவாசிகள் தொடங்கிய காஷ்மீர்ச் சண்டை இந்தியா-பாகிஸ்தான் சண்டையாக நடைபெற்றது. பின்னர் ஐக்கிய நாடுகளின் தலையீட்டின் பேரில், போர் நிறுத்தம் ஏற்பட்டது. இரு திறத்தாரும் எந்த எல்லையில் நின்று போரிட்டார்களோ அதே எல்லையில் அமைதியாக நின்று கொண்டனர். பாகிஸ்தானின் துருப்புக்கள் காஷ்மீரின் வடக்கிலும் மேற்கிலும் கைப்பற்றிய பகுதி 'சுதந்தரக் காஷ்மீர்' என்ற பெயருடன் அவர்கள் வசமே இருந்தது. இது நாட்டின் மூன்றில் ஒருபகுதி இருக்கும். மற்றைப் பகுதி இந்தியாவின் வசமுள்ளது. போர்தான் நின்றதே ஒழிய, நிலையான சமாதானம் ஏற்படவில்லை. இரு பக்கத்துப் படைகளும் தத்தம் பகுதியைப் பாதுகாத்து நின்று வந்தன. போருக்குரிய ஆயத்தத்துடன் இரு படைவீரர்களும், ஆயுதங்கள், தளவாடங்களுடன், பதினெட்டு ஆண்டுகளாக எச்சரிக்கையுடன் நிற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. இதனால் நம் நாட்டுக்கு அளவிடற்கரிய பொருள் நஷ்டம் ஏற்பட்டிருப்பதோடு, நம் தேவைக்கு ஏற்றபடி அங்குள்ள படையினரை வேறிடங்களுக்கு அழைத்துச் செல்லவும் இயலாதிருக்கிறது. இந்தியாவின் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்வதில், முதற்கண் காஷ்மீரைப் பெரிதும் கவனிக்க வேண்டியிருக்கிறது.

சென்ற 17 ஆண்டுகளில் பாகிஸ்தான் மூன்றுமுறை இந்தியாவுடன் போர்தொடுத்தது. கட்ச் போராட்டம் நீங்கலாக, மற்ற இரண்டு போர்களும் காஷ்மீரிலேயே நடந்தன. முதல் போராட்டம் மேலே கூறியதுபோல 1947-இல் நிகழ்ந்தது. இரண்டாவது போர் இந்த

1965 ஆகஸ்டு 5-ம் தேதி தொடங்கியது. பாகிஸ்தானுக்கு எப்பொழுதும் காஷ்மீரிலேயே கண் இருக்கிறது.

### லடாக் பகுதி

இயற்கை எழில் மிகுந்த காஷ்மீர் இராஜ்யம் ஆப்கானிஸ்தானம், ஸோவியத் ரஷ்யா, சீனு ஆகிய நாடுகளின் எல்லையிலுள்ளது. சீன மாகாணமாகிய சிங்கியாங்கும், புதிதாகச் சீனு பிடித்துக் கொண்டுள்ள திபேத்தும் காஷ்மீரின் தென் கிழக்குப் பகுதியான லடாக் ஜில்லாவை அடுத்திருக்கின்றன. இந்திய நாட்டிலுள்ள மாவட்டங்களில் லடாக்தான் மிகப் பெரிய ஜில்லா. இதன் பரப்பு 45,762 சதுர மைல்; ஜனத்தொகை சுமார் 40,000 இருக்கக் கூடும். மக்கள் சம்பாக்கள், லடாக்கியர், பால்டிகள், டார்டுகள் முதலிய இனங்களைச் சேர்ந்தவர்கள். ஒரு சில முஸ்லிம்களைத் தவிர, மற்றையோர் அனைவரும் பௌத்த மதத்தினர். சமய வாழ்க்கையில் இவர்களுக்கும் திபேத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு.

தொடர்ச்சியான மலைகள் நிறைந்த இந்த லடாக் பகுதி 15,000 அடிக்கு மேல் உயரமான மலைச்சாரல்களிலுள்ளது. இங்கே உழுது பயிரிடவும், கால்நடைகளை மேய்க்கவும் ஏற்ற நிலங்களைக் காட்டிலும், கற்பாறைகளும் சரளை நிறைந்த பூமியுமே அதிகமாக உள்ளன. இப்பிரதேசத்தின் வலது புறத்தில் தென் கிழக்கிலிருந்து வடமேற்காக இமயம், ஜஸ்கார், லடாக், முஸ்டாக், க்யூன் லுன் என்ற மலைத் தொடர்கள் அமைந்திருக்கின்றன. இதன் நடுவே சிந்து நதி பாய்வதால், அதன் பள்ளத்தாக்கு மாவட்டம் நெடுகிலும் பரந்துள்ளது. சிந்து நதியின் உபநதிகளில் முக்கியமானவை லஸ்கர், ஷியோக் என்பவை. நுப்ரா, சாங் சென்மோ நதிகள் ஷியோக்கின் உபநதிகள். வட பகுதியில் சிப்சாப்,

கல்வான் ஆறுகள் ஓடுகின்றன. லடாக்கில் ஏராள மான ஏரிகள் இருக்கின்றன. இவைகளில் அம்டோகார், ஸ்பாங்கூர், பாங்காங், த்ஸொமொராரி முதலிய ஏரிகள் முக்கியமானவை. நாற்பது மைல் நீளமுள்ள பாங்காங் ஏரிதான் மிகப் பெரியது. ஸ்பாங்கூர் ஏரியில் மட்டும் நீர் உவர்ப்பாக உள்ளது.

மலைகளின் இடையேயுள்ள முக்கியமான கண வாய்கள், ஜாரா லா, சார்டிங் லா, லனக் லா, காராடாக் கணவாய், காரகோரம் கணவாய். (இங்கும் மற்ற இமயமலைப் பிரதேசங்களிலும் 'லா' என்று முடியும் பெயர்கள் கணவாய்களைக் குறிக்கும்.)

லடாக் ஜில்லாவில் லடாக், கார்கில், ஸ்கார்டு என்ற மூன்று தாலூகாக்கள் இருக்கின்றன. கிழக்குக்கோடியி லுள்ள லடாக் தாலூகா மட்டுமே 29,848 சதுரமைல் பரப்புள்ளது; இதன் ஜனத்தொகை 25,000. இதில் 110 கிராமங்கள் இருக்கின்றன. வடக்கிலிருந்து தெற்குவரை இதில் சோடா சமவெளி, அக்ஸாய் சின் என்ற வெண்பாலைவனம், லிங்க்ஸி டாங், சாங் சென்மோ பள்ளத்தாக்கு ஆகியவை அடங்கியுள்ளன. லிங்க்ஸி டாங், அக்ஸாய் சின் இரு பகுதிகளும் வனாந்தரங்கள். புல் பூண்டுகளைக்கூட அங்கே காண்பதரிது.

லடாக் ஜில்லாவைப் பற்றியும், லடாக் தாலூகா வைப் பற்றியும் நாம் விவரமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். ஏனெனில், இந்தப் பகுதியில், முக்கியமாக லடாக் தாலூகாவின் பெரும் பகுதியைத் தான் தனக்குரியது என்று சீனா சென்ற சில ஆண்டு களாக உரிமை கொண்டாடி வருகின்றது.

லடாக்கின் தட்ப வெப்பநிலை மனிதரைக் காட்டி லும் விலங்கினங்களுக்கே ஏற்றதாகும். பகலில் சூடு அதிகம், இரவில் குளிர் அதிகம், மழையும் சொற்பம். அடிக்கடி உறைபனி பெய்வதுடன், வரட்சியான

காற்றும் வீசுகின்றது. லடாக்கிய மக்களின் முக்கிய உணவு பார்லி அரிசி. கனமான கம்பளி உடைகள், ஆட்டுத் தோல் குல்லாய்கள், செம்மறி ஆட்டுத் தோலில் செய்த ஜோடுகள் முதலியவற்றை ஆடவர்கள் அணிகின்றனர். கோடு போட்ட கம்பளிப் பாவாடைகளும், கறுப்புக் கம்பளி ஜாக்கெட்டுகளும். ஆட்டுத்தோல்போர்வைகளும் பெண்டிரின்உடைகள். பெரும்பாலும் மக்களின் தொழில்கள் விவசாயமும், குடிசைத் தொழில்களும். 'யாக்' என்ற சடை மாடுகளும், கம்பளி ஆடுகளும், சாதாரணமான இரு வகைச் செம்மறி ஆடுகளும் வீடுகளில் வளர்க்கப் பெறுகின்றன. யாக்குகளுக்கும் நாட்டுப் பசுக்களுக்கும் தோன்றிய மாடுகளும் நிறைய இருக்கின்றன.

லடாக் மாவட்டத்தின் தலைநகர் லே. இந்நகர் ஸ்ரீநகரிலிருந்து கிழக்கே 160 மைல் தூரத்திலுள்ளது. இந்த லே நகரிலிருந்து திபேத்துக்கும் சிங்கியாங்குக்கும் பல பாதைகள் உண்டு. மற்றும் லடாக்கில் லானக் கணவாயிலிருந்து காராடாக் கணவாய் வழியாகச் செல்லும் ஒரு நெடுஞ்சாலையும், தெற்கே சார்டிங் கணவாயிலிருந்து ஸ்பாங்கூர், குஷுல் நகர், காரகோரம் கணவாய் * வழியாகச் செல்லும் ஒரு நெடுஞ்சாலையும் வடக்கே மாலிக்ஷா என்ற இடத்தில் சந்திக்கின்றன. சிங்கியாங்கிலிருந்து திபேத்துக்கு வந்து செல்வதற்கு இவை மிகவும் சுருக்கமான நேர்ப் பாதைகள். இவைகளைக் கைப்பற்றித் தன்வசம் வைத்துக்கொள்ள வேண்டுமென்று சீனு ஆசை கொண்டிருக்கின்றது.

சீனு ஆட்சி புரியும் சிங்கியாங், திபேத்துப் பிரதேசங்கள் ஆகியவைகளுக்கும் காஷ்மீருக்கும் உள்ள

* இதன் பொருள் 'கறுப்பு மலைக் கணவாய்.'

எல்லையின் நீளம் 1,100 மைல். இதில் பெரும்பகுதி லடாக் ஜில்லாவை ஒட்டியிருக்கின்றது. சிங்கியாங்கின் தென் எல்லை ஆரும் நூற்ருண்டிலிருந்து இதுவரை எக்காலத்திலும் க்யூன் லுன் மலைத் தொடர்களுக்குத் தெற்கே இருந்ததில்லை. லடாக்குக்கும் திபேத்துக்கும் உள்ள எல்லையில் முக்கியமான இடங்கள் பலவும் பத்தாம் நூற்ருண்டிலிருந்து இதுவரை ஒரே நிலையில் இருந்து வந்திருக்கின்றன. எனவே அக்ஸாய்சின் பீடபூமியும், லிங்க்ஸி டாங் சமவெளிகளும் ஒரு காலத்திலும் சீன ராஜ்யத்தில் சேர்ந்திருக்கவில்லை. இங்குக் குறிக்கப் பட்டிருக்கும் எல்லைகளுக்கு ஆதரவான தஸ்தாவேஜுகளும், வெளிநாடுகளில் வழங்கும் தேசப் படங்களும், சீனுவே முன்பு தயாரித்த படங்களும் ஏராளமாக இந்திய அரசாங்கத்திடம் உள்ளன. அவைகளெல்லாம் 1960-இல் சீன அதிகாரிகளிடம் காட்டி விவாதிக்கப் பெற்றுள்ளன. இப்போது சீனு உரிமை கொண்டாடும் பிரதேசங்களை லடாக்கில் வாழும் மக்களே உபயோகித்து வந்திருக்கிருர்கள்; அவைகளில் லடாக்-காஷ்மீர் அரசாங்கமே ஆட்சி புரிந்து வந்திருக்கிறது. அவைகளில் நிலத் தீர்வைகள் விதித்ததற்கும், வசூல் செய்ததற்கும் தொடர்ச்சியான ரசீதுகள் முதலிய ஆதாரங்களுள்ளன. அவைகளில் அமைந்திருந்த வர்த்தக மார்க்கங்கள் அனைத்தையும் காஷ்மீர் அரசாங்கமே நிர்வகித்து வந்திருக்கின்றது.

மேற்கூறிய எல்லைகள் 1842-இல் சம்பந்தப்பட்ட மூன்று நாடுகளும் செய்துகொண்ட ஒப்பந்த மூலம் உறுதி செய்யப்பெற்றுள்ளன. அப்பொழுது, சீனச் சக்கரவர்த்தியின் பிரதிநிதிகளும், காஷ்மீரின் பிரதிநிதிகளும், திபேத்து நாட்டின் மதத் தலைவராகவும் அரசாங்கத் தலைவராகவும் விளங்கிய தலாய் லாமாவின்

பிரதிநிதிகளும் அந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டிருக்கின்றனர். பின்னும் இந்திய அதிகாரிகள் எல்லைப் பிரதேசங்களைச் சுற்றிப் பார்த்து, அளவெடுத்து, எல்லைகளைத் தெள்ளத் தெளிவாகத் தரைப் படங்களில் வரைந்து வைத்திருக்கின்றனர். சீன அரசாங்கம் 1893, 1917, 1918 ஆகிய ஆண்டுகளில் வெளியிட்ட பூகோளப் படங்களிலும் இந்தியா குறித்துள்ள எல்லைகளே காணப்படுகின்றன. உண்மை இவ்வாறிருக்க, சீன அரசாங்கம் புதிதாக வெளியிட்ட படங்களில் காஷ்மீர் இராஜ்யத்தில் 5,000 சதுரமைல் அளவுள்ள பிரதேசத்தைச் சீனப் பிரதேசமாகக் காட்டுகின்றன. மேலும் காஷ்மீர் இந்தியாவுடன் இணைந்ததை ஸோவியத் ரஷ்யா அங்கீகரித்திருப்பினும், சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கம் இன்னும் அங்கீகரிக்க மறுத்து வருகின்றது; மறுப்பதுடன் நிற்காமல், காஷ்மீரின்மீது யாதொரு சட்டபூர்வமான உரிமையும் இல்லாத பாகிஸ்தானுடன் சீனு, காஷ்மீர் எல்லை பற்றி ஒப்பந்தம் பேசி முடிவு செய்திருக்கின்றது. இந்தியாவைச் சேர்ந்த காஷ்மீரின் ஒரு பகுதியைப் பாகிஸ்தான் சீனுவுக்குத் தானம் செய்ய முற்பட்டுவிட்டது!

1957 முதல் லடாக்கில் சீனருடைய ஊடுருவல் வேலைகள் நடந்து வந்தன. குர்னக் கோட்டையைச் சீனப் படையினர் கைப்பற்றிக் கொண்டனர். அக்ஸாய் சின் சமவெளியில் நூறு மைல் நீளத்திற்கு நெடிய சாலை ஒன்றை அவர்கள் அமைத்துக் கொண்டனர். அச்சமவெளியின் வட பகுதியில் நம் ரோந்துப் படையிலிருந்த சிப்பாய்களைக் கைது செய்து ஐந்து வாரங்கள் வரை வைத்திருந்து கொடுமைப் படுத்தினுர்கள். பாங்காங் ஏரிப் பக்கம் ஆயுதம் தாங்கிய சீனத் துருப்பினர் ஆறு இந்தியப் போலீஸ்காரரைக் கைது செய்ததுடன், ஸ்பாங்கூரில் முகாமும் அமைத்துக்கொண்ட

னர். தென் பகுதியில் சாங் சென்மோ பள்ளத்தாக்கில் சீன ராணுவத்தினர் 40 மைல் இந்தியப் பிரதேசத்துள் நுழைந்து, கோங்கா கணவாயருகில் இந்தியக் காவல் படையினரை எதிர்த்துச் சுட்டு 9 இந்திய உயிர்களைப் பலி வாங்கினர். மேலும் 10 பேர்களைக் கைது செய்து ஈவிரக்க மற்ற கொடுமை இழைத்தனர்.

நம் எல்லைக்குள் துணிந்து புகுந்து சீனர் இழைத்து வந்த கொடுமைகளை யெல்லாம் இந்திய அரசாங்கம் ஆட்சேபித்துச் சீன சர்க்காருக்குக் கண்டனங்கள் அனுப்பி வந்தது. மேற்கொண்டும் அமைதியான முறையில் எல்லைத் தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளலாம் என்ற நம்பிக்கையில் அது 1959, நவம்பர் 16-ந் தேதி ஓர் ஆலோசனை கூறிற்று. சீனு வாதாடும் எல்லை வரை இந்தியத் துருப்புக்களைத் தான் அனுப்பாமலிருப்பதாயும், அதே போல் சீனு தன் துருப்புக்களை வழக்கமான இந்திய எல்லைக்குள் அனுப்பாமலிருக்க வேண்டுமென்றும் கூறப்பட்டது. டிசம்பர் 17-ந்தேதி சீன சர்க்கார் இந்த ஆலோசனையை மறுத்துவிட்டதோடு, அக்ஸாய் சின் சமவெளியின் மேற்கிலும் தெற்கிலும் தன் படைகள் பரவி நிற்கவும், சாலைகள் அமைக்கவும் ஏற்பாடு செய்தது.

1960இல் வெந்நீர்க் கிணறுகள் என்றழைக்கப் படும் பிரதேசத்திற்குச் சீனர் வந்துவிட்டனர். 1961-ல் சூஷுல் நகர் அருகில் சீனர் நுழைந்ததுடன், டம்புகுரு அருகிலும் நியாக்ஜுவிலும் சீனத் துருப்புக்கள் மூன்று புதிய காவல் நிலையங்களை அமைத்துக்கொண்டு, அந் நிலையங்களுக்குச் சென்றுவர அவசியமான ரஸ்தாக்களையும் போட்டுக்கொண்டன. அக்டோபர் 31-ந்தேதி சீனர் எல்லையை ஊடுருவல் செய்து, ஏராளமான இந்தியப் பிரதேசத்தைச் சட்டவிரோதமாக ஆக்கிரமித்துக் கைவசப்படுத்தி வைத்துக் கொண்டிருப்பதை

யும், புதிய காவல் நிலையங்கள் அமைத்துக் கொண்டிருப்பதையும் கண்டித்து, மேற்கொண்டு ஆக்கிரமிப்பு வேலைகளை நிறுத்திக் கொள்ளும்படி இந்திய அரசாங்கம் சீன சர்க்காருக்குத் தெரிவித்துக் கொண்டது. ஆயினும் 1962-லும் ஆக்கிரமிப்புக்கள் குறையவில்லை. சிப்சாப் பகுதியில் சீனப்படை காவல் புரியத் தொடங்கியது. ஸாம்டோ, ஸ்பாங்கூர் ஆகியவைகளுக்கு அருகில் புதிய காவல் நிலையங்களும் அமைக்கப் பெற்றன.

1949-இல் கம்யூனிஸ்ட் சீன அரசாங்கம் ஏற்பட்டதிலிருந்து 1954 வரை இந்தியாவுக்கும் தனக்கும் உள்ள எல்லைகளில் எந்தப் பகுதியைப் பற்றியும் எவ்விதப் பிரசினையையும் எழுப்பவில்லை. 1954, ஏப்ரல் 29-ந்தேதி திபேத்து சம்பந்தமான வர்த்தகப் போக்குவரத்து விஷயங்கள் பற்றி இந்தியா சீனவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது. அந்தச் சமயத்திலோ, அதற்கு முன்பு அத்தகைய ஒப்பந்தம் செய்து கொள்வது பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடத்தும் பொழுதோ, சீன எல்லைப் பிரசினை எதையும் எழுப்பவில்லை. ஆனல் அந்த ஆண்டு, ஜூலை 17-ந்தேதி நமது உத்தரப்பிரதேச ராஜ்யத்திலுள்ள பாரா ஹோத்தி என்ற இடத்தில் நம் துருப்புக்கள் இருப்பது பற்றிச் சீன சர்க்கார் இந்திய அரசாங்கத்திற்கு ஆட்சேபம் தெரிவித்தது. பாரா ஹோத்தி சீன எல்லைக்குள் இருந்தது என்பது அதன் கூற்று. இந்திய எல்லைக்குள் தனக்கு உரியது என்று ஓரிடம் பற்றிச் சீன உரிமை கொண்டாடியது இதுவே முதல் தட்வை. ஆயினும் முன்னதாகவே சீன தயாரித்திருந்த தேசப் படங்களில் இந்திய வடமேற்கு எல்லைக்குள் லடாக்கில் 15,000 சதுரமைல் பிரதேசமும், வடகிழக்கு எல்லைக்குள் 36,000 சதுரமைல் பிரதேசமும் தன்னுடையவை என்று காட்டியிருந்தது.

இந்தியாவுக்கும் சீனுவுக்கு மிடையே உள்ள எல்லையின் நீளம் 2,400 மைலுக்கு மேற்பட்டது. இந்த நீண்ட எல்லைக்குள் இந்திய அரசாங்கம் தன் இடத்தில் தான் அதிகாரம் செலுத்தி வந்ததைச் சீனுவில் ஏற்பட்டிருந்த எந்த அரசாங்கமும் ஆட்சேபித்ததில்லை. இந்த எல்லை முழுதும் ஒப்பந்தங்களினுல் நிர்ணயமானது; தனியான ஒப்பந்தமில்லாத இடங்களில் வழக்கத்தால் அங்கீகரிக்கப் பெற்றது; பல பகுதிகளில் ஒப்பந்தம், வழக்கம் இரண்டினுலும் உறுதிப்படுத்தப் பெற்றது. ஆனுல் திடீரென்று சீன அரசாங்கம் ஓரிடத்தைப் பற்றி ஆட்சேபம் கூறியதில், அது விவரம் தெரியாமல் கண்டனம் அனுப்பி யிருப்பதாக இந்திய அரசாங்கம் எண்ணியது. எனவே இந்தியத் துருப்புக்கள் திபேத்து எல்லைக்குள் நுழையவில்லை யென்று மறுப்புக் கூறியதுடன், சீன அதிகாரிகள் இந்தியப் பிரதேசமாகிய பாராஹோத்திக்குள் வர முயன்றதற்கு ஆட்சேபமும் தெரிவித்துக் கொண்டது. இதன் பின்னர் இந்தியப் பிரதம மந்திரி நேரு அவர்கள் அக்டோபர் மாதம் சீனுவுக்கு விஜயம் செய்திருக்கையில், சீனப் பிரதமர் சூ என்-லாயிடம் சீனத் தேசப் படங்களில் சீன - இந்திய எல்லைகள் தவருகக் காணப்படுவதை எடுத்துக் காட்டினுர். அந்தப் படங்கள் அவ்வளவு முக்கியமானவை அல்லவென்றும், கம்யூனிஸ்டுகளுக்கு முந்திய கோமிண்டாங் சர்க்கார் தயாரித்தவைகளை அப்படியே திரும்ப அச்சிட்டிருப்பதாயும், புதிய சீனுவின் மக்கள் குடியரசு அவைகளைத் திருத்த நேரமில்லாமற் போய்விட்டதென்றும் சீனப் பிரதமர் மறுமொழி கூறினுர். திபேத்து சம்பந்தமாகச் சீனு இந்தியாவுடன் செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்திலும் இந்தியாவின் பிரதேச கௌரவத்தையும், பூரண ராஜாங்க

உரிமையையும் மதித்து நடப்பதாக உறுதி கூறியிருக்கின்றது.

பின்னர் 1955-லிருந்து 1958 வரை சீனர் கூட்டங்களும், துருப்புக்களும் இந்திய எல்லையைத் தாண்டி ஊடுருவல் செய்து பல இடங்களில் புகுந்து வந்ததைக் கண்டித்து இந்திய அரசாங்கம் பல புகார்களைச் சீன சர்க்காருக்கு அனுப்பி வந்தது. 17-1-59 தேதியில் அனுப்பிய புகாருக்குப் பதிலாக 23-1-59-ல் சீனப் பிரதமர் தெரிவித்த பதிலில்தான் அவருடைய அரசாங்கத்தின் கருத்து முழுதும் வெட்ட வெளிச்சமாயிற்று. சீன இந்திய எல்லை எக்காலத்திலும் நிர்ணயம் செய்து தீர்மானிக்கப்படவில்லை யென்றும், அது பற்றி இரு திறத்தாருக்குள்ளேயும் சில வேற்றுமைகள் இருக்கின்றன என்றும் அவர் தெரிவித்தார். 1954-லேயே சீன சர்க்கார் இந்தப் பிரசினையை எழுப்பாததற்குக் காரணம் அப்போது அதைத் தீர்த்துக்கொள்ளக் 'காலம் கனிந்திருக்கவில்லை' என்றும் அவர் விளக்கினார். இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் எல்லையாக விளங்கிய 'மக்மகான் கோடு' என்பதைச் சீன சர்க்கார் ஒருபோதும் ஏற்றுக்கொண்டதே யில்லை என்றும், சீனத் தேசப் படங்களில் காணப்படும் எல்லைகள் சரியானவை யென்றும், அவை முந்திய படங்களைப் பார்த்து முறைப்படி தயாரிக்கப் பெற்றவை யென்றும் அவர் முடிவாகக் கூறிவிட்டார்.

சீனப் பிரதமரின் கூற்று இரு நாடுகளின் எல்லைகள் அனைத்தையுமே விவகாரத்திற்குரியனவாகச் செய்துவிட்டது. மேலும் காஷ்மீர் இந்திய ராஜ்யம் என்று சீனு ஒப்புக் கொள்ளாததுடன், இமயமலைத் தொடர்களை ஒட்டியுள்ள நேப்பாளம், சிக்கிம், பூட்டான் ஆகிய ராஜ்யங்களின் எல்லைகளையும் அது புனராலோசனை செய்ய முன்வந்தது. பூட்டானுக்குக் கிழக்கே

தொடங்கி நமது அஸ்ஸாம் ராஜ்யம் முடிய நீண்டு, திபேத்து-இந்திய எல்லையாக விளங்கும் மக்மகான் கோடு என்பது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் காலத்தில் அவர்களுடைய நன்மைக்காக அமைத்துக் கொள்ளப் பெற்றது என்று சூ என்-லாய் அதையும் மறுத்து விட்டார். இந்த மறுப்பு எவ்வளவு நியாயம் என்பதைப் பின்னால் விவரமாகக் கவனிப்போம். மறுப்பு எந்தப் பிரதேசங்களை யெல்லாம் பாதிக்கின்றது என்பதை மட்டும் இங்கே காண்போம்.

### நேப்பாளம்

**நேப்பாளம்** இமயமலைச் சாரலிலுள்ள சுதந்தரமான நாடு. உலகில் இது ஒன்றுதான் தனி இந்து ராஜ்யம். இதன் பரப்பளவு 54,362 சதுர மைல்; ஜனத்தொகை (1958-இல்) 85 லட்சம். இது 34 மாவட்டங்களைக் கொண்டது. நாட்டின் மூன்றில் ஒரு பகுதியில் வனங்கள் நிறைந்திருக்கின்றன. மக்கள் இந்து மதத்தையும், பௌத்த தர்மத்தையும் பின்பற்றுபவர்கள். மதம் மாற்றுதலும், பசு வதையும் அங்கே சட்டப்படி தடை செய்யப்பட் டிருக்கின்றன. இம்மலை நாட்டில் வீரமாகப் போரிடக்கூடிய வகுப்பினர் அதிகம். நேப்பாளத்துக் கூர்க்க சிப்பாய்கள் இந்திய இராணுவத்திலும், பிரிட்டிஷ் இராணுவத்திலும் இருக்கின்றனர். பூர்வ சரித்திரம், சமயம், கலைப்பண்பு முதலியவற்றில் நேப்பாளத்திற்கு இந்தியாவுடனேயே தொடர்பு அதிகம். இன்றும் நேப்பாளிய மக்கள் இந்தியரும் தாமும் ஒரே நாட்டவர் என்றே கருதுகின்றனர்.

நேப்பாளத்தின் தலைநகரான **காட்மாண்டு** இந்திய எல்லையிலிருந்து 75 மைல் தூரத்திலுள்ளது. இங்கே பசுபதிநாதர் ஆலயம் இருப்பதால், இது இந்துக்களுக்குப் பெரிய க்ஷேத்திரமாகும். பற்பல இந்து,

பௌத்த ஆலயங்களும், செந்நிறமான கோபுரங்களும், வெண்மையான அரண்மனைகளும் கொண்ட இந்நகர் பனிபடர்ந்த இமாலயச் சாரலில் எங்கிருந்தோ திடீரென்று எழுந்து நிற்பதுபோல் எழிலுடன் காட்சி யளிக்கின்றது. பழைய சின்னங்கள் நிறைந்த இந்நகரில், மின்சார விளக்குகள், நல்ல சாலை, மோட்டார் கார்கள், பஸ்கள் முதலிய நவீன வசதிகளும் இருக்கின்றன.

காட்மாண்டு தவிர, இந்துக்களுக்கு முக்கியமான வேறு திருப்பதிகளும் நேப்பாளத்தி லிருக்கின்றன. சிறையிருந்த செல்வியாகிய சீதை இராமரைத் திருமணம் செய்துகொண்ட நகராகிய ஜனகபுரி அங்கேதான் இருக்கின்றது. முக்திநாத், லலிதபுரி, பக்தபுரி முதலிய இடங்களுக் கெல்லாம் இந்தியர் யாத்திரை செல்வது வழக்கமாயுள்ளது. மைசூரைப்போல் காட்மாண்டுவிலும் நவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது.

நேப்பாள மகாராஜாவின் முழுப் பெயர் 'மாட்சிமை தங்கிய மகா ராஜாதிராஜ கஜேந்திர வீர விக்ரம ஜங் பகாதுர் ஷா பகாதுர் ஷம்ஷீர் ஜங் தேவா'. எனினும், மகேந்திர மகாராஜா என்றே எல்லோரும் சுருக்கமாய்க் கூறுவர். இவர் வடமொழியில் பெரிய பண்டிதர்; நேப்பாளி மொழியில் கவிஞராகவும் விளங்குகிறார். ஆட்சியிலும் திறமை மிக்கவர். இவருக்கு முந்திய திரிபுவன மகாராஜா காலம் வரை நேப்பாளத்து மன்னர்கள், சொந்தமான அதிகார மில்லாமல், 'இராணக்கள்' எனப்படும் மந்திரிகளிடம் கூண்டுக் கிளிகளைப் போல் கட்டுப் பட்டிருந்தனர். பல இராணக்கள் மக்களுக்குக் கொடுமை செய்து வந்தனர். ஆனால் திரிபுவனர் பெயரளவில் மட்டும் மன்னரா யிருக்க விரும்பவில்லை. அதே சமயத்தில் மக்களும் பிரதம

மந்திரியான இராணுவின் ஆதிக்கியத்தை விரும்ப வில்லை. மன்னர் விருப்பமும் மக்களின் எழுச்சியும் ஒன்று சேர்ந்தன. மன்னர் திரிபுவனர், தமது குடும்பத்துடன் காட்மாண்டுவிலிருந்த இந்திய ஸ்தானிகர் காரியாலயத்தின் உதவியால், இரகசியமாக இந்தியாவுக்கு வந்து, புது டில்லியில் தங்கி யிருந்தார். அவரை ஆதரித்து எழுந்த மக்களின் திறமையாலும், சுதந்தர இந்தியாவின் உதவியாலும் நேப்பாளத்தில் இராணுக்களின் ஆட்சி ஒழிக்கப் பெற்றது. பின்னர் நேப்பாளத்துக்கு வெளியே வந்து 104 நாட்கள் தங்கியிருந்த மகாராஜா நேராகக் காட்மாண்டு சென்று பூரண ஆட்சிப் பொறுப்பையும் மேற்கொண்டார்.

மகேந்திர மகாராஜா இக்காலத்திய நிலைமைகளை யெல்லாம் அறிந்தவர். 'உலகம் முழுதும் மாறிக் கொண்டே வருகின்றது; நடுவிலேயுள்ள நாம் நிலையாக நின்றுகொண்டே யிருக்க முடியாது' என்பது அவர் கருத்து. நேப்பாளத்தில் புதிது புதிதான சாலைகளை அமைக்கவும், தொழில்களைப் பெருக்கவும், பல்கலைக் கழகம் அமைக்கவும், விவசாயத்தை விருத்தி செய்யவும், பாதுகாப்பைத் திருத்தி யமைக்கவும் அவர் ஆர்வம் கொண்டுள்ளார். இத்துறைகளில் இந்தியா இயன்ற அளவு பொருளையும் நிபுணர்களையும் அனுப்பி உதவிபுரிந்து வருகின்றது.

திபேத்தில் நிலைபெற்றுள்ள சீனுவும் நேப்பாளத்துடன் ஒட்டி உறவாடிக் கொண்டிருக்கின்றது. நேப்பாளப் பிரதம மந்திரி சமீபத்தில் சீனத் தலைநகரான பீகிங்குக்குச் சென்று சீன-நேப்பாள எல்லைபற்றி முடிவு செய்துகொண்டு வந்தார். அப்பொழுது இந்திய உள் நாட்டு மந்திரியா யிருந்த திரு. லால்பகதூர் சாஸ்திரியும் 1963, மார்ச் மாதத்தில் காட்மாண்டுக்குச் சென்று மன்னரையும், மந்திரிகளையும், மற்ற முக்கிய

மானவர்களையும் கண்டு கலந்து பேசிவிட்டு வந்தார். இடையிடையே இத்தகைய தொடர்புகள் நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றன.

## சிக்கிம்

**சிக்கிம்** இராஜ்யத்திற்கும் சீனுவின் திபேத் இராஜ்யத்திற்கும் இடையேயுள்ள எல்லை 140 மைலுக்கு மேலுள்ளது. சிக்கிமின் விஸ்தீரணம் 2,818 சதுர மைல். 1961இல் மக்களின் தொகை 1, 61,080. மக்களில் முக்கியமான வகுப்பினர் பூட்டியர், லெப்சர், நேப்பாளியர் எனினும், முக்கால் பகுதியினர் நேப்பாளியராவர். திபேத்தைப் போலவே இங்கும் மக்கள் பௌத்த தர்மத்தைச் சார்ந்தவர்கள். இங்கு ஏராளமான காடுகள் இருக்கின்றன. இந்நாடு மகாராஜாவின் ஆட்சியிலிருப்பினும், இதன் வெளிவிவகாரங்கள், பாதுகாப்பு, போக்குவரத்து முதலியவற்றின் பொறுப்பை உடன்படிக்கை மூலம் இந்திய அரசாங்கமே ஏற்றுக் கொண்டுள்ளது. இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதி சிக்கிமின் தலைநகரான காங்டோக்கில் தங்கியிருக்கிறுர்.

சிக்கிமுக்கும் திபேத்துக்கும் எப்பொழுதும் நெருங்கிய தொடர்புண்டு. திபேத்தியருக்கு ஆபத்தும் சங்கடமும் ஏற்படுகின்ற வேளைகளில் கூட்டம் கூட்டமான அகதிகளும், அரசியல்வாதிகளும் காங்டோக்குக்கு ஓடிவருவது வழக்கம். இந்தியாவின் சார்பில் திபேத்தியருடன் பேசவும் பழகவும் சிக்கிம் மகாராஜாவும், இளவரசரும் மிக்க உதவியாயிருந்து வந்தார்கள்.

சிக்கிம் இராஜ்யத்தின் உள்நாட்டு நிர்வாகத்திலும், வெளிவிவகாரங்களிலும் இந்தியாவின் நேரடியான கண்காணிப்பு உரிமையைச் சீன சர்க்கார் 1890-லேயே அங்கீகரித்திருந்தது. இந்த ஒப்பந்தம் சிக்கிம்-

திபேத்து எல்லையை வரையறுத்துள்ளது. படத்தில் வரையப்பட்டதோடு, இந்த எல்லைக்கோடு 1895-இல் தரையிலும் குறிக்கப்பட்டது. இந்த எல்லை பற்றித் தகராறில்லை யென்று 1959, டிசம்பர் 26-ந் தேதி அனுப்பிய குறிப்பு ஒன்றிலும் சீனு ஒப்புக்கொண்டிருக்கிறது.

சிக்கிமில் இப்போதுள்ள மகாராஜா பால்டன் தொண்டுப் நம்கியால். அவருக்கு 1965, ஏப்ரல் மாதம் 4-ம் தேதி முடிசூட்டு விழா நடந்தது. அப்பொழுதும் அவர் இந்தியாவின் நட்பால் சிக்கிம் சேமமாயுள்ளது என்று கூறினுர். அவருக்கு வயது 42.

## பூட்டான்

சிக்கிமுக்குக் கிழக்கே அடுத்திருக்கும் இராஜ்யம் பூட்டான். இது 18,000 சதுரமைல் அளவுள்ள நாடு. இங்கு வளம் மிகுந்த வனங்கள் ஏராளம். ஏழு லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் இங்கு வசிக்கிருர்கள். நாட்டை ஆள்பவர் மகாராஜா. மக்களிற் பெரும்பாலோர் பௌத்தர்கள். பிரிட்டிஷார் காலத்திலிருந்தே பூட்டானுக்கும் இந்தியாவுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. அத்தொடர்பு இப்பொழுது நீடித்திருக்கிறது. 1949-இல் இந்தியாவுடன் செய்து கொண்ட உடன்படிக்கையின்படி, பூட்டானின் உள் நாட்டு விவகாரங்களில் இந்தியப் பேரரசு தலையிடாமல், வெளிவிவகாரங்களை மட்டும் கவனித்து ஆலோசனை கூறிவருகின்றது. காங்டோக்கிலுள்ள இந்தியப் பிரதிநிதியே பூட்டானையும் கவனித்துக் கொள்கிருர். இந்தியாவுடன் பூட்டானின் வர்த்தகம் அதிகம். கஸ்தூரி, அரக்கு, மெழுகு முதலியவை அங்கிருந்து ஏராளமாக வெளியே அனுப்பப் பெறுகின்றன. மற்ற இமயப் பிரதேசங்களைப் போல, அங்கும் சடைமாடுகளான

யாக்குகளும் போனிக் குதிரைகளும் வளர்க்கப் பெறு கின்றன. காடுகளில் யானைகளும் ஏராளமா யிருக் கின்றன.

திபேத்துடன் பூட்டானுக்கு 300 மைலுக்கு மேற் பட்ட எல்லை யுள்ளது. இந்த எல்லை இமயமலைத் தொடரின் கொடுமுடிகளைத் தொடர்ந்து பரம்பரை யாக வழக்கத்தில் இருந்து வருவது. ஆனால் சீனத் தேசப்படங்களில் பூட்டானில் ஒரு பெரிய பகுதி வடக்கிலுள்ள திபேத்துடன் சேர்ந்ததாகக் காட்டப் பெற்றுள்ளது. இப்படித் தவறாகச் சேர்க்கப்பட்டிருந் ததைச் சீனாவுக்கு எடுத்துக் காட்டும் உரிமையும் கடமையும் இந்திய அரசாங்கத்தினுடையவை. ஏனெ னில் பூட்டானின் வெளி விவகாரங்களில் அதற்கே பொறுப்புண்டு. பூட்டான் அரசாங்கத்தின் சார்பில் இந்தியா முன்பே பல பிரசினைகளைச் சீன சர்க்காரிடம் தெரிவித்தும் வந்திருக்கிறது.

1960, ஏப்ரல் மாதம் சீனப் பிரதமர் சூ என்-லாய் புது டில்லிக்கு வந்து, நேரு அவர்களிடம் ஆறு நாட்க ளாகப் பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுதே எல் லைப் பிரசினைகளை முடிவு செய்ய முடியாமற் போன தால், அவைகளைப் பற்றி ஆராய்ந்து, விவாதித்து அறிவிப்பதற்காக இந்திய அதிகாரிகளும் சீன அதிகாரி களும் சந்தித்துப் பேசுவதற்கு ஏற்பாடு செய்யப் பட்டது. அதன்படி பீகிங்கிலும், டில்லியிலும் இரு பக்கத்து அதிகாரிகளும் சந்தித்துப் பேசினர். அந்தப் பேச்சிலிருந்து இந்திய நாட்டில் 50ஆயிரம் சதுர மைலுக்கும் மேற்பட்ட பிரதேசங்களைச் சீனா தனக்குரியவை என்று கோரியது தெளிவாகத் தெரிந் தது. தவிரவும் இந்தியாவின் எல்லைகளைப் பற்றிப் பேசுகையில், நம் அதிகாரிகள் சிக்கிம், பூட்டான் இராஜ்யங்களின் எல்லைகளைப் பற்றியும் எடுத்துரைக்க

நேர்ந்தது. ஆனுல் சீன அதிகாரிகள் அதற்கு இடம் கொடுக்கவே மறுத்துவிட்டனர். சிக்கிம், பூட்டானின் எல்லைகள் இந்திய-திபேத்து எல்லேயோடு தொடர் புள்ளவை. அவைகளேப் பற்றிப் பேச இந்தியாவுக்குத் தான் உரிமையுண்டு. எனினும் சீனர் தம் பிடிவா தத்தை விடவில்லே.

சூ என்-லாய் டில்லியிலிருந்த பொழுது ஏப்ரல் 25இல் பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டியளிக்கை யில், 'பூட்டான், சிக்கிமுடன் இந்தியாவுக்குள்ள சம்பந் தத்தைச் சீன மதிக்கின்றது' என்று தெளிவாகக் கூறி யிருந்தார். பல நிருபர்கள் இதை உடனே குறித்து வைத்திருக்கிருர்கள். சீனப் பிரதமரின் பேச்சு முழு தும் ஒலிப்பதிவு செய்தும் வைக்கப் பெற்றுள்ளது. இத்தனே யிருந்தும், அவரும், சீன அதிகாரிகளும் பின்னுல் மாறிப் பேசத் தொடங்கிவிட்டனர். சீனப் பத்திரிகைகள் மந்திரியின் கூற்றில் 'சம்பந்தத்தை' என்ற சொல்லே 'நியாயமான சம்பந்தத்தை' என்று திரித்து வெளியிட்டன. இந்தியா எடுத்துக் காட்டும் உறவுகள் யாவும் நியாயமற்றவை என்று பின்னுல் மறுத்து விடுவதற்காகவே இவ்வாறு செய்யப்பட்டது என்பது தெளிவு.

**1960**, செப்டம்பர் 22-ந் தேதி சீனக் காவற்படை ஒன்றும், **1961**இல் சீனர் கூட்டம் ஒன்றும் ஜெலெப் லா கணவாயைத் தாண்டி சிக்கிம் நாட்டில் நுழைந்தன. இவைகளேப் பற்றி இந்திய அரசாங்கம் ஆட்சேபம் தெரிவித்தது.

## நடுப் பகுதி

திபேத்து-இந்திய எல்லேயின் நடுப்பகுதி இந்தியா வின் வட பகுதியிலுள்ள உத்தரப் பிரதேசம், இமா சலப்பிரதேசம், பஞ்சாப் ஆகிய மூன்று ராஜ்யங்களின்

எல்லையாகும். இந்தப் பகுதியிலும், இதற்கு அடுத்துள்ள நம் வடகிழக்கு எல்லைப் பிரதேசத்திலும் எல்லைகள் அமைந்திருப்பது சர்வதேச முறைகளின்படி உள்ளவை. அவை இயற்கையான நதி நீர்ப்பிரிவுக் கோட்டை அநுசரித்துச் செல்லுகின்றன. நதிப் படுகைகளின் நடுவே நதிகளின் போக்கை அநுசரித்து இரு பக்கத்து நாடுகளும் எல்லை யமைத்துக் கொள்வதே தொன்று தொட்டு நடந்து வரும் முறை. மலை முகடுகளிலும், சாதாரணச் சமவெளிகளிலும் அமைக்கும் எல்லைகளிலே சந்தேகம் நேர்ந்தாலும், நதிப் படுகைகளிடையே அமைக்கும் எல்லைகள் ஐயப்பாட்டிற்கே இடமில்லாதவை.

நடுப் பகுதியில் திபேத்தை ஒட்டியிருக்கும் நம் இராஜ்யங்களில் உத்தரப் பிரதேச எல்லை, ஒருபுறம் சட்லெஜ் நதிக்கும், மற்ளெரு புறம் கங்கை ஆற்றுக்கும் இடையிலுள்ள திட்டுக்களைத் தழுவிச் செல்லுகின்றது. இமாசலப் பிரதேசத்தின் எல்லை சட்லெஜ் நதியின் கிழக்கிலும் மேற்கிலும் பாய்ந்து கொண்டிருக்கும் கிளை நதிகளின் நீர்ப் பிரிவுப் போக்கைத் தழுவிச் செல்லுகின்றது; பஞ்சாபின் எல்லை பாராசு, ஸ்பிதா நதி தீரங்களைப் பிரித்து நிற்கும் பெரிய மேட்டு நிலத்தை ஒட்டிச் செல்லுகின்றது.

இந்த மத்தியப் பகுதியில் இந்திய எல்லைக்குட்பட்ட நதித் திட்டுக்களிலுள்ள நெலாங்ஜடங், பாராஹோத்தி, லாப்தால், சாங்சாமல்லா என்ற பிரதேசங்கள் திபேத்து நாட்டைச் சேர்ந்தவை யென்று சீன சர்க்கார் உரிமை கொண்டாடுகின்றது. நெலாங்ஜடங் 700 சதுர மைல் பரப்புள்ளது. பாராஹோத்தி ஒன்றரைச் சதுர மைல் அளவுள்ள பிரதேசம். லாப்தால், சாங்சாமல்லா இரண்டும் உத்தரப் பிரதேசத்தில் அல்மோரா ஜில்லாவிலுள்ளவை.

நடுப் பகுதியின் எல்லை இயற்கையான பூகோள அமைப்பை அடிப்படையாய்க் கொண்டிருப்பதுடன், பழைய சரித்திரம், இலக்கிய வரலாறுகள், பரம்பரையாக வந்த மத சம்பிரதாயங்கள் முதலியவையும் அதற்கு அரணாக விளங்குகின்றன. சீனா கோரும் பிரதேசங்கள் யாவும் சரித்திர ஆரம்பக் காலத்திலிருந்தே இந்திய ராஜ்யங்களோடு சேர்ந்திருந்தவை; இந்திய மன்னர்களால் பரிபாலிக்கப்பட்டவை. இமயமலைத் தொடரின் நதிப் படுகை வழியாகச் செல்லும் இவ்வெல்லை பற்றிச் சென்ற 150 ஆண்டுகளாக அப் பகுதியில் சுற்றி ஆராய்ச்சி செய்தவர்கள் எழுதி வைத்துள்ள வரலாறுகளும், எண்ணிலடங்காத தஸ்தாவேஜுகளும் ஆதாரங்களாக விளங்குகின்றன. சீனருடன் விவாதம் செய்கையில், நம் அதிகாரிகள், அவர்கள் கோரிய ஒவ்வொரு பிரதேசமும் இந்தியர் ஆட்சியிலிருந்து வந்ததை ஆதாரங்களுடன் விளக்கமாக எடுத்துக் காட்டியுள்ளனர்.

## வடகிழக்குப் பிரதேசம் (நேபா)

நமது வடகிழக்குப் பிரதேச ஏஜன்ஸியை (North Eastern Frontier Agency) ஆங்கிலத்தில் சுருக்கமாக நேபா (NEFA) என்று குறிப்பிடுவது வழக்கம். இந்த நேபா என்ற பெயரே எல்லோருக்கும் விளங்கும் பெயராக நிலைத்துவிட்டது. இப்பிரதேசம் மத்திய சர்க்காரின் நிர்வாகத்திலுள்ளது. இது வடகிழக்கு ராஜ்யமான அஸ்ஸாமின் பகுதியா யிருப்பினும், எல்லைப்புறமாக இருப்பதன் முக்கியத்தைக் கருதி இது இந்திய ராஷ்டிரபதியின் நேர் பார்வையிலுள்ளது. அஸ்ஸாமிலுள்ள கவர்னரே ராஷ்டிரபதியின் சார்பில் இதைத் தனியாகக் கவனித்துக்கொள்கிறார்.

அஸ்ஸாம் இராஜ்யம் நம் இராஜ்யங்களில் மிகவும்

முக்கியமான ஒன்று. அங்கு ஏராளமான நிலக்கரியும், பெட்ரோல் எண்ணெயும் கிடைப்பதுடன், மலைச் சாரல்களில் இலட்சக்கணக்கான ஏக்கர்களில் தேயிலை பயிராகின்றது. நம் ஏற்றுமதிகளில் இத் தேயிலை முக்கியமான பொருளாகும். அரசாங்கத்திற்குச் சொந்தமான 6,350 சதுரமைல் காடுகள் இருக்கின்றன. வயிரம் பாய்ந்த நல்ல மரங்களும், பிரம்பும் காடுகளில் கிடைக்கின்றன. மற்றும் நெல், எண்ணெய்க்குரிய விதைகள், கரும்பு, கடுகு, சணல், பருத்தி முதலியவையும் அஸ்ஸாமில் ஏராளமாக உற்பத்தி செய்யப்படுகின்றன. பட்டு உற்பத்தியும், கைத்தறி நெசவுமே அங்குக் குடிசைத் தொழில்கள். பெரிய ஆலைத் தொழில்களெல்லாம் இனிமேல்தான் ஏற்படவேண்டும். அஸ்ஸாமின் ஒரு பகுதியான நாகாலாந்து என்ற நாகர்கள் வசிக்கும் மலைப் பிரதேசம் இப்போது தனி ராஜ்யமாக விளங்குகின்றது. நாகர்கள் அடிக்கடி கலகம் செய்து இந்திய அரசிலிருந்தே வெளியேறுவதாகக் கிளர்ச்சி செய்து வந்தார்கள். அதனால் நாகாலாந்து தனித்து விசேட முன்னேற்றமடைவதற்காக மத்திய அரசாங்கமும், நம் கிழக்கு மண்டல ராஜ்யங்களான அஸ்ஸாம், மேற்கு வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகியவையும் சேர்ந்து உதவி புரிதல் அவசியம். நேபாவைச் சேர்த்து அஸ்ஸாமின் மொத்த விஸ்தீரணம் 85 ஆயிரம் சதுரமைல்கள்; மக்களின் எண்ணிக்கை 1,18,60,059.

நேபாவின் தனி விஸ்தீரணம் 31,438 சதுரமைல். இதில் காமெங், திராப், சுபன்ஸிரி, சியாங், லோஹித் என்ற ஐந்து எல்லைப்புற டிவிஷன்கள் அடங்கியிருக்கின்றன. இங்கு வசித்து வரும் மலைஜாதியினரான மோன்பா, அகா, டப்ளா, மிரி, அபார், மிஷ்மி வகுப்பினர்களுக்கும் அஸ்ஸாமிலுள்ள மலைஜாதியினருக்கும்

நெருங்கிய இன ஒற்றுமைகளுண்டு. இவர்கள் திபேத்திய இனங்களைச் சேர்ந்தவரல்லர்.

நேபாவில் இந்திய அரசாங்கத்தின் அதிகாரம் நெடுங்காலமாகத் தொடர்ந்து நடைபெற்று வருவதைத் தவிர, திபேத்துக்கு அங்கு எந்தக் காலத்திலும் அதிகாரம் இருந்ததில்லை. நேபாவின் வட எல்லை தான் சரித்திரப் புகழ் பெற்றுவிட்ட மக்மகான் கோடு. இந்த எல்லை பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தில் வேலை பார்த்து வந்த தளபதி ஸர் ஹென்றி மக்மகான் (1862—1949) என்ற அதிகாரியால் நிர்ணயிக்கப் பெற்றதால், இதற்கு அவருடைய பெயரே வைக்கப் பெற்றுள்ளது.

திரு. மக்மகான் இந்தியாவிலேயே பிறந்த ஐரிஷ் வமிசத்தினர். அவருடைய முன்னோர்கள் பலர் இந்தியாவில் பணியாற்றியவர்கள். அவர்களைப் பின்பற்றி மக்மகானும் பல பதவிகளில் இருந்து இந் நாட்டுக்கு அரிய தொண்டுகள் செய்து வந்தவர். இந்திய அரசியல் இலாகாவில் அவர் 24 ஆண்டுகள் சேவை செய்தார். மலை நாடுகள், காடுகள் முதலியவற்றைச் சுற்றிப் பார்த்துப் பூதத்துவத்தை ஆராய்ந்து பார்ப்பதில் அவருக்குப் பெரு விருப்பம் உண்டு. இமயமலைப் பிரதேசங்கள், பஞ்சாப், ஆப்கானிஸ்தானம், காபுல், பலுசிஸ்தானம் முதலிய பிரதேசங்களைப் பற்றி அவர் பல விஷயங்களை ஆராய்ந்து தெரிந்து வைத்திருந்தார். எல்லைகள் வகுத்து நிர்ணயம் செய்வதில் அவர் வல்லவர்.

1910-இல் சீனு திபேத்தின் மீது படையெடுத்ததில் சீனத் துருப்புக்கள் அஸ்ஸாம்-திபேத்து எல்லையில் நடமாடி வந்ததால், அந்தப் பிராந்தியங்கள் அனைத்தையும் சுற்றிப் பரிசீலனை செய்து, துல்லியமான எல்லைக் கோட்டை அமைக்க வேண்டியது அவசியமாயிருந்தது. மாமூலாக உள்ள எல்லையே யென்றாலும்,

அதை நிர்ணயம் செய்ய இந்திய அரசாங்கம் முன்வந்தது. பல பிரதேசங்களும் அளக்கப் பெற்றன. இமய மலைத் தொடரின் உச்சி வழியாகத் திபேத்துப் பீட பூமிக்கும் தெற்கு மலைப் பிரதேசத்திற்கும் இடையே இயற்கையான எல்லை வகுக்கப் பெற்றது.

இந்த எல்லை பற்றி இந்தியா, திபேத்து, சீனா ஆகிய மூன்று அரசாங்கங்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதிகள் ஸிம்லாவில் கூடி, 1913, அக்டோபரிலிருந்து 1914, ஜூலை மாதம்வரை ஆராய்ந்து முடிவு செய்தனர்: பூட்டானுக்குக் கிழக்குப் பகுதியில் இந்திய-திபேத்து எல்லையை இந்தியா, திபேத்து ஆகிய இரு நாட்டுப் பிரதிநிதிகளும் உறுதி செய்துகொண்டனர். வடகிழக்கு எல்லையைக் காட்டும் இரண்டு பெரிய பூகோளப் படங்களில் எல்லைக் கோடு வரைந்துகொள்ளப்பட்டது. திபேத்தியப் பிரதிநிதி லான்சென் சத்ரா எல்லைக் கோட்டை ஒப்புக்கொள்ளும்படி லாஸா தலைநகரிலிருந்து தமது அரசாங்கம் உத்தரவு அனுப்பியிருப்பதாகத் தெரிவித்தபின், இரு நாட்டுப் பிரதிநிதிகளும் அவைகளில் கையெழுத்திட்டு, முத்திரையும் வைத்தனர். அப்பொழுது சீனப் பிரதிநிதி இவான் சென் யாதொரு ஆட்சேபமும் தெரிவிக்காததுடன், எல்லைப் படங்களிலும் கையெழுத்திட்டிருந்தார்.

ஆனால் பின்னால் சீனச் சக்கரவர்த்தி தமது பிரதிநிதியின் கையொப்பத்தை ஒப்புக்கொள்ள மறுத்தார். ஸிம்லா ஒப்பந்தத்தில் அவருக்குள்ள ஆட்சேபத்தையும் தெரிவித்திருந்தார். திபேத்தின் உட்பகுதிக்கும் சீனாவுக்குமுள்ள எல்லை பற்றியே அவருக்கு ஆட்சேபம். மக்மகான் எல்லைக் கோட்டை அவர் ஆட்சேபிக்கவில்லை. அதன் பிறகு இதுவரை எந்தச் சீன சர்க்காரும் அந்த எல்லையை மறுக்கவுமில்லை, மாற்றும்படி கோரவுமில்லை.

1914-இல் இந்தியாவுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளத் திபேத்துக்கு உரிமையிருந்தது. சீனப் பிரதிநிதி அதை ஆட்சேபிக்கவே யில்லே. மேலும் திபேத்து மற்ற நாடுகளுடனும் ஒப்பந்தங்கள் செய்துகொண்டிருந்தது. சீஞவில் கம்யூனிஸ்ட் அரசு ஏற்பட்ட பிறகு தான் திபேத்து பலாத்காரமாக முற்றிலும் அடிமைப் படுத்தி வைக்கப் பட்டிருக்கிறது. நிலைமை இவ்வாறிருக்க, மக்மகான் எல்லேக் கோட்டை ஒப்புக்கொள்ளும் அதிகாரமே திபேத்துக்கு இருந்ததில்லே என்று சீன அதிகாரிகள் வாதித்தனர். ஆனல் அவர்கள் சமர்ப்பித்த திபேத்திய தஸ்தாவேஜுகளின்படியே திபேத்து வெளி நாடுகளுடன் எல்லேகள் பற்றி ஏற்பாடு செய்துகொண்டதும், சீனர்கள் இல்லாமலே திபேத்தியப் பிரதிநிதிகள் தம் விவகாரங்களே வெளியார்களுடன் பேசி, விவாதித்து, முடிவு செய்து கொண்டதும் காணப்பட்டன.

பிரிட்டிஷார் காலத்திய இந்தியத் தஸ்தாவேஜுகளேச் சீன அதிகாரிகள் ஏற்க மறுத்தனர். ஏனெனில் பிரிட்டிஷார் ஏகாதிபத்தியவாதிகளாம்! இதற்காக இந்திய அதிகாரிகள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முந்திய தஸ்தாவேஜுகளேயும், பிரிட்டிஷாருக்கு எதிரிகளாக விளங்கிய பிரெஞ்சுக்காரர், ஜெர்மானியர், இத்தாலியர் முற்காலத்தில் வைத்திருந்த ஆதாரங்களேயும், சீனத் தஸ்தாவேஜுகளிலிருந்த ஆதாரங்களேயும்கூட எடுத்துக் காட்டினர்.

இரு பக்கத்து அதிகாரிகளின் விவாதங்களின் நடுவே, சீஞ பர்மாவுடனும், நேப்பாளத்துடனும் எல்லே ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருப்பதைப் பற்றி அடிக்கடி சீன அதிகாரிகள் எடுத்துப் பேசிஞர்கள். ஆனல் பர்மாவிலும், நேப்பாளத்திலும் நிலப்பரப்பில் 40 ஆயிரம், 50 ஆயிரம் சதுர மைல்களேச் சீஞ தனக்குரி

யவை என்று கோரவில்லை. மேலும் பர்மாவுடனும் நேப்பாளத்துடனும் சீனு ஏற்றுக்கொண்டுள்ள எல்லைகள் இந்திய-திபேத்து எல்லையின் தொடர்ச்சியாக இருக்கின்றனவே அன்றிச் சீனு குறிப்பிடும் எல்லையின் தொடர்ச்சியாக இல்லை.

இந்திய-திபேத்து எல்லையான மக்மகான் கோடு சம்பந்தப்பட்ட பிரதேசங்களில் அளவெடுத்து, முளையறைந்து, தரையில் கோடு கிழித்து உறுதி செய்யப்பட்டதில்லை என்பது சீனுவின் புகார்களில் ஒன்று. இது உண்மைதான். அதனுல் மலை முகடுகளையும், நதிப் படுகைகளையும் கணக்கில் கொண்டு பூகோளப் படங்களில் குறிக்கப் பெற்ற எல்லை, பரம்பரையாகவும், மாமூலாகவும் தொன்றுதொட்டு அநுபவத்திலுள்ள எல்லை, திடீரென்று ஒரு கட்சி ஆட்சேபம் கிளப்புவதால், இல்லாமற் போய்விடுமா? குறித்த எல்லைவரை யார் இதுவரை ஆதிக்கியம் செலுத்தி வந்திருக்கின்றனர் என்பதும் முக்கியமான ஆதாரம் அல்லவா?

இந்திய - திபேத்து எல்லைதான் இப்பொழுது இந்திய-சீன எல்லையாக மாறிவந்துள்ளது. ஏனெனில் திபேத்தில் சீன ஆதிக்கியம் நடைபெறுகிறது. ஆகவே இந்த எல்லையைத் துல்லியமாக அளந்து தரையில் அடையாளம் செய்ய இந்திய அரசாங்கம் தயாராயிருப்பதைச் சீனுவுக்குப் பன்முறை தெரிவித்தாயிற்று. அதற்காகத்தான் எல்லை பற்றிய சமரச ஏற்பாடுகள் செய்துகொள்ளவும் அது ஆயத்தமாயிருந்தது. ஆனுல் 'சமரசம்' என்பதற்குச் சீனு கோரும் 50 ஆயிரம் சதுர மைல் பிரதேசங்களில், கூடுதலாகவோ, குறைவாகவோ, கொடுத்துவிட்டு வெறுங் கையுடன் நாம் திரும்புவது என்பது பொருளில்லை. படத்தில் கோடு கிழிப்பதற்கும், தரையில் அடையாளம் செய்

வதற்கும் வேற்றுமையுண்டு. குறித்த பிரதேசங்களில் இரு கட்சியார்களும் நின்றுகொண்டு கோடு கிழிப்பதில், அந்தந்த இடத்தின் தன்மையைப் பொறுத்து இரு பக்கத்தாரும் சிறிது சிறிது விட்டுக் கொடுக்க வேண்டியிருக்கும். ஓரிடம் ஒரு நாட்டுடன் சேர்ந்திருப்பது நலமென்று இரு திறத்தாரும் எண்ணினுல், அதை அவ்வாறே சேர்க்க வசதிப்படும். அவ்வாறு செய்துகொள்வது எல்லை மாற்றமாகாது; எல்லையை ஒழுங்கு படுத்தி, உறுதிப் படுத்திக்கொள்வதாகும். இவ்வாறு உறுதிப் படுத்திக்கொள்ள இதுவரை இந்தியா பற்றி வரும் எல்லைக் கோட்டையே ஆதாரமாகக் கொள்ள வேண்டுமென்பதை இந்திய அரசு வற்புறுத்தி வந்திருக்கிறது. 1959, செப்டம்பர் 26-ந் தேதி இந்தியப் பிரதம மந்திரி சீனப் பிரதமருக்கு அனுப்பிய கடிதத்தில் இதைப் பின்வருமாறு தெளிவாகத் தெரிவித்துள்ளார்:

'சீன-இந்திய எல்லையில் மலைப்பகுதி பல இடங்களில் தரையில் எல்லை குறிக்க இயலாதபடி அமைந்திருப்பதால், சில இடங்களில் சிறு மாறுதல்கள் அவசியமாயிருக்கலாம். அவற்றைப் பற்றி விவாதிக்க இந்திய அரசாங்கம் தயாராயிருக்கின்றது. ஆனுல் மொத்தத்தில் எல்லை தெளிவானது, தகராறுக்கு இடமில்லாதது என்ற அடிப்படையின் மீதே எத்தகைய விவாதமும் நடைபெற முடியும். பல ஆண்டுகளாகவும், சில இடங்களில் நூற்றுண்டுக்கணக்காகவும் இந்தியப் பகுதிகளாக இருந்து வரும் பிரதேசங்களில் சீனு 50,000-சதுர மைல்கள் கோருவதை இந்திய அரசு விவாதிக்க முடியாது. முன்னுளில் சீனுவுக்கு எதிரான பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பிலிருந்து சுதந்தர இந்திய அரசாங்கம் நன்மையடையப் பார்க்கிறது என்று கூறுவது பொய்; மேலும் அது இந்தியாவில் ஆழ்ந்த வருத்தத்தையும் ஏற்படுத்தியுள்ளது.'

1957முதல் நமது நேபா பகுதியில் சீனரின் ஊடுருவல் நடந்து வந்தது. அவ்வாண்டு, அக்டோபர் மாதம் சீனப் படையில் ஒரு பிரிவினர் லோஹித் டிவிஷனில் வாலாங் நகருக்குள் புகுந்தனர். அடுத்த வருடம் செப்டம்பர் மாதம் மற்ெறாரு பிரிவினர் அதே டிவிஷன் வழியாக பர்மாவுக்குச் சென்றனர். 1959இல் ஆயுதம் தாங்கிய சீனக் காவற்படை ஒன்று காமெங் டிவிஷனில் கின்ஸிமானே என்ற இடத்தில் புகுந்து நமது காவற் படையைப் பின்னால் தள்ளியதும், பெரிய படை ஒன்று சுபன்ஸிரி டிவிஷனில் லாங்ஜூவிலிருந்த நமது சிறு காவற்படை மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து, காவல் நிலையத்தைக் கைப்பற்றிக் கொண்டதும் முக்கிய நிகழ்ச்சிகள். 1960 முதல் 1962, செப்டம்பர் வரை தக்ஸாங் கோம்பா ராய் என்ற கிராமம் முதலிய வேறு சில இடங்களிலும் ஊடுருவல் செய்தும், நம் காவல் நிலையங்களைத் தாக்கியும் சீனர் தொந்தரவு கொடுத்து வந்தனர். இந்த அதிக்கிரமங்களைப் பற்றி இந்திய அரசாங்கம் அவ்வப்போது சீன சர்க்காருக்கு ஆட்சேபங்களை அனுப்பி வந்துள்ளது.

## சர்வதேச ஒழுங்குமுறை

இந்திய நாட்டின் வட பகுதியில் மேற்கே லடாக்கிலும், மத்தியில் இமாசலப் பிரதேசம்-பீஹார்-பஞ்சாப்பிலும், கிழக்கில் நேபாவிலும் 50-ஆயிரம் சதுர மைல்களுக்கு மேற்பட்ட நிலங்களின்மீது சீனா உரிமை கொண்டாடுவதும், அவற்றில் பல பகுதிகளைத் தன் வசப்படுத்திக் கொண்டிருப்பதும் சர்வதேசச் சட்டப்படி எவ்வளவு அக்கிரமமானவை என்பது சர்வதேச நீதித் தலத்தின் தீர்ப்புக்களை ஆராய்ந்து பார்த்தால் தெளிவாகத் தெரியும். அதனால்தான் இந்தியப் பிரதம மந்திரி சீன இந்திய எல்லைப் பிரசினை

யைச் சர்வதேச நீதித்தலத்தின் முடிவுக்கு விடலாம் என்று கூறியிருக்கிறுர். நீதித்தலத்தில் வழக்காடா விட்டால், சில நாடுகளின் மத்தியஸ்தத்தை இரு கட்சிகளும் ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்க வேண்டும். எந்த இடத்தில் விவாதிப்பதாயினும், உரிமை கொண்டாடும் விஷயத்தில் ஓரளவாவது நியாயம் இருக்க வேண்டும். சரித்திரம், உடன்படிக்கைகள், தஸ்தாவேஜுகள், பழையபூகோளப்படங்கள், மாமூலான வழக்கம், விவகாரம் தோன்றிய காலத்தில் சம்பந்தப்பட்ட பிரதேசங்கள் எவருடைய ஆதிக்கியத்திலுள்ளன என்பது போன்ற பல விஷயங்களையும் பரிசீலனை செய்துதான் எவரும் முடிவு செய்ய முடியும்.

ஆனல் சர்வதேசச் சட்டப்படி இந்திய-சீன எல்லையைப் பற்றிச் சீனு விவகாரத்தைக் கிளப்புவதற்கே உரிமை கிடையாது. எந்த எல்லையை ஆட்சேபிப்பதற்கும் குறிப்பிட்ட ஒரு காலமும் சந்தர்ப்பமும் உண்டு. ஒரு நாடு பல்லாண்டுகளாக வாய்மூடி மௌனியாயிருந்து விட்டு, திடீரென்று ஒரு சமயத்தில், எல்லைப் பிரசினையைக் கிளப்ப முடியாது. முன்னல் பல சந்தர்ப்பங்கள் கிடைத்தபோது சீனு எல்லைப் பிரசினைகளை ஏன் எழுப்பவில்லை என்பதற்குச் சீனப் பிரதமர் சூ என்-லாய் அப்பொழுது 'காலம் கனிந்திருக்கவில்லை' என்று கூறிய மறுமொழி முன்பு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இவ்வாறு ஒரு மந்திரி உடனுக்குடன் ஆட்சேபம் தெரிவிக்காமல், காலம் கனியும் வரை காத்திருந்தால் அவருடைய விவகாரமே செல்லத் தக்கதன்று.

சமீபத்தில் கம்போடியாவுக்கும் தாய்லாந்துக்கும் ஒரு பிரதேச சம்பந்தமாக ஏற்பட்ட விவகாரத்தில், சர்வதேச நீதித்தலம் இவ்வாறே தீர்ப்புக் கூறியுள்ளது. 1962, ஜூன் 15-ந்தேதி கூறப்பெற்ற அந்தத்

தீர்ப்பில் கம்போடியாவின் பழைய எல்லையே சரியான தென்றும், தாய்லாந்து அதை ஆட்சேபிக்க முடியா தென்றும் முடிவு சொல்லப்பட்டிருக்கிறது. கம்போடியாவின் எல்லை முற்காலத்தில் குறிக்கப்பெற்ற சமயம் தாய்லாந்துக்கு எல்லை குறித்த தேசப்படம் அனுப்பப் பெற்றிருந்தது. தாய்லாந்து ஆட்சேபம் எதுவும் செய்யவில்லை. ஆட்சேபம் செய்யாததால், அந்த எல்லையே தாய்லாந்தையும் கட்டுப்படுத்தும் என்று முடிவாகி யிருக்கிறது. தீர்ப்பில் காணும் வாசகம் இது :

'...ஸயாம்* அதிகாரிகள் தேசப்படத்தை மறுதலிக்கவோ, அதுபற்றி முக்கியமான பிரசினை எதையும் எழுப்பவோ விரும்பியிருந்தால், அப்போதையச் சூழ்நிலைகளை அநுசரித்து, நியாயமான ஒரு கால வரம்புக்குள் அவர்களுடைய கருத்தைப் பற்றிய ஏதாவது அறிகுறி காட்டியிருக்க வேண்டும். அவர்கள் அப்பொழுதும் அவ்வாறு செய்யவில்லை; பல ஆண்டுகளுக்குப் பின்னும் செய்யவில்லை. அதனால் அவர்கள் ஏற்றுக் கொண்டதாகவே கொள்ள வேண்டும்.'

இவ் விஷயத்தை நீதிபதி திரு. அல்ஃபரோ (Judge Alfaro) தமது தனி அபிப்பிராயத்தில் மேலும் தெளிவு படுத்தியுள்ளார் :

'பிரத்தியட்சமான விஷயங்களைக் கண்டுகொண்டு, பொதுவாகச் சம்மதம் அல்லது தெளிவான அங்கீகாரத்தைக் குறிப்பதற்குப் பேசாமலிருத்தலே பெரும்பாலும் வழக்கம். அதேபோல, ஓர் உரிமையை வற்புறுத்தவோ, நிலைநிறுத்தவோ, பாதுகாத்துக் கொள்ளவோ, ராஜ்யங்கள் பொதுவாகக் கையாளும் முறைப்படி ஆட்சேபிக்க அவசியம் இருக்கும்பொழுது ஆட்சேபிக்கத் தவறி

* தாய்லாந்தின் பழைய பெயர் ஸயாம்.

விடுதல் சம்மதம் அல்லது தெளிவான அங்கீகாரத்தையே குறிக்கும்...'

1914இல் திபேத்தும் இந்தியாவும் செய்து கொண்ட ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள முடியா தென்று இப்பொழுது சீனு வாதாடுகின்றது. தன் னைக் கேளாமல் ஒப்பந்தம் செய்துகொள்ளத் திபேத் துக்கு அதிகாரமில்லை யென்பது அதன் கூற்று. மேலே குறித்துள்ள வழக்கில், ஒரு நாடு ஒப்பந்தமோ, உடன் படிக்கையோ செய்துகொள்ள மிக மிகக் குறைந்த அதிகார மிருந்தாலும் போதும் என்று சர்வதேச நீதித்தலம் கூறியுள்ளது. இதன்படி திபேத்தின் ஒப் பந்தம் செல்லத் தக்கதாகும்.

'இரண்டு நாடுகள் தமக்கிடையே ஓர் எல்லையை அமைத்துக் கொள்ளும்பொழுது, நிலையானதும், முடி வானதுமான அமைப்பைப் பெறவேண்டும் என்பது முக்கியமான நோக்கங்களில் ஒன்ருகும்' என்றும் நீதித்தலம் குறித்திருக்கின்றது. இந்திய-திபேத்து எல்லைகள் நிலையானவை, முடிவானவை.

ஆகவே, இந்திய எல்லைகள் பற்றிச் சீனச் சக்கர வர்த்திகள் காலத்திலும், கோமிண்டாங் ஆட்சியிலும், கம்யூனிஸ்ட் ஆட்சி ஏற்பட்ட பிறகும் சீனு ஆட்சேபம் எதுவும் கூருமலிருந்துவிட்டு, பின்னுல் இப்போது 2,400-மைல்களுக்கு மேல் நீளமுள்ள எல்லா எல்லை களைப் பற்றியும் தகராறு செய்வதற்குச் சட்டப்படி அதற்கு உரிமை எதுவுமில்லை என்பது வெள்ளிடை மலை. வாயினுல் பேசினுல் நாம் பதில் சொல்லலாம்; நீதித்தலத்தில் வழக்காடினுல் நாம் வாதாட முடியும்; ஆனுல் சீனு துப்பாக்கி முனையால் பேச முனைந்த பிறகு, நீதி, நியாயம், சட்டம் முதலியவற்ருல் என்ன பயன்?

# சீனுவின் ஆசைகள்

'தேச பக்தர்கள், கொடுங்கோலர்களுடைய உதிரத்தை அடிக்கடி ஊற்றித்தான் சுதந்தர மரத்தை வளர்க்க வேண்டும். உதிரம்தான் அதற்கு இயற்கையான உரம்.'

— தாமஸ் ஜெ.ஃபர்ஸன்*

---

## நன்றி கொன்ற நாடு

1962 அக்டோபர் 20-ந்தேதி கம்யூனிஸ்ட் சீனு நம் பாரத நாட்டின்மீது திடீரென்று படையெடுத்துவிட்டது! ஏராளமான பீரங்கிகள், டாங்குகள், இயந்திரத் துப்பாக்கிகள், மற்றும் கொலைக் கருவிகளுடன் அலை அலையாகச் சீனப் படைகள் பாய்ந்து வந்தன. வடக்கே பகைவர் இல்லையென்று நாம் கருதியிருந்தோம். வட திசையிலுள்ள சீனு நட்புரிமை கொண்ட நாடென்று நாம் நம்பியிருந்தோம். சீனுவுக்காக நாம் உலகறியப் பரிந்து பேசினேம். அது பல நாடுகளில் செய்துவந்த அதிக்கிரமங்களைக் கண்ட பின்னரும், காணுததுபோல், கண்களை மூடிக்கொண்டோம். எல்லைகள் பற்றிச் சமாதானம் பேசுவதற்குச் சீனு நம்மை அழைத்தது. சமாதான மகாநாட்டுக்கு நாம் ஆயத்தம் செய்துகொண்

* அமெரிக்க ஜனுதிபதி (1743-1826)

டிருக்கையில், சீனு பின்புறமாக வந்து நம்மைத் தாக்கி விட்டது.

கம்யூனிஸ்ட் சீனர்களுக்கு நாம் கருணை காட்டி வந்தோம்-அதற்கு அவர்கள் நம் கழுத்தை நெரித்து நன்றி காட்டினர்; அன்பு காட்டி அரவணைத்தோம்-அதற்காக அனல் கக்கும் குண்டுகளை அவர்கள் நம்மீது பாய்ச்சுகின்றனர். வல்லரசுகளோடு அவர்களுக்காக வருடக் கணக்காக வாதாடினேம்-அதற்கு நன்றியாக 'வல்லரசுகளின் வால் பிடிப்போர்' என்று நம்மையே ஏளனம் செய்கின்றனர். மாந்தருள் மாணிக்கமான நம் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு 'ஹிந்தி-சீனி பாய் பாய்-இந்தியரும் சீனரும் சகோதரர்கள்' என்ற கோஷத்தை நமக்குச் சொல்லித் தந்தவர். அவர் 'அமெரிக்காவின் அடிவருடி' என்று பீகிங் ரேடியோ இடைவிடாமல் அலறி வந்தது.

எல்லாவற்றிற்கும் மேலாக 2,000 ஆண்டுகட்கு முன்பு நம் நாட்டுப் பௌத்த பிட்சுக்கள், காவியுடை அணிந்து, காடு மலைகளை யெல்லாம் கடந்து கால்நடையாகச் சென்று, சீனுவில் கருணைக் கடலான புத்தர் பிரானின் தர்மத்தைப் பிரசாரம் செய்து வந்தனர். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அந்த ஞானத் துறவிகளைத் தவிர ஆயுதம் தாங்கிய ஓர் இந்தியச் சிப்பாய் கூட இமயமலையைத் தாண்டிச் சீனுவுக்குள் நுழைந்ததில்லை. இதற்குக் கைம்மாருகக் கம்யூனிஸ்ட் சீனர்கள், போர்க் கருவிகளைத் தாங்கி, அணியணியாக நம் வட எல்லையைத் தாண்டிவந்து, நம் நாட்டை ஆக்கிரமித்தனர். பால் போல் பனிபடர்ந்த இமாலயப் பிரதேசத்தில் நம் வீரர்களின் செங்குருதியைப் பெருக்கி, நிலத்தை யெல்லாம் சிவப்புச் சேருக்கினர். பறவைகளின் இன்னிசையைத் தவிர வேறு ஒலிகளையே அறியாத நம் பனிமலைச் சாரல்களில் செவிகள் செவிடுபடும்

படி பெரிய பெரிய பீரங்கிக் குண்டுகளை அவர்கள் பாய்ச்சினர். இதுவும் காலத்தின் கோலம்தான்!

'சீன அரக்கன் உறங்கிக் கொண்டே யிருக்கட்டும். அவனை எழுப்பி விடவேண்டாம்!' என்று பிரெஞ்சு வீரன் நெப்போலியன் முன்னால் சொல்லி யிருந்தான். நெடுந் துயிலில் ஆழ்ந்திருந்த அந்த அரக்கன் இப் பொழுது விழித்தெழுந்து விட்டான்! அளவிலும், ஜனத்தொகைப் பெருக்கத்திலும் சீனா அரக்கன்தான். ஆனால் குணத்திலும், செயலிலும் அரக்கனே என் பதையும் அது காட்டிவிட்டது. அரக்கனுக்கு இரக் கம் கிடையாது, தர்மம் கிடையாது, நியாயம் கிடை யாது, சத்தியம் கிடையாது. அவன் நினைத்ததை நிறைவேற்றிக் கொள்ள, எதையும், எங்கும், எப்போ தும் செய்யலாம்! எத்தனையோ அரக்கர்களைப் பற்றிப் புராணங்களிலும் கதைகளிலும் படிக்கிறோம். ஆயினும் இந்தப் புதிய கம்யூனிஸ்ட் சீன அரக்கன், செஞ்சட்டை அணிந்து, கைகளிலும் முகத்திலும் மக்களின் சிவப்பு உதிரத்தைப் பூசிக்கொண்டு, பயங்கரமாகக் காட்சி யளிக்கிறான்!

## கலகமே தொழில்

1947இல் இந்தியா சுதந்தரம் பெற்றது. 1949 இல் சீனாவில் கம்யூனிஸ்ட் அரசாங்கம் ஏற்பட்டது. அது முதலே அது அக்கிரமங்கள், ஆக்கிரமிப்புக்கள், மிரட் டல்கள், சதிகள், சண்டைகள் செய்யத் தொடங்கி விட்டது. இந்தியர் 47 கோடி; சீனர் 65 கோடி. நாம் நூறு கோடிக்கு மேற்பட்ட மக்கள் கைகோத்துக் கொண்டு உலகம் முழுதும் அமைதியை நிலைநாட்ட உழைக்க வேண்டும் என்று நாம் கூறி வந்ததில், சீனர் கள் முதலில் நம்மிடத்திலேயே தங்கள் கைவரிசை யைக் காட்டத் தொடங்கிவிட்டனர்.

மூன்றுவது உலகப் போர் மூண்டுவிடாமலிருக்க வேண்டுமே யென்று எல்லா நாடுகளும் அஞ்சி நிற்கின்றன. இந்நிலையில் 'பாரகம் அடங்கலும் பயப்பிணி அறுக' என்ற கொள்கையை நிலைநாட்ட நாம் முயன்று வருகிறோம். ஆனல் சீன, உள்நாட்டில் லட்சக்கணக்கான மக்களை வதைத்தும், அருகிலுள்ள நாடுகளிலெல்லாம் கலகங்களைக் கிளப்பிப் பெரும் போர்களை நடத்தியும், ஆங்காங்கே இரத்த ஆறுகள் ஓடும்படி செய்து வருகின்றது.

நம்மீது படையெடுத்து வருமுன்பு, சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கம் முதன் முதலில் உள்நாட்டு மக்களை வதைத்து ஒடுக்கிப் பயிற்சி பெற்றுக் கொண்டது. தொடக்கத்தில் மக்களுக்கு நன்மைகள் செய்வது போல் காட்டிக் கொண்டது. ஒரேயடியாகக் கம்யூனிஸ்ட் சர்வாதிகாரத்தை ஏற்படுத்தப் போவதில்லையென்றும், எல்லாக் கட்சிகளும் சேர்ந்ததே 'சீன மக்களின் குடியரசு' என்றும் சொல்லிக்கொண்டது. நாடு முழுதும் தன் வலையை விரித்து முடித்தவுடனேயே, அது பெரிய நிலக்கிழார்களையெல்லாம் ஒழிக்க முற்பட்டது. குடியானவர்களைத் தூண்டி விட்டுத் தான் செய்ய வேண்டிய கொடிய வேலையை அவர்கள் மூலமே நிறைவேற்றிக்கொண்டது. பிறகு குடியானவர்கள் எல்லோருக்கும் விளை நிலங்களைப் பகிர்ந்து கொடுத்தது. உடனேயே அவைகளைப் பறித்துக் கொண்டு, கூட்டுப் பண்ணைகள், குடியானவர்களின் கூட்டுக் குடியேற்றங்கள் ஆகியவற்றை நிறுவிவிட்டது. 'புரட்சியின் எதிரிகள்' என்றும், 'கட்சியின் பகைவர்கள்' என்றும் பட்டம் சூட்டி, இலட்சக்கணக்கான சீனர்களைக் கொலை செய்தும், சிறையிலிட்டும், அடிமைகளைப்போல் கட்டாய வேலைகளுக்கு அனுப்பியும் கம்யூனிஸ்ட் அரசாங்கம் தன் நிலையைப் பலப்

படுத்திக் கொண்டுள்ளது. இருபது லட்சத்திற்கு மேற்பட்ட எதிரிகளேயும், கொள்ளேக்காரர்களேயும் தீர்த்துக் கட்டிவிட்டதாகச் சீனப் பொருளாதார மந்திரியே 1952இல் ஒப்புக்கொண்டார். ஆனுல் மாண்டவர்களின் தொகை இதற்குக் கூடுதலாகவே இருக்கும். இவ்வாறு 65 கோடிச் சீன மக்கள் அனேவரின் தலேயெழுத்தையும் தீர்மானிக்கும் அதிகாரம் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் கைக்குள் அடங்கிவிட்டது. அக் கட்சியின் தலேயெழுத்தை நிர்ணயிக்கும் அதிகாரம் மாஸே-துங், லியு ஷௌ-சி, சூ என்-லாய் முதலிய சில தலேவர்களேக் கொண்ட சிறு தலேமைக் குழுவின் கையிலிருக்கின்றது. மா-கம்யூனிஸ்ட் கட்சித் தலேவர்; லியூ-அரசாங்கத் தலேவர்; சூ-முதன் மந்திரியாக விளங்குகிருர். பீகிங் தலேநகரிலிருந்துகொண்டு இவர்கள் சதித் திட்டங்களே வகுத்துக் கொண்டேயிருக்கின்றனர்.

முதலில் தென்கிழக்கு ஆசிய நாடுகளேச் சரிக்கட்ட வேண்டும். மற்ற ஆசியச் சிறு நாடுகளே வளேத்துக் கொள்ள வேண்டும். இந்தியாவை மட்டம் தட்ட வேண்டும். ஆசியாவின் தலேமைப் பதவியைச் சீனுவே தனியாக வகிக்க வேண்டும். ஆப்பிரிக்க நாடுகளிலும் தென் அமெரிக்க நாடுகளிலும் பிரசாரம் செய்தும், கலகங்களேத் தூண்டியும், புரட்சிகள் செய்ய வேண்டும். சீனுவுக்குக் கம்யூனிஸத்தைக் கற்றுக் கொடுத்து, அளவற்ற ஆயுதங்களேயும், விமானங்களேயும், இயந்திரங்களேயும், கோடிக் கணக்கான பொருளேயும் அளித்து, பெரிய தொழிற்சாலேகள் அமைத்துப் பொருளுற்பத்தி செய்ய வழிகாட்டிய இலட்சக்கணக்கான தொழில் நிபுணர்களேயும் அளித்தது ஸோவியத் ரஷ்யா. அந்த ரஷ்யாவையே தக்க சமயத்தில் காலேத் தட்டிவிட்டு, உலகக் கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கும்

தானே தலைமை வகித்து நடத்தவேண்டும் என்பது சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் நோக்கம். மேலும் சீனுவுக்குச் சொந்தமான ஹாங்காங் தீவைப் பிரிட்டனிடமிருந்தும், மாக்கோ துறைமுகத்தைப் போர்ச்சுகீசியரிடமிருந்தும் திரும்பப் பறித்துக்கொள்ள வேண்டும். தனக்கு எதிராகச் சீனத் தேசிய அரசாங்கம் ஒன்றை ஃபார்மோஸா தீவில் அமைத்து ஆதரித்துவரும் அமெரிக்காவையும் எதிர்க்கவேண்டும். மூன்ருவது உலகப் போரை விரைவிலே தொடங்க வேண்டும். அமைதிக்கு இடம் கொடுப்பது கோழைத்தனம், பிற்போக்கு! உலகமெங்கும் போர்களும் புரட்சிகளும் நடந்துகொண்டே யிருக்கவேண்டும்! இத்தனை நோக்கங்களையும் கொண்டு இறுமாப்புடன் பீகிங் தலைநகரில் வீற்றிருக்கின்றது சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமைக் குழு.

## மலாய் நாட்டின் மீட்சி

இந்தியாவுடன் நிலத் தொடர்புள்ள கீழைநாடு பர்மா. பர்மாவுடன் தொடர்புள்ளது தாய்லாந்து. தாய்லாந்துக்குத் தெற்கே, கோடியிலுள்ளது மலாய் (மலேயா). அது மூன்று புறம் கடலால் சூழப்பெற்ற வளம் பொருந்திய நாடு. அதன் தென் முனையில் தான் சிங்கப்பூர் இருக்கின்றது. மலாயில் 32 லட்சம் மலாய் மக்களும், 26 லட்சம் சீனர்களும், சுமார் 6 லட்சம் இந்தியர்களும் வாழ்ந்து வருகின்றனர். செல்வம் கொழிக்கும் அந்நாடு பன்னிரண்டு ஆண்டுகட்கு மேலாகக் கம்யூனிஸ்டுகளின் கொலைகள், கொள்ளைகள் முதலிய அட்டூழியங்களால் பரிதவித்து வந்தது. கம்யூனிஸ்டுகள் பெரும் படையாக அணிவகுத்து வராமல், சிறு சிறு கொரில்லாப் படைகளாகப் பிரிந்து, காடுகளிலும் மலைகளிலும் மறைந்திருந்து,

திடீர் திடீரென்று நாட்டிலும் நகரங்களிலும் புகுந்து தாக்கி வந்தனர். எங்கும் பயங்கர நிலை நிலவி யிருந்தது. ஆங்கிலேயர் அந்நாட்டை ஆள்வதால் தான் தாங்கள் கலகம் செய்வதாகக் கம்யூனிஸ்டுகள் சொல்லி வந்தனர். ஆங்கிலப் படைகளும், மலாய் மக்களும் சேர்ந்து நாடு முழுதும் ஒற்றுமையாகி, கம்யூனிஸ்டுகளைத் தாக்கி ஒடுக்கி விட்டனர். கம்யூ னிஸ்டுகளுக்கு உதவியாயிருந்த மலாயில் வாழ்ந்து வந்த சீனர்கள் வெகு தூரத்திற்கு அப்பால் தனியிடங் களில் ஒதுக்கிவைக்கப்பட்டனர். 1957-இல் மலாய்க் குச் சுதந்தரம் கிடைத்துவிட்டது. அதன் பின்னரும் கம்யூனிஸ்டுகள் செய்து வந்த கலகங்களைப் புதிய மலாய் அரசாங்கம் அடக்கி வெற்றி பெற்றது அதிசய மான ஒரு சரிதை. இப்பொழுது மலாசியா என்ற பெரிய தனி ராஜ்யம் அமைந்துள்ளது. ஆனால் சிங்கப்பூர் தனிச் சுதந்தரப் பிரதேசமாக விளங்கு கின்றது.

## திபேத்து நாடு பலியானது!

உலக நாடுகளிடையே அமைதியே உருவாக விளங் கும் திபேத்து நாட்டின் மீது 1950-இல் கம்யூனிஸ்ட் சீன படையெடுத்துப் பாய்ந்தது. திபேத்து வடதிசையில் நமக்கு அடுத்துள்ள நாடு. பூவுலகிலேயே பெரிதான இமய மால்வரையின் தென் சாரலில் நமது காஷ்மீரைச் சேர்ந்த லடாக் பகுதியும், வடகிழக்கு எல்லைப் பிரதேசமும் இருக்கின்றன; வட சாரலில் திபேத்து உள்ளது. திபேத்திய மக்கள், முற்காலத்தில் மகாவீரர்களா யிருந்த போதிலும், இப்போது பரம சாதுக்கள். அவர்கள் பௌத்த சமயத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஈ, எறும்புகளைக் கூடக் கொல்ல மனமில்லாத வர்கள். அவர்களுடைய மன்னரும் மதத்தலைவருமான

தலாய் லாமாவின் பிரதிநிதிகளை அழைத்துச் சீனர்கள் பீகிங்கில் கட்டாயப் படுத்திக் கையெழுத்து வாங்கினார்கள். முதலில் மிரட்டிப் பார்த்தார்கள்; பிறகு படையெடுத்துத் திபேத்து நாட்டையே கைப்பற்றிக் கொண்டார்கள். எதிர்த்து நின்ற சிறு படையை மடக்கியடித்து, லட்சக்கணக்கான மக்களையும் வதைத்து விட்டார்கள். நாடு முழுதும் பல்லாயிரம் சீனத் துருப்புக்கள் புகுந்து பரவியிருக்கின்றன. திபேத்திய மக்களையே அடிமைகளாக வேலை வாங்கி, ஏராளமான சாலைகளும், படை வீடுகளும், விமான தளங்களும் அமைக்கப்படுகின்றன. திபேத்தின் தலைநகரான லாஸாவிலிருந்து சீனாவின் தலைநகரான பீகிங்வரை 1,500 மைல் நீளத்திற்கு ரயில் பாதையும் அமைக்கப் பெற்று வருகிறது. திபேத்திலிருந்துதான் சீனப் படையினர் இந்தியாவுக்குள் வந்துள்ளனர்.

திபேத்து பிரிட்டனைவிட ஏழு மடங்கு பெரிது. 4,69,294 சதுர மைல் பரப்புள்ளது. சுமார் 15 லட்சம் மக்களைக் கொண்டிருப்பதாகச் சொல்லப் படுகிறது. ஜனத்தொகைக் கணக்கே இனிமேல்தான் எடுக்க வேண்டும். இவ்வளவு பெரிதான நம் அண்டை நாட்டைச் சீனா, பாம்பு தவளையை விழுங்குவது போல் விழுங்கிவிட்டதை நாம் தடுத்து நிறுத்தவில்லை. அப்போதிருந்த நிலையில் வல்லரசுகளும் வழிமறிக்கவில்லை. ஐக்கிய நாடுகளின் சபையும் அவலமாக அயர்ந்திருந்து விட்டது. அதனால், பாஞ்சாலி கௌரவர்கள் சபை நடுவில் துகிலுரியப்பட்டது போல், திபேத்து கம்யூனிஸ்ட் சீனரின் கைப்பிடியில் சிக்கிப் படாத பாடு படுகின்றது.

## கொரியாவில் போராட்டம்!

சீன ராஜ்யத்தைச் சேர்ந்த மஞ்சூரிய மாகாணத்தை ஒட்டியுள்ளது கொரியா. அங்கு மூன்று கோடி மக்கள் வசிக்கின்றனர். ஜப்பானின் ஆதிக்கியத்திலிருந்த அந்நாடு, போர் முடிவில்தான் விடுதலை பெற்றது. அதன் வட பகுதியிலிருந்த சுமார் 90 லட்சம் ஜனங்கள் கம்யூனிஸ்ட் ஆதிக்கியத்தில் தனி அரசு ஏற்படுத்திக் கொண்டனர்; தென் பகுதியிலிருந்த 210 லட்சம் மக்கள் சுயேச்சையாகத் தேசிய அரசாங்கத்தை நிறுவிக்கொண்டனர். 1950, ஜூன் 25-ந்தேதி திடீரென்று வட கொரியா தென் கொரியாமீது படையெடுத்துப் போர் தொடுத்தது. அந்நிலையில் ஐக்கிய நாடுகள் சபை உடனே அந்நாட்டில் தலையிட்டு, பொதுவான தன் படையை அனுப்பிச் சண்டையை நிறுத்தி, ஆக்கிரமிப்பை ஒடுக்கத் தீர்மானித்தது. சீனு ஏராளமான ஆயுதங்களுடன், இரண்டு பெரிய படைகளை வட கொரியாவுக்கு உதவியாக அனுப்பி வைத்தது. அதாவது, அமைதி காக்க வந்த ஐக்கிய நாடுகளின் படையை எதிர்த்துச் சீனப் படைகள் போர்க்கோலம் பூண்டு வந்துவிட்டன! ஐக்கிய நாடுகளின் சார்பில் அமெரிக்கப் படைகளும் போரில் கலந்துகொண்டன. ஈராண்டுகள் கடும் போர் நடந்தது. மலைமலையாகப் பிணங்கள் குவிந்தபின், சமாதானம் ஏற்பட்டது. கொரியா வடநாடு, தென்னுடென்று இரண்டு பிரிவாகப் பிளவுபட்டுப் போயிற்று. வடக்கே சீனக் கம்யூனிஸ்டுகள் தங்கள் பொம்மை சர்க்காரை வைத்து ஆட்டம் காட்டிக் கொண்டிருக்கிறுர்கள்!

## வியட்னுமிலும் குழப்பம்

சீனுவின் தென் எல்லையில் வியட்னும் உள்ளது. 'இந்தோ சைனு' என்பது இதன் பழைய பெயர். இந்

நாட்டின் பரப்பு 2,70,093 சதுர மைல்; ஜனத் தொகை சுமார் 3 கோடி. இது வடக்கு வியட்னும், தெற்கு வியட்னும், கம்போடியா, லாவோஸ் என்ற நான்கு பகுதிகளைக் கொண்டது. சீனு வடக்கு வியட்னுமைத் தயார் செய்து கம்யூனிஸ்ட் மயமாகச் செய்துள்ளது. வியட்னுமில் வடபகுதிக்கும் தென்பகுதிக்கும் இடைவிடாத போர்கள் நடந்து கொண்டேயிருக்கின்றன. அமெரிக்கா தென் பகுதிக்கு உதவியாகச் சென்றுள்ளது. வழக்கம்போல் சீனு கம்யூனிஸ்ட் பகுதியான வடக்கு வியட்னுமுக்கு உதவி செய்து வருகின்றது.

## பர்மாவில் சீனர் செல்வாக்கு

இலட்சக்கணக்கான இந்தியர்கள் வசித்து வந்த பர்மாவிலும் சீனு சில பகுதிகளைச் சேர்த்துக்கொண்டிருக்கிறது. பல விதமாக உருட்டியும் மிரட்டியும் பர்மாவுடன் தன் எல்லைகள் பற்றி ஓர் உடன்படிக்கையும் செய்துகொண்டிருக்கின்றது. பர்மாவில் சுமார் 5 லட்சம் சீனர்கள் வசிக்கின்றனர். பர்மாவின் அன்பும் ஆதரவும் சீனுவின் பக்கமே இருந்து வருகின்றன. பர்மிய அரசாங்கத்தின் கொள்கையால் அங்குள்ள நம் மக்கள் சொத்துக்களையும் சுகங்களையும் முன்பே இழந்திருக்கின்றனர். அவர்களில் பலர் இந்தியாவுக்குத் திரும்பி வரவும் நேர்ந்தது. பர்மியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கியமான ஒரு பகுதியும் சீனரின் செல்வாக்கிலுள்ளது.

## இந்தோனீஷியாவின் தடுமாற்றம்

மலாய் நாட்டைச் சுற்றிலும் பரவிக் கிடக்கும் ஜாவா, சுமத்திரா, போர்னியோ, ஸெலிபீஸ், மற்றும் பல சிறு தீவுகளும் சேர்ந்தது இந்தோனீஷியா. 21 லட்சத்திற்கு மேற்பட்ட சீனர்களும் இங்கே குடியேறி வசித்து வரு

கின்றனர். இங்குள்ள கம்யூனிஸ்ட் கட்சி வல்லமையுள்ளது. ஜாவா தீவில் கம்யூனிஸ்டுகளுக்கு எதிராகப் பேசுவதற்குக்கூட மக்களுக்கு அச்சம். அப்படிப் பேசிய தலைவர்களுடைய வீடுகள் தீயில் வெந்து சாம்பராகின்றன. 1950-இலிருந்து இந்தோனீஷியாவில் அமைந்துள்ள குடியரசும் நன்கு இயங்கி வரவில்லை. எங்கும் லஞ்ச ஊழல் மிகுதி; அடிக்கடி புரட்சியும் நடக்கும்.

உலகிலேயே அதிக அளவு ரப்பர் இந்தோனீஷியாவில்தான் கிடைக்கின்றது. ஏராளமான நெல் வயல்களும் நிறைந்துள்ளன. தேக்கு மரங்களும், சந்தன மரங்களும், தென்னை, கொயினா மரங்களும் இங்கே அதிகம். பெட்ரோல் எண்ணெயும், வெள்ளீயமும் பூமியிலிருந்து கிடைக்கின்றன. இத்தனை இயற்கைச் செல்வங்கள் நிறைந்திருப்பினும், இலட்சக்கணக்கான மக்கள் பட்டினியால் வாடுகின்றனர். 8 கோடி மக்களுள்ள இந்நாட்டில் கம்யூனிஸ்ட் சீனா கண் வைத்துத் தனக்கு அடிபணிந்து நிற்கும்படி செய்திருக்கின்றது.

## பஞ்சசீலம் பட்ட பாடு

திபேத்து சம்பந்தமாக இந்தியா சீனாவுடன் 1954, ஏப்ரல் 29-ந்தேதி ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டது. திபேத்துடன் வர்த்தகம் செய்வதற்கும், தொடர்பு வைத்துக் கொள்வதற்கும், திருக்கயிலாயம் முதலிய தலங்களுக்கு யாத்திரை செல்வோர் திபேத்தின் வழியாகச் சென்று வருவதற்கும் அந்த ஒப்பந்தம் வழி வகுத்தது. ஆங்கில ஆட்சிக் காலத்தில் திபேத்தில் தனக்குக் கிடைத்திருந்த விசேட ராஜாங்க உரிமைகளையெல்லாம் இந்தியா இந்த ஒப்பந்தத்தின் மூலம் பெருந்தன்மையுடன் விட்டுக் கொடுத்தது. திபேத்து சீனாவுக்கு உட்பட்ட சுயாட்சியுள்ள பிரதேசம் என்பதையும் ஒப்புக்கொண்டது. இந்த ஒப்பந்தத்தில்

சீனவும் இந்தியாவும் கடைப்பிடிக்க வேண்டிய ஐந்து கொள்கைகள் குறிக்கப் பெற்றிருந்தன. அவையே 'பஞ்ச சீலங்கள்' * என்று உலகம் முழுதும் விளம்பரப் படுத்தப் பெற்றவை. இரு நாடுகளில் ஒவ்வொன்றும் மற்றதன் தேச எல்லைகளையும், முழு ஆதிபத்திய அந்தஸ்தையும் மதித்தல் முதல் கொள்கை. இரண்டாவது பரஸ்பர அனுக்கிரமிப்பு. மூன்ருவது ஒன்று மற்றதன் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமை. நான்காவது இரு நாடுகளின் சமத்துவமும், பரஸ்பர உதவியும். ஐந்தாவது இரு நாடுகளும் சமாதானமாகச் சக வாழ்வு வாழ்தல். இவ்வாறு ஏற்பட்ட ஒப்பந்தம் எட்டு ஆண்டுகள் நீடித்திருக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கப் பெற்றது.

மேலே கூறிய பஞ்ச சீலங்களையும் சீன கிழித்துக் காற்றில் பறக்க விட்டுவிட்டது.

முதலாவது: இந்தியாவின் வட எல்லைகளைத் தாண்டிச் சீன ஆயுதம் தாங்கிய சிறுபடைகளை அனுப்பிக்கொண்டே யிருந்தது. இந்தியாவின் பிரதேச கௌரவத்தை மதிக்காமல், நமது காஷ்மீர் இராஜ்யத்தின் தென் பக்கம் லடாக் பகுதியில் 12,000 சதுர மைல் பரப்புள்ள நிலங்களை மெல்ல மெல்ல அபகரித்துக்கொண்டது; மொத்தம் ஐம்பதாயிரம் சதுர மைல் அளவுள்ள இந்தியாவுக்குச் சொந்தமான பூமியை அது தன்னுடையது என்று தகராறு செய்து வருகின்றது.

---

* 'பஞ்ச சீலங்கள்' என்று 2,000 ஆண்டுகட்கு முன் பகவான் புத்தர் உபதேசித்த ஐந்து ஒழுக்கங்களை இவை நினைவுறுத்துகின்றன. கொல்லாமை, திருடாமை, முறையற்ற சிற்றின்பம் விலக்கல், பொய்யாமை, வெறியூட்டும் பொருள்களை விலக்கல் ஆகியவையே அந்தப் பஞ்ச சீலங்கள்.

இரண்டாவது: அனுக்கிரமிப்புக்குப் பதிலாக, எல்லைப்புறங்களில் அடிக்கடி துப்பாக்கிகளை உபயோகித்துக் கொலைகள் செய்தும், நம் காவற் படைவீரர்களைத் தூக்கிச் சென்றும் திருவிளையாடல்கள் புரிந்ததோடு, சீனு ஆக்கிரமிப்புப் போரிலும் குதித்து விட்டது.

மூன்றுவது: நம் உள்நாட்டு விவகாரங்களில் முழு மூச்சுடன் சீனு இறங்கியுள்ளது. இந்தியா வல்லரசுகளின் கைப்பதுமையென்றும், ஏகாதிபத்திய வெறியர்களுக்கு வால் பிடிப்பதென்றும் கூறி, மற்ற வெளிநாடுகளுடன் நாம் நம் விருப்பப்படி கொண்டுள்ள உறவுகளைத் தூற்றி வருகின்றது. ஜனநாயக முறையில் அமைந்துள்ள நம் குடியரசை ஏளனம் செய்கின்றது. நம் ஜனநாயகத்தை அழித்துத் தன்னுடைய கம்யூனிஸ்ட் யதேச்சாதிகார ஆட்சிக் கொள்கையை நம்மீது திணிக்க அது இடைவிடாமல பற்பல வழிகளில் வேலை செய்து வருகின்றது. ஏராளமான ஒற்றர்களையும், இந்தியாவில் வசிக்கும் சீனர்களிலே பலரையும், இந்தியக் கம்யூனிஸ்டுகள் சிலரையும், மற்றும் துரோகிகளையும் அது பயன்படுத்தி வருகின்றது.

நான்காவது: சமத்துவத்தைச் சீனு குழிதோண்டிப் புதைத்துவிட்டது. தானே மேலென்றும், இந்தியா இழிவானதென்றும் கூவிக்கொண்டு வெறி பிடித்துக் கூத்தாடுகின்றது, பரஸ்பர உதவி என்பது பரஸ்பரப் போராக மூண்டுள்ளது.

ஐந்தாவது: சமாதானமான சக வாழ்வு என்ற உன்னதமான கொள்கையை ஸோவியத் ரஷ்யா உள்ளிட்ட பல நாடுகளும் ஏற்றுக் கொண்டுள்ளன, அமெரிக்கா, பிரிட்டன் போன்ற முதலாளித்துவ நாடுகளும், ரஷ்யா போன்ற கம்யூனிஸ்ட் நாடுகளும் ஒன்றுக்கொன்று பகையும் சண்டையுமின்றி வாழ முடியு

மென்றும், வாழ வேண்டுமென்றும், அதுவே சமாதான சக வாழ்வென்றும் ஸோவியத் பிரதமர் குருஷ்சேவ் அடிக்கடி கூறி வந்தார். நமது பிரதம மந்திரி நேரு அவர்களும் இந்தக் கொள்கையை முழுமனதோடு போற்றி வந்தார். இதைப் பற்றி அவர் 1951-ல் நார்மன் கஸின்ஸ் என்பவரிடம் கூறிய தெள்ளத் தெளிவான மொழிகள் இவை: 'எங்களுடைய வழிகளிலிருந்து முற்றிலும் வேறுபட்ட முறைகளில் சீனு அபிவிருத்தி யடைந்து வருகின்றது. சீன விவகாரத்தில் தலையிட நாங்கள் விரும்பவில்லை. எங்கள் விவகாரத்தில் சீனு தலையிடுவதையும் நாங்கள் விரும்பவில்லை.' இதுதான் சக வாழ்வின் உண்மைப் பொருள். ஆனல் நாம் வாழ்வதையோ, முன்னேறுவதையோ கம்யூனிஸ்ட் சீனு விரும்பவில்லை. இந்தியா மீது உலகமே திடுக்கிடும்படியான ஆயுதம் தாங்கிய பெரிய போரைச் சீனு நடத்த முன் வந்தது. இதுதான் அதன் சக வாழ்வு!

பஞ்ச சீலங்களுக்குப் பதிலாகச் சீனு கீழ்க்கண்ட பஞ்சமாபாதகங்களை மேற்கொண்டிருக்கின்றது:

1. அண்டை நாட்டின் நிலங்களை அபகரித்தல்.
2. ஆக்கிரமிப்பு.
3. நாட்டின் சுதந்தரத்தை மறுத்துத் தன் விருப்பப்படி பலாத்காரம் செய்தல்.
4. தனக்கு அடிமையாக்குதல்.
5. ஏச்சு, பொய்ப் பிரசாரம், வஞ்சனை, கொலை, போர்.

சீனு கோரும் 50,000 சதுர மைல் நிலப்பரப்பைப் பற்றி நாம் அதனுடன் சமாதானம் பேசி வந்தோம். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக அமலிலுள்ள நம் எல்லைகளைப் பற்றி விளக்கிச் சொன்னேம். நம்மிடமுள்ள எல்லைகள் பற்றிய பழைய பூகோளப் படங்களை

யும், தஸ்தாவேஜுகளையும், உலகம் முழுதும் இது வரை ஒப்புக்கொண்டுள்ள வரலாறுகளையும் எடுத்துக் காட்டினேம். இவைகளில் எதனையும் சீன மறுக்க முடியவில்லை, மறுக்க வழியுமில்லை. ஆயினும், சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கம் புதிதாகக் கள்ளத்தனமாகத் தயாரித்து வைத்துக் கொண்டிருக்கும் தரைப்படங் களையே தனக்கு ஆதாரமாகக் காட்டி வருகின்றது. மேற்கொண்டும் நாம் சமரசம் பேசத் தயாராயிருந் தோம். அந் நிலையில்தான் சீன போர் தொடுத் தது.

## ஆக்கிரமிப்புப் போரின் காரணங்கள்

சீன நம் எல்லைகளைத் தாண்டி ஏன் ஆக்கிரமிப்புப் போரில் இறங்கியுள்ளது என்பது கடவுளுக்கும், சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமைக் குழவுக்கும் மட்டுமே தெரியும். ஆயினும் பலர் பலவிதமாக யூகம் செய்து கூறுகின்றனர். சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கமோ தான் ஆக்கிரமிக்கவே யில்லை என்றும், இந்தியாவே தன்மீது ஆக்கிரமித்தது என்றும், தான் தற்காப்புக் காகவே போராடியது என்றும் பிதற்றி வந்தது. ஆனல் கடைசியாகத் திரு. மாக்டொனல்ட்* என்பவரிடம், இந்தியா போர் தொடுக்கப் போகின்றது என்று கரு தியே சீன முன்கூட்டிப் படையெடுக்க நேர்ந்தது என்று சீன அதிகாரிகள் கூறினர். ஆயினும் உண்மை யான காரணங்களைத் தெரிந்துகொள்ள நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டியது அவசியம்.

1. காஷ்மீரின் தென் பகுதியான லடாக்கையும், இமயமலையின் கீழ்ச் சாரலிலுள்ள நேபா எனப்படும் வட கிழக்கு எல்லைப் பிரதேசத்தையும் இந்தியாவிட மிருந்து

* இந்தியாவில் பழைய பிரிட்டிஷ் ஹைகமிஷனராக் இருந்தவர் திரு. மால்காம் மாக்டொனல்ட்.

சமாதான முறையில் பெற முடியாது, பலாத்கார மாகவே பறித்துக்கொள்ள வேண்டும் என்று கம்யூ னிஸ்ட் சீன அரசாங்கம் கருதியிருக்க வேண்டும்.

2. எல்லேத் தகராறுகளின் பெயரால் போரைத் தொடங்கி, மேற்கே காஷ்மீரையும், தெற்கில் நேப் பாளம், பூட்டானேயும், கிழக்கில் அஸ்ஸாமையும் பிடித்துக்கொள்ள வேண்டும். இந்தியாவின் வட பகுதிகளேத் தன்வசம் வைத்துக் கொண்டால், சீனு இந்தியாவுக்கு மட்டுமன்றி, வடக்கே தொலேவிலுள்ள ரஷ்யாவுக்கும் எச்சரிக்கையா யிருக்கும். சீனுவுக்கு நம் மிடம் தகராறு இருப்பது போல், அதற்கு ரஷ்யாவிடத் திலும் தகராறு உண்டு. மேலும் சீனுவுக்குத் தேவை யான பெட்ரோல் முதலிய யாவும் ரஷ்யாவிலிருந்தே கிடைக்க வேண்டியிருந்தன. தனக்கென்று பெட் ரோல் முதலியவை இல்லாமல் சீனு எதிலும் முன்னேற முடியாது; போரும் செய்ய முடியாது. இதே நிலேயில் தான் முன்பு ஜெர்மனியும் இருந்தது. அதனிடம் பெட்ரோலும், ரப்பரும் இல்லே. ஆயினும் மூர்க்கமாக இரண்டாவது உலகப் போரை அது தொடங்கி நடத்தி வந்தது. சிறந்த விஞ்ஞானிகளேக் கொண்டு செயற் கையாக ரப்பரையும், பெட்ரோலேயும் உண்டாக்கி அது பயன்படுத்திக் கொண்டது. சீனுவில் அத்தகைய விஞ்ஞானிகள் இல்லே. ஆகவே அஸ்ஸாமிலுள்ள எண்ணெய்க் கிணறுகளின் மீது அதற்கு ஆசையிருக் கும். அஸ்ஸாமைப் பிடித்த பிறகு, வசதி வாய்ந்த போது, தன் விருப்பப்படி, பர்மாவைச் சுண்டைக் காயைப் போல் ஒரே கடியில் விழுங்கி விடலாம். அதன் பின் காஷ்மீரிலிருந்து பர்மா, தாய்லாந்து, வியட்னும், மலாய், இந்தோனீஷியத் தீவுகள்வரை சீனு தன் ஆதிக்கியத்தை நிலேநிறுத்திக் கொள்ள முடியும். அந் நிலேயில் ஸோவியத் ரஷ்யாவும் அதன்

விஷயத்தில் வாலைச் சுருட்டிக் கொண்டு படுத்துவிடும் என்றும் சீனா கனவு காண்கின்றது.

3. ஆசியாவில் வல்லமையும், பெருமையும் கொண்டு தலைமையாக விளங்கும் மூன்று நாடுகள் ரஷ்யா, இந்தியா, சீனா ஆகியவை. ரஷ்யாவின் ஒரு பகுதி ஐரோப்பாவைச் சேர்ந்திருப்பினும், அது மேலை நாடுகளுடனேயே ஓயாமல் பொருதிக் கொண்டிருக்க நேர்ந்திருப்பினும், கீழ்த்திசையிலும் அதற்குச் செல்வாக்கு இருக்கின்றது. அந்தச் செல்வாக்கைத் தட்டிக் குறைக்க வேண்டும். அடுத்தாற்போல், சுதந்தரம் பெற்றதிலிருந்து வேகமாக முன்னேறி, உலக அரசியல் விவகாரங்களில் புகழ்பெற்று வளர்ந்து வரும் இந்தியா ஆசியாவின் தலைமைப் பதவியை வகிக்காதபடி தடுக்கவேண்டும். கோடி கோடியாக வெளி நாடுகளின் கடன் உதவிகளுடன், ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் இந்தியா பொருளாதாரத்தில் பெரிய அளவில் அமைதியாக முன்னேறி வருகின்றது. முன்பு கண்டறியாத அளவில் அணைகள் கட்டப் பெறுகின்றன. ஆலைத் தொழில்கள் வளர்ந்தோங்கி வருகின்றன. தொழிற்சாலைகள் அமைக்க ரஷ்யர்களும், ஜெர்மானியர்களும், மற்றும் பிற நாட்டார்களும் இந்தியாவுக்கு வந்து பணியாற்றுகிறார்கள். விவசாயத்திலும், தொழில்களிலும் இந்தியா அளவற்ற வேகத்துடன் முன்னேறுவதற்குரிய காரணங்களில் முதன்மையானது அமைதி - அதாவது போர் இல்லாமை. இந்தியாவைப் போருக்கு இழுக்க வேண்டும். கோடிக் கணக்கான மக்களைப் போருக்குப் பயிற்சி செய்வதிலும், புத்தம் புதிய போர்க் கருவிகளுக்காகக் கோடி கோடியாகப் பணத்தைச் செலவழிப்பதிலும், முக்கியமான பெரிய தொழில் ஸ்தாபனங்களை யெல்லாம் யுத்த தளவாடங்களை உற்பத்தி செய்

வதற்குத் திருப்புவதிலும், மக்கள் யுத்தத்தினுல் அவதிப்படுவதைத் தடுப்பதிலும் இந்தியா . தன் பொருளேயும் கருத்தையும் திருப்பும்படி செய்ய வேண்டும். 1962 வரை பதினைந்து ஆண்டுகளாகக் குறிப்பிடத்தக்க ஒரு போர்கூட இல்லாமல், இந்தியா செல்வத்தையும் சிந்தனையையும் உற்பத்திப் பெருக்கம் ஒன்றிலேயே செலுத்தி வருவதை மாற்றவேண்டும். இதற்கு ஏற்ற வழி போர்தான் என்று சீனு கருதியிருக்க வேண்டும்.

4. இந்தியா தன் படைகளுக்குப் புத்தம் புதிய கருவிகளேயும், இயந்திர சாதனங்களேயும் போதிய அளவு அமைத்துக் கொள்ளவில்லே. ஆயிரக் கணக்கான மைல் நீளமுள்ள எல்லேகளிலும் போதிய பாதுகாப்புக்களே அமைக்கவில்லே. தனக்கு எதிரிகளே இல்லேயென்று கருதிக்கொண்டிருந்தது. சீனு கொடிய பகைவன் என்பதை உணராமல், உற்ற நண்பனென்று கருதி, கொஞ்சிக் குலாவித் 'தேன் பிறை' கொண்டாடி வந்தது. சீனு இந்தியாவைத் தாக்க ஏற்பாடுகளேச் செய்துகொண்டிருக்கையில், இந்தியா சீனுவுக்காக வக்காலத்து வாங்கி ஐக்கிய நாடுகளில் வாதாடிக் கொண்டிருந்தது. இவ்வளவு ஏமாந்திருக்கும் சமயத்தில்தானே இந்தியாவைத் தாக்க வேண்டும்!

5. இராணுவச் சீரமைப்பிலும், பாதுகாப்பிலும் முழுக் கவனத்தையும் செலுத்தாமலிருந்த இந்தியாவை மின்னல் வேகத்தில் திடீரென்று தாக்கி, இந்தியா வெறும் கத்தரித் தோட்டத்துப் பொம்மை என்று காட்டவேண்டும். 'மாபெரும் உபகண்டமான இந்தியாவுக்கே இந்தக் கதியானுல் மற்றவைகள் எம்மட்டு!' என்று ஆசிய நாடுகளும், ஆப்பிரிக நாடுகளும் சீனுவைக் கண்டு கதிகலங்கி, அதன் போக்குக்கெல்லாம் இசைந்தும் பணிந்தும் நடந்து வரவேண்டும்.

6. சீனுவில் கம்யூனிஸ்ட் சர்வாதிகாரம் நடந்து வருகின்றது. கம்யூனிஸ்ட் தலைமைக் குழு தான் நினைத்ததை யெல்லாம் எதிர்ப்பின்றி உடனுக்குடன் நிறைவேற்ற முடியும். அதனுல் அந்நாட்டில் கோடிக் கணக்கான மக்களைத் தூண்டியும், போதனை செய்தும், எத்தனையோ வேலைகள் நடந்து வருகின்றன. இருபது வருட வேலையை ஒரே நாளில் செய்து முடிக்க வேண்டும் என்பது அக்கட்சியின் அறைகூவல். ஆனுல் இந்தியா ஜனநாயக நாடு. டில்லியில் மத்திய அரசாங்கத்தில் மட்டுமின்றி, மாநிலங்களிலும் ஜனநாயகமே நடைபெறுகின்றது. நகரங்களிலும், கிராமங்களிலும் கூட நகர் மன்றங்கள், பஞ்சாயத்துச் சபைகளில் நாம் மக்களின் ஆட்சியான ஜனநாயகத்தையே மேற்கொண்டிருக்கிறேம். இந்த ஜனநாயக அமைப்பையே தகர்த்துக் கட்ட வேண்டுமென்று கம்யூனிஸ்ட் சீனு கருதியிருக்கலாம். சீனு மட்டும் கம்யூனிஸ்ட் கொள்கையை உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொண்டிருந்தால் போதாது. வேறு பல நாடுகளும் அதேகொள்கையுடன் அதைச் சூழ்ந்து நின்று முட்டுக் கொடுத்து வர வேண்டும். அந்த நோக்குடன் கவனித்தால், இந்தியா மீது சீனுவின் படையெடுப்பு என்பதற்குப் பதிலாக, ஜனநாயகத்தின்மீது கம்யூனிஸத்தின் படையெடுப்பு என்று கூறினுல் அதிகப் பொருத்தமாகும்.

7. பழைய சீனச் சக்கரவர்த்திகளிலே சிலர், அண்டை அயல் நாடுகளைப் பிடித்து ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்து ஆட்சி புரிவதில் ஆர்வம் கொண்டு, அவ்வாறே நடத்தி வந்தனர். அக்காலத்தில் சீனப் படைகள் எல்லைப்புறங்களில் போராடிக்கொண்டேயிருக்கும். இதுதான் இராஜ்யத்தை விரிவுபடுத்தும் ஆசை, அல்லது ஏகாதிபத்திய வெறி. இந்த ஆசை மண்ணுக்குள் மறைந்து போன மன்னர்களோடு நிற்

காமல், சீனப் புரட்சிக்கு வித்திட்டு வளர்த்த தலைவர் ஸன் யாட்-ஸென்னுக்கும் இருந்ததென்று அவர் நூலைப் படித்தால் தெரிகின்றது. அவருக்குப் பின்னால் தலைமைப் பதவியிலிருந்த சியாங் கே-ஷேக்கும் அதே கருத்துடையவர். அவருக்குப் பின் வந்த கம்யூனிஸ்ட் தலைவர்களும், சீனா எந்தக் காலத்தில் எந்தெந்த நாடுகளையெல்லாம் பெற்றிருந்ததோ, அவைகளையெல்லாம் ஒன்றுவிடாமல் மறுபடி பிடித்துக்கொள்ள வேண்டும் என்று எண்ணுவதில் வியப்பில்லை. மேற்கொண்டு புது நாடுகளிலும் ஆதிக்கியம் வைத்துக் கொண்டால்தான் இரத்தக்கறை படிந்த தங்கள் கொடியை ஒரு கண்டம் முழுதும் பறக்கவிட முடியும்!

காலம் மாறிவிட்டது. ஆசியாவிலும், ஆப்பிரிகாவிலும், எங்கும் சுதந்தரம், சமத்துவம் என்ற கோஷங்கள் வானைப் பிளக்கின்றன. இரண்டாவது உலகப் போருக்குப் பின்னால், ஒவ்வொரு குடியேற்ற நாடும் வீறுகொண்டு விடுதலை பெற்றுத் திகழ்கின்றது. 1945 முதல் பன்னிரண்டு ஆண்டுகள் இந்தியா, பாகிஸ்தான், பர்மா, இந்தோனீஷியா, இலங்கை, வியட்னும், கம்போடியா, லாவோஸ் முதலிய நாடுகள் சுதந்தரம் பெற்றன. மத்தியக் கிழக்கில் ஸிரியாவும், லெபனுனும்பிரெஞ்சுக்காரரின் பிடியிலிருந்து விடுதலை பெற்றன. எகிப்து 1953-இல்ஆங்கிலத்துருப்புக்களை அறவே அகற்றிப் பூர்ண விடுதலையடைந்தது. 1955-இல் ஸூடானும், 1956-இல் டூனீஷியாவும், மொராக்கோவும், 1957-இல் கானவும் சுயாட்சி பெற்றன. இந்நிலையில் ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கியத்தைக் கீழ்த் திசையிலே எங்குமில்லாதபடி ஒழிக்க வேண்டுமென்று பல்லாண்டுகளாகக்கூவி வந்த சீனக்கம்யூனிஸ்ட் கட்சி, இப்போது தானே தன் இராஜ்ய விஸ்தரிப்பிலும், பிற நாடுகளைப் பிடித்துச் சீன ஏகாதிபத்தியம் அமைப்பதி

லும் வெட்கமில்லாமல் ஈடுபட்டுவிட்டது. கம்யூனிஸம் வேறு, ஏகாதிபத்திய ஆசை வேறு; ஒன்றுக்கொன்று நேர்முரணானது. சீனா இரண்டில் எதை அதிகமாய்ப் பற்றிக்கொண்டிருக்கின்றது? ஏகாதிபத்திய ஆசைக்காக அது தன் கம்யூனிஸத்தையும் பயன்படுத்திக் கொள்கின்றது என்பது தெளிவு. எனவேதான் பிரதம மந்திரி நேரு சீனாவின் நோக்கம் 'இராஜ்ய விஸ்தரிப்புத்தான்' என்று ஆணித்தரமாகச் சொல்லி வந்தார்.

8. இந்தியா பரிபூர்ண சுதந்தரம் பெற்ற பின்னரும் பிரிட்டிஷ் காமன்வெல்தில் சேர்ந்திருக்கின்றது. இங்கிலாந்து, கானடா, ஆஸ்திரேலியா போன்ற எல்லாக் காமன்வெல்த் நாடுகளுடனும் அதற்கு இயற்கையான தொடர்பு உண்டு. அத்துடன் அமெரிக்க ஐக்கிய நாட்டுடனும் அது நெருங்கிய உறவு கொண்டு, பெரிய அளவில் அமெரிக்க உதவிகளையும் பெற்று வந்தது. மேற்கு ஜெர்மனி, பிரான்ஸ் முதலிய நாடுகளும் நமக்கு ஆதரவானவை. இந்தியாவில் அமைந்துள்ள ஜனநாயக ஆட்சிமுறை மேலை நாடுகளில் நெடுங்காலமாக நடைபெற்று வரும் ஜனநாயகமேயாகும். பார்லிமெண்டு, சட்ட சபைகள், ஆளும் கட்சி, எதிர்க் கட்சிகள், வயது வந்தோர் வாக்குரிமை, தேர்தல்கள், தேர்தலின் மூலமாக மக்களே ஒரு கட்சியின் ஆட்சியை நீக்கி வேறு கட்சியிடம் ஆட்சியை ஒப்படைத்தல் இம்முறைகளெல்லாம் அந்த ஜனநாயகத்தைச் சேர்ந்தவை.

ஸோவியத் ரஷ்யாவிடமும் நமது உறவு இதுவரை நிலைத்திருக்கின்றது. நமது தொழில்முன்னேற்றத்திற்கு ரஷ்யா உதவிவருவதுடன், மற்றும் சில ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகளும் ஆதரவளித்து வருகின்றன.

இன்றைய உலகில் அமெரிக்காவின் தலைமையி

லும், ரஷ்யாவின் தலைமையிலும், வல்லரசுகளும் நாடு களும் இரு பிரிவாகி, இரண்டு பெரிய ராணுவ முகாம் களாக விளங்குகின்றன. ஒன்று ஜனநாயகக் கோஷ்டி, மற்றது கம்யூனிஸ்ட் கோஷ்டி. ஒவ்வொரு நாடும் இரண்டு கோஷ்டிகளில் ஒன்றில் சேர்ந்தால்தான் நல மென்று கருதவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

இந்நிலையில், மாபெரும் ஆசிய நாடாகிய இந்தியா இரு கோஷ்டிகளிலும் சேராமல் நடுநிலை வகிக்கின்றது. விலகி நிற்பதோடு அமைந்திராமல், எங்கே சண்டை நடந்தாலும் சமாதானத்திற்காக அது ஓடிச் செல்லு கின்றது. இரு குழாங்களிடத்தி லிருந்தும் அது உதவி களும் பெற்று வருகின்றது.

இதைக் கண்டு சீனவுக்கு எரிச்சல். வல்லரசுக் கூட்டங்கள் இரண்டில் இந்தியா ஒன்றில் சேரும்படி செய்ய வேண்டும். சீன ரஷ்யா முகாமைச் சேர்ந்த நாடாக இருந்தது. ரஷ்யா சீனவுக்கும் உதவி புரிந் தது, இந்தியாவுக்கும் உதவி புரிந்தது. ரஷ்யா தனக்கு மட்டும் உதவியதோடு நின்றிருக்க வேண்டும் என்பது சீனவின் கருத்து. தெளிவாக ஆராய்ந்து வேண்டு மென்றே ஒரு கொள்கையை ரஷ்யா கடைப்பிடித்து வரும்போது, அதை மாற்றச் சீனவால் முடியாது. சீடன் தம்மை வெல்லும்படி குரு விடமாட்டார்.

நடுநிலையை விட்டு இந்தியா ஒரே கோஷ்டியில் சேரும்படி செய்ய யுத்தமே ஏற்ற வழி. போர் தொடுத்து விட்டால், இந்தியா உடனே அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய ஜனநாயக நாடுகளிலிருந்து ஆயுதங்களையும் மற்ற உதவிகளையும் பெறுவதோடு, அந்தக் கோஷ்டியுடனேயே இரண்டறக் கலந்துவிடு மென்று கம்யூனிஸ்ட் சீன எதிர்பார்த்திருக்க வேண்டும்.

9. இந்தியாவை அடிக்கிற அடியில் ரஷ்யாவும்

தன்னைப் பற்றிப் பாடம் கற்றுக்கொள்ளுமென்று சீனு எண்ணியிருக்கக்கூடும். ஐரோப்பாவில் மட்டும் ரஷ்யா தன் ஆதிக்கியத்தை வைத்துக் கொண்டு, ஆசியாவில் தானே தலைமையிலிருக்க வழி செய்து கொள்ள வேண்டுமென்பது அதன் நோக்கம்.

இந்தியாவைத் தான் தாக்கும் திறமையைக் கண்டு ஆங்கிலேயரும் போர்த்துகீசியரும் விழிப் படைந்து, முறையே தங்களிடமுள்ள ஹாங்காங் தீவையும், மாக்கோ துறைமுகத்தையும் தன்னிடம் மீண்டும் கொடுத்துவிட வழி பிறக்குமென்று சீனு எண்ணியிருக்கலாம். சீன நாட்டைச் சேர்ந்த இந்த இரண்டு இடங்களும், ஃபார்மோஸா தீவுமே இன்னும் சீன இராஜ்யத்தோடுசேர்க்கப்பெறுமல்எஞ்சியுள்ளன.

ஆசியக் கண்டத்தில் மட்டுமன்றி, ஆப்பிரிக நாடுகளிலும், தென் அமெரிக்க நாடுகளிலும் புரட்சிகளையும் கலகங்களையும் கம்யூனிஸ்ட் சீனு தூண்டி விட்டுக் கொண்டேயிருக்கின்றது. அந்நாடுகளெல்லாம் அதன் வல்லமையையும் பெருமையையும் உணர்ந்து கொள்ள இந்தியப் போர் ஒரு வாய்ப்பாகும் அல்லவா!

ஜப்பான் தான் முன்பு பிடித்து வைத்துக்கொண்டிருந்த மஞ்சூரியாவில் ஏராளமான விவசாயப் பண்ணைகள், தொழிற்சாலைகள், உலோகச் சுரங்கங்கள் முதலியவற்றை அமைத்திருந்தது. சென்ற உலகப் போருக்குப்பின் அது மஞ்சூரியாவைச் சீனுவிடம் ஒப்படைக்க நேர்ந்தது. எனவே கோடிக் கணக்கில் பணம் செலவிட்டுத் தான் வளப்படுத்திய நாட்டில் ஜப்பான் மீண்டும் கண் வைத்தல் இயல்பு. அந்த ஆசை என்னவாகும் என்பதற்கு இந்தியாமீது சீனப் படையெடுப்பு ஓர் எச்சரிக்கையாகும்.

10. 'சமாதான சக வாழ்வு' என்று சீனக் கம்யூனிஸ்ட் சர்க்கார் கூறிவந்தது சீனுவில் கம்யூனிஸ்ட்

1916

## பதிப்புரை

'பாரத மணித்திரு நாடு' என்று நவயுகத்தின் கவிஞர் பாரதியார் பெருமையுடனும் உவப்புடனும் ஏற்றித் தொழுத நம் பாரதம் பழமைப் பண்புகளிலும் வரலாற்றுச் சிறப்புகளிலும் புகழ் மிக்கோங்கி யிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. அநாதி காலந்தொட்டு வழங்கிவரும் மறைகளும், காவியங்களும், இலக்கியங்களும் பாரதத்தின் பெருமைகளை அன்றைய நிலையிலும் இன்றைய நிலையிலும் பறை முழக்கி ஒலித்துக்கொண்டே யிருக்கின்றன. புத்தர், மகாவீரர், மகாத்மா காந்தி, ஜவஹர்லால் நேரு போன்ற ஆத்ம ஞானிகளும், அந்தரங்கசுத்தி படைத்த நெறியாளர்களும் தோன்றித் துலங்கிய புனித நாடு இது. சரித்திரங்கள் சிறப்பித்துக் கூறும் அரச சக்கரவர்த்திகள் வடநாட்டிலும் தென்னாட்டிலும் நிறைந்திருந்து நேரிய ஆட்சி புரிந்து வாழ்ந்திருக்கிறார்கள்.

காலம் எத்தனையோ மாறுதல்களைச் செய்ததற்கிணங்க நம் நாடு இத்தனை சிறப்புகளுக்குப் பிறகும் அந்நியரிடம் சிலகாலம் அடிமைப்பட்டிருந்தது. அடிமையகற்றி, சுதந்திரம் பெற நமக்கு வழி காண்பிப்பதற்கு இருளில் ஒரு ஒளிபோல் கருணாமூர்த்தியான காந்திஜி தோன்றினார். புரட்சிகளிலேயே ஒரு புரட்சி போல் அவரது ஆத்ம சக்தியின் துணைகொண்டு கத்தியின்றி இரத்தமின்றி — அறப்போரெனும் புரட்சி செய்து, நம் நாட்டை மீட்டு அடிமை எனும் நிலையை ஒழித்தோம். சாதி-சமய வேறுபாடின்றி ஒரே மக்கட் குலம் என்ற பெருமையோடு ஜனநாயக முறையில்

அரசு ஏற்படுத்திக்கொண்டு வாழ்கிறோம். உலகில் நம்மைச் சுற்றியுள்ள நாடுகள் எல்லாம் நம் சகோதர நாடுகளே என்று பரந்த மனப்பான்மையுடன் கருதும் அளவுக்கு நம்மைப் பாரதத்தின் பண்பு பக்குவப் படுத்தியிருக்கிறது. பண்பைச் செயலிலே காட்டும் முறையில் இன்று நாம் உலக நாடுகளில் பலவற்றுடன் தோழமை கொண்டாடும் அளவுக்கு உயர்ந்து நிற்கிறோம்.

இந்த நிலையில் பசித்தவன் பழங்கணக்கு பார்த்ததுபோல் மூன்றாண்டுகளுக்கு முன் திடீரென சீனா நம் நாட்டின்மீது போர் தொடுத்தது. தீர்ந்து கிடக்கிற எல்லைக் கொள்கைகளையும், தோழமை பாராட்டி வந்திருந்த பெருந்தன்மையையும் அலட்சியப்படுத்திப் புறக்கணித்துவிட்டு, அதிக்கிரமமான முறையில் போர் தொடுத்தது. போர் என்ற பேச்சுக்கு இடமில்லாத சமாதானத்தையும் சகோதரத்துவத்தையும் வலியுறுத்தும் பஞ்சசீலக் கொள்கைகளை வகுத்துக் கொடுத்திருந்தார் ஆசிய ஜோதியான நம் நேருஜி. அந்தக் கொள்கைகளை மீறுவதில் ஒரு வெட்க உணர்ச்சிகூட இன்றி, கூர் தீட்டிய மரத்திலேயே பதம் பார்க்கிற முறையில் நம்மீதே ஆக்கிரமிப்புச் செய்தது சீனா. சீனர் என்பவர் மனித இயல்பு மரத்துவிட்ட அரக்கர்கள் என்பதனை நாம் நம்ப முடியாமல் பிறகு நம்பி, அவர்களுக்கு உரிய பாடம் கற்பிக்கும் வழிகளில் இறங்கினோம்; பலன்: அவர்கள் போரைவிட்டு ஓடி ஒளிந்துகொண்டனர்.

சீனாக்காரரின் அநுபவத்தைக் கண்ட பிறகும்கூட நமது இன்னொரு அண்டை நாடான பாகிஸ்தான் காஷ்மீர்ப் பிரச்னையைக் கொண்டு சென்ற ஆகஸ்ட் மாதத்தில் இந்தியாமீது போர் தொடுத்தது. இன்று

தான் அண்டை நாடாகிவிட்டது அது; 1947 ஆகஸ்ட் மாதத்துக்கு முன் நம்மைச் சேர்ந்த நம் சகோதரர்களைக் கொண்ட நம் நாட்டின் ஒரு பகுதியாகத்தான் இருந்தது அது. இன்று நாம் அப்படிச் சொல்லிக்கொள்ள வெட்கப்படும் முறையில் அது பகை நாடாக மாறி, நம்மீது குண்டு போடத் துணிந்தது. சிங்கத்திற்கும் சுண்டெலிக்கும் சண்டை வந்த கதைதான் பாரதத்திற்கும் பாகிஸ்தானுக்கும் இடையே போர் மூண்ட கதை! வேறு சிறப்புக்கள் ஏதும் சொல்லிக்கொள்ள வழியில்லாமல், மதத்தின் அடிப்படையில் அரசு அமைத்துக்கொண்டு, அதிகார வெறியும் மத வெறியும் இணைந்து பிடர் பிடித்துத் தள்ள, அவர்கள் நம்மிடம் போர் தொடங்கினார்கள். அவர்களுக்கும் நம் இராணுவ வீரர்கள் பின்னோக்கி ஓடும் வழியைக் காட்டிவிட்டார்கள்.

எலியும் தவளையும் சிநேகமாயிருந்த பஞ்ச தந்திரக் கதையைப் போன்றதன்றி வேறல்ல சீனாவும் பாகிஸ்தானும் உறவு பூண்டு நம்மைத் தாக்குவது. இவர்களுடைய வண்டவாளங்களைச் சித்திரிப்பதே இந்த நூல். இன்று யுத்தகளத்தில் குதித்துள்ள நாடுகளின் மக்களுடைய பொதுவாழ்க்கை, அந்தந்த நாட்டின் அரசியல் நிலை, கம்யூனிஸம் பேசித் திரியும் சீனாவின் வேஷதாரி நிலை ஆகியவை பற்றி இந்த நூலில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இந்தியா-சீனா-பாகிஸ்தான் நாடுகளின் எல்லைபற்றிய விவரங்கள் முதல் அந்தந்த நாட்டின் வளர்ச்சி, திட்டங்கள், பாதுகாப்பு நிலை ஆகியன பற்றியும் தக்க ஆதாரங்களுடன் எடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. சீனாவும், பாகிஸ்தானும் போர் தொடுத்த சூழ்நிலைகளைப் படம் பிடித்தாற்போல் இதில் காணலாம். எந்த அளவுக்கு இரு

நாடுகளுமே அதர்மத்தின் அடிப்படையில் போர்கள் தொடங்கின, அவற்றுக்கு உலக நாடுகளின் ஆதரவு எப்படி அற்றுப் போகும் என்ற விவரங்கள் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.

'பாரதத்தின்மீது போர்' என்ற வார்த்தைகளேயே நம் நாட்டினர் கேட்கப் பொறுக்கமாட்டார்கள். நம் தமிழ் நாட்டினருக்கும் அத்தகைய வீறு ஏற்படுவது இயல்பு. ஆயினும் நிகழ்ந்த போரைப் பற்றிப் பொதுமக்களும் அறிதல் அவசியமல்லவா? போர் தொடுத்த சீனுவையும் பாகிஸ்தானேயும் பற்றிய விவரங்களேயும் அவைகளின் அவலங்களேயும் எடுத்துக் கூறும் முறையில் ஒரு நூலே வெளியிட்டுப் பொதுமக்களுக்குச் சேவை செய்யலாம் என்ற ஒரு இலட்சியம் கொண்டோம். அந்த இலட்சிய முயற்சி இந் நூலாகப் பரிணமித்திருக்கிறது. இந்தியா - சீனு - பாகிஸ்தான் ஆகியவற்றின் வரலாறுகளே அந்தந்தப் பகுதியிலும் வரைந்திருக்கிருர் ஆசிரியர். இந்த நூலேப் படிக்கும் போது பல வரலாற்று உண்மைகளே அறிய வாய்ப்பு ஏற்படுவதுடன், சீனு-பாகிஸ்தான் இருநாடுகளும் நம் நாட்டின்மீது போர் தொடுத்ததன் மூலம் உலக சரித்திரத்தில் எத்தகைய ஒரு கறையை ஏற்படுத்தி வைத்துவிட்டன என்ற பேருண்மையும் விளங்கும். வரலாறும் தற்போதையப் பிரச்னேகளும் சேர்ந்து இடம் பெற்றுள்ள இந்நூலேத் தமிழ்நாட்டினர் மனமார வரவேற்பர் என்ற நம்பிக்கையுடன் இதை அவர்கள் முன் சமர்ப்பிக்கிருேம். இந்நூலே வெளியிட அனுமதி அளித்த ஆசிரியர் திரு. ப. ராமஸ்வாமி அவர்களுக்கு எங்கள் நன்றி.

சித. ராமநாதன்

# லால்பகதூர்

## பேசுகிறார்

கே. எஸ். லட்சுமணன்

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
135, பவழக்காரத் தெரு — சென்னை-1

ஆட்சியை நிலைநிறுத்திக் கொள்வதற்காகவே. மேற் கொண்டு பயமில்லை என்ற நிலை ஏற்பட்டவுடன், அந்த முகத்திரையை அது கிழித்தெறியத் துணிந்து விட்டது.

1954-இல் அது இந்தியாவுடன் பஞ்ச சீலம் பேசி உடன்படிக்கை செய்துகொண்ட காரணம் என்ன? சுமார் 5 லட்சம் சதுரமைல் பரப்பும் 15 லட்சம் மக்களும் கொண்ட நமது அண்டை நாடான திபேத்தின் மீது சீனு படையெடுத்து, அதை அடிமைப்படுத்தி, அங்கு 5 லட்சம் படைவீரர்களையும், 50 லட்சம் சீனர்களையும் குடியேற்றி வைத்திருப்பதை இந்தியா பிரமாதமாக எதிர்க்காமல் ஏற்றுக் கொள்வதற்காகத்தான் என்று தெரிகின்றது. ஆகவே, பீரங்கிகளின் வாயில் தான் சீனுவின் சாமாதான சகவாழ்வுக் கொள்கை தொங்கிக் கொண்டிருந்தது!

11. 1949-இல்தானே சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கம் ஏற்பட்டது! 1962-க்குள் அது எத்தனை சண்டைகளில் வலுவில் புகுந்துகொண்டது! எத்தனை நாடுகளில் புரட்சிகளைத் தூண்டியது! கடைசியில் கச்சை கட்டிக்கொண்டு மாபெரும் பாரத நாட்டுடன் நேருக்கு நேர் மல் யுத்தம் தொடுத்து விட்டதே! இந்தப் படையெடுப்புக்கு என்ன அவசரம் ஏற்பட்டது? இதில் ஏதோ முக்கியமான இரகசியம் இருக்கத்தான் வேண்டும்.

சீனு இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை அமைத்து நிறைவேற்றியும் வந்தது. உணவுப் பொருள்களையும், தொழிற்சாலைகளின் உற்பத்திப் பொருள்களையும் பன்மடங்காகப் பெருக்குவதே அத்திட்டங்களின் நோக்கம். அதன்படி எத்தனை எத்தனையோ முன்னேற்றங்கள் அந்நாட்டில் நடைபெற்றன. உற்பத்திகளில் பல ஆண்டுகளைத் தாண்டி ஒரே பாய்ச்சலாகப்

பாய்ந்துவிட வேண்டும் என்பது சீன சர்க்காரின் கட்டளை.

ஆயினும், எங்கோ ஏதோ கோளாறு நேர்ந்து விட்டது. கம்யூனிஸ்ட் சீனு அமெரிக்காவையும், ரஷ்யாவையும் போன்ற வல்லரசாகத் தானும் விளங்க வேண்டுமென்றும், விரைவிலே தானும் அணுகுண்டு செய்து வெடிக்கச் செய்து பார்க்க வேண்டுமென்றும் கங்கணம் கட்டிக்கொண்டு வேலை செய்து வந்தது ஒரு புறம். மறுபக்கத்தில் அதன் அடிப்படையே ஆட ஆரம்பித்துவிட்டது. 65 கோடி மக்களுக்கும் போதிய உணவைக்கூட அதனுல் உற்பத்தி செய்ய முடியவில்லை! 1961-இல் அந்நாட்டில் பெரும் பஞ்சமே தோன்றி விட்டது. இந்தச் செய்தி சிறிது சிறிதாக முதலில் ஹாங்காங்கிலிருந்து வெளி வந்தது. பிறகு எல்லாம் வெட்ட வெளிச்சமாயிற்று. சீனு எப்போதுமே உணவு சம்பந்தமாக மிகவும் பற்ருக்குறை யுள்ளதுதான். ஜனங்களும் பட்டினியிலும் பஞ்சத்திலும் பயிற்சி பெற்றவர்கள் தாம். ஆயினும் கருணமூர்த்திகளான கம்யூனிஸ்டுகள் ஆட்சியில் அங்கே பஞ்சம் தோன்றியதுதான் வியப்புக்குரியது. உற்பத்திகளைப் பெருக்குவதற்காகத் தீட்டிய திட்டங்கள் பஞ்சத்தைப் பெருக்கிவிட்டன. கிடைத்த உணவுப் பொருள்களையும் பங்கீடு செய்தளிக்க வேண்டியதாயிற்று. 1958-இல் 37½ கோடி டன் தானியங்கள் விளையுமென்று திட்டமிட்டதில், 25 கோடி டன்தான் கிடைத்தது. அந்த ஆண்டில் ஆஸ்திரேலியா, ஃபிரான்ஸ், கானடா நாடுகளிலிருந்து ரூ. 170 கோடிக்குத் தானியங்கள் இறக்குமதி செய்யப்பட்டன. 1961 மாரிக் காலத்திலும் போதிய உணவில்லாமல் கோடிக் கணக்கான மக்கள் நாடு முழுதிலும் அவதிப்பட்டதாகப் பத்திரிகைகளில் செய்திகள் வந்தன. ஹாங்காங்கிலுள்ள சீனர்கள்

லட்சக் கணக்கான உணவுப் பொட்டலங்களை வாங்கிச் சீனவிலுள்ள தங்கள் உறவினர்களுக்கு அனுப்பி வந்தார்களாம். ஹாங்காங்கில் பிஸ்கோத்து டப்பாக்கள் முதல் எல்லா வெளிநாட்டு உணவுப் பண்டங்களுக்கும் அடிக்கடி கிராக்கி ஏற்படுவதற்குக் காரணமும் இத்தகைய ஏற்றுமதி யென்று சொல்லப்பட்டது. கோடிக் கணக்கான மக்களுள்ள நாட்டுக்குப் பொட்டலங்களில் உணவு சென்ருல் போதுமா ?

திட்டமிட்டபடி தானியங்களை அதிகமாக உற்பத்தி செய்ய முடியவில்லை என்பதால், சீன அரசாங்கம் ஒரு யோசனை செய்தது. 'நம் நான்கு எதிரிகளை ஒழியுங்கள்!' என்று நாட்டில் பிரசாரம் செய்தது; மக்களுக்குக் கட்டளையும் பிறப்பித்தது. நாடு முழுதும் நான்கு எதிரிகளை எதிர்த்துப் போரும் நடந்தது. அந்த எதிரிகள் யாவர்? ஈ, கொசு, எலி, புரு ஆகிய நான்குமே எதிரிகள் ! நாட்டார் அனைவரும் ஈக்களை அடிப்பதிலும், கொசுக்களை ஒழிப்பதிலும், எலிகளைப் பிடிப்பதிலும், புருக்களின் மீது கற்கள் வீசிக் கொல்லுவதிலும் ஈடுபட்டனர்.

இந்தப் போராட்டத்தின் காரணம், அந்த ஜந்துக்கள் மக்கள் உண்ணக்கூடிய தானியங்களை அழித்துவிடுகின்றன என்பதே. மற்ற நாடுகளிலும் ஈ, கொசு, எலிகளின் உபாதியைத் தடுக்க ஏற்பாடு செய்வதுண்டு. ஆனல் அதைப் போராக நடத்துவதில்லை. சீனவில் ஒவ்வொரு தானிய மணியையும் பாதுகாத்துச் சேமித்து வைக்கவேண்டிய அவசியமிருக்கிறது என்பது இதிலிருந்து தெளிவாகும். சமுதாயத்தின் தேவைக்கு மேல் உற்பத்தி இருந்தால்தான், அது வாழ்ந்து வரமுடியும். சீனவில் சென்ற 16 ஆண்டுகளில் தேவைக்கு வேண்டியதையே இன்னும் உற்பத்தி செய்ய முடியவில்லை!

விவசாய நஷ்டங்களைப் போலவே மற்றும் சில தொழில்களிலும் அபிவிருத்தியில்லை.

பாலும் தேனும் ஆறாக ஓடுமென்று எதிர்பார்த்த மக்கள் கொதிப்படைந்து குமுறிக்கொண்டிருந்தார்கள். பசி வந்தால் பத்தும் பறந்துவிடுமே! மக்களின் சிந்தனையைப் பட்டினி, பஞ்சத்திலிருந்து வேறு திசையில் திருப்புவதற்காகச் சீன அரசாங்கம் திடீரென்று இந்தியா மீது போர் தொடுத்திருக்க வேண்டும். போரில் ஏற்படும் வெற்றிகளைக் கண்டு மக்கள் சிறிது பொறுமையுடன் இருக்கக்கூடும். அத்துடன் யுத்தகால அவசியமென்று அவர்களை மேலும் அதிகமாய்ப் பலவந்தமாக அடக்கி வைக்கவும் வசதி ஏற்பட்டது.

இன்னும் 25 ஆண்டுகளில் சீன மக்களின் தொகை 65 கோடியிலிருந்து 100 கோடியாக உயர்ந்துவிடும். இப்போதுள்ள நிலங்கள் தாம் அப்போதும் இருக்கும். ஆயினும் 100 கோடி வயிற்றை நிரப்புவதற்கு வழி காணவேண்டுமே! இதையே சரியாகக் கவனிக்க முடியாத கம்யூனிஸ்ட் சர்க்கார் வெளிநாடுகளுக்கு வந்து வாணவேடிக்கைகள் காட்ட முற்பட்டுவிட்டது.

12. உலக நிலையைச் சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்கள் உன்னிப்பாய்க் கவனித்து வருபவர்கள். இரண்டு வல்லரசுக் கோஷ்டிகளிடமும் உலகத்தையே நாசம் செய்யக்கூடிய அணுகுண்டுகள் இருக்கின்றன. எந்த நேரத்திலும் மூன்றாவது உலக யுத்தம் மூளலாம். வல்லரசுகள் எரிமலையின் உச்சியில் ஏறி அமர்ந்திருக்கின்றன. எரிமலை எப்பொழுது வெடிக்குமென்றுதான் தெரியவில்லை. அத்தகைய மூன்றாவது உலகயுத்தம் மூள்வதற்கு முன்னால், சீனா தான் கைப்பற்றவேண்டிய நாடுகளையும், பிராந்தியங்களையும் கைப்பற்றிக் கொள்ளவேண்டும். ஆனால் தான் தொடுக்கும் போர்களே மூன்றாவது பெரும்போரை உண்டாக்காமலும்

இருக்கவேண்டும். குறுகிய கால அளவில், மின்னல் வேகத்தில், ஒவ்வொரு போரையும் முடித்துக்கொள்ள வேண்டும். உலக நாடுகள் உண்மையை அறிந்து பெருங் கண்டனங்களை எழுப்புமுன்பும், மேலை வல்லரசுகளோ, ரஷ்யாவோ குறுக்கிட்டுத் தடுக்க வராத நிலையிலும், தான் எண்ணிய செயல்களை விரைவிலே நிறைவேற்றிக்கொள்ள வேண்டும்.

இந்த நோக்கத்துடனேதான் இந்தியாவில் கால் வைத்தது கம்யூனிஸ்ட் சீனு. ஆனுல் அந்த யானையின் கால் இந்திய முதலையின் வாயில் சிக்கியது.

13. யுத்தத்தைப் பற்றி ரஷ்யாவுக்கும் சீனுவுக்கும் கருத்து வேற்றுமை இருப்பதோடு, கம்யூனிஸ்ட் கொள்கை பற்றியும் வித்தியாசம் உள்ளது. சென்ற யுத்தத்திலிருந்து ரஷ்ய மக்களும், ஸோவியத் தலைவர்களும் போரினுல் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை நன்கு தெரிந்து கொண்டிருக்கின்றனர். பெரும் போரினுல் ஆதாயமும் இல்லையென்பது வெளிப்படை. மேலும் மூன்ருவது உலக யுத்தம் முந்திய இரண்டு போர்களைப் போலிராது. யுத்தம் தொடங்கிய சில மணி நேரத்தில் அணுகுண்டுகளால் ஓர் எதிரி மற்ற எதிரியின் போர்ச் சாதனங்களை அழித்துவிட முடியும். கோடிக் கணக்கான மக்களும் மடிவர். அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டுகளின் அழிக்கும் ஆற்றலை ஸோவியத் தலைவர்கள் மிக நன்ருக அறிவார்கள். மூன்ருவது உலகப் போர் தோன்ருமல் அமைதி இருந்தால்தான் ரஷ்யா வாழமுடியும், வளம்பெற்று வளரமுடியும், மற்ற நாடுகளிலும் கம்யூனிஸம் பரவமுடியும் என்ற முடிவுக்கு அவர்கள் வந்துள்ளனர். முதலாளித்துவ நாடுகள் சமாதானமாக வாழ்ந்து, பொருளாதார முன்னேற்றத்தில் தங்களுடன் போட்டியிடவேண்டும் என்றுதான் முந்திய ஸோவியத் பிரதமர் அடிக்கடி

பேசிவந்தார். இதையே அவர் 'சமாதான சகவாழ்வு' என்று கூறிவந்தார்.

சமாதானத்திற்கும் சகவாழ்வுக்குமே சீனு சத்துரு. உலகம் முழுதும் கம்யூனிஸம் பரவும்வரை போரை விடாமல் நடத்தி வரவேண்டும் என்பது அதன் கருத்து. கம்யூனிஸத்திற்கும் முதலாளித்துவத்திற்கும் இடையில் சகவாழ்வு என்பதே கூடாது என்றும் அது கூறுகின்றது. அணுகுண்டுகளை எதிரிகள்மீது வீசாமல் கையிலேயே வைத்துக்கொண்டு ஒதுங்குவது கோழைத்தனம் என்று அது கண்டனம் செய்கின்றது.

இந்த ரஷ்ய-சீன விவாதம் நாளுக்கு நாள் முற்றி வந்து, இரு கம்யூனிஸ்ட் குழாங்களுக்கு மிடையே பெரும் பிளவு ஏற்பட்டுள்ளது.

இடையில் சீனு தன் கொள்கையை நிரூபித்துக் காட்ட இந்திய எல்லையில் குதித்தது!

14. ஸோவியத் கம்யூனிஸ்டுகளின் தத்துவத்தை நடைமுறையில் பார்த்தால், அது வெறும் வரட்டுக் கம்யூனிஸமாக இல்லை. கம்யூனிஸத்தோடு நாட்டுப் பற்றும் கலந்து காணப்படுகின்றது. இரண்டாவது உலக யுத்தத்தில் ரஷ்யா ஹிட்லரின் படைகளை எதிர்த்துப் போரிடுகையில், 'நம் தேசியப் போராட்டம்' என்றுதான் கூவி, மக்களைத் திரட்டி வெற்றிகொண்டது. கம்யூனிஸத்திற்காக நாட்டைக் காட்டிக் கொடுக்கும் பண்பு அங்கு மக்களுக்குமில்லை, தலைவர்களுக்குமில்லை. நாட்டைப் பேணிப் பாதுகாக்கவேண்டும்; அதிலே கம்யூனிஸம் வளர்ந்து நிலைக்கவேண்டும். நாட்டைப் புறக்கணித்துவிட்டு வெறும் கம்யூனிஸத்தைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருப்பதில் அவர்களுக்கு நாட்டமில்லை.

சீனுவும் அப்படித்தான். பல சமயங்களில் ரஷ்யக்

கம்யூனிஸ்ட் தலைவர்களுடைய ஆலோசனைகளையும், கட்டளைகளையும் சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்கள் மீறி நடந்திருக்கின்றனர். சீனாவுக்கு எது நன்மை என்பதிலேயே அவர்களுக்கு மிகுந்த அக்கறை. ஆகவே சீனக் கம்யூனிஸத்திலும் தேசபக்தி இரண்டறக் கலந்துள்ளது.

தெற்கு ஆசிய நாடுகளிலும், தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் சீனா தன் இஷ்டம் போலவே நடந்து கொள்ள விரும்புகின்றது. ரஷ்யாவின் யோசனைகளைக் கேட்க அது தயாராயில்லை.

15. சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவரான மாஸே - துங், ஐரோப்பாவின் ஆதிக்கியத்திற்காக அடோல்ப் ஹிட்லர் நடந்துகொண்டதைப் போலவே ஆசியாவில் சர்வாதிகார வெறியுடன் நடந்து வருகிறார். ஆனால் ஹிட்லர் கம்யூனிஸத்தின் எதிரி. மா- கம்யூனிஸ்ட் தத்துவம் பேசிக்கொண்டே, ஹிட்லரைப் போல் நடிக்கிறார். நாடு நாடாகப் போர்களைக் கிளப்பி வருகிறார். போர்களில் தர்மம் நியாயம் பார்க்கக் கூடாதென்று உபதேசிக்கிறார். பாரத நாட்டின்மீதே படையெடுக்க உத்தரவு செய்த அவருடைய ஆணவம் ஹிட்லருடைய ஆணவத்தை ஒத்திருக்கின்றது.

1937-இல் ஆஸ்திரிய அரசாங்கத் தலைவர் ஷுஸ்னிக்கை ஹிட்லர் அழைத்தார். மூனிக்கில் சந்திப்பு ஏற்பட்டது.

ஷுஸ்னிக்கிடம் ஒரு காகிதம் கொடுக்கப்பெற்றது. அதிலுள்ள விஷயத்தில் ஓர் எழுத்தையும் மாற்ற முடியாதென்றும், உடனே கையெழுத்திடாவிட்டால், ஜெர்மன் படைகள் ஆஸ்திரியா மீது பாயுமென்றும் ஹிட்லர் எச்சரிக்கை செய்தார்.

போரைத் தவிர்ப்பதற்காக ஷுஸ்னிக் அந்தக் காகிதத்தில் கையெழுத்திட்டுக் கொடுத்தார். ஆஸ்

திரிய அரசாங்கத்தைத் தாமாக ஹிட்லரிடம் ஒப் படைப்பதாகவே அதில் எழுதி யிருந்தது. அது ஆஸ்திரியாவின் மரண சாஸனம்! இவ்வாறு ஒரு குண்டுகூடச் சுடாமல் ஆஸ்திரிய நாடு ஹிட்லரின் கைக்குள் விழுந்துவிட்டது.

அடுத்தாற்போல், பிரிட்டிஷ் பிரதம மந்திரி திரு. சேம்பர்லேனும், பிரெஞ்சுப் பிரதம மந்திரி திரு. டலாடியரும், இத்தாலிய சர்வாதிகாரி முஸோலினியும் சேர்ந்து ஹிட்லருடைய படைகள் ஸெக்கோஸ்லோ வேகிய நாட்டில் சுடேட்டன் பகுதியைப் பிடித்துக் கொள்ள அநுமதியளித்துக் கையெழுத்திட்டார்கள். இதனுல் 36 லட்சம் ஜனங்களும், 11,000 சதுர மைல் பரப்புள்ள பிரதேசத்துடன் தொலேந்தனர்!

ஹிட்லர் சுடேட்டன் பகுதியுடன் நிற்கவில்லே. பின்னுல் ஸெக் நாடு முழுவதையுமே விழுங்கி விட்டார்.

இந்தநிகழ்ச்சிகளிலிருந்துஇங்கிலாந்து,ஃபிரான்ஸ் முதலிய ஐரோப்பிய நாடுகளேப் பற்றி அவர் என்ன கருதியிருந்தார் என்பது தெரியும். 'நம் எதிரி கள் அற்பமான புழுக்கள்!' என்று அவர் கூறினுர்.

ஆசியாவிலுள்ள நாடுகளும் 'அற்பப் புழுக்கள்' என்றுதான் சீனச் சர்வாதிகாரி மாஸே-துங்கின் கண்களுக்குத் தோன்றுகின்றன! ஆனுல் ஹிட்ல ருடைய வல்லமையில் ஆயிரத்தில் ஒரு பங்காவது மாவிடம் உண்டா? ஜெர்மனி விஞ்ஞானத்தில் தலே சிறந்த நாடு. அங்கே மேதாவிகளும், சிறந்த விஞ் ஞானிகளும், தத்துவ ஞானிகளும் நிறைந்திருந்தார் கள். மக்கள் திறமான போர்ப் பயிற்சியுடன் விளங்கி ஞர்கள். அவர்கள் அஞ்சா நெஞ்சர்கள். அத்தகைய ஜெர்மானியர் அனேவரும் ஹிட்லருக்கு அடங்கி அவ ருடன் ஒத்துழைக்க நேர்ந்தது. அதற்கு மூலகாரணம்

அப்போதிருந்த நிலைமை. அப்பொழுது ஜெர்மனி 'வாழ்வா, மரணமா?' என்ற நிலையிலிருந்தது. அந்த நிலைமையை ஹிட்லர் நன்கு பயன் படுத்திக்கொண்டார். போலந்து மீது படையெடுத்து வெற்றி கொண்டார். டென்மார்க் தேசத்தில் படையெடுத்தார். அப்பொழுது டேனிஷ் மக்கள் காலை உணவருந்தி எழுந்திருக்கு முன்பே நாடு ஹிட்லர் வசமாகிவிட்டது. பெல்ஜியம், ஹாலந்து முதலிய நாடுகளும் அவர் காலடியில் உருண்டன. உலகிலேயே சிறந்த படையென்று புகழ் பெற்ற ஃபிரெஞ்சுப் படையை ஏழே நாட்களில் முறியடித்துக் காட்டினார் ஹிட்லர். பல்கேரியா, ருமேனியா, யுகோஸ்லேவியா, ஹங்கேரி, கிரீஸ் ஆகிய:எதுவும் அவர் படைகளை எதிர்த்து நிற்க முடியவில்லை. பின்னால் அவர் ரஷ்யாவை நோக்கித் திரும்பினார். வடக்கே பால்டிக் கடலிலிருந்து தெற்கே கருங்கடல் வரை ஆயிரம் மைல் அகலமுள்ள மாபெரும் போர் அரங்கத்தின் வழியே அவருடைய நாஜிப் படைகளும், பீரங்கிகளும், டாங்குகளும், கவசம் பூண்ட லாரிகளும், வெடிகுண்டு விமானங்களும் ரஷ்யா மீது படையெடுத்துச் சென்றன. 1945 வரை நடந்த அந்தப் போராட்டம் உலகப் பிரசித்தி பெற்றது. ரஷ்யா ஹிட்லரைப் புறமுதுகு காட்டச் செய்தது.

கடைசியில் ஹிட்லர் விஷம் பருகி மாண்டார். அவர் உடலை பெர்லின் நகரிலே குண்டு துளைத்த ஒரு குழிக்குள்ளே தள்ளி மூடினார் அவருடைய தோழரான ரிப்பன்டிராப் என்ற மந்திரி மா-வின் மெய்ச்சீடராக விளங்கி, முகத்தில் புன்னகையும், நெஞ்சில் கரவடமும், கையில் கொலைக் கருவியும் கொண்டு ஒவ்வொரு நாடாக ஏமாற்றி வரும் சூ என்-லாய் ரிப்பன்டிராப் ஹிட்லருக்குச் செய்துவந்த பணிகளை இப்போது சீன நாட்டு நகல் ஹிட்லருக்குச் செய்து

வருகிறார். ஹிட்லருக்கு ஏற்பட்ட கதிதான் மா ஸே-துங்குக்கும் அவருடைய சீடர்களுக்கும் காத்திருக்கின்றது.

ஜெர்மன் படையோடு சீனப் படையை ஒப்பிட்டுப் பார்க்கவே முடியாது. ஜெர்மன் படை வல்லவர்கள் வார்த்தெடுத்து நிறுத்தியது. மற்ற ஐரோப்பியப் படையினர் நேருக்கு நேராக ஜெர்மன் படையைச் சந்தித்தவுடன் திகிலடைவர். படை அதிகாரிகளுக்குப் பயிற்சி யளிக்கும் ஜெர்மன் தலைமைக் காரியாலயத்தில், உலகப் போர் முறைகளை யெல்லாம் கற்றறிந்த, பரம்பரையாக வந்த மேதைகள் இருந்தனர். விஞ்ஞானிகள் ஆண்டுதோறும் புதுப் புதுப் போர்க் கருவிகளைப் படைக்க வழிசெய்து வந்தனர். எல்லாவற்றிற்கும் மேலாக ஜெர்மனி பெருந் தொழிற் பெருக்கமுள்ள நாடு. மக்களுக்கு வேண்டிய பொருள்களையும், போர்த் தளவாடங்களையும் அது விரைவிலே உற்பத்தி செய்து கொள்ள முடிந்தது. கோடிக் கணக்கான மக்கள் அனைவரும் ஒரே கட்டுக்குள் அடங்கி, எப்படியும் தங்கள் தாய்நாட்டுக்கு விமோசனங் காணவேண்டும் என்பதில் அசையாத உறுதி கொண்டிருந்தனர்.

இந்த வல்லமைகளில் எதுவும் சீனுவிடமில்லை. சீனப் படையினர் நமது எல்லையில் கொண்டு வந்த பீரங்கிகளும் பிறவும் ரஷ்யாவிடம் இரவல் வாங்கியவை. பட்டினி கிடப்பதிலும், கிடைத்ததை அள்ளி விழுங்குவதிலும், கொள்ளை யடிப்பதிலும், ஏமாற்று வித்தைகள் செய்வதிலுமே அவர்கள் வல்லவர்களென்று தெரிகின்றது. 'சீனர்கள் பின் வாங்கி ஓட்டம் பிடித்தால் அவர்களை யாரும் தொடர்ந்து பிடிக்க முடியாது!' என்று நம் இராணுவ அதிகாரி ஒருவர் கூறினார். நம்முடைய சிப்பாய்கள் உண்மையிலேயே நாம் பெருமைப்படக் கூடியவர்கள். உலகமே

அஞ்சிய ஜெர்மன் படையினரை எதிர்த்து, அவர் களில் பலருடைய குடல்களை யெடுத்து மாலைகளாகக் கழுத்தில் போட்டுக் கொண்டவர்களின் வமிசத்தைச் சேர்ந்த பலர் அதிலுள்ளனர். 20-சீன சிப்பாய்களுக்கு ஓர் இந்திய சிப்பாய் நிகரென்று நம் முன்னாள் சேனாபதி தளபதி கரியப்பா கூறியுள்ளார்.

சீனத் தலைவர் மாஸே-துங் அமெரிக்க ஐக்கிய நாட்டை வெறும் 'அட்டைப் புலி' என்று இடைவிடா மல் பரிகாசம் செய்து வருகிறார். 'அந்த அட்டைப் புலிக்கு அணு (குண்டு)ப் பற்கள் இருக்கின்றன ' என்று ரஷ்யத் தலைவர் குருஷ்சேவ் ஆப்பறைந்தது போல் பதிலளித்தார். மா தம்மைச் சீனத்துச் சிங்கமென்று கருதி மமதையோடு அடிக்கடி உறுமுகிறார். ஆனால் அவர் சிங்கத் தோல் போர்த்திய கழுதைதான் என் பதை விரைவிலே உலகம் கண்டு கொள்ளும்.

போர் செய்யும் கம்யூனிஸ்ட் சீன அரசாங்கம் வேறு, சீன மக்கள் சமூதாயம் வேறு என்றும், அர சாங்கத்தை எதிர்ப்பதில் மக்களைத் துவேஷிக்கக் கூடாது என்றும் நம் தலைவர் நேரு அடிக்கடி எடுத்துக் காட்டினார். ஆனால் 'அரசு-மக்கள்' என்ற வேறு பாட்டைப் பொதுமக்கள் பிரித்துப் பார்ப்பது அரிது. இதய உணர்ச்சி மேலிட்டபொழுது அந்த ஆராய்ச் சிக்கு இடமிராது. போருக்குப் பின்னால் பாரத நாட்டில் சீனர்களைப் பற்றி மக்கள் மிகக் கேவலமா கவே எண்ணுகிறார்கள். புது டில்லி ஊர்வலங்களில், 'எலி தின்னிப் பசங்களே, வெளியேறுங்கள்!' என்று ஜனங்கள் கூவிச் சென்றார்களாம். சீனப் பிரதமர் இந்தியனுக்கு விருந்தளிக்கையில், 'பாம்பு ரோஸ்ட் வேண்டுமா? வேண்டாமென்றால், பல்லி ரோஸ்ட் சாப் பிடு! பாம்புக் கறி, பல்லி ரோஸ்ட், தேள் கூட்டு, கரப் பான் பொறியல்....' என்றெல்லாம் அடுக்கிக் கூறிய

தாகக் கற்பனை செய்து சென்னைப் பத்திரிகை ஒன்றில் எழுதப்பட்டது! சீனாவில் உணவுப் பொருள்களே கிடைக்காத ஒரு பகுதியில் பாம்புகளைக்கூட ஜனங்கள் உண்பதுண்டு. பாம்பிலிருந்து பல்லி, கரப்பான்வரை கற்பனை முற்றியிருக்கிறது! இவ்வாறே நம் நாட்டின் மற்றைப் பகுதிகளிலும், எங்குமே, சீனரிடம் அளவற்ற வெறுப்பும், வெஞ்சினமும் பொங்கிக்கொண்டிருக்கின்றன. ஆயிரம் ஆண்டுகளாகச் சீனா தேடிவந்த புகழையும் நட்பையும் ஒரு நொடியில் தகர்த்தெறியவே சீனக் கம்யூனிஸ்ட் சர்க்கார் முனைந்து விட்டது. சீனா வெற்றிப் பாதையை விட்டு விலகி அழிவுப் பாதையிலேயே ஆவேசத்துடன் இறங்கி யுள்ளது.

16. மேலே விவரிக்கப் பெற்ற காரணங்களுடன், சீனப் படையெடுப்புக்கு மற்றும் ஒரு முக்கியமான காரணம் உண்டு. அமெரிக்க ஐக்கிய நாட்டின்மீது சீனக் கம்யூனிஸ்டுகளுக்குத் தீராப் பகையுண்டு. இந்தியாவுக்கு அமெரிக்கர் உதவிக்கு வந்தால், அவர்களை இந்திய மண்ணிலேயே சந்திக்கலாம் என்றும் சீனா ஆசை கொண்டிருக்கலாம். கொரியாவில் அப்படித்தான் நடந்தது. ஆனால் இந்தியா கொரியா அன்று. சீனா ஆயிரக்கணக்கான மைல்களைத் தாண்டி இந்தியாவில் தன் ஆயுத தளவாடங்களையும், படைகளையும் கொண்டுவந்து நீண்ட நாள் போரிட முடியாது.

17. இந்தியா அமெரிக்காவுடனும், இங்கிலாந்துடனும் நெருங்கிய நல்லுறவு கொண்டுள்ளது. ஆயினும் வல்லரசுகளுடன் இந் நாடு 'கூட்டுச் சேராத' கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறது. இதை அமெரிக்க முகாமுடன் சேர்ந்துவிடும்படி செய்யவும், பின்னர் ஆசிய, ஆப்பிரிக நாடுகளிடம் இந்தியா ஏகாதிபத்திய முகாமுக்கு வால் பிடிக்கிறது என்று தம்பட்டமடிக்கவும் சீனா விரும்பியது.

18. இந்தியா மற்ற வல்லரசுகளைப் போல இன்னும் பூரண இராணுவ வலிமை பெற்றிருக்கவில்லை. அணுச் சக்தியையும், அதை உண்டாக்குவதையும் அறிந்திருந்தும், இந்தியா அணுகுண்டு தயாரிக்க விரும்பவில்லை. நிலம், நீர், ஆகாயப் படைகள் அமைப்பதில் சுதந்தர இந்தியா கோடிக்கணக்கான பொருளைச் செலவிட்டு முயற்சிகள் செய்துவந்தது. ஆயினும் வெறும் படைகளால் மட்டும் பயனில்லை. படைகளுக்குப் பக்கபலமாக இருப்பவை பல்லாயிரம் தொழிற்சாலைகளும், விவசாய உற்பத்திகளும். அவைகளைக் கவனிக்க இந்தியா மாபெரும் திட்டங்களை வகுத்து, நிறைவேற்றிக் கொண்டிருந்தது. அதைக் கண்டு பொறாமையடைந்தது சீனு. இந்தியா பூரண வல்லமை பெறுமுன்பே தாக்க வேண்டுமென்று முனைந்தது.

19. இந்தியா பயிற்சி பெற்ற கோடி சிப்பாய்களைக் கொண்ட தரைப்படையும், கடல்களைக் கலக்கக் கூடிய பெரிய கடற்படையும், ஆயிரக்கணக்கான போர் விமானங்கள் அமைந்த ஆகாயப்படையும் பெற்றிருந்தால், சீனு இந்தியாமீது படையெடுத்து வரக் கனவிலும் கருதியிருக்குமா? நம் குறைபாடுகளை ஆராய்ந்து தெளிந்து வெகு விரைவிலே நாம் அவற்றைக் களைந்தெறியவேண்டும். சீனுவின் ஆக்கிரமிப்பால், அக்குறைபாடுகளில் சில தாமாகவே அகன்றுவிட்டன. எஞ்சியவைகளையும் நாம் நீக்கிக்கொண்டு, நம் வல்லமையைப் பெருக்கிக் கொள்ளவேண்டும். இனி நம் பலவீனங்களில் முக்கியமான சிலவற்றைக் கவனிப்போம்.

### நம் குறைபாடுகள்

இந்திய மக்களை ஒற்றுமைப்படுத்தி, சத்யாக்கிரகப் போர்கள் நடத்திச் சுதந்தரத்தை எளிதில் அடை

யும்படி செய்தவர் காந்தியடிகள். அவருடைய மேன்மையையும், ஆற்றல்களையும் பற்றி அறிஞர்கள் பலவாறு புகழ்ந்து கூறியிருக்கிறார்கள். ஓர் ஆசிரியர், 'உலகம் இதுவரை கண்டுள்ள ராணுவத் தளபதிகளில் காந்திஜியே தலைமையானவர்' என்று குறித்துள்ளார். காந்திஜி துப்பாக்கியே தூக்கியறியாதவர். ஆயினும் அவர் தளபதியே; தளபதிகளில் தலைமையானவரே! உலகின் பல பாகங்களில் பரவியிருந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ராணுவ வல்லமை அனைத்தையும் எதிர்த்து, அந்த வல்லமையைப் பயனற்றதாக்கி வெற்றிகொள்ளும் புதிய போர்முறை ஒன்றை வகுத்தவர் அவரே. பெரிய கண்டம் போன்ற பாரத நாட்டை ஐக்கியப்படுத்தி, வீரம் புகட்டி, நிமிர்ந்து நிற்கச் செய்தவர் அந்த மகாத்மாவே.

அந்த மகாத்மா காட்டிய வழியிலிருந்து பின்னால் நாம் வெகுதூரம் விலகிவிட்டோம். 'ஈட்டிகளின் முன்பும் ஒன்றி நில்லுங்கள்! குண்டு மழை பொழிந்தாலும் சத்தியமே பேசுங்கள்!' என்று அவர் சிங்கநாதம் செய்து கற்பித்ததுபோல் இனி யார் செய்யப்போகின்றனர்! அவர் எங்கிருந்தாலும், நாட்டின் எந்த மூலையில் எது நடந்தாலும், கவனித்துவந்தார். எங்கெங்கு தவறுகள் நேர்ந்தாலும் அவர் ஆணித்தரமாகக் கண்டித்துவந்தார். புகார்களை யெல்லாம் தக்க நண்பர்கள் மூலம் விசாரித்துத் தம் முடிவுகளைப் பத்திரிகைகளில் வெளியிட்டும், சொற்பொழிவுகளில் விளம்பரம் செய்தும், கடிதங்கள் எழுதியும், தயவு தாட்சண்யமில்லாமல் நடந்துகொண்டார்.

அவருக்கு வலது கையாக விளங்கிய ஸர்தார் வல்லபாய் பட்டேல் சுதந்தர இந்தியாவின் உள்நாட்டு அமைச்சராயிருந்து ஆற்றிய பணிகளை நாம் ஒருபோதும் மறக்க முடியாது. இந்தியாவிலிருந்து பாகிஸ்தான்

பிரிந்த நிலையில், பெரிதும் சிறிதுமான 600 இந்திய சமஸ்தானங்களைப் பாரதப் பேரரசுடன் கலந்துவிடும்படி செய்தவர் அவர். ஆடம்பரமான பட்டு அங்கிகளும், நவரத்ன அணிகளும் அணிந்து விளங்கிய அரசர்களும், மகாராஜாக்களும் தங்கள் மணிமுடிகளைக் கழற்றி வைத்துவிட்டு, அரசாங்கம் அளிக்கும் ஊதியத்தைப் பெற்றுக்கொண்டு போகும்படி செய்தவர் அவர். இவ்வாறு சமஸ்தானங்கள் முதலிலேயே இணைக்கப் பெறுமலிருந்தால், எத்தனையோ சண்டைகளும் குழப்பங்களும் ஏற்பட்டு நாடு சீரழிந்திருக்கும். 1947 இல் நாடு சுதந்தரமடைவதற்கு முன்பே, எந்தெந்த சமஸ்தானங்கள் பாகிஸ்தானுடன் சேர்ந்து, உள்நாட்டில் கலகம் செய்ய வேண்டுமென்று ஏற்பாடாகியிருந்தது. மற்றும் சில பெரிய சமஸ்தானங்களும் வெளியிலிருந்து வரும் வல்லரசுகளுக்கு ஏற்ற தளங்களாக மாறியிருக்கும். அவ்வாறெல்லாம் ஏற்படாமல் காத்தவர் நமது ஸர்தார். கடைசியாக மிகப் பெரிய சுதேச சமஸ்தானமான காஷ்மீரும் இந்தியாவுடன் இணைந்து நன்மையடையும்படி செய்யப்பெற்றது.

சுதந்தரப்போரில் தலைமை வகித்த பெருந்தலைவர்களிலே பெரும்பாலோர் நாளடைவில் மறைந்துவிட்டனர். பழைய பாரதச் சக்கரவர்த்திகளிலே எவரும் தாங்கியிராத பெரும் பொறுப்பைப் பிரதம மந்திரி நேரு தனியே தலையில் தாங்கிவர நேர்ந்தது.

இந்திய தேசிய காங்கிரஸ் இந்தியாவின் 'கண்ணியம், கவசம், கேடய'மாக விளங்கிவந்தது. அது ஒரு தனிக் கட்சியன்று, இந்திய மக்கள் அனைவரின் சார்பாகப் பேசக்கூடிய பொது ஸ்தாபனம் என்பதை மகாத்மா பன்முறை ஆங்கில அரசுக்கு எடுத்துக் கூறி வந்தார். ஆனால் சுதந்தரத்திற்குப் பின், அது ஒரு கட்சி போலவே செயற்பட்டுவந்தது. காங்கிரஸ்தான்

நாடு, நாடுதான் காங்கிரஸ் என்ற நிலை மாறிவிட்டது. தவிர விடுதலை பெற்ற பிறகு, பழைய வீரம், தியாகம், இடைவிடாத தன்னலமற்ற தொண்டு, ஒற்றுமை, கட்டுப்பாடு, மக்களோடு மக்களாய்க் கலந்து உறவாடும் மனப்பான்மை ஆகிய நற்பண்புகளெல்லாம் நலியத் தொடங்கின. தலைமையிலுள்ளோருடைய கட்டளைகளை உடனுக்குடன் நாடெங்கும் நிறைவேற்றும் தொண்டர் குழாங்களும் அதிகமாயில்லை. நாட்டின் நகரங்களிலும், பட்டி தொட்டிகளிலும், மேடைகளிலேறி வீரமுழக்கம் செய்து பேசும் நாவலர்களும் அருகிவிட்டனர். பெரும்பாலான எழுத்தாளர்கள் அன்றாடச் செய்திகளை மொழிபெயர்த்து வெளியிடுவதையும், பொழுது போக்குக் கதைகள் முதலியவை எழுதுவதையும் தொழிலாய்க் கொண்டுள்ளனர். அதாவது, நமது மாபெரும் தேசிய சுதந்தரப் புரட்சி 1947, ஆகஸ்ட் 15 ஆம் தேதியோடு முற்றுப்பெற்றுவிட்டது என்ற எண்ணம் ஏற்பட்டது. மேற்கொண்டு நடைபெற வேண்டிய மலைபோன்ற காரியங்கள் யாவற்றையும் நமது புதிய அரசாங்கம் தானாகவே செய்துகொள்ளும்படி நேர்ந்தது.

சுமார் இரண்டு நூற்றாண்டுகளாக அடிமை வேதனையில் அவதிப்பட்ட இந்தியா, ஐரோப்பிய நாடுகள் இயந்திரத் தொழில்களில் வேகமாக முன்னேறி வந்த காலத்தில் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்த இந்தியா, இரண்டு நூற்றாண்டுகளின் முன்னேற்றத்தைச் சுமார் 25 ஆண்டுகளில் அடைய வேண்டியிருக்கின்றது. ஒரே பாய்ச்சலாக நூற்றாண்டுகளைத் தாண்டிப் பாய்வது முடியக் கூடிய காரியமே. வில்லையும் அம்பையும் வைத்துக் கொண்டிருப்பவர்கள் திடீரென்று நவீனத் துப்பாக்கிகளை ஏந்துவதற்கு, இடையில் கழிந்துபோன ஒவ்வோர் ஆயுதத்திலும்

பல்லாண்டுகள் பயிற்சி பெறவேண்டிய அவசியமில்லை. விற்களை ஏந்திய கைகள் அவைகளை எறிந்துவிட்டு, நேராகத் துப்பாக்கிகளை ஏந்திச் சுடமுடியும். தவிர அம்பெய்வதைப் பார்க்கினும் இக்காலத்தில் விமானத்திலிருந்து வெடிகுண்டுகளைக் கீழே உருட்டுவது எளிதான செயல்தான். மக்கள் சிரமப்பட்டுச் செய்ய வேண்டிய வேலைகள் பலவற்றையும் எளிதில் தாமே செய்யக்கூடிய இயந்திரங்கள் தோன்றிவிட்டன. நல்ல மதியும், பயிற்சியுமே இக்காலத்துத் தொழில்களுக்கு அவசியம்.

இந்த முறையில் வெகு வேகமாய்ப் பாய்ந்து பாய்ந்து முன்னேற்றமடைவதும் பெரும் புரட்சியேயாகும். இந்தப் புரட்சியை நம் ஜனநாயக அரசாங்கம் மட்டும் தனியே நிறைவேற்ற முடியாது. எப்பொழுதும் மக்களுடைய இடையறாத தொடர்பு இருந்துகொண்டே யிருக்கவேண்டும். ஏதோ சில இடங்களில் ஜனங்களிலே சிலர் சேர்ந்து சாலைகள் அமைத்துவிட்டால் போதாது. நமது பெரிய சமுதாயத்திற்கு வேண்டிய பொருளாதாரத் திட்டத்தை உருவாக்கி நிறைவேற்றுவதிலும், அரசியலை உறுதியாக நிலைநாட்டுவதிலும் சமுதாயம் முழுதுமே ஒத்துழைக்க வேண்டும். அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் அளவிட முடியாத தொடர்பும் ஒத்துழைப்பும் இப்பொழுது இல்லை. அவை இருந்திருந்தால், இதற்குள் கங்கைத் தண்ணீர் காவிரியில் பாயும்படியான திட்டம்கூட எளிதில் நிறைவேறி யிருக்கும். லட்சக் கணக்கான குடியானவர்களை விவசாயப் படையாக அமைத்து நாடெங்கும் விவசாயத்தைப் பெருக்கி யிருக்கலாம். எவரும் சோம்பியிராதபடி கிராமங்கள், பட்டிகளிலெல்லாம் பல்லாயிரம் தொழில் நிலையங்களை அமைத்திருக்க முடியும். நாடு முழுதும் கூட்டுறவு ஸ்தா

பனங்கள் வலைப் பின்னலைப்போல் நெருங்கி யிருக்கும் படி அமைத்திருக்க முடியும். பிறரிடம் கடனுக்குப் போகாமல் நாமாக அடைந்துள்ள பெருஞ் செல்வம் நம் மக்களின் பெருந்தொகை. 47 கோடி மக்களின் சமுதாயம் உறுதியுடன் நினைத்தால், முடிக்க முடியாத காரியம் ஏன்ன உண்டு ?

இதுவரை நமது அரசாங்கத் திட்டங்களின் மூலம் எத்தனை எத்தனையோ பெருந் தொழில்களும், பாசன அமைப்புக்களும் ஏற்பட்டிருக்கின்றன. எந்தக் காலத்திலும் இந் நாடு கண்டிராத வேகத்தில் வேலைகள் நடந்து வருகின்றன. ஆயினும் நம் குடியரசு பெற்றுள்ள வெற்றிகளைப் பெரும்பாலான மக்கள் தெரிந்து கொள்ளக்கூடிய அளவு பிரசாரம்கூடச் செய்ய முடியவில்லை! நாடும் அவ்வளவு பெரிது, மக்கள் தொகையும் அவ்வளவு அதிகம்.

1947 முதல் இன்றுவரை நம் மக்களில் பெரும்பாலார், மாடு, மரம், கார், யானை, சிங்கம், குடை, பானை முதலிய அடையாளங்களைப் பார்த்து ஓட்டுச் செய்ய வேண்டிய நிலையிலுள்ளனர். பொது மக்களின் எழுத்தறிவு இந்நிலையிலுள்ளது. எல்லோரையும் ஒரே படியாகக் கல்விமான்களாக்கிவிட முடியாது என்பது உண்மைதான். ஆனல் எழுத்தறிவே யில்லாத கோடிக் கணக்கான மக்களைக்கொண்டு ஜனநாயகத்தை எப்படி நடத்துவது? 'பெரும்பாலும் எழுத்தறி வில்லாதவர்கள் நிறைந்துள்ள நாட்டில் அரசியல் இருக்கிறது என்று சொல்லுவது வெறும் பொய், பித்தலாட்டம்' என்று ரஷ்யத் தலைவர் லெனின் கூறியுள்ளார்.

அரசாங்கம் கோடிக் கணக்காய்ச் செலவிட்டு நிறுவியுள்ள கல்வி ஸ்தாபனங்களில் கல்வி கற்றுள்ள படிப்பாளிகளும், அறிவாளிகளும் பெரும்பாலும் சொந்தக் காரியங்களையே கவனித்துக் காலம் கழிக்

கிறர்கள். நாம் விடுதலை பெற்றவர்கள். நம் சுதந்தர ஜனநாயக அரசாங்கம் பதினெட்டே வயதுடையது. இன்னும் பல்லாண்டுகள் நாட்டவர் அனைவரும் அல்லும் பகலும் அயராமல் உழைத்தால்தான் இந்தியா மற்ற மேலை நாடுகளின் நிலையை அடைய முடியும். சாதாரண மக்களைவிடப் படித்தவர்களுடைய பொறுப்பு மிக மிக அதிகம். ஆயினும் நாம் புரட்சி மயமான காலத்திலே வாழ்கிறோம் என்ற உணர்வு வேண்டும். இந்தப் புரட்சியில் கலந்து கொள்ளும் ஆர்வம் குறைவாயுள்ளது. அரசாங்க அதிகார வர்க் கத்திலும்கூட இந்தப் புரட்சியின் துடிப்பைக் காண வேண்டும். வியாபாரிகள், தொழில் அதிபர்கள், உழைப்பாளிகள், குடியானவர்கள் யாவரிடத்திலும், 'வறுமையையும் அறியாமையையும் எதிர்த்து நடத் தும் பெரிய போரின் நடுவே நாம் வாழ்கிறோம். நம் பங்கினைக் குறைவறக் குறித்த காலத்தில் செய்து முடிக்க வேண்டும்' என்ற உணர்ச்சி வேகம் ஏற்பட வேண்டும். உலகிலே முன்னேறியுள்ள நாடுகளை நாம் விரைவிலே எட்டிப் பிடிக்க வேண்டுமென்ற ஆத்திரம் சமுதாயம் முழுதிலும் பரவவேண்டும். 'வித்துக் கெடாமல் முளை வராது' என்று மகாத்மா கூறியது உண்மையிலும் உண்மை. இந்தத் தலைமுறையிலுள்ள நாம் நம்மையே தியாகம் செய்தால்தான் இனி வரும் சந்ததியார்கள் நல்வாழ்வு வாழ முடியும்.

நாட்டிலே சில பகுதிகளில் பிரிவு மனப்பான்மை வளர ஆரம்பித்தது. மொழி, இனம், பிரதேசம் ஆகிய வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டு, இடையிடையே பாரத ஒருமைப்பாட்டுக்கு இடையூறு கள் உண்டாக்கப்பட்டன. கட்சிகள் பல தோன்றின. இவைகளிலே சிலவற்றில் வகுப்புவாதம் அல்லது சமய வாதமே அடிப்படையா யுள்ளன. தெளிவான

அரசியல், பொருளாதாரத் திட்டத்தை அடிப்படையாகக்கொண்டு விளங்குபவை மிகச் சில கட்சிகளேயாம்.

பிரிவினைக் கட்சிகள் மேலோங்கி, மத்திய சர்க்காரின் செல்வாக்கு குறையுமென்று சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கம் எதிர்பார்த்திருக்கும். அத்துடன் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தனக்கு ஆதரவா யிருக்குமென்றும் அது நம்பியிருந்திருக்கும்.

நாம் எவ்வளவுதான் அமைதியாக ஒதுங்கியிருக்க நினைத்தாலும், நமது அண்டை நாடான பாகிஸ்தானில் திடீர் திடீரென்று ஏற்படும் அரசியல் மாறுதல்களும், புயல்போன்ற பிரசாரங்களும், ஆட்சியிலுள்ளவர்களின் செயல்களும் நம்மை மிகவும் பாதிக்கின்றன. பாகிஸ்தானும் ஒன்ருக இல்லே. மேற்குப் பாகிஸ்தான், கிழக்குப் பாகிஸ்தான் ஆக இரண்டு இருக்கின்றன. இந்தியாவுக்கும் அவைகளுக்கும் இடையில் திறந்த சமவெளியாக ஆயிரக் கணக்கான மைல் நீளமுள்ள எல்லேகளிருக்கின்றன. இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கு மிடையே, இரு நாடுகளுக்கும் நன்மையான நிரந்தரமான உடன்பாடு அவசியம். அதற்குப் பாகிஸ்தானின் தலேவர்கள் நம்முடன் இணங்கி வரவில்லே. சீன அவர்களேப் பிடித்து நன்கு பயன்படுத்திக் கொண்டது. சீன-பாகிஸ்தான் உறவில் பாகிஸ்தான் சீனவின் வால்பிடிக்க இசைந்துவிட்டது.

நாம் சுதந்தரம் அடைவதற்கு முன்பு, ஆங்கிலேயர் ஆட்சியில், நாட்டின் வட எல்லேப் பாதுகாப்பு எளிதாயிருந்தது. அப்போது இமயமலேச் சாரலில் வடமேற்கிலுள்ள கைபர் கணவாயை மட்டும் பாதுகாப்பது அவசியமாயிருந்தது. ஆனல் இப்போது நமக்கு வடக்கே சீனர்கள் வந்து அமர்ந்து, நாள்தோறும் ராணுவத் தளவாடங்களேயும் படைகளேயும் பெருக்கிக்

கொண்டிருப்பதால், நாம் திபேத்துக்கு மேற்கிலும், தெற்கிலும், காஷ்மீரிலிருந்து அஸ்ஸாம் வரையுள்ள மலைப் பிரதேசம் முழுவதையும் பாதுகாத்து நிற்கவேண்டி யிருக்கிறது. நாம் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யு முன்பே, கம்யூனிஸ்ட் சீனாவின் எல்லைத் தகராறு முற்றிவிட்டது.

கம்யூனிஸ்ட் சீனாவின் நடவடிக்கைகளை நாம் கவனித்துப் பொருட்படுத்தாமல் இருந்துவிட்டோம். திபேத்தில் சீனா படையெடுத்தது முதல் அங்கு அது செய்துவந்த ராணுவ ஏற்பாடுகளைப் பற்றி ஏராளமான செய்திகளும், தெளிவான புத்தகங்களும் வெளி வந்துள்ளன. வெளிநாட்டுப் பத்திரிகைகளில் அடுத்த பெரும் போராட்டம் இமாலயத்திலேயே நடைபெறுமென்று தக்க ஆதாரங்களுள்ள கட்டுரைகள் வெளி வந்துள்ளன. நம் நாட்டிலேயே இந்திய ஸோஷலிஸ்ட் கட்சி இமயமலைச் சாரலிலுள்ள பிரதேசங்களின் பரப்பு, ஜனத்தொகை, பாதுகாப்பின் அவசியம் ஆகியவைகளைப் பற்றிய நம் அரசியல் கொள்கை முதலியவைகளை 1950 முதலே விரிவாக விளக்கி எச்சரிக்கை செய்து வந்தது. எல்லாவற்றிற்கும் மேலாகச் சீனப் படையினர் நமது லடாக் (காஷ்மீர்) பகுதியில் 12,000 சதுர மைல் அளவுள்ள நிலப்பகுதியைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றிக்கொண்டு வந்தனர். இத்தனைக்கும் நாம் விழித்துக் கொள்ளவில்லை!

சீனப் படையினர் வந்து நேரிலே தாக்கிய பிறகுதான், நம்மைத்தான் தாக்குகின்றனர் என்பதையும், தாக்குவது சீனர்கள்தாம் என்பதையும் நாம் நம்பினோம்! அதுமுதல், மலைக் குகையில் உறங்கிக் கொண்டிருந்த சிங்கம் எழுந்து பிடரி மயிரை உலுப்பிக் கொண்டு முழங்குவதுபோல், இந்திய நாடு முழுதுமே போர்க்கோலம் பூண்டு வந்தது. உடனேயே பிரிவினைச்

சக்திகள் அடங்கிவிட்டன. கட்சிகள் யாவும் கை கோத்துக்கொண்டு ஒத்துழைக்க முன்வந்தன. வெளி நாடுகளிலிருந்து ஆயுத உதவிகள் வந்து குவிந்தன. மக்கள் பொன்னையும் பொருளையும் வாரி வாரி வழங்கினர். என்றுமில்லாத ஊக்கமும், உள் வலியும் பெருகின. ஆகவே சீனர்கள் படையெடுத்து வந்த 1962, அக்டோபர் 20-ந் தேதி நம் வரலாற்றிலே மிக முக்கியமான நாளாகும். சீனு அழிவுப் பாதையில் குதித்த அந்த நாள் தான் வெற்றிப் பாதையில் நம்மைத் தூக்கி நிறுத்திய நன்னுள். நாம் சுதந்தர மடைந்த நாளுக்கு அடுத்த படியாக அதுவே முக்கியமானது. வெறும் தொழிற் பெருக்கத்தையே நாடிக் கொண்டிருந்த நம்மை, ஒரு கையில் துப்பாக்கியையும் ஏந்திக்கொண்டே வேலை பார்க்கும்படி செய்த நாள் அந்த நாள் தான்!

# சீனுவின் ஆக்கிரமிப்புப் போர்

'நேபாவில் இந்தியாவுக்கு ஏற்பட்ட தோல்விகள் துக்கப்பட்டு, வெட்கித் தலைகுனியத் தக்கவை. அங்கு இழந்த கௌரவத்தை நாம் மீட்கவேண்டும்.'

—*ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன்*

---

## முன்னேற்பாடுகள்

*சீன-இந்திய எல்லைப்புற விவகாரம் போரில் வந்து முடியுமென்று இந்திய அரசாங்கம் எதிர்பார்க்கவேயில்லை. ஆனால் சீனு இந்தியாவுடன் போர் செய்ய வேண்டுமென்றே மூன்று ஆண்டுகளாக ஏற்பாடு செய்துவந்தது. மேலை வல்லரசுகளைச் சேர்ந்த பல அரசியல் நிபுணர்கள் சீனப் படையெடுப்பைப் பற்றி முன்னதாகவே தெரிந்திருந்தனர். திபேத்திலிருந்து இந்தியாவுக்கு வந்த அகதிகள் பலரும் அங்கே சீனு போருக்கு ஆயத்தம் செய்து வருவது பற்றித் தெளிவாகச் செய்திகளை அறிவித்தனர்.*

*சீனர்கள் லடாக் பகுதியிலும், வடகிழக்கு எல்லைப் பிரதேசம் என்ற நேபாவிலும் சென்ற சில ஆண்டுகளாகவே பல இடங்களையும் சுற்றிப் பார்த்து, இயற்கையமைப்பையும், கிராமங்களையும், மக்கள் நிலைமையையும், நம் காவல் நிலையங்களையும்பற்றித் தெரிந்து கொண்டிருந்தனர். சில இடங்களில் நமக்கு எதிராகப்*

பிரசாரமும் செய்துவந்தனர். சீனப் படையினர் அந்த மலைப் பிரதேசங்களிலும் காடுகளிலும், கடுங்குளிரிலும், பனியிலும் தங்கியிருந்து பழக்கமும் பெற்றுக் கொண்டனர். 1959-லிருந்து நம் காவல் நிலையங்களைச் சேர்ந்த ஜவான்களோடு அடிக்கடி பொருதி, அவர்களுடைய நிலையையும், இந்திய அரசாங்கத்தின் மனப்பான்மையையும் நன்கு புரிந்துகொண்டனர்.

1959, அக்டோபர் 21-ஆம் நாளிலேயே சீனு 16,000 அடி உயரமுள்ள கோங்கா கணவாயில் போர் முரசு கொட்டியது. இந்திய எல்லைக் காவற்படையினரில் ஒன்பது வீரர்களின் தலைகளைக் குண்டுகளால் தகர்த்தெறிந்துவிட்டு, அவர்களுடைய உடல்களை மட்டும் சீனப்படையினர் நமக்குப் பரிசுகளாகத் திரும்பக் கொடுத்தனர்! சீனப்படையினர் என்ன அக்கிரமம் செய்தாலும், என்ன தீங்கிழைத்தாலும், புது டில்லியிலிருந்து சீன அரசாங்கத்திற்குக் கண்டனக் கடிதங்கள் சென்றுகொண்டே யிருந்தன. ஆணவம் நிறைந்த சீன அஞ்சல்கள் மறுமொழிகளாக வந்துகொண்டேயிருந்தன. சொற்போரை விட்டுவிட்டு, சீன அரசாங்கம் நேரடியாகப் பாரத நாட்டின்மீது படையெடுக்கவே தீர்மானித்துவிட்டது.

### முதல் தாக்குதல்

1962, அக்டோபர் 20-ஆம் தேதி சனிக்கிழமை. நாடெங்கும் தீபாவளி கொண்டாடுவதற்கு ஆறு நாட்களுக்கு முன்பு, காலை 5 மணிக்கு, நேபாவிலும் லடாக்கிலும் ஒரே சமயத்தில் சீனப் படைகள் தாக்கத் தொடங்கின. நேபாவின் மேற்குக் கோடியில், பூட்டான், திபேத்துப் பிரதேசங்களின் எல்லையிலுள்ள டோலா, கின்ஸிமானே, தக்லா மலைச்சாரல் பகுதிகளில் சீனப்படைகள் அணி அணியாகச் சென்று தாக்

கின. டோலா 12,500 அடி உயரத்திலும் கின்ஸி மானே 9,600 அடி உயரத்திலும் உள்ளவை. சீனர் கள் பீரங்கிகளையும், இயந்திரத் துப்பாக்கிகளையும் உபயோகித்துக்கொண்டு, எதிர்ப்பை இலட்சியம் செய்யாமலும், தங்களிடையே ஏற்பட்ட உயிர்ச் சேதத்தைப் பொருட்படுத்தாமலும், முன்னேறி வந்தார்கள். இந்தியப் படைவீரர்கள் வீரத்துடன் எதிர்த்து நின்றார்கள். சுதந்தரமான தாய்நாட்டைக் காக்கும் பெருமை தங்களுக்குக் கிடைத்ததை எண்ணி மகிழ்ந்து கொண்டும், சீனருடைய அநாகரிகத்தையும் துரோகத்தையும் எண்ணி வருந்திக்கொண்டும், அவர் கள் உறுதியுடன் போராடினார்கள். எண்ணிக்கையில் சீனர் மிகுதியாக இருந்தனர்; ஆயுதங்களும் அவர்க ளிடம் அதிகம். குறைந்தது மூன்று மாதமாவது திட்ட மிட்டு, பனிப் பிரதேசத்திற்குத் தேவையான உடை கள் முதலியவற்றுடன், அவர்கள் ஆயத்தமாக வந் திருந்தனர். எதிர்பாராத திடீர்த் தாக்குதலை நாம் சமாளிக்க வேண்டியிருந்தது. நம் படையினர் அளவில் குறைந்திருந்தனர்; ஆனால் வீரத்திலும், உறுதியிலும் அவர்களுக்கு இணையானவர் இல்லை யென்னும்படி, ஒவ்வொரு வீரனும் பன்மடங்கு வல்லமையுடன் பாரத பூமியின் ஒவ்வோர் அங்குலத்தையும் பாதுகாத்து நின்றான். எனினும், டோலா, கின்ஸிமானே காவல் நிலையங்களை நம் படைவீரர் காலி செய்து வெளியேற நேர்ந்தது. இந்நிலையங்க ளெல்லாம் நேபாவின் மேற் குப் பகுதியில் காமெங் டிவிஷனில் உள்ளவை.

நேபாவில் மூன்று நான்கு அங்குலம் பனி பெய்து கொண்டிருந்த போதிலும், சீனர்கள் மக்மகான் கோடு வரைக்கும் தங்கள் ராணுவ வாகனங்களைக் கொண்டுவர வசதி செய்து கொண்டிருந்தனர். நம் படைகளுக்கு உணவு முதலிய பொருள்களைக்கூட நாம்

விமானங்களிலிருந்தே எறியவேண்டி யிருந்தது. ஆயி னும் நம் தரைப் படைக்கு உதவியாக நமது விமானப் படையைச் சேர்ந்த ஒரு விமானத்தைக்கூட உபயோ கிக்கவில்லை. காயமடைந்த வீரர்களை எடுத்துக் கொண்டுவர உபயோகித்து வந்த ஒரு 'ஹெலிகாப்ட' ரைக்கூடச் சீனர்கள் சுட்டுவிட்டனர். ஆனால் அதை ஓட்டிச் சென்ற வீரன் 'பாரசூட்' குடையைப் பயன் படுத்திக்கொண்டு வானவெளியில் குதித்து, இந்தியப் படையினர் இருந்த இடத்திற்கு மீண்டு வந்து சேர்ந்து விட்டான்.

சீனர்கள் இந்திய திபேத்து எல்லையாகிய மக்மகான் கோட்டைத் தாண்டி 20 மைலுக்கு அப்பால் வந்து விட்டனர். நாம் கா-சூ நதிக்குத் தெற்கில் கடும்போர் நிகழ்ந்தது. 20-ந் தேதி இரவிலும் 21-ந் தேதி பகலி லும் தொடர்ந்து பல முனைகளில் சண்டை நடந்தது. சீனரிடையே உயிர்ச் சேதம் மிக அதிகமாயிருந்தது.

### லடாக்

நமது வடமேற்கு இமாலய எல்லையில் காஷ்மீரைச் சேர்ந்த லடாக் பிரதேசமுள்ளது. இதைப்பற்றி முதல் அதிகாரத்தில் விவரமாகக் கூறப்பட்டுள்ளது. லடாக் கின் வடபகுதியிலுள்ள நம் 16 காவல் நிலையங்களில் 11 நிலையங்களைச் சீனர் 20-ந் தேதி அதிகாலையிலிருந்து ஏக காலத்தில் தாக்கிவந்தனர். அங்கும் இந்தியப் படையினர் எல்லையற்ற வீரத்துடன் போரிட்டனர். 4 நிலையங்கள் வீழ்ந்து விட்டன; 7 நிலையங்களில் தாக்கிய எதிரிகள் தடுத்து நிறுத்தப்பட்டனர்.

### இந்தியா படையெடுத்ததாம்!

சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கம் முன் அறிவிப்பின்றி, போர்ப் பிரகடனம் செய்யாமல், திடீரென்று பெரிய

அளவில் படைகளுடன் பாரத நாட்டின் பிரதேசக் கௌரவத்தைச் சிறிதும் மதிக்காமல் படையெடுத்து வந்ததுடன் நிற்காமல், இந்தியா தான் படையெடுத்து வந்து தன் துருப்புக்கள் மீது கடும் தாக்குதல்கள் செய்ததாகப் புகார் செய்து, பீகிங்கிலிருந்த இந்திய ஸ்தானிகரிடம் மிகக் கடுமையான ஆட்சேபக் கடிதம் ஒன்றைக் கொடுத்தது. அதே நாளில் அமெரிக்க ஐக்கிய நாடு, இந்தியா கோரினுல், உதவி செய்வது பற்றி ஆலோசிக்கத் தயாரா யிருப்பதாகத் தகவல் வந்தது. இடையில் போர்முனைப் பிரதேசங்களில், இரவும் பகலும் போர் நடந்து கொண்டிருந்தது. இரவு நேரத்தில் 4, 5 அங்குலம் பனிக்கட்டி மழையாகப் பொழிந்துகொண்டிருந்தது.

## இரண்டாம் தாக்குதல்

சீனர்கள் காமெங் டிவிஷனில் தக்லா மலையருகிலும் தெற்கிலும் நடத்தி வந்த தாக்குதலுடன், அடுத்த சுபன்ஸிரி டிவிஷனின் வடகோடியிலுள்ள லாங்ஜுவையும், நேபாவின் கீழோரமான லோஹித் டிவிஷனில் கிபுடூவையும் நோக்கி 22-ந்தேதி இரு பெரும் தாக்குதல்களையும்மேற்கொண்டனர். இந்தியா, பர்மா, திபேத்து ஆகிய மூன்றுக்கும் உரிய எல்லையருகிலுள்ளது கிபுடூ.

லடாக்கில் பாங்காங் ஏரிப் பகுதியிலும், பிற இடங்களிலும் எதிரிகள் மலைப் பீரங்கிகளுடன் டாங்குகளையும் உபயோகித்துப் போராடினர். சில நிலையங்களில் இந்தியப் படையினர் நான்கு ஐந்து மடங்கு அதிகமான சீனரை எதிர்த்துச் சலியாது காத்து வந்தனர். ஆயினும் அனல் கக்கி வந்த டாங்குகளின் முன்பு அவர்களால் தாக்குப்பிடிக்க முடியவில்லை.

**நேருவின் அறைகூவல்**

இதுவரை நிகழ்ந்த போராட்டத்தில் நேபாவில் 4 காவல் நிலையங்களையும், லடாக்கில் 8 நிலையங்களையும் நம் படைகள் இழந்தன. கம்யூனிஸ்ட் சீனு கடும் போர் தொடங்கிய மூன்றும் நாள் தான் இந்தியப் பிரதம மந்திரி திரு. ஜவாஹர்லால் நேரு வானொலி மூலம் நாட்டு மக்களுக்கு முக்கியமான அறிவுப்புச் செய்தார். அது வெறும் அறிவிப்பன்று, வீர முழக்கமே யாகும். சீனப் போரினுல் திடுக்கிட்டுக் கோபத்தால் கொதிப்படையாத தேசபக்தர் எவரும் இருக்க மாட்டார். நாடே திடுக்கிட்டு எழுந்துவிட்டது. ஆயினும் நாடெங்கணும் பொங்கிப் பெருகிய உணர்ச்சி வெள்ளத்தை ஒன்று சேர்த்துத் தேசப் பாதுகாப்புக்குப் பயன்படுத்துவதற்குப் பிரதம மந்திரியின் சொற்பொழிவு தக்க தூண்டுகோலாக அமைந்தது. 'பாய் பாய்' என்று கருதி வந்த சீனரை 'வல்லமை மிகுந்த பழி பாவத்துக்கு அஞ்சாத பகைவர். .நயவஞ்சகமான எதிரி' என்று நேரு தம் வாயாலேயே கூறினர். 'இந்தச் சண்டை நீண்டகாலம் நடக்கலாம். இதற்கு நாம் மனுேதிடத்துடனும், மற்ற வகையிலும் தயாராக வேண்டும். நாம் நம்மீது நம்பிக்கை கொள்ள வேண்டும். நம்பிக்கையுடனும், ஆயத்தங்களுடனும் நாம் வெற்றி காண முடியும் என்பது உறுதி. முடிவு வேறு விதமாக இருக்க முடியாது. எதிரியிட மிருந்து நம் நாட்டை விடுவிப்போம் என்ற ஒரே சிந்தனையுடன் உறுதி கொள்ளவேண்டும்!' என்று அவர் முழங்கினர். போர் நெருக்கடியினுல் நாட்டின் அபிவிருத்திக்கான திட்டத்தைக் கைவிடுவதில்லை யென்றும், இதுவரை எந்த வல்லரசுக் கூட்டத்திலும் சேராமல் நடு நிலையில் இருந்தது போலவே இனியும் இருக்க வேண்டுமென்றும் அவர் தெளிவாகக் கூறினர்.

அநேகமாக மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய எல்லா விஷயங்களையுமே அவர் சுருக்கமாகச் சொல்லி விட்டார். 'தலை நிமிர்ந்து நில்லுங்கள்! ஜெய்ஹிந்த்!' என்பவை அவர் பேச்சின் இறுதிச் சொற்களாக ஒலித்தன.

### தவாங்

மறுநாள் பீகிங்கிலிருந்து சீனப் படைகளுக்கு உத்தரவு ஒன்று வந்தது. மக்மகான் கோட்டின் எல்லையை அவைகள் மதிக்க வேண்டாம் என்பதுதான் அது. ஏற்கெனவே அவைகள் அந்த எல்லையைத் தாண்டிப் பல இடங்களில் போரிட்டுக் கொண்டிருந் தன. டோலா, கின்ஸிமானே பகுதியிலிருந்து தவாங் நகரை நோக்கி இருமுனைத் தாக்குதலுக்கு அவை ஏற்பாடு செய்துகொண்டிருந்தன. தவாங் கடல் மட்டத்திற்கு மேல் 10,000 அடி உயரமுள்ளது. மக்மகான் எல்லைக் கோட்டிலிருந்து அது 16 மைல் தொலைவிலுள்ளது. லடாக்கிலும் இந்தியப் படைகள். மீண்டும் அணிவகுத்துக்கொண்டு தற்காப்புக்குத் தயாராயிருந்தன.

### கியூபா நெருக்கடி

இந்தியாவின் சுதந்தரத்திற்காகவும், மானத்திற் காகவும், வெண்பனிப் பாறைகளிலும் மலைச்சாரல்களி லும் நின்று இந்திய வீரர்கள் போராடி உதிரம் சிந்திக் கொண்டிருந்த அதே நேரத்தில், உலகின் கவனம் அனைத்தும் கியூபா சம்பந்தமாகத் திரும்பிவிட்டது. ரஷ்யாவுக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கும் எந்தக் கணத்திலும் அணுகுண்டுப் போர் தொடங்கிவிடும் என்ற நிலைமை ஏற்பட்டது. கியூபாவில் அபாயகர மான, பெருந் தாக்குதல்களுக்குத் தேவையான

அணுச்சக்தி ஏவுகணைகளை அனுப்பி, அங்கே அவை களைப் பல இடங்களில் ரஷ்யா சேர்த்து வைத்திருந் தது. இதனால் மேற்கொண்டு ரஷ்ய ஏவுகணைகள் முதலியவை கியூபாவுக்கு வராமல் தடுக்கவேண்டு மென்று அமெரிக்கா துணிந்து முடிவு செய்தது. அங்குச் செல்லும் கப்பல்களைத் தடுத்துச் சோதனை செய்யும்படி அமெரிக்க ஜனாதிபதி கடற்படைக்கு உத்தரவிட்டார். ரஷ்யாவும் துணிந்து கப்பல்களைக் கியூபாவுக்கு அனுப் பத் தீர்மானித்து, அமெரிக்காவுக்குக் கடுமையான எச்சரிக்கையும் செய்தது. இரு பக்கத்திலும் பயங்கர மான போருக்கு ஆயத்தங்கள் செய்து முடிக்கப்பெற் றன. ஏராளமான ஆயுதங்களுடன் 25 ரஷ்யக் கப்பல் கள் கியூபாவை நோக்கிச் சென்றுகொண்டிருந்தன. கியூபா பிரதமர் காஸ்டிரோ அமெரிக்க முற்றுகையைத் தகர்த்தெறியப் போவதாக ஆர்ப்பரித்துக்கொண் டிருந்தார்.

## சீனாவின் சமாதான வேட்டு

இந்த உலக நெருக்கடியின் நடுவில் சீன அரசாங் கம் இந்தியாவுக்கு மூன்று நிபந்தனைகளைக் கொண்ட ஒரு சமாதானக் கோரிக்கையை அனுப்பி வைத்தது. அந்த மூன்று நிபந்தனைகள் இவை :

1. சீன - இந்திய எல்லைப் பிரசினையை அமைதி யான முறையில் பேசித் தீர்த்துக்கொள்வதாக இருதிறத் தாரும் உறுதி செய்யவேண்டும்; அவ்வாறு தீர்த்துக் கொள்ளும்வரை, இப்போது எல்லைப்புறம் முழுதிலும் சீனாவிடம் உள்ள இடங்கள் அதனிடத்திலும், இந்தியா வசம் உள்ள இடங்கள் இந்தியாவிடமும் இருந்து வர வேண்டுமென்பதை இரு கட்சியினரும் ஒப்புக்கொள்ள வேண்டும். இரு ஆதிக்கியப் பகுதிகளுக்கும் நடுவிலுள்ள எல்லைக் கோட்டிலிருந்து இரு கட்சிப் படைகளும் 20

கிலோமீட்டர்* தூரம் பின்னே சென்று போர் நிறுத்தம் செய்யவேண்டும்.

2. இதற்கு இந்தியா இசைந்தால், சீனு கிழக்குப் பகுதியிலுள்ள தன் 'எல்லைக் காவற்படையினரை' ஆதிக்கிய எல்லைக் கோட்டிற்கு வடக்கே திருப்பி அழைத்துக் கொள்ளும். நடுப்பகுதியிலும் நெடுங்காலமாக வழக்கத்தில் இருந்துவரும் எல்லைக் கோட்டைத் தாண்டுவதில்லை என்று இரு பக்கத்தாரும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

3. பீகிங்கிலோ, புது டில்லியிலோ இரு நாட்டுப் பிரதம மந்திரிகளும் சந்தித்துப் பேசவேண்டும்.

சீனுவின் சமாதான வேட்டாக விளங்கிய மேற்கண்ட 3 நிபந்தனைகளுள்ள கோரிக்கையை இந்திய சர்க்கார் நிராகரித்து, அதற்குப் பதிலாக வேறு யோசனை அடங்கிய அறிக்கையை வெளியிட்டது. இராணுவ பலத்தின் மிரட்டலின் நடுவே இந்தியா சமாதானத்திற்குத் தயாராயில்லை; சீனர் 40 முதல் 60 கிலோ மீட்டர்வரை இந்தியப் பிரதேசங்களுக்குள் வந்து இருந்துகொண்டு, இருதிறத்தாரும் 20 கிலோ மீட்டர் தூரம் பின் செல்லவேண்டும் என்பது ஏமாற்று வித்தை; 1962, செப்டம்பர் மாதம் 8-ந் தேதி சீனப் படையினர் மக்மகான் கோட்டைத் தாண்டிவரத் தொடங்கியதால், அந்தத் தேதிக்கு முன்பிருந்த எல்லைக்காவது சீனர்கள் திரும்பிஞல் தான், அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தமுடியும். இந்த விஷயங்களை நம் அரசாங்க அறிக்கை ஐயம் திரிபுக்கு இடமில்லாமல் தெளிவாக அறிவுறுத்தியது.

---

* ஒரு கிலோமீட்டர் = 3,280.89 அடி (சுமார் 5 பர்லாங்)

இதுவரை ஸோவியத் ரஷ்யப் பத்திரிகைகளில் சீனப் படையெடுப்பைப் பற்றி ஒரு செய்தியும் வெளி வராமலிருந்தது. ஆனால் மேற்கண்ட சீனச் சமாதான நிபந்தனைகளை 'இஸ்வெஸ்டியா' பத்திரிகை வெளி யிட்டதுடன், ஸோவியத் அரசாங்கத்தின் செல்வாக் குள்ள பத்திரிகையான 'பிராவ்தா' அந்நிபந்தனைகள் சிறந்தவை என்று நீண்ட தலையங்கமும் எழுதியிருந் தது.

இந்திய-சீன எல்லைப் பிரசினையில் தீர்வு காணத் தக்க முயற்சி செய்யும்படி ஐக்கிய அரபுக் குடியரசின் ஜனாதிபதி நாஸர் இந்தோனீஷியா, பர்மா, இலங்கை, ஆப்கானிஸ்தான், மொராக்கோ, கினி, அல்ஜீரியா முதலிய ஆசிய, ஆப்பிரிக நாடுகளின் அதிபர்களுக்குச் செய்திகள் அனுப்பி வைத்தார். இலங்கைப் பிரதமர் சிரிமாவோ பண்டாரநாயக, இரு நாடுகளிடையே சமா தானம் ஏற்பட வழிவகைகளை ஆராயும் நோக்கத் துடன், இந்தியப் பிரதம மந்திரிக்கும் சீனப் பிரதம மந்திரிக்கும் கடிதங்கள் எழுதினார். இவ்வாறு உலகின் கவனம் ஒரு முனையாக இந்தியாவை நோக்கித் திரும்பு முன், தான் பிடித்துக்கொள்ள வேண்டிய இடங்களை விரைவில் கைப்பற்றிக் கொள்ளச் சீனப் படைகள் தீவிரமாகப் போரிட்டுவந்தன.

### சீனப் படைகளின் தாக்குதல்

24-ந்தேதி காலையிலிருந்தே காமெங் டிவிஷனி லுள்ள தவாங் நகரை நோக்கிச் சீனர் மும்முனைத் தாக்குதல் நடத்திவந்தனர். நெடுநேரம் எதிர்த்துத் தாக்கிய பின்பு, மாலையில் நம் படைகள் அவ்விடத் தைக் காலி செய்து வெளியேறின. அங்கிருந்த சுமார் 300 குடிமக்களும் முன்னதாகவே 50 மைலுக்குத் தெற் கிலிருந்த காமெங் டிவிஷனின் தலைநகராகிய போம்டிலா

வுக்கு அழைத்துச் செல்லப்பட்டிருந்தனர். தவாங் முக்கியமான ஒரு பௌத்தத் தலம். அங்கே பெரிய பௌத்த மடாலயம் ஒன்றுண்டு. அதைச் சேர்ந்த பிக்குக்களும் வெளியேறிவிட்டனர். தவாங் பள்ளத் தாக்கில் சுமார் 6,000 அல்லது 7,000 மக்கள் பல இடங்களில் வசித்துவந்தனர்.

ஸியாங் டிவிஷனில் லாங்ஜூ நகருக்கு 50 மைல் தொலைவிலும் சீனர் தாக்கிவந்தனர்.

லடாக்கில் கல்வன் நதிப் பகுதியில் ஒரு காவல் நிலையத்தை நம் படைகள் இழந்தன. சுஷூல் பிர தேசத்தில் 4 காவல் நிலையங்களில் டாங்குகள், பீரங்கி கள், இயந்திரத் துப்பாக்கிகளால் சீனர் தாக்கியதில் அவை வீழ்ந்துவிட்டன. கடைசி நிலையமான ஐந்தா வது நிலையத்தையும் அவர்கள் தாக்கிவந்தனர். ஆனால் அத் தாக்குதல் முறியடிக்கப்பட்டது.

## உலக நெருக்கடி தளர்ந்தது

25-ந் தேதி கியூபா நெருக்கடி தளர்ந்தது. ஸோவி யத் கப்பல்கள் அமெரிக்க முற்றுகையை ஊடுருவிச் செல்லவில்லை. ஆயுதங்களுடன் சென்ற 12 கப்பல் கள் திரும்பிச் சென்றுவிட்டன. பெட்ரோல் கொண்டு வந்த ஒரு கப்பல் மட்டும் கியூபாவுக்குச் செல்ல அநு மதிக்கப்பட்டது. ஐக்கிய நாடுகளின் காரியதரிசி ஊ-தாண்ட், இரண்டு மூன்று வாரங்களுக்கு நெருக்கடி நேராமல், அமெரிக்க ஐக்கிய நாடும், ரஷ்யாவும் நடந்துகொள்ள வேண்டுமென்று ஜனாதிபதி கென்னடிக் கும், ஸோவியத் பிரதமர் குருஷ்சேவுக்கும் வேண்டு கோள் அனுப்பியிருந்ததற்கு இசைவாக அவ்விருபெருந் தலைவர்களும் நடந்துகொண்டனர். இவ்வாறு உல கமே நாசமுறக் கூடிய அணு ஆயுதப் போர் தவிர்க்கப் பட்டதால்தான், இந்தியா விஷயமாக அமெரிக்காவும்,

பிரிட்டனும், பிற நாடுகளும் நிதானமாக ஆலோசனை செய்ய வாய்ப்பு ஏற்பட்டது.

## அவசரப் பாதுகாப்புச் சட்டம்

26-ந்தேதி இந்திய ராஷ்டிரபதி தேசத்தில் அவசர நிலையைப் பிரகடனம் செய்தார். அன்றிரவு முதலே தேசப் பாதுகாப்பு அவசரச் சட்டம் நாடெங்கும் அமலுக்கு வருவதாக அறிவிக்கப்பட்டது. அச் சட்டத்தின் பிரிவுகள் பலவும் இரண்டாவது உலகப் போரின்போது உபயோகித்த சட்டத்திலுள்ளவைகளே. இராணுவம், தற்காப்பு, பொதுமக்களிடையில் அமைதி, அவசியப் பண்டங்களின் விநியோகம், அவசியமான சமூக சேவைக்குரிய வேலைகளுக்கு ஊறு நேராமல் பராமரித்தல் ஆகியவற்றைக் கருதி அரசாங்கத்திற்கு இதனால் விசேட அதிகாரங்கள் வழங்கப் பெற்றன. சீன ஆக்கிரமிப்பாளருக்கு உதவியாக ஐந்தாம் படை வேலையில் ஈடுபட்டவர்களுக்கு இதன்படி மரண தண்டனை விதிக்கலாம். இந்தச் சட்டத்தின் முன்பு நாட்டிலுள்ள மற்றைச் சட்டங்கள் செல்ல மாட்டா. போர் முயற்சிகள் இடையூறின்றி நடந்து வருவதற்கு இது இன்றியமையாததாகும்.

லடாக்கில் சாங்லா கணவாயிலிருந்த இந்தியக் காவல் நிலையம் தவிர, மற்ற நிலையங்களி லெல்லாம் சீனரை எதிர்த்துக் கடும்போர் நடந்து வந்தது. நம் காஷ்மீர் துருப்புக்களும் இந்தப் போராட்டத்தில் கலந்துகொண்டன. சீனர்கள் புதிய பட்டாளங்களுடன் வந்து லடாக்கின் தென் பகுதியில் தீவிரமாகத் தாக்கியதில், டெம்சோக், ஜாரா லா என்ற நிலையங்களிலிருந்து இந்தியப் படைகள் வெளியேற நேர்ந்தது. டெம்சோக் சுஷுலிலிருந்து 100 மைல் தென் கிழக்கிலும், அதிலிருந்து ஜாரா லா 8 மைல் வடகிழக்

கிலும் உள்ளவை. டெம்சோக் காவற்சாவடியில் 31 படை வீரர்கள் இருந்துகொண்டு, 150 எதிரிகளுடன் போராடி, சுமார் 100 பேர்களை வதைத்தனர். பகைவரின் டாங்குகள் சுட ஆரம்பித்த பிறகே, சாவடி கைவிடப்பட்டது. சென்ற ஒன்பது, பத்து நாட்களில் நடந்த போராட்டங்களில் சுமார் 2,000 அல்லது 2,500 இந்திய வீரர்கள் உயிரிழந்திருக்கலாம், அல்லது காணப்பெறுமல் தவறியிருக்கலாம் என்று செய்தி வந்தது. சீனப் படையினர் நம் படைகளைப் பார்க்கிலும் 10 அல்லது 15 மடங்கு கூடுதலாக இருந்து தாக்கியதாகவும் அறிவிக்கப்பட்டது. ஆயினும் ஒரு வாரக் காலத்தில் அவர்கள் அதிகமாக முன்னேறி வராமல் தடுத்து நிறுத்தப்பட் டிருந்தனர்.

ஒரே சமயத்தில் லடாக்கிலும், நேபாவிலும் பல முனைகளில் சீனர் தாக்கியதன் நோக்கம் இந்தியப் படைகளைப் பல இடங்களிலே சிதறி நிற்கும்படி செய்வதற்காக இருக்கலாம். ஐந்தாம் நாள் போரிலேயே நேபாவில் 4 முனைகளில் சண்டை நடந்து கொண்டிருக்கையில், லாங்ஜூவுக்கும் அஸஃபிலாவுக்கும் நடுவே புதிதாக ஓர் அரங்கில் அவர்கள் பிரவேசித்துக்கொண்டிருந்தனர். லடாக்கிலும் வடக்கில் சிப்சாப்புக்கும் தெற்கில் டெம்சோக்குக்கும் இடையே சாங்சென்மோ என்ற நிலையத்தைத் தாக்கிப் பிடித்துக்கொண்டனர். லடாக்கில் சுஷுல் நகரில் நம் விமான தளம் இருந்ததால், அதன் மூலம் படைகளுக்கு ஆயுதங்களும், உணவு முதலியவைகளும் வந்து சேர்வதைத் தடுக்க வேண்டும் என்பது அவர்கள்நோக்கமாயிருந்திருக்கும். எந்த இடத்திலும், இந்திய வீரருடைய கடுமையான எதிர்ப்பினல், சீனர் பலர் உயிரிழக்காமல் முன்னேற முடிந்ததில்லை. ஆயினும் ஆட்களின் எண்ணிக்கையிலும் நவீன ஆயுதங்களிலும் அவர்களே மேலோங்கி

யிருந்தனர். இயந்திர சாதனங்களைக்கூட அவர்கள் வேண்டிய இடங்களுக்குக் கொண்டுவர முன்னதாகவே தக்க ஏற்பாடுகள் செய்திருந்தனர்.

## படைகளின் வலிமை

அக்டோபர் மாதம் 12 நாட்கள் நடந்த போரிலிருந்து நமக்குப் பல விஷயங்கள் தெரிய வந்தன. 'வெறும் பாறைகளுக்காகவா சீனர்கள் போரிடுவார்கள்?' என்று கருதி வந்த நமக்கு அது தெளிவுண்டாக்கிவிட்டது. அவர்கள் போரிட்டதோடு, ஆயிரக்கணக்கான வீர இந்தியர்களின் உதிரத்தையும் பெருக்கிவிட்டார்கள். இருதிறத்துப் படைகளுக்கும் பெரும் வேற்றுமை இருந்தது. சீனப் படைகளில் 1,10,000 சிப்பாய்கள் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கிய உறுப்பினருள் ஒருவராயும், பல கம்யூனிஸ்ட் போர்களை நடத்தியவராயும் விளங்கிய 54 வயதுடைய தளபதி சாங் குவோ-ஹுவா அவர்களுக்குத் தலைமை வகித்து நடத்தி வந்தார். சீனப் படையிலிருந்த சிப்பாய்கள் மத்திய சீனாவைச் சேர்ந்த வாலிபர்கள், 3 வருடக் கட்டாய இராணுவ சேவைக்காக அழைத்துவரப்பட்டவர்கள். ஆயினும் மற்ற இராணுவ அதிகாரிகள் பெரும்பாலும் கொரியா போரில் போராடிப் பயிற்சி பெற்றவர்கள். சீனர்கள் கொண்டுவந்திருந்த பீரங்கிகள், டாங்குகள், விமானங்கள் ஆகியவை பெரும்பாலும் ஸோவியத் ரஷ்யாவில் தயாரானவை. மற்றத் துப்பாக்கிகளும், சிறு இயந்திரத் துப்பாக்கிகளுமே சீனாவில் தயாரானவை.

இந்தியப் படைகளில் 5,00,000 வீரர்கள் இருந்தனர். ஆனால் அவர்களிலே 1,00,000 பேர்களுக்குக் குறைவாகவே எல்லைப் போர்க்களங்களுக்குச் சென்

றிருந்ததாகத் தெரிகிறது. நமது இராணுவத்தின் முக்கியமான சில பகுதிகளும், எஞ்சியுள்ள படைகளும் காஷ்மீரிலே இருந்தன. இக்காலத்தில் உபயோகிக்கப் படும் நவீன ஆயுதங்கள் பலவற்றை முன்னதாகவே வெளிநாடுகளிலிருந்து வாங்கி ஆயத்தமாக வைத் திருந்தால், நம் படைகளுக்கு மிகவும் உபயோகமாக இருந்திருக்கும். உள் நாட்டிலுள்ள அரசாங்க ஆயுத உற்பத்திச்சாலைகளிலும் அவைகள் உற்பத்தியாக வில்லை. மொத்தத்தில் இரண்டாவது உலகப்போரில் உபயோகித்தவைகளைப் போன்ற ஆயுதங்களே நம் படைகளிடம் அதிகம் இருந்தன.

நேபா முதலிய நம் எல்லைப்புறங்களே நம் படை வீரர்களுக்குப் புதுமையானவை. ஆங்கிலேயர் காலத் தில் அங்கெல்லாம் துருப்புக்களை அனுப்பியதே யில்லை. சீனு திபேத்தைப் பிடித்த பிறகுதான் நாம் அங்கெல் லாம் காவற்சாவடிகள் அமைக்க நேர்ந்தது. நாட்டில் மழைக்காலம், இமாலயப் பிரதேசத்தில் பனிக்காலம். எதிரிகள் பனியில் பழகியவர்கள். நம் படையினரில் பலர் வெப்பம் மிகுந்த பிராந்தியங்களைச் சேர்ந்தவர் கள். திடீரென்று பனிமழை பொழியும் மலைகளிலும், சாரல்களிலும், பாலைகளிலும் அவர்கள் புகுந்து போரிடவேண்டி யிருந்தது. பனிக்கு ஏற்ற உடைகளும், பூட்ஸுகளும் குறைவாக இருந்தன. மேலும் நம் வீரர் களுக்கு எந்தப் பொருள்களை அனுப்புவதாயிருந்தா லும், விமானங்களின் மூலம் மலைச்சாரல்களில் எறிய வேண்டியிருந்தது. சரியான சாலைகளில்லை. போக்கு வரத்துக்குரிய சாதனங்களுமில்லை. ஆயினும் நம் படை வீரர்கள் கொடிய சீனர்களின் கொட்டத்தை உடனே ஒடுக்க முடியாதுபோயினும், அவர்களைப் பழிவாங்கு வதில் குறை வைக்கவில்லை.

## இந்தியாவுக்கு ஆதரவுகள்

இடையில் அமெரிக்காவும் இங்கிலாந்தும் நமக்கு நம்பிக்கை அளித்து ஆதரவு காட்டின. 'ஆயுதங்களை முதலில் பெற்றுக்கொள்ளுங்கள்; பண விஷயத்தைப் பின்னால் பார்த்துக் கொள்ளலாம்!' என்று அமெரிக்காவிலுள்ள இந்திய நண்பர்கள் தெரிவித்தார்கள். திரு. நேருவும் அமெரிக்க ஜனாதிபதிக்குத் தனியாகக் கடிதம் அனுப்பியிருந்தார். 'இந்தியா எதைக் கேட்கிறதோ அதைப் பிரிட்டன் செய்யும்!' என்று பிரிட்டிஷ் பிரதம மந்திரி திரு. மாக்மில்லன் பார்லிமென்டில் உள்ளன்போடு உவந்து கூறினார். பிரிட்டிஷ் இராணியும் ஆழ்ந்த அநுதாபம் காட்டினார். இந்தியா தன் சுதந்தரத்தைப் பாதுகாக்க மேற்கொண்டுள்ள உறுதியை மேற்கு ஜெர்மானிய அரசாங்கம் ஆதரிப்பதாக அதன் அதிபர் திரு. அடினார் உரைத்ததுடன், உதவி செய்யவும் தயார் என்றார்.

அக்டோபர் மாதம் இந்தியாவுக்கு விஜயம் செய்திருந்த மலாய் நாட்டுப்பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான், சுதந்தர உலகம் ஒன்று சேர்ந்து கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப்புகளை ஒழிக்கக் கோரியதுடன், சீனக் கம்யூனிஸ்டுகளின் உண்மை உருவத்தை விளக்கி அகில இந்திய ரேடியோவில் பின்வருமாறு கூறினார்:

> 'நாங்கள் 12 ஆண்டுக் காலம் ஆயுதம் தாங்கிய பலாத்காரத்தை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது; அதனால் நீங்கள் இப்போது அநுபவிப்பதை நாங்கள் நன்கறிவோம். அந்த அபாயக் காலத்தில் கம்யூனிஸ்டுகள் பிறரைப் போலவே சீனரையும் கொன்றனர். கொரியாவில் கம்யூனிஸ்டுகள் என்ன செய்தனர் என்பது உங்களுக்குத் தெரியும். திபேத்தைக் கவர்ந்தார்கள். போரினால் ஏற்பட்ட வியட்நாமின் துயரங்களுக்குக் கம்யூனிஸ்டுகளே காரணம். லாவோஸில் பூசலும் கவலை

யும் ஏற்படச் செய்தார்கள். இப்போது உங்கள் நாட்டிலேயே ஆக்கிரமிக்கிருர்கள். இவற்றை யெல்லாம் செய்துள்ளவர்களைச் சுதந்தரமான உலக மக்கள் எழுந்து நின்று எதிர்த்தாலன்றி, இன்னும் அதிகம் செய்யவும் கருதியிருக்கிருர்கள் என்று எண்ணுகிறேன்.'

## இந்தியத் தலைவர்களின் முழக்கங்கள்

திடுக்கிடத்தக்க முறையில் சீனு திடீரென்று படையெடுத்ததில் இந்தியத் தலைவர்கள் பலருக்கும் அதிர்ச்சி ஏற்பட்டது. அந்த அதிர்ச்சி தெளிந்த பின்பு, பலர் பல இடங்களில் மக்களிடையிலும், ராஜ்ய சட்டசபைகளிலும், பிற இடங்களிலும் வீர முழக்கம் செய்துள்ளார்கள். சிலர் குமுறுகின்ற எரிமலைகள் அனல் கக்குவது போல் ஈனச் சீனரை எதிர்த்துப் பேசினுர்கள். இந்தியப் பிரதம மந்திரி என்றுமே பேச்சில் வல்லவர். முக்கியமான நிலைமைகளி லெல்லாம் சீனரின் ஆக்கிரமிப்பு நாடு பிடிக்கும் ஆசையே என்பதையும், போர் நீண்டகாலம் நடக்கும் என்பதையும் அவர் வற்புறுத்தி வந்தார். நமது மதிப்புக்குரிய புதிய ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களும் சீனர் பிடித்துக் கொண்ட பகுதிகளைத் திரும்பக் கைப்பற்றுவதே நம் கடமை என்பதை வலியுறுத்தி வந்தார். ' இந்திய மண்ணில் சீனர்கள் நடத்தியுள்ள ஆக்கிரமிப்பை எதிர்த்து நடத்தும் போருக்கு ஒரே ஒரு முடிவுதான் இருக்க முடியும். அதுவே நமக்கும் நம் துருப்புக்களுக்கும் வெற்றி ஏற்படுதல்!' என்பது அவர் வாக்கு. இந்தச் சந்தர்ப்பத்தில், நமது முன்னுள் ராஷ்டிரபதியான பாபு ராஜேந்திர பிரசாத், நோய் வாய்ப்பட்டிருந்த போதிலும், பாட்னு நகரில் இரண்டு லட்சம் மக்கள் நிறைந்த கூட்டத்திலே கூறிய சில வாசகங்களை இங்கே குறிப்பிடுதல் நலமாகும். அவருடைய சொற்பொழிவில்

குறித்த கீழ்க்கண்ட விஷயங்களைப் பற்றி ஒவ்வொரு வரும் சிந்தித்துப் பார்க்க வேண்டியது அவசியம்:

'சுதந்தரத்தைக் காப்பாற்றும் முயற்சியில் ஒவ்வோர் ஆணும், பெண்ணும், குழந்தையும்கூட உதவி செய்ய முடியும்.

'சீனு தன்னுடைய (நாடு பிடிக்கும்) விஸ்தரிப்புக் கொள்கை காரணமாகத் திபேத்தைப் பிடித்துக் கொண்டு, அந்த நாட்டின் சமயத்தையும், கலாசாரத்தை யும் அழித்துவிட்டது.

'திபேத்தை இந்தியா விடுவித்து, அதை மீண்டும் திபேத்தியர்களிடம் அளித்தாலும், அதில் அறத்திற்கு மாறுன தவறு எதுவுமில்லை.

'சீனர்கள் திருடர்களைப் போல் சந்தடி செய்யாமல் இந்தியாவுக்குள் நுழைந்துவிட்டார்கள். படையெடுத்த சீனர்களிலே சிலர் எப்படியேனும் நாட்டினுள் பிரவேசித் தால்கூட அவர்களுக்கு ஒரு வாய்ச் சோறே, ஒரு கரண்டி நீரோ கிடைக்காமற் செய்ய வேண்டியது ஒவ்வொரு வரின் கடமையாகும்.

'நம்முடைய மண்ணில் படையெடுத்து வந்துள்ளவர் களில் எவர்களாவது மடிந்து விழுந்தால், அவர்களை நாம் புதைக்கவும் கூடாது.

'மக்களின் கரை கடந்த சுதந்தர ஆர்வமும் உற்சாக மும் எனக்கு மகிழ்ச்சியளிக்கின்றன. ஆனால் இந்த உற்சா கத்தைப் பயனுள்ள வகையில் உபயோகித்துக்கொள்ள வேண்டும்.

'நாம் வெற்றி பெறுவோம் என்பது உறுதி. உலகத்தி லுள்ள எந்தச் சக்தியும் நம்மை அடிபணிய வைக்க முடி யாது!'

இம்மாதிரியாகச் சாந்தி நிறைந்த ராஜன் பாபு பேசுவது வழக்கமில்லை. இந்தச் சொற்கள், கர்மவீர

ராய்த் திகழ்ந்து, 'இரும்பு மனிதர்' என்று புகழ்பெற்ற ஸர்தார் வல்லபாய் பட்டேலின் பேச்சைப் போல் ஒலிக்கின்றன. முன்னால் காந்திஜி சிறையிலே தவம் செய்து கொண்டிருக்கையில், முன்னதாகச் சிறையிலிருந்து வெளிவந்த வல்லபாய், சபர்மதி நதிக் கரையிலே கூடியிருந்த மக்களைப் பார்த்து, 'காந்திஜி சிறையிலிருக்கையில் நாம் உண்ணும் உணவு மலம், நாம் படுக்கும் படுக்கை சுடுகாட்டில் அடுக்கிய காஷ்டம்!' என்று பேசினார். ராஜன் பாபுவின் பேச்சு அதை நினைவுறுத்துகின்றது. 'திபேத்தையும் சீன வெறியர்களிடமிருந்து விடுதலை செய்ய வேண்டும்' என்று ராஜேந்திரர் நினைவுறுத்தியது குறிப்பிடத் தக்கதாகும்.

இமயமால்வரையின் எல்லைப்புறங்களில் இந்தியப் படைகள் அடைந்து வந்த தோல்விகள் நாடு முழுவதையுமே குலுக்கிவிட்டன. தலைவர்களும், படிப்பாளிகளும், மக்களும் கொதிப்படைந்தனர். உலக நாடுகளிடையே இந்தியா வகித்து வந்த உயர்ந்த நிலையை எண்ணி மயங்கியிருந்த மக்கள், எங்கோ, ஏதோ, மறைந்திருந்த பெருங்குறை நம் மானத்தை வாங்கி விட்டது என்பதை உணர்ந்தனர். நாட்டின் பாதுகாப்புக்குரிய அமைப்பிலேயே அக்குறை இருப்பதாகப் பலரும் கண்டிக்க முன் வந்தனர். வெறுப்பு அனைத்தும் முக்கியமாகப் பாதுகாப்பு மந்திரியாயிருந்த திரு. வி. கே. கிருஷ்ண மேனனை நோக்கித் திரும்பியது. பார்லிமென்டில் மிகப் பெரும்பான்மைக் கட்சியாக விளங்கிய காங்கிரஸ் கட்சியின் உறுப்பினர் பலரும் மேனனைக் கண்டிக்க முற்பட்டனர். பிரதம மந்திரி அக்டோபர் 31-ந் தேதியே மேனனைப் பாதுகாப்பு மந்திரிப் பதவியிலிருந்து மாற்றி, தற்காப்புத் தளவாட உற்பத்தி மந்திரியாக நியமித்துவிட்டார். பாதுகாப்புப் பொறுப்பையும் 73 வயதான நேருஜி

தாமே மேற்கொண்டார். வெளிநாடுகளின் உதவிகளும் விரைவில் கிடைக்கும் என்ற அறிகுறிகள் தென்பட்டன. அமெரிக்கா, கானடா, பிரிட்டன் மூன்றும் நெருக்கடியான நிலையில் இந்தியாவுக்கு என்ன உதவிகள் செய்யலாம் என்று கலந்து ஆலோசிக்கத் தொடங்கின. பிரிட்டிஷ் அரசாங்கம் 'ஜெட்' விமானங்களையும் போர் விமானங்களையும் அனுப்பத் தயாராயிருப்பதாகச் செய்தி வந்தது.

## அமெரிக்கா, பிரிட்டிஷ் உதவிகள்

புது டில்லியில் அமெரிக்க ஸ்தானிகராக இருந்த திரு. கென்னத் கால்பிரெய்த் மிகுந்த நேசப்பான்மையுடன் இந்தியாவின் துயரங்களைக் கவனித்து, அவ்வப்போது தமது அரசாங்கத்திற்குச் செய்திகள் அனுப்பி வந்தார். அமெரிக்கா பெரிய அளவில் போருக்கு உதவி செய்யத் தயாரென்று அவர் முன்பே வாக்களித்திருந்தார். ஆனால் அந்நாடு கியூபா விவகாரத்தில் சிக்கி யிருந்ததால், அது முடிந்த பிறகே இந்த உதவியைப்பற்றி முடிவு செய்ய முடிந்தது. கியூபாவில் அமைதி ஏற்பட்டவுடன், 50 லட்சம் டாலர் மதிப்புள்ள தாமாக இயங்கும் துப்பாக்கிகளும், கனரகப் பீரங்கிகளும், நிலங்களில் பரப்பும் வெடிக் கண்ணிகளும் அமெரிக்காவிலிருந்து அந்நாட்டின் 60 பெரிய விமானங்களில் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தன. இந்தியத் துருப்புக்களைப் போர்க்களங்களுக்கு ஏற்றிச் செல்வதற்கும், போர்த் தளவாடங்களைக் கொண்டு செல்வதற்கும் உதவியாக 12 'ஹெர்குலிஸ்' விமானங்களும் வந்தன. இவைகளை ஓட்டுவதற்கும், பராமரித்துக் கொள்ளவும் அமெரிக்காவிலிருந்தே விமானிகளும் ஊழியர்களும் வந்திருந்தனர். 'பிரென்' துப்பாக்கிகள், 'ஸ்டென்' துப்பாக்கிகள் முதலிய 150 டன்

போர்க்கருவிகள் விமானங்களின் மூலமாகவே இங்கிலாந்திலிருந்து அனுப்பப்பெற்றன. கானடா 6 விமானங்களை அனுப்ப ஏற்பாடு செய்தது. ஆஸ்திரேலியா 18 லட்சம் டாலர் பெறுமானமுள்ள யுத்த தளவாடங்களைக் கடனாக அனுப்ப ஏற்பாடு செய்தது.

## இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும் பல நாள் ஆலோசித்த பின்பு சீன ஆக்கிரமிப்புப் போரைக் கண்டித்தது. எனினும் தாய்நாட்டின்மீது படையெடுத்து வந்த சீனரை ஆதரிப்பவர்களும் அக்கட்சியில் இருந்ததாலும், படையெடுத்தது கம்யூனிஸ்ட் சீனா என்பதாலும், மக்கள் அக்கட்சியிடம் அளவற்ற வெறுப்புக் கொண்டிருந்தனர்.

## நாட்டின் விழிப்பு

சீனப் படையெடுப்பினால் பாரத நாடு முழுதுமே விழித் தெழுந்துவிட்டது. அரசியல் கட்சிகள் தம் வேற்றுமைகளையும், பிணக்குகளையும் ஒதுக்கிவிட்டு, போரைத் திறமையாக நடத்தும் ஒரே நோக்கத்துடன் ஒன்று சேர்ந்தன. மக்கள் நாட்டின் பாதுகாப்பு நிதிக்காகப் பொன்னும் பணமும் அள்ளிக் கொடுத்தனர். நாடெங்கும் பொதுக் கூட்டங்களும், ஊர்வலங்களும் நடந்துவந்தன. போரில் பங்கு கொள்வதற்காகப் படைகளில் சேருவதற்குப் பல்லாயிரம் இளைஞர்கள் கூட்டம் கூட்டமாக முன்வந்தனர். எங்கணும் ஊக்கமும் உறுதியும் தென்பட்டன.

## வலாங்கின் வீழ்ச்சி

இவையெல்லாம் நீடித்த பெரும் போரிலே எந்த எதிரிகளையும் விரட்டுவதற்கு ஏற்ற முறையில் திரண்

டிருந்தன. ஆனால் சீனர்கள் தங்கள் நோக்கங்களை மிகுந்த வேகத்துடன் நிறைவேற்றிக்கொள்ளத் தீர்மானித்திருந்தனர். இமயமலைப் பகுதிகளில் உறைபனி தொடங்கும் காலம் நெருங்கி வந்தது. வெளி நாடுகளின் ஆயுத உதவிகள் மேலும் மேலும் வந்து குவிவதற்கு முன்னாலும், புதிதாக இந்தியத் துருப்புக்கள் வந்து பெருகுவதற்கு முன்னாலும், தங்கள் வெற்றிகளை நிலை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று சீனப்படைகள் திரள் திரளாகப் புகுந்து போரிட்டன. நேபாவில் இந்தியத் துருப்புக்கள் சீனரை மேலோங்கவிடாமல் தடுத்தன. காட்டுப் புறங்களில் சீனர் இருக்கும் இடங்களைத் தேடிச் சென்றும் நம் காவற்படைகள் விரட்டத் தொடங்கின. சீனர் முன்னிலும் அதிக மூர்க்கமாகப் போரிட்டதுடன், நம் படைகளைத் தந்திரமாகச் சுற்றி வளைத்துக்கொள்ளவும் முயற்சி செய்தனர். நேபாவின் கிழக்குப் பகுதியிலுள்ள வலாங் நகருக்கு அருகே மிகப் பெரிய சீனப்படைகள் திரண்டு வந்து தாக்கின. இரு பக்கத்திலும் உயிர்ச் சேதம் அதிகமாகிக்கொண்டிருந்தது. அங்கிருந்த விமான தளம் பீரங்கிக்குண்டுகளால் தகர்க்கப் பெற்றது. நவம்பர் மாதம் 17-ந் தேதி வலாங் வீழ்ச்சியுற்றது. 20,000 சீனர்கள் வலாங் போரில் ஈடுபட்டிருந்ததாகச் சொல்லப்பட்டது. நேபாவின் கிழக்குக்கோடியில் வலாங்கிலும், மேலைக் கோடியில் ஸே-லாவிலும் புதிய முனைகளை அமைத்துக்கொண்டு நம் படைகள் அணி திரண்டு நிற்க ஏற்பாடு செய்துவந்தன. அஸ்ஸாமிலுள்ள தேஜ்பூர் நகரிலிருந்து புதிய படைகளும், தளவாடங்களும் சென்றுகொண்டிருந்தன. இடையில் வலாங்கின் வீழ்ச்சி பெரிய நஷ்டமாயிற்று.

## தௌலத் பெக் ஓல்டி

லடாக்கில் காரகோரம் கணவாய்க்குப் பாதுகாப்பாயிருந்த தௌலத் பெக் ஓல்டியிலுள்ள காவல் நிலையத்தை இந்தியப் படைகள் காலி செய்தன. சுஷூல் நகரைச் சுற்றிலும் சீனப்படைகள் பீரங்கிகளால் பலமாகத் தாக்கிவந்தன. இத்துடன் சீனர்கள் லடாக்கில் தங்களுடையது என்று கூறிவந்த 14,000 சதுர மைல் அளவுள்ள பிரதேசம் அவர்கள் வசமாகிவிட்டது.

## ஸே-லா கணவாய்

ஸே-லா என்ற கணவாய்க்குச் செல்லத் தேஜ்பூரிலிருந்து 'ஜீப்' கார் செல்லும் பாதை ஒன்றுதான் உள்ளது. நெடிய மரங்களடர்ந்த வனங்களின் ஊடே 10,000 அடி உயரத்திற்கு ஏறி, மறுபக்கம் 5,000 அடி உயரத்தில் சமவெளியிலிருந்த போம்டிலா நோக்கிச் சரிவான பாதையில் இறங்கிச் செல்ல வேண்டும். அங்கிருந்து மீண்டும் மேலேறி, 13,556 அடி உயரத்திலுள்ள ஸே-லாவை அடைய வேண்டும். பனியாலும், மழையாலும் பாதை முழுதும் சேறாகியிருந்தது.

ஸே - லாவில் அமைத்திருந்த நம் பீரங்கிகள் இருக்குமிடங்களைச் சீனர்கள் நன்கு தெரிந்துகொண்டு முதலில் அவைகளின் மீது குண்டு மழை பொழிந்து, அவைகள் செயலற்றுப் போகும்படி செய்தனர். நவம்பர் 18-ந்தேதி ஸே-லா வீழ்ச்சியுற்றது. பின்னர் பல்லாயிரம் சிப்பாய்கள் அடங்கிய படைகளை இரண்டு பரிவுகளாகப் பிரித்துக் கடல் அலைகள் போல அணிவகுத்துப் போம்டிலா நோக்கி வேகமாகச் செல்லும்படி சீனர் அனுப்பிவைத்தனர். ஸே-லாவிலிருந்த நமது பெரும்படையைச் சந்திக்காமலே, அதைச் சுற்றி வளைத்துக்கொண்டு அப்படைகள் சென்றன. ஸே-லா

வுக்கும் போம்டிலாவுக்கும் 70 மைல் தூரம். அவற்றினிடையே யிருந்த சாலையைச் சீனர் கத்தரித்து விட்டனர்.

சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கம் போரைத் தானுக எப்படித் திடீரென்று தொடங்கியதோ, அதே போல் நவம்பர் 21-ந் தேதி நடு நிசியிலிருந்து போர் நிறுத்தம்செய்யப்படும் என்று தானுகவே அறிவித்தது. டிசம்பர் மாதத் தொடக்கத்திலிருந்து சீன எல்லைப் புறக் காவலர்கள் 1959, நவம்பர் 7-ந்தேதி தம் ஆதிக்கியப் பகுதியாயிருந்த எல்லையிலிருந்து 20 கிலோமீட்டர் (12½ மைல்) பின்னுல் தள்ளிச் செல்வார்களென்றும் அறிவிக்கப்பட்டது. (படையெடுத்து வந்து யுத்தம் செய்த சீனப் படைகளைத்தான் 'எல்லைப் புறக் காவலர்கள்' என்று சீன அரசாங்கம் தெரிவித்தது!) நவம்பர் 21-ந் தேதி நள்ளிரவிலிருந்து போராட்டம் நின்றது. பின்னுல் படிப்படியாகச் சீனப்படைகள் பின்வாங்கிச் சென்றன.

## பாரதத்தின் விழிப்பு

பம்பாய் ராஜ்யத்தில் ஆறு ஆண்டுகள் முதன் மந்திரியாயிருந்து புகழ்பெற்ற ஒய். பி சவான் இந்தியப் பாதுகாப்பு மந்திரியாக நியமிக்கப் பெற்ருர். வீரம் மிக்க இந்த மராட்டியர் பதவிக்கு வரவும், போர் நிற்கவும் சரியாக இருந்தது. மகாராஷ்டிரத்திலிருந்து புறப்படும்போதே நமது புதிய பாதுகாப்பு மந்திரி, வாகை சூடியே திரும்பி வருவதாகவும், இல்லையெனில் உயிருடன் திரும்புவதில்லை என்றும் உறுதி கூறியே டில்லிக்குச் சென்ருர். பழைய சேனுபதி திரு பி. என். தாபர் உடல் நலமின்மையால் பதவியை இராஜிநாமா செய்தார். பிறகு தளபதி ஜே. என். சௌதரி இந்தியப் படைகளின் சேனுபதியானுர். இரண்டாவது உலகப் போரில்

முதலில் குவெட்டாவிலிருந்த இவர், தமது படையுடன் 3,000 மைல் கடந்து சென்று, பர்மாவின் தலைநகரான ரங்கூன் போராட்டத்தில் கலந்துகொண்டு, பெரும் புகழ் பெற்ருர். பின்னர் இந்தோ-சைஞ, ஜாவா, மலாய் முதலிய இடங்களுக்கும் சென்றிருந்தார். தாயகம் சுதந்தரம் பெற்றபின், ஹைதராபாத்தின் கொட்டத்தை அடக்க இவர் தலைமையில் தான் இந்தியப்படை சென்றது. ஹைதராபாத்தில் இராணுவக் கவர்னராகவும், சேனையின் தலைமைக் காரியாலயத்தில் தலைமை அதிகாரியாயும் இருந்துவிட்டு, 1956-ல் சீனுவுக்குச் சென்ற இந்திய இராணுவக் குழுவுக்கு இவர் தலைவராகவும் இருந்தார்.

தமிழ் நாடு முதல் அஸ்ஸாம் வரை எல்லா ராஜ்யங்களிலும் சீன அநுதாபமுள்ளவர்கள் என்று சந்தேகிக்கப்பெற்ற கம்யூனிஸ்டுகள் சிறைவைக்கப் பெற்ருர்கள். இந்தியாவில் தங்கியிருந்த சீனரில் பலரும் காவலில் வைக்கப்பெற்றனர்.

அமெரிக்காவிலிருந்தும் பிரிட்டனிலிருந்தும் இந்திய இராணுவத் தேவைகளை நேரில் அறிந்து செல்வதற்காக இரண்டு முக்கியமான பெருங் குழுக்கள் வந்திருந்தன. அமெரிக்கக் குழுவுக்குத் திரு. ஹாரிமன்னும், பிரிட்டிஷ் குழுவுக்குத் திரு. ஜான் டில்னேயும் தலைமை வகித்திருந்தனர். இரண்டு குழுக்களின் அங்கத்தினர்களும் இந்திய மந்திரிகளையும், சேனுபதி முதலியோரையும் கண்டு பேசியதுடன், போர் நிகழ்ந்த இடங்களையும் பார்வையிட்டுச் சென்றனர். முக்கியமான ஆப்பிரிக, ஆசிய நாட்டு அரசாங்கத் தலைவர்களுக்கும் மற்றவர்களுக்கும் இந்தியாவின் நோக்கங்கள் பற்றி விளக்கிச் சொல்ல நம் மந்திரி திருமதி லக்ஷ்மி மேனனும், அதிகாரிகளும் சென்றிருந்தனர். எல்லாவற்றிற்கும் மேலாகப் பாகிஸ்தானுக்

கும் இந்தியாவுக்கும் சமரசம் ஏற்படும் வகைக்கு முயற்சி செய்ய வேண்டும் என்று இந்தியப் பிரதம மந்திரியும், பாகிஸ்தான் பிரதமர் தளபதி ஆயூப்கா னும் கூட்டறிக்கை வெளியிட்டனர்.

சீன-இந்தியப் போராட்டத்தில் உலகில் பெரும் பாலான நாடுகள் இந்தியாவுக்கு அநுதாபமாக இருந் தன. கம்யூனிஸ்ட் நாடுகளின் ஆதரவுகூடச் சீனுவுக்குக் கிடைக்கவில்லை. மேலும், அல்பேனியா நீங்கலாக மற்றக் கிழக்கு ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகள் சீனுவை வன்மையாகக் கண்டித்தன. ஐக்கிய அரபுக் குடியரசுத் தலைவர் திரு. நாஸர் இந்தியாவை ஆத ரித்து, சீனு தன் படைகளை வாபஸ் பெறவேண்டு மென்று யோசனை கூறினார். சமாதானத்திற்காக நான்கு பிரிவுகள் கொண்ட ஒரு திட்டத்தையும் அவர் இரு நாடுகளுக்கும் அனுப்பி யிருந்தார். அதன்படி உடனே சண்டையை நிறுத்தவேண்டும்; இரு பக்கத் துப் படைகளும் போர் தொடங்கிய அக்டோபர் 20-ந் தேதிக்கு முன்பு இருந்த நிலைக்குத் திரும்பிச் செல்லவேண்டும்; இரு திறத்தாருக்கும் நடுவில் படை களே யில்லாத சூனியப் பிரதேசமாக ஒரு பகுதி இருக்க வேண்டும்; அமைதியான முறைகளில் எல்லைப் பிரசினை களைப் பேசி முடிவு செய்துகொள்ள வேண்டும். இந்தப் பிரேரணைகளை இந்தியா ஒப்புக்கொண்டிருந்தும், சீனு ஏற்றுக்கொள்ளவில்லை.

## கொழும்பு மகாநாட்டுப் பிரேரணைகள்

ஆசியப் பெருநாடுகளான இந்தியாவும் சீனுவும் பொருதிக்கொண் டிருப்பதை நிறுத்தி இரண்டும் அமைதியான முறையில் கூடிப்பேசி எல்லைப் பிரசினை களைத் தீர்த்துக்கொள்ள வழி செய்ய வேண்டுமென்று **இலங்கை, ஐக்கிய அரேபியா, பர்மா, கம்போடியா, இந்தோ**

னீஷியா, காஞ ஆகிய ஆறு ஆசிய - ஆப்பிரிக நாடு களின் அரசாங்கங்களின் பிரதிநிதிகள் டிசம்பர் மாதம் 10-ந் தேதி முதல் 2-ந் தேதி வரை இலங்கைத் தலைநகரான கொழும்புவில் கூடி ஆலோசித்தனர். அவ்வாறு கூடியவர்கள் இலங்கைப் பிரதமர் சிரிமாவோ பண்டார நாயக, அரபுக் குடியரசுப் பிரதமர் (அரசாங்க நிர்வாக சபைத் தலைவர்) அலி ஸாப்ரி, பர்மியப் பிரதமர் தளபதி நெவின், கம்போடிய இளவரசர் ஸிஹானுக், இந்தோனீஷிய அயல் நாட்டு மந்திரி டாக்டர் ஸுபாந் திரியோ, காஞவின் நிதி மந்திரி அஃபோரி ஆட்டா ஆகியவர்கள். அவர்களுக்கு வேண்டிய தகவல்கள் முதலிய கூறுவதற்கு இந்திய, சீன அரசாங்கங்கள் தத்தம் அதிகாரிகளை அனுப்பியிருந்தன. மகாநாடு, சீனுவுக்குக் கோபம் வராமலும், இந்தியாவுக்குத் தீங்கு நேராமலும், நடுநிலைமையான வழிபற்றி விவாதம் செய்து, சில பிரேரணைகளை முடிவு செய்தது. அவைகளை உடனே வெளியிடாமல், அந்தரங்கமாகச் சீன, இந்திய அரசாங்கங்களுக்கு மட்டும் தெரிவித்து, அவைகளின் சம்மதம் பெறவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

சிரிமாவோவும், டாக்டர் சுபாந்திரியோவும் பீகிங் சென்று மகாநாட்டுப் பிரேரணைகளைச் சீனப் பிரதம மந்திரிக்கும், கம்யூனிஸ்ட் தலைவர் மாஸே-துங்குக்கும் விளக்கிச் சொல்லினர். பின்னர் சிரிமாவோவும், அலி சாப்ரியும், அஃபோரி ஆட்டாவும் புதுடில்லிக்கு வந்து இந்தியப் பிரதம மந்திரியிடம் அவைபற்றி விவாதித்தனர். பின்னர் கொழும்பு மகாநாட்டுப் பிரேரணைகள் பத்திரிகைகளில் வெளியிடப்பெற்றன.

கொழும்புப் பிரேரணைகளும் விளக்கங்களும் குறித்த முக்கியமான அம்சங்கள் இவை:

1. மேற்கே லடாக் பகுதியில் சீனப் படைகள் 20 கிலோமீட்டர் (12½ மைல்) பின்னுல் தள்ளிச் செல்ல

வேண்டும். அவைகள் காலி செய்யும் பிரதேசத்தில், இரு பக்கத்து உத்தியோகஸ்தர்களைத் தவிர எந்தப் படைகளும் இருக்கக் கூடாது.

2. கிழக்குப் பகுதியான நேபாவில் 1962, செப்டம்பர் 8-ந் தேதிக்கு முன்பு இருந்தபடி மக்மகான் கோட்டுக்கு வடபுறம் சீனப் படைகளும், தென்புறம் இந்தியப் படைகளும் இருந்துகொள்ள வேண்டியது. தக்லா குன்றுப் பகுதி, லாங்ஜூ ஆகிய இரண்டு பிரதேசங்களைப் பற்றி மட்டும் இரு நாடுகளும் கலந்து ஒரு முடிவு செய்து கொள்ளவேண்டும்.

3. நடுப் பகுதியில் செப்டம்பர் 8-ந் தேதிக்கு முன்னிருந்த நிலையே இருந்து வரவேண்டும்.

ரபிதம மந்திரி நேரு பார்லிமென்டில் பேசும் பொழுது, இந்திய அரசாங்கம் சமாதானத்திற்காகக் குறித்த நிபந்தனைகளை ஒட்டியே கொழும்புப் பிரேரணைகள் இருப்பதாலும், சில அம்சங்களில் நமக்கு நன்மையான அம்சங்கள் கூடுதலாக இருப்பதாலும், அவைகளை ஏற்றுக்கொள்ளலாம் என்று விளக்கியுரைத்தார். இந்தியப் பார்லிமென்டும் பிரேரணைகளை அங்கீகரித்தது.

ஆயினும் சீனு அவைகளை முழுதும் ஏற்றுக் கொள்ளவில்லை முதலில் அது கொள்கை அளவில் கொழும்புப் பிரேரணைகளை ஏற்றுக்கொள்வதாகச் சொல்லிற்று; பின்னல் சீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கத் தலைவரும், பிரதமரும், மற்றோரும் பல சமயங்களில் அவைகளை மறுத்துப் பேசியுள்ளனர். தங்களுக்கு எவரும் நிபந்தனைகள் போடக்கூடா தென்றும், கொழும்பு மகாநாட்டின் முடிவுகள் நீதிபதி தீர்ப்புக் கூறுவதுபோல இருப்பதாகவும், பலவிதமாக அவர்கள் கூறியுள்ளனர். சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் பத்திரிகையான 'பீப்பிள்ஸ் டெய்லி' கொழும்புப் பிரேரணை

களைச் சீனு மறுத்துவிட்டதாகத் தெளிவாக எழுதியது. சுருங்கச் சொன்னுல், சீனு ஆக்கிரமிப்புப் போரினுல் தான் அடைந்துள்ள ஆதாயங்களைக் கைவிடாமல் சமரசம் பேசவேண்டும் என்றே நினைத்தது.

கொழும்பு மகாநாட்டு உறுப்பினர்கள் மேலும் மேலும் முயற்சிகள் செய்தும் அவை பயனற்றுப் போயின. திமிர் பிடித்த சீனு வளைந்து கொடுக்காமல் நிமிர்ந்தே நின்றுவிட்டது.

கொள்கை அளவில் கொழும்புப் பிரேரணைகளை ஏற்றுக்கொள்வதாகச் சீனப் பிரதமர் 3-3-63-ந் தேதி இந்தியப் பிரதமருக்கு எழுதிய கடிதத்திற்கு மறு மொழியாக நேருஜி, கொள்கை அளவில் ஒப்புக் கொள்வது பிரேரணைகளை ஒப்புக்கொள்வதாக ஆகா தென்று தெரிவித்தார். 'சமாதான முறையில் தீர்வு காண்பதில். சீன அரசாங்கம் அந்தரங்க சுத்தியாக ஆர்வம் கொண்டிருந்தால், அது கொழும்பு மகா நாட்டுப் பிரேரணைகளை, இந்திய அரசாங்கம் செய் துள்ளபடி, அப்படியே நிபந்தனையில்லாமல் முழுதும் ஏற்றுக் கொள்ளவேண்டும். அதன் பிறகுதான் இரண் டாவது படியான பேச்சுவார்த்தைகளுக்கு நாம் செல்ல முடியும்' என்று அவர் முடிவாகக் கூறிவிட்டார்.

கம்யூனிஸ்ட் சீனு தானுகவே படையெடுத்து வந்தது, தானுகவே போரை நிறுத்திக்கொண்டது; தானுகவே மறுபடி எப்பொழுது வேண்டுமானுலும் போர் தொடுக்கும் நிலையில் நின்று கொண்டிருக் கின்றது. சீனப் படையினரான வெறி நாய்கள் இன்னும் இந்திய எல்லைகளுக்குள்ளே இருந்துகொண் டிருக்கின்றன. இந்தியா காலம் கருதிக்கொண்டிருக் கின்றது. இதுதான் இப்பொழுதுள்ள நிலைமை.

## பழைய சீனு

'சீன மக்கள் முற்காலத்தில் பெரும்பாலும் அமைதியாக வாழ்க்கை நடத்திவந்தவர்கள். இப் பொழுதும் அப்படியே இருக்கிருர்கள். அவர்களுடைய நாகரிகமும் வாழ்க்கைத் தத்துவமும் முழுதும் சாந்தியைத் தழுவியவை.'

—ஜவாஹர்லால் நேரு*

---

### நாடு

சீனு பழம் பெருநாடு. அது நாலாயிரம் ஆண்டுகளாகத் தொடர்புள்ள சரித்திரத்தைக் கொண்டது. அத்தனை ஆண்டுகளாகப் பல சக்கரவர்த்திகள் அதனை ஆண்டுவந்தனர். ஹியா, சௌ, சின், ஹான், டாங், ஸுங், மங்கோலியர், மிங், மஞ்சூ ஆகிய ஒன்பது வமிசங்களைச் சேர்ந்த 184 சீனச் சக்கரவர்த்திகளின் ஆட்சியைப் பற்றிய விரிவான சரித்திரங்கள் இருக்கின்றன. அவர்களிற் பலர் சீன நாட்டிலேயே தோன்றியவர்கள்; சிலர் வெளியிலிருந்து வந்து வெற்றி கொண்டவர்கள். மங்கோலியரும், மஞ்சூக்களும் வெளியார்கள். அரச வமிசங்களிலே கடைசியாக ஆண்டுவந்தவர்கள் மஞ்சூ வமிசத்தினர். 1912 ஆம் ஆண்டில் அவர்களோடு முடியாட்சி முடிந்து, சீனுவில் மக்களாட்சியாகிய குடியரசு நிறுவப்பெற்றது.

பழைய சீனுவின் நிலப்பரப்பு 43,14,097 சதுர மைல். ரஷ்யாவுக்கு அடுத்தபடியான பெரிய நாடு

---

* 'உலக சரித்திரக் காட்சிகள்' என்ற ஆங்கில நூலில்.

அதுதான். அது ஆசியக் கண்டத்தின் தென்கிழக்கில் பஸிபிக் கடலின் மேலைக் கரையிலுள்ளது. கிழக்கிலும் தென்கிழக்கிலும் பெருங்கடல், மற்றைப் பக்கங்களி லெல்லாம் நிலப்பரப்பான நாடுகளே எல்லைகள். சீன நாட்டின் வடக்கே ரஷ்யாவும், தெற்கில் பர்மா, சயாம், லாவோஸ், வியட்நாம், ஆகிய சிறுநாடுகளும், கிழக்கில் திபேத்து ராஜ்யத்தையடுத்து இந்தியாவின் பகுதிகளாகிய காஷ்மீரும், வடகிழக்கு எல்லை ஏஜன்ஸிப் பிரதேசமும், இந்தியப் பாதுகாப்புக்குள் ளிருக்கும் நேப்பாளம், சிக்கிம், பூட்டான் நாடுகளும் உள்ளன. இந்தியப் பகுதிகள் யாவும் இமயமால்வரைச் சாரல் களில் உள்ளவை. முக்கியமாகச் சீனுவுக்கும் இந்தியா வுக்கும் நடுவே பூவுலகிலேயே மிகப்பெரிதான இமா லயமே எல்லையாக வானுற வளர்ந்து நிற்கின்றது. ஆசியாவில் சீனுவுக்கும் அடுத்த பெரிய நாடு இந்தியா தான். சீனுவுக்கு வடகிழக்கில், அதனை அடுத்து, ஜப்பான் தீவுகள் அமைந்துள்ளன.

'சீனு' என்ற பெயரால் நாமும், மற்ற வெளிநாட் டாரும் அந்த நாட்டைக் குறிப்பிடுகிறோம். ஒரு சமயம் அந்த நாட்டு மாகாணங்களில் ஒன்றான 'சின்' என்ற மாநிலம் மற்ற மாகாணங்களை யெல்லாம் வென்று ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்தது. அந்தச் சின் மாகா ணத்தின் பெயரையே உலகத்தார் நாட்டுக்கும் சூட்டி விட்டனர். ஆனால் சீனர்கள் தங்கள் நாட்டைச் 'சுங்-குவோ' என்பார்கள். இதன் பொருள் 'நடு நாடு' என்பது.

சீனு நீர்வளம், நிலவளம், உலோகக் கனிவளம் முதலிய வளங்களெல்லாம் அமைந்தது. காடுகளும், மலைகளும், சோலைகளும், ஏரிகளும் அங்கே நிறைந் துள்ளன. 1,600 ஆறுகள் அந் நாட்டின் வளத்தை யும் எழிலையும் பெருக்கிப் பாய்ந்துகொண்டிருக்

கின்றன. 3,400 மைல் நீளமுள்ள யாங்ட்ஸீ ஆறுதான் முதன்மையானது. 500 மைல் நீளமுள்ள ஹுவாங்ஹோ என்ற மஞ்சள் நதி, தான் கலக்கும் கடலையே மஞ்சள் நிறமாக்கும் அளவுக்கு வண்டல் நிறைந்தது. மூன்றாவது பெரிய நதி ஸி-கியாங். இவைகளின் கிளை நதிகளும், ஆயிரக் கணக்கான கால்வாய்களும் இருக்கின்றன. இத்தனை பாசன வசதிகளுக்கேற்ப, விளை நிலங்களும் 26 கோடி ஏக்கர்களுக்கு மேல் உள்ளன.

கி. மு. 2,697-இல் மஞ்சள் சக்கரவர்த்தி என்று அழைக்கப்பெறும் ஹுவாங்தீ என்ற அரசர்க்கரசரே நாட்டை ஒருமைப்படுத்தி ஓர் ஏகாதிபத்தியமாக அமைத்தவர். நாட்டுக்கு மட்டுமன்றி, சீன நாகரிகத்திற்கும் அவரே தந்தையாக விளங்கினார். அவர் காலத்திலிருந்தே வரலாறும் தொடங்குகின்றது. பின்னால் வந்த சக்கரவர்த்திகளில் பலர் கொடுங்கோலர்களாயிருந்தனர்; சிலர் ஏகாதிபத்திய வெறியர்களாகவும் இருந்தனர். வல்லமை பெருகிய காலத்தில், ஆமை கால்களையும் தலையையும் வெளியே நீட்டுவதுபோல், அவர்கள் பிறநாடுகளின்மீது பாய்வார்கள்; வல்லமையும் வளமும் குறைந்தவுடன் தம் அங்கங்களை உள்ளே இழுத்துக்கொள்வார்கள். இதனால் ஒரு காலத்தில் கொரியா, ஃபர்மோஸா என்ற தெய்வான், அன்னம், சயாம், பர்மா, பூட்டான், நேப்பாளம் முதலிய யாவும் சீனாவுக்கு அடங்கியோ, கப்பம் கட்டியோ இருந்துவந்தன. ஆசியாவில் பெரிய வல்லரசாக வளர்ந்து விளங்கிய ஜப்பான்கூட முன்னாளில் சிறிது காலம் சீனாவுக்குத் திறை செலுத்தி வந்தது.

உலகிலே எகிப்தியர், பாபிலோனியர், இந்தியர், சீனர் ஆகியோரே பண்டைய நாகரிகங்களில் முதன்மையானவர்களாகக் கருதப்படுகின்றனர். எகிப்திய, பாபிலோனிய நாகரிகங்கள் இப்போது மறைந்து

விட்டன. ஆயினும் இந்தியரும், சீனரும், எத்தனை எத்தனையோ புயல்கள் போராட்டங்களை யெல்லாம் கடந்து, இன்றைக்கும் கோடிக் கணக்கான மக்களுடன் தலை நிமிர்ந்து நிற்கிறார்கள்.

## சீன மக்கள்

சீன மக்கள் மஞ்சள் நிறமானவர்கள். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக அவர்கள் பெண்களின் பாதங்களை இரும்பு 'பூட்ஸு'களில் கட்டி வைத்துச் சிற்றளவாக இருக்கும்படி செய்துவந்தார்கள். முக்கிய மாகச் செல்வர்கள் இந்த முறையைக் கையாண்டு வந்தனர். நாளடைவில் இவ் வழக்கம் மறைந்து விட்டது. மற்றொரு வேடிக்கையான வழக்கம், சீன ஆடவர்கள், தலையை முன்புறம் முண்டனம் செய்து, பின்புறம் கேசத்தை இரண்டு பின்னல்களாகப் பின்னித் தொங்கவிட்டுக் கொள்வது. மங்கோலியர் படை யெடுத்து வந்து அவர்களை அடக்கிய பின்னர், தங் களைப் போலவே அவர்களும் பின்னல் போடவேண்டும் என்று விதித்ததால், இவ்வழக்கம் ஏற்பட்டது. மஞ்சூ வமிசத்தார் ஆட்சியில் இரண்டு பின்னல்களை மாற்றி ஒற்றைப் பின்னலாக விதிக்கப்பட்டது. அடிமை மக்க ளுக்கு இந்தப் பின்னல் ஓர் அடையாளமாக இருந்து வந்தது. வெள்ளைக்காரர்கள் இந்தப் பின்னலைப் 'பன்றி வால்' என்று ஏளனம் செய்துவந்தார்கள்.

சீன மக்களிலே பலர் பெரிய கல்விமான்களாயிருந் தனர். என்றைக்கும் அவர்களிடையே கல்விக்கு மதிப்புண்டு. ஒருவர் கையெழுத்து அழகாயிருந்தால், அதை அவர்கள் மிகவும் பாராட்டுவார்கள். ஞானி களுக்கும், கவிவாணர்களுக்கும் அந்நாட்டில் குறைவே யில்லை. நாடு முழுதும் போற்றப்பெற்று, உலகத் தாரின் நன்மதிப்பையும்பெற்ற கன்பூஷியஸ், லாவோத்ஸே,

மென்ஷியஸ் போன்ற மாபெரும் ஞானிகள் சீன மண்ணில் தோன்றியவர்களே. இவர்களும் இவர்களுடைய சீடர்களும் மக்களின் வாழ்க்கையை உருவாக்கியவர்கள். 'பேனு பிடிக்கத் தெரிந்தவன் பிச்சையெடுக்க வேண்டியிராது' என்பது ஒரு சீனப் பழமொழி. 'அறிவாளி தன் நூல்களை இழக்க மாட்டான்; ஏழை தன் பன்றிகளை இழக்க மாட்டான்' என்று மக்கள் சொல்வார்கள். புத்தகங்கள் எழுதுவதும், பிரதி செய்வதும், கற்பதும் கற்பிப்பதும் அறிவாளர் செயல்கள். ஏழை மக்கள் உணவுக்காக ஏராளமான பன்றிகளை வளர்ப்பதும் அந்நாட்டு வழக்கம். அரசாங்க அலுவல்களுக்காகத் தேர்வுப் பரீட்சை செய்வதில், நன்றாகக் கவி பாடவும் தெரிந்திருக்க வேண்டுமென்று அங்கே விதிக்கப்பெற்றிருந்தது. எனவே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகச் சீன அதிகாரிகள் அனைவரும் படிப்பாளிகளாகவும், கவிவாணர்களாகவும் இருந்து வந்ததில் வியப்பில்லை. 150 வருடங்களுக்கு முன்னால் உலகில் மற்ற நாடுகள் அனைத்திலும் எத்தனை நூல்கள் இருந்தனவோ அவைகளைவிட அதிகமாக அந்த ஒரு நாட்டில் மட்டும் ஏடுகளும் புத்தகங்களும் இருந்தன. கல்வியைப் போலவே கலைகளிலும், தத்துவ ஞானத்திலும், இலக்கியத்திலும் சீனர்கள் தலைசிறந்து நின்றார்கள்.

முதன் முதலாகக் காகிதம் செய்யக் கண்டுபிடித்தவர் சீனர். அச்சு இயந்திரம், திசை காட்டும் கருவி, காகித நாணயம், கப்பல் முதலியவை அமைக்கவும் அவர்களே முந்திக்கொண்டவர்கள். அவர்களே வெடி மருந்தையும் கண்டுபிடித்தார்கள்; ஆனால் அதை மக்களை அழிக்கும் கருவியாகப் பயன்படுத்தாமல், வாணங்களாகவும், வெடிகளாகவும் செய்து கொளுத்தி, அவர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். அதே வெடி மருந்தை ஐரோப்பியர்கள் தெரிந்து

கொண்டு, துப்பாக்கிகளுடனும், பீரங்கிகளுடனும் வந்து, சீனக் கடற்கரையிலிருந்து குண்டுகள் பாய்ச்சும் வரை சீனர்கள் தங்கள் வேடிக்கையை மறக்காம லிருந்துவிட்டனர். கைத் தொழில்களிலும் அவர்கள் கைதேர்ந்தவர்கள். பட்டு உற்பத்தி, நெசவு. அழகிய பீங்கான் பொருள்கள் செய்தல், தந்த வேலைகள் முதலியவற்றில் அவர்கள் புகழ் பெற்றிருந்தார்கள். சித்திரங்களிலும், சிற்பத்திலும் அவர்கள் சிறந்து விளங்கினார்கள். கண் கண்டதைக் கை செய்யும் என்பது போலல்லாமல், கண்ணாலே கண்டதுடன் கற் பனைச் செறிவு சேர்த்துச் செய்வது அவர்கள் வழக்கம். சீனாவுக்குப் போகாமல், அவர்களுடைய வண்ணச் சித்திரங்களைப் பார்த்தே, அந்நாட்டின் கோடுகளையும், குளங்களையும், குன்றுகளையும், காடுகளையும், மலர்ச் செடிகளையும், மக்களையும் தெரிந்துகொள்ள முடியும்.

சீனமக்களிடையே கன்பூஷியஸ் மதமும், லாவோத் ஸேயின் டாவோ மதமும், பௌத்த மதமும் பரவி யிருந்தன. இவற்றுள் பௌத்தம் இந்தியாவி லிருந்து சென்று அங்கே நிலைத்து நின்ற சமயம். 2,000 ஆண்டுகட்கு முன்னர் பல பௌத்த பிட்சுக்கள் இமயமலைக் கணவாய்களின் வழியாகச் சென்று சாக் கிய முனிவரான புத்தருடைய தர்மத்தைச் சீனாவில் பிரசாரம் செய்தனர். அவர்கள் சீன மொழியைப் பயின்று பல நூல்களையும் எழுதி வைத்திருக்கின்ற னர். சீனாவிலிருந்து இந்தியாவுக்கு யாத்திரை வந்து பௌத்த சமய நூல்களைப் பெற்றுச் சென்ற ஃபாஹி யான், இத்சிங், ஹ்யூன்த்ஸாங் முதலியோரும் அந்தச் சமயத்தின் வளர்ச்சிக்காக அருந்தொண்டு செய்தவர் கள். மேலே கூறிய சமயங்களைச் சார்ந்த கோயில்கள் நாடு முழுதும் நிறைந்துள்ளன. ஆயினும் பௌத்த மடாலயங்களும், விகாரைகளுமே அதிகம். சீனாவில்

பல இடங்களில் முஸ்லிம்களும் இருக்கிறார்கள். முக்கியமாக ஸிங்கியாங் மாகாணத்தில் அவர்களின் எண்ணிக்கை அதிகம். மேலைநாட்டுப் பாதிரிமார்களின் பிரசாரத்தினால் கிறிஸ்தவ மதமும் அங்குப் பரவியுள்ளது. சீன முடியரசைத் தொலைத்துக் குடியரசை நிறுவிய டாக்டர் ஸன்யாட்-ஸென் ஒரு கிறிஸ்தவர்; அவருக்குப் பின் குடியரசுக்குத் தலைமை தாங்கி, ஜப்பானியப் போரில் எதிர்த்து நின்று போராடிய சியாங் கை-ஷேக்கும் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவியவர்.

சீனாவில் எத்தனையோ போர்கள் நடந்துள்ளன. போர்களில் ஆயிரக்கணக்காகவும், இலட்சக் கணக்காகவும் படைவீரர் மடிவதும் வழக்கந்தான். ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்த எல்லைகளைக் காப்பதற்காகப் போர்வீரர்கள் அடிக்கடி அணிவகுத்துச் செல்வார்கள். ஆயினும் பொதுவாக மக்கள் அமைதியாக ஒதுங்கி வாழவே விரும்பினர். சமூகத்தில் போர் வீரனைக் காட்டிலும் அறிவைப் பெருக்கும் அறிஞனுக்கும், உணவுப் பொருள்களைப் பெருக்கும் குடியானவனுக்குமே அதிக மரியாதையுண்டு. போரும், உதிரம் பெருக்கும் வெறியும் சீன இலக்கியங்களிலே அதிகமாக இடம் பெறவில்லை; எங்கணும் 'சாந்தி, சாந்தி'யென்று அமைதியே அதிகமாகப் பாராட்டப் பெற்றது. மக்கள் அதிகச் சமயப்பற்றும், மதவெறியும் கொண்டு விளங்கவில்லை எனினும், அவர்கள் நேர்மையையும் ஒழுக்கத்தையும் பேணி வந்தார்கள்.

தேசங்களில் சமூகத்தை ஒழுங்குபடுத்தி நடத்தி வர அரசாங்கங்கள் தேவையா இல்லையா என்பது பற்றி அறிஞர்கள் ஆராய்வது வழக்கம். 'தற்காலத்திய ஆங்கில அறிவாளர் சிலர் அரசாங்கம் அவசியமான ஒரு தீமைதான் என்று கருதுகிறார்கள்; ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே, அரசாங்கம் தேவை

யில்லாத ஒரு தீமை என்று சீனர் கண்டு கொண்டனர்' என்று ஒரு ஜப்பானிய அறிஞர் கூறியுள்ளார். எனவே, எந்த மன்னன் எப்படி ஆண்டுவந்தாலும், மக்கள் உலக நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளாமல், தத்தம் நகரங்களிலும், கிராமங்களிலும் அமைதியாகக் காலங் கழித்துவந்தார்கள்.

## ஐரோப்பியர் வருகை

ஆயினும் சென்ற ஒன்றரை நூற்றுண்டுக் காலத்தில் உலகத்தில் ஏற்பட்ட மாறுதல்களின் விளைவிலிருந்து சீனு தப்பியிருக்க முடியவில்லை. ஐரோப்பிய நாடுகளில் இயந்திரங்கள் கண்டுபிடிக்கப் பெற்றுத் தொழில்களில் உற்பத்தியான பொருள்கள் மலை மலையாகக் குவிந்து வந்தன. இரயில்களும், நீராவிக் கப்பல்களும்தோன்றின. துப்பாக்கிகளும், பீரங்கிகளும்போர்களிலே பயன்படுத்தப் பெற்றன. அந்நிலையிலே வெளி நாடுகள் பலவற்றைப் பிடித்து ஆதிக்கியம் செலுத்தவும், வாணிபம் செய்யவும் போர்த்துகீசியர், டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் முதலிய ஐரோப்பியர் ஆசிய, ஆப்பிரிகக் கண்டங்களுக்கு வந்து சேர்ந்தனர். அவர்களில் முன்னோடிகளாக வந்தவர்கள் கிறிஸ்தவப் பாதிரிமார்கள். அவர்கள் விவிலிய வேதப் புத்தகத்தைத் தூக்கிக்கொண்டுவந்துபிரசாரம் செய்யத் தொடங்கியபின், வேத நூலைத் தொடர்ந்து வெடி மருந்துக் கப்பல்களும் கீழ்த்திசை நோக்கி வரத் தொடங்கின.

ஐரோப்பியர் சீனுவுக்குள் வந்த காலத்தில் மஞ்சூ வமிசத்தினரே ஆண்டுவந்தனர். இறுதிக் காலத்தில் அவர்கள்'மிகவும் திறமையற்று விளங்கினுர்கள். மந்திரிகளும், அதிகாரிகளும் பரிதானம் வாங்கிக் கொழுத்திருந்தார்கள். மக்கள் மட்டும் துயரமும், கொடுமை

யும் தாங்காமல் நலிந்து வந்தார்கள். ஹோ-குன் என்ற பிரதம மந்திரி ஒருவர், இருபது ஆண்டுக்காலம் பதவிவகித்ததில், பன்னிரண்டு கோடிப் பவுன் லஞ்சம் வாங்கிச் சேர்த்து வைத்திருந்தாராம்! அரசாங்கத்தின் வருட வருமானம் சுமார் பத்தாயிரம் பவுன் தான், ஆனால் அமைச்சரின் சொத்து மட்டுமே பன்னிரண்டு கோடி!

மக்களிடையே வெறுப்பும், எதிர்ப்பு உணர்ச்சியும் வளர்ந்து, புரட்சியும், கலகமும் நடந்துகொண்டிருந்தன. 1793முதல் எட்டு வருடங்கள் நடந்த புரட்சி ஒருவாறு மிகக் கொடுமையாக அடக்கப்பெற்றது. இடையில் சீனாவில் குடிபுகுந்திருந்த ஐரோப்பியர், அதுவே தக்க சமயமென்று கண்டு, போர் தொடுத்தனர். 1840-இல் பிரிட்டன் தன் அபினி வர்த்தகத்தைத் தொடர்ந்து நடத்துவதற்காக ஒரு சண்டை நடத்தியது. அப்பொழுது ஆண்டுவந்த சக்கரவர்த்தி டாவோ-குவாங் தோல்வியுற்றார். இத்தோல்வி காரணமாக குவாங்சௌ, அமாய், பூசௌ, நிங்போ, ஷாங்கை ஆகிய ஐந்து துறைமுகங்களும், நஷ்ட ஈட்டுப் பொருள்களும் ஆங்கிலேயருக்கு அளிக்கப்பெற்றன. உள்நாட்டில் சில இடங்களில் அவர்களுக்கு அரசாங்கத்திற்குரிய அதிகாரங்களும் வழங்கப்பெற்றன. 1860-இல் ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும் சேர்ந்து பீகிங் தலைநகரைத் தாக்கி, அதைச் சூறையாடியதுடன், உடன்படிக்கை செய்துகொண்டு, புதிதாக மேலும் துறைமுகங்களையும் பெற்றுக்கொண்டனர். ஆசிய நாடுகளில் முதன் முதலாக ஐரோப்பியரைப் பின்பற்றி இயந்திரத் தொழில்களை அமைத்து, புதிய வல்லரசாக வளர்ந்து வந்த ஜப்பானும் 1895-இல் படையெடுத்து வந்து வெற்றி கொண்டது. அதன் பயனாக அது ஃபர்மோஸா தீவையும், சில துறைமுகங்களின் உரிமையையும்,

ஏராளமான பொருளையும் அடைந்தது. கொரியா நாட்டை விடுதலை செய்வதாகச் சொல்லி, அதையும் ஜப்பான் கைப்பற்றிக்கொண்டது. 1900ஆம்ஆண்டில் நடந்த 'பாக்ஸர்' சண்டையில் பல நாடுகள் கூட்டாகச் சேர்ந்து சீனவைத் தாக்கின. பிரிட்டன், ரஷ்யா, ஜப்பான், ஜெர்மனி, ஃபிரான்ஸ், அமெரிக்கா, ஆஸ்திரியா, இத்தாலி ஆகிய நாடுகள் சேர்ந்து அதை முறியடித்தன. இதிலிருந்து சக்கரவர்த்தியின் ஆட்சி முற்றிலும் ஆட்டம் கண்டது. நாட்டின்,புது வாழ்வுக்கேற்ற ஜனநாயகப் புரட்சிக்கு அதுவே வாய்ப்பான காலமாக அமைந்தது.

சக்கரவர்த்தியைத் தெய்வமாகக் கருதும் நாட்டில் ஆணவம் கொண்ட அதிகாரிகளின் ஆட்சியில், புரட்சி செய்வது எளிதான செயலன்று. அவிழ்த்துக்கொட்டிய மூட்டையிலிருந்து சிதறியோடும் நெல்லிக்காய்களைப் போல் ஒற்றுமையின்றிப் பிரிந்து கிடந்த மக்களைக் கொண்டு புரட்சி செய்து ஆட்சியைக் கைப்பற்றுவது எப்படி? ஆயினும் அதிகாரிகளின் அலட்சியமும், எங்கும் பரவியிருந்த லஞ்ச ஊழல்களும், அநீதிகளும், வேற்றூர் போராட்டங்களும், நாள்தோறும் நாடு அடைந்து வந்த அவமானங்களும்,பட்டினியும்,பசியும், பஞ்சமும் புரட்சிக்கு வழி வகுத்துவிட்டன. புரட்சியைத் தலைமை வகித்து வெற்றியுடன் நடத்த, இந்தியாவுக்குக் காந்தியடிகள் கிடைத்ததுபோல், சீன நாட்டுக்கு ஸன் யாட் - ஸென் என்ற மேதை தோன்றியிருந்தார்.

## ஸன் யாட் - ஸென்

டாக்டர் ஸன் யாட் - ஸென் (1866-1925) தமது தாயகத்தின் சரித்திரத்தையும், உலக வரலாற்றை

யும் நன்கு அறிந்தவர். அவர் உள்ளம் சீனக் கலைப் பண்பில் ஊறித் திளைத்திருந்தது. சிதைந்து சரிந்து விழுந்துகொண்டிருந்த பழைய சீனுவை அடித்தள மாகக் கொண்டு, ஒளி படைத்த புதிய சீனுவை நிறுவு வதற்காக அவர் தம் வாழ்நாள் முழுவதையும் அர்ப் பணம் செய்தார். 1885-இல் பள்ளிப் பருவத்திலேயே, அவர் மன்னர் ஆட்சியைக் கவிழ்த்துக் குடியரசை அமைக்க வேண்டுமென்று முடிவு செய்திருந்தார். உள் நாட்டு இரகசியச் சங்கங்கள், வெளிநாடுகளில் வசித்து வந்த சீன மக்கள், பள்ளிகள், பத்திரிகைகள், பிரசார கர்கள் மூலம் அவர் இடைவிடாமல் புரட்சிக்கு வேலை செய்து வந்தார். வெளிநாடுகளுடனும் அவருக்கு நேரிடையான அநுபவம் கிடைத்தது. 1895-இல் தென் சீன நகரான காண்டன் நகரில் முதன் முதலாகப் புரட்சிக் கலகம் தோன்றியது. அதிலிருந்து பதினறு ஆண்டுகளில் ஸென் பத்துப் புரட்சிப் போராட்டங்களை நடத்தி வந்தார். இறுதியாக 1911, அக்டோபர் 10-ந் தேதி வூசங் நகரில் பெரும் போராட்டம் தொடங் கிப் பல மாகாணங்களிலும் பரவிற்று. ஒரு மாதத்திற் குள்ளேயே பத்து மாகாணங்கள் மன்னர் ஆட்சியைத் துறந்து தங்கள் சுதந்தரத்தைப் பிரகடனப்படுத்தி விட்டன. நான்கிங் நகரில் டாக்டர் ஸென்னைத் தலைவ ராகக் கொண்ட புரட்சி சர்க்கார் அமைக்கப்பெற்றது. இதன் மூலம் 260 வருட காலமாக நடந்து வந்த மஞ்சூ வமிசத்தாரின் ஆட்சி முடிவுற்று, நாடு முழு தும் விடுதலை யடைந்தது. நாட்டின் மாகாணங்கள் யாவும் சம உரிமை பெற்றன. 1912, ஜனவரி முதல் தேதியில் தேசத் தந்தை டாக்டர் ஸென் அரசாங்கத் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டார். அவருக்கு உறுதுணையா யிருந்துவந்த 'டுங் மெங் ஹுயி' என்ற இரகசியச் சங்கம் 'கோமிண்டாங்' கட்சியாக மாற்றி

அமைக்கப்பெற்றது. கோமிண்டாங் இந்திய தேசியக் காங்கிரஸைப் போன்றது.

பின்னர், அரசாங்கத்திற்கு ராணுவ உதவியும், பல கட்சிகளின் ஆதரவும் இருக்கவேண்டும் என்பதற்காக ஸன்யாட்-ஸென், பழைய சேனாதிபதியான யுவான் ஷி-காய் என்பவரைத் தம்பதவியில் அமர்த்தி வைத்தார். 11-3-1912-இல் சீனக் குடியரசு நிறுவப் பெற்றது. தலைவர் யுவான் பேராசையும், பெரும் பதவி மோகமும் கொண்டவர். 1916 வரை டாக்டர் ஸென் அவரையும் எதிர்த்துப் போராடி வெல்ல வேண்டியிருந்தது. அந்த ஆண்டிலே யுவானும் காலமானார். அவர் இறக்கு முன்பு நூறு நாட்கள் தாமே 'மன்னர்' என்றும் பட்டம் சூட்டிக் கொண்டிருந்தார். இது மட்டுமன்று, முடி துறந்த பழைய சக்கரவர்த்தியை மறுபடி அரியணையேற்றி வைக்கவும் சிலர் வீணாக முயன்றனர்.

சீன மக்களுக்காக டாக்டர் ஸென் போற்றி வந்த தத்துவங்கள் மூன்று. அவை மக்களின் சுதந்தரமான தேசியம், மக்களின் ஆட்சியான ஜனநாயகம், மக்களின் வாழ்க்கை வசதியான ஸோஷலிஸம். இந்தத் தேசியம், ஜனநாயகம், ஸோஷலிஸம் ஆகிய மும்மைத் தத்துவங்களைப் பற்றி அவர் ஒரு நூல் எழுதி வெளியிட்டதுடன், பல பொதுக் கூட்டங்களிலும் அவற்றை விளக்கிப் பேசியிருந்தார். பின்னால் 25 ஆண்டுக் காலத்தில், நாட்டில் யார் எது பேசினாலும் ஸன் யாட்-ஸென்னின் 'மும்மைத் தத்துவங்க'ளை ஆதரித்துப் பேசினால்தான் மக்கள் செவிசாய்த்துக் கேட்பார்கள். அறிவாளரிடையிலும், மக்களிடையிலும் அவை அவ்வளவு ஊறிப் போயிருந்தன.

முதல் தத்துவமான தேசியம்: சீன நாடு பரிபூரண சுதந்தரமுள்ளது, மற்ற எந்தச் சுதந்தர நாட்டுக்கும்

அது சமமானது என்பதோடு, உள்நாட்டிலுள்ள எல்லா வகுப்பினரும், பிரிவினரும் சமமானவர்கள் என்ற கொள்கையும் இதில் அடங்கியிருந்தது.

இரண்டாவது தத்துவமான ஜனநாயகம்: மத்திய அரசாங்கத்தில் மக்களின் ஆட்சியை அமைப்பதோடு இது நின்றுவிடவில்லை. இதன்படி மாகாணங்கள், மாவட்டங்கள், நகரங்களிலும் ஆட்சியில் மக்களுக்குப் பொறுப்பிருக்க வேண்டும். அதிகாரங்கள் ஒரே இடத்தில் குவிந்திராமல் எங்கும் பரவலாக இருக்கவேண்டும்.

மூன்றுவது தத்துவமான சோஷலிஸம்: இது மிகவும் முக்கியமானது. சுவரை வைத்துத்தான் சித்திரம், மக்களை வைத்துத்தான் அரசு. எனவே எல்லா மக்களும் தொழில்கள் செய்யும் வாய்ப்புடன், உணவும், வாழ்க்கை வசதிகளும் பெற இதன்படி உரிமையுண்டு. டாக்டர் ஸென் மக்கள் ஓட்டுச் சாவடிகளுக்குச் சென்று ஓட்டுப் போடுவதுடன் ஜனநாயகம் முடிந்து விடாது என்று கண்டு, இந்த மூன்றுவது தத்துவத்தையும் சேர்த்திருந்தார். ஜனநாயக அரசாங்கத்தின் கடமை மக்களுக்கு ஸோஷலிஸ முறையில் சகல வசதிகளும் கிடைக்கும்படி செய்யவேண்டியதே. ஸன் யாட்-ஸென் கார்ல் மார்க்ஸின் கம்யூனிஸத்தைப் பற்றி நன்கு அறிந்திருந்தார் எனினும், இது அந்தக் கம்யூனிஸமன்று. நாட்டுக்கு ஏற்ற முறையில், தொழில்களுக்குரிய மூலதனத்தை முறைப்படுத்தலும், விளை நிலங்களை விவசாயிகளுக்குச் சமமாகப் பங்கிட்டளித்தலும் இதில் அடங்கும். நாட்டின் உலோகக் கனி வளங்கள்போன்ற இயற்கைச் செல்வங்கள் யாவற்றையும் அரசாங்கம் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். நாடு முழுவதும் பெரிய அளவில் புனர் நிர்மாண வேலைகளை அரசாங்கம் மேற்கொண்டு, எல்லா மக்களுக்கும் சமமான வாழ்க்கை வசதிகளை அளிக்க வேண்டும்.

குடியரசு ஏற்பட்ட பிறகும் நாட்டில் குழப்பங்களும், கலகங்களும் நிகழ்ந்துகொண்டே யிருந்தன. யுவான்ஷி-காயால் குடியரசுக்கு ஆபத்து நேர்ந்து விட்டதால், ஆங்காங்கே போரே தொழிலாய்க் கொண்டிருந்த பிரபுக்கள் தங்கள் கைவரிசைகளைக் காட்டி வந்தனர். கட்சிகளில்லாத தலைவர்களும், தலைவர்களில்லாத கட்சியினரும் அமைதியைக்குலைத்து வந்தனர். இடையில் 1914 இல் நடந்த முதல் உலகப் போரில் சீனாவும் நேச நாடுகளுடன் பலவந்தமாக இணைக்கப் பட்டுப் பல துயரங்களில் ஆழ்ந்தது. யுத்த முடிவிலும் உடன்படிக்கையில் அதற்கு நீதி கிடைக்க வில்லை. ஸன் யாட்-ஸென், தாம் தோற்றுவித்த குடியரசை நிலைநாட்டச் சிறிது காலம் ஜப்பானில் தங்கியும், சிறிது காலம் கான்டன் நகரில் தங்கியும் இடைவிடாது போராடிக்கொண்டே யிருந்தார். 1917-இல் ரஷ்யாவில் வெற்றி பெற்ற பொதுவுடைமைப் புரட்சியையும், அதன் தலைவர்களின் செயல்களையும் அவர் உன்னிப்பாய்க் கவனித்து வந்தார். 1920-ஆம் ஆண்டில் சீனாவிலும் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்று நிறுவப்பெற்றது. கீழை நாடுகளுக்கு ரஷ்யா உறுதுணையாயிருக்குமென்று கண்டு, ஸென் அதனுடன் தொடர்பு வைத்திருந்தார். ரஷ்யாவும் சீன நாட்டில் தான் பெற்றிருந்த பிரதேசங்களையும், விசேட உரிமைகளையும் விட்டுக்கொடுத்தது. இரு நாடுகளுக்கும் வர்த்தகத் தொடர்பு அதிகரித்தது. ரஷ்யாவிலிருந்து மைக்கேல் போரோடின் என்ற கம்யூனிஸ்ட் தலைவர் ஒருவர் ஸன் யாட்-ஸென்னுடைய கோமிண்டாங் கட்சிக்கு அலோசனை சொல்லி உதவிபுரிய அனுப்பப் பெற்ருர். கோமிண்டாங் சீர்திருத்தி அமைக்கப்பெற்று வந்தது. வாம்போவாவில் புதிதாக ஓர் இராணுவக் கலாசாலை ஆரம்பமாயிற்று. நாளடைவில் சீனக் கம்யூனிஸ்ட்

கட்சியும் வளர்ந்து வரவே, டாக்டர் ஸென்னுடைய கோமிண்டாங் கட்சி அத்துடன் ஒத்துழைத்துவந்தது. 1924-ஆம் வருடத் தொடக்கத்தில்கோமிண்டாங்கின் முதல் வருடாந்தரக் காங்கிரஸ் கான்டனில் நடைபெற்றது. அதில் தேசத் தந்தையின் 'மும்மைத் தத்துவங்கள்' ஏற்றுக் கொள்ளப்பெற்றன. அவ் வருட இறுதியில், தேசத்தின் வடபகுதியில் போர் வெறியர்களாயிருந்த பிரபுக்களைக் கண்டு பேசி, தம் கொள்கைகளின்படி சுதந்தரத்தையும், குடியரசையும் நிலைநிறுத்த ஸென் அப்பகுதிக்குச் செல்வதாயிருந்தது. ஆனால் அவர் நோய்வாய்ப்பட்டிருந்ததால், அவ்விருப்பம் நிறைவேறவில்லை. மறுவருடம் மார்ச் மாதம் 12-ந்தேதி, 'சீனு, புரட்சி, சுதந்தரம், அமைதி' என்றே துடித்துக் கொண்டிருந்த அவருடைய இதயத் துடிப்பு நின்றுவிட்டது. அவர் வகுத்த வழியிலே கோமிண்டாங் சரியாகவோ, தவறுகவோ. தீவிரமாக வேலை செய்து வந்தது.

## சியாங் கை-ஷேக்

1926-இல் கோமிண்டாங் சேனையின் சேனுபதியாகச் சியாங் கை-ஷேக் வட சீனப்பிரபுக்களை எதிர்த்து அடக்கிவரச் சென்று, பல வெற்றிகளைப் பெற்றுர். அடுத்த வருடம் தொழிற் பெருக்கமுள்ள ஷாங்கை நகரமும், பழைய தலைநகரான நான்கிங்கும் அவர் வசமாயின. இடையில் கோமிண்டாங் கட்சிக்கும் கம்யூனிஸ்டுகளுக்குமிடையே வேற்றுமைகள் வளர்ந்து கொண்டே வந்தன. நான்கிங்கில் புதிதாக அமைக்கப் பெற்ற தேசிய அரசாங்கம் 1928-இல் சியாங்கைத் தலைவராகத் தேர்ந்தெடுத்துக் கொண்டது.

சியாங் கை-ஷேக் டாக்டர்ஸென்னுடன் நெருங்கிப் பழகியவர்; ரஷ்யாவுக்குச் சென்று ராணுவப் பயிற்சி

பெற்றவர். ஆயினும் அவருக்குப் பொதுவுடைமை யில் பற்றில்லை. சமயம் நேர்ந்த போதெல்லாம் சீனுவை எதிர்த்து வந்த ஜப்பானியரைவிட அவருக்குச் சீனக் கம்யூனிஸ்டுகளிடமே துவேஷம் அதிகம். 'ஜப் பானியர் தோலின்மேல் தொற்றியுள்ள வியாதி; கம்யூ னிஸ்டுகள் இதயத்தைப் பீடிக்கும் வியாதி' என்று அவர் அடிக்கடி கூறுவதுண்டு.

சீனப் பெரு நாட்டை நவீன முறையில் திருத்தி யமைத்தல் எளிய காரியமன்று. எனினும் கோமிண் டாங் கட்சி, சாலைகள் அமைத்தும், பாசனத் திட்டங் களை நிறைவேற்றியும், வேளாண்மையைச் சீர்திருத்தி யும், மத்திய அரசாங்கத்தின் வல்லமையைப் பெருக்கி யும், பெரிய அளவில் வேலை செய்துவந்தது. ஆனல் அக்கட்சியை ஆதரித்து வந்த பலர், பெருஞ்செல்வர் களாயும், மக்களின் பகைவர்களாயும் இருந்தனர். பிரபுக்கள், பண்ணையார்களின் பிடியிலிருந்து விடுதலை கிடைக்காமல், குடியானவர்கள் திணறிக் கொண்டிருந் தார்கள்.

## சீன-ஜப்பானியப் போர்

சீனக்கம்யூனிஸ்டுகள் கோமிண்டாங்குடன் இணைந் தும், சில சமயங்களில் அதை எதிர்த்தும், நாளடை வில் வலிமையுள்ள கட்சியினராக விளங்கி வந்தனர். அவர்களுக்கும் கோமிண்டாங்கின் தேசியவாதிகளுக் கும் பிணக்கு முற்றிக்கொண்டிருந்தது. இரு திறத் தாருக்கும் உள்நாட்டுப் போர் மூளும் நிலையில் 1931-இல் ஜப்பான் சீனுவுக்குச் சொந்தமான 4 லட்சம் சதுர மைல் பரப்புள்ள மஞ்சூரியாவைக் கைப்பற்றி, அங்கே ஒரு பொம்மை அரசை நிறுவிக்கொண்டிருந்தது. அங் கிருந்த 8 கோடி ஏக்கர் விளை நிலங்களும் ஜனப்பெருக் கத்தால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஜப்பானிய

ருக்கு உதவியாயின. கோடிக்கணக்கான இரும்பும் நிலக்கரியும் கிடைக்கக்கூடிய சுரங்கங்களும் அவர்களுக்குக் கிடைத்துவிட்டன. ஜப்பான் இத்துடன் நிற்காமல், சீன நாட்டுக்குள்ளேயும் சிறிது சிறிதாகப் புகுந்து, பெரும் போருக்குரிய வாய்ப்பை எதிர்பார்த்திருந்தது.

1930-இலிருந்தே கியாங்ஸி மாகாணத்தில் கம்யூனிஸ்டுகள் ஒரு ஸோவியத் அரசாங்கத்தை நிறுவி, அதற்குப் படை வீரர்களையும் சேர்த்து வந்தனர். அவர்களுடைய படையில் லட்சத்திற்கு மேற்பட்ட செஞ்சேனை வீரர்கள் இருந்தனர். அந்தப் படையை எதிர்த்துச் சியாங் கை-ஷேக் பன்முறை போராடி வந்தார். 1934-இல் கடைசியாகக் கியாங்ஸி மாகாணத்தைச் சியாங் முற்றுகையிட்டார். அந்நிலையில் கம்யூனிஸ்டுப் படையினரும், தலைவர்களும் அந்த மாகாணத்தை விட்டே வெளியேறி, வடதிசை நோக்கிக் கால்நடையாகப் புறப்பட்டுவிட்டனர். அவர்கள் ஓராண்டுக்காலம் நடந்து சென்று, ஷென்ஸி மாகாணத்தில் யேனன் நகரில் குடியேறினர்.

1937-இல் ஜப்பான் போருக்குரிய விரிவான திட்டத்துடன், ஜூலை 7-ந்தேதி சீனவில் முதல் சண்டையைத் தொடங்கிவிட்டது. இரண்டாவது உலகப் போரை ஹிட்லர் 1939-இல்தான் தொடங்கினர். ஆனல் ஜப்பானியப் போர் ஈராண்டுகட்கு முன்னரே தொடங்கிவிட்டது. 1945-இல் உலகப் போர் முடியும் போதுதான் அதுவும் முடிவுற்றது.

எட்டு ஆண்டுகளாக நடந்த அந்தப் போரின் கொடுமைகள் பலப்பல. நாட்டில் பாதிக்கு மேல் அந்நியர் வசமாகிவிட்டது. லட்சக் கணக்கான மக்களும் படைவீரர்களும் மடிந்து மண்ணுள் மறைந்துவிட்டனர். ஆயினும் அதிலே கோமிண்டாங் கட்சியினரும்

கம்யூனிஸ்ட் கட்சியினரும் சேர்ந்து ஜப்பானியரை எதிர்த்துப் போராடியது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். வல்லரசாகிய ஜப்பானை எதிர்த்ததில் போதிய உணவும், உடைகளும், ஆயுதங்களும் இல்லாத சீனப் போர்வீரர்கள், நாடு நகரங்களையெல்லாம் இழந்து பின்னேறிச் சென்றுகொண்டிருந்த போதிலும், இறுதி வெற்றி தங்களுக்கே என்பதில் அவர்களுக்குச் சந்தேகமேயில்லை. மக்களும் உறுதியோடிருந்தனர்.

சீன மக்களின் துயரங்களைக் கண்டு இந்தியா முழுவதும் அவர்களுக்கு அநுதாபம் காட்டி வந்தது. 1938-இல் பண்டித ஜவாஹர்லால் நேரு பாரிஸ் நகரில் உலகறியக் கூறிய மொழிகள் இவை: 'சரித்திரத்தின் உதய காலத்திலிருந்தே ஆயிரக்கணக்கான பாசங்களால் நம்முடன் பிணைக்கப் பெற்றுள்ள சீன மக்களுடன் ஒத்துழைக்க நாம் தோழமையோடு கரங்களை நீட்டுகிறோம். அவர்களுக்கு ஏற்பட்டுள்ள அபாயங்களில் நாமும் பங்கு கொள்கிறோம். அவர்களுடைய துயரம் நம்மையும் வேதனைப் படுத்துகின்றது. நமக்கு எத்தகைய நன்மையோ தீமையோ ஏற்பட்ட போதிலும், நாமும் அவர்களும் ஒன்றியே நிற்போம்!'

ஜப்பான் ஹிட்லருடன் சேர்ந்து நேசநாடுகளை எதிர்த்துப் போரிட்டதால், இறுதியில் அமெரிக்கா ஹிரோஷிமா, நாகஸாகி என்ற இரு ஜப்பானிய நகரங்களையும் அணுகுண்டுகள் வீசி அழித்துவிட்டது. 1945, ஆகஸ்டு 11-ந்தேதி ஜப்பான் சரணடையும்வரை, அந்நாட்டில் பெரிய நகரங்களும், துறைமுகங்களுமாக 88 நகரங்கள் குண்டுகளால் எரிந்து சாம்பராகிக் கிடந்தன.

போர் முடிவில் சீனா தான் இழந்த பிரதேசங்கள் யாவற்றையும் ஜப்பானிடமிருந்து திரும்பப் பெற்றுக் கொண்டுவிட்டது.

## சீனக் கம்யூனிஸம்

அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குக் கீழ்த்திசையில் கம்யூனிஸம் பரவிவிடக் கூடாதே யென்ற கவலை எப்பொழுதும் உண்டு. சீனக் கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கையும், படை வலிமையையும், போர்த்திறனையும் கண்டு, அவர்களை எதிர்ப்பதற்காக அது சியாங் தலைமையில் கோமிண்டாங் கட்சிக்குப் பொன்னும் பொருளும் கொடுத்து உதவி வந்தது. போரில் மஞ்சூரியாவில் வெற்றி கொண்ட ரஷ்யா அதைத் தன் பாதுகாப்பில் வைத்திருந்தது. போர் நின்றவுடன் அது அந்நாட்டைச் சியாங் கை-ஷேக்கிடமே ஒப்படைத்துவிட்டது. சீனக் கம்யூனிஸ்டுகளைவிட சியாங்கே நாட்டைக் கட்டியாள முடியுமென்று அப்போது ஸோவியத் சர்வாதிகாரியா யிருந்த ஸ்டாலினும் கருதியது வியப்பான செய்தியாகும். ஆனல் மஞ்சூரியாவைச் சியாங்குக்குக் கொடுத்த மார்ஷல் ஸ்டாலின், ஜப்பானியரிடமிருந்து கைப்பற்றியிருந்த ஏராளமான ஆயுதங்களையும் தளவாடங்களையும் கம்யூனிஸ்டுக் கட்சிக்குத் தாராளமாகக் கொடுத்துதவினர்.

அளவுக்கதிகமான ஆயுதங்களைப் பெற்றிருந்த கம்யூனிஸ்ட் கட்சியினர் கோமிண்டாங்கை எதிர்த்தனர். கடுமையான உள்நாட்டுப் போர் தொடங்கிவிட்டது. கோமிண்டாங்குக்கு அமெரிக்கா பொருளையும் போர்க்கருவிகளையும் வாரி வழங்கிக் கொண்டேயிருந்தது. கோமிண்டாங் கட்சிக்கு மக்களின் ஆதரவு குறைந்துகொண்டே வந்ததையும், ஆட்சியிலும், படைவீரர்களிடையிலும் ஊழல்கள் மலிந்திருப்பதையும் கண்ட தளபதி மார்ஷல் முதலிய தளபதிகள் சொல்லியும்கூட, அமெரிக்கா தன் உதவியை நிறுத்தவில்லை.

கீழ்த் திசையில் கம்யூனிஸத்தை வளரவிடாமல்

ஒடுக்குவதற்குச் சீன நாட்டுக்குப் போர் விமானங்களை யும், வெடிகுண்டுகளையும், வேறு கொலைக்கருவிகளையும் அனுப்பிக் கொண்டிருப்பதில் பயனில்லை யென்று தொன்று தொட்டே பேர்ல் பக் என்ற புகழ்பெற்ற அமெரிக்க ஆசிரியை கூறிவந்தார். பசியும் பஞ்சமும் மிகுந்த இடத்திலேயே கம்யூனிஸம் வேரூன்றித் தழைக் கும் என்றும், போர்க் கருவிகளுக்குப் பதிலாக, விவசா யத்தை விருத்தி செய்ய இயந்திரக் கலப்பைகளையும், மற்றும் பல கருவிகளையும் அனுப்பிவர வேண்டு மென்றும் அவர் தம் கட்டுரைகளின் மூலம் விளக்கினார். சீனாவை நன்கறிந்திருந்த வேறு சிலரும் அதே கருத்துக் களைக் கூறிவந்தனர். ஆனால் அமெரிக்கா கவனிக்க வில்லை. இருபதாம் நூற்றாண்டில் அமெரிக்கா இது வரை கையாண்டு வந்த கீழ்த்திசைக் கொள்கையே தகர்ந்து கொண்டிருந்தது. அமெரிக்கா கோமிண் டாங்குக்கு அளித்துவந்த ஆயுதங்கள் கம்யூனிஸ்டுப் படையினருக்கே போய்ச் சேர்ந்தன. கோமிண்டாங் சிப்பாய்கள் அவைகளை எதிரிகளுக்கு விற்பதும் வழக்க மாயிற்று. கம்யூனிஸ்டுகள் தங்களை எதிர்த்து வரும் தளபதிகளுக்கு லஞ்சம் கொடுத்து, அவர்களுடைய படைகளையும், படைக்கலன்களையும் அப்படியே பெற்றுக் கொண்டுவந்தனர். சியாங் தம்மளவில் தூய வராயிருந்தாலும், தமக்கு உதவியாக இருந்த மந்திரி களும், உறவினர்களும், அதிகாரிகளும், சுயநலப் புலி களாகச் சொத்துக்கள் சேர்த்து வந்ததையும், மக்கள் பட்டு வந்த அவதிகளையும் நிறுத்த அவரால் முடிய வில்லை. கோமிண்டாங் கட்சியையும், அரசாங்கத்தை யும் ஊழல்கள் உள்ளூற அரித்துவிட்டன.

ஆனால் கம்யூனிஸ்டுக் கட்சியினரும் செஞ்சேனையும் நாள்தோறும் வளர்ந்து உரம் பெற்றுவந்தனர். சுமார் முப்பது ஆண்டுக் காலத்திற்குள், அவர்களுக்கு எத்தனை

இடையூறுகள் ஏற்பட்ட போதிலும், அவர்கள் வளர்வதற்குரிய வாய்ப்புக்களும் ஏராளமாகக் கிடைத்தன. ஜப்பானியப் போரில் அவர்களே முன்னணியில் நின்றனர். கோமிண்டாங் படைகளையும், சேனபதி சியாங் கை-ஷேக்கையும் தளரவிடாமல், அயரவிடாமல், அவர்களே ஊக்குவித்து வந்தனர். அவர்களுக்குச் சிந்தனைத் தெளிவும், செயல் திறனும், நெஞ்சுறுதியும் பெற்ற தலைவர்களும் இருந்தனர். 'சீன நாட்டு லெனின்' என்று கூறப் பெற்ற மாஸே-துங், சேனைகளைச் சேர்த்து நடத்துவதில் தேர்ந்த சூ-தேஹ், கம்யூனிஸ்டுக் கட்சியும் கோமிண்டாங் கட்சியும் இணைந்து செயலாற்றச் செய்துவந்த சூ என்-லாய் முதலியோர் அத்தலைவர்களில் முக்கியமானவர்கள்.

அரசாங்கத்தைக் கைப்பற்றி நாட்டிலே தங்கள் ஆட்சியை நிறுவத் தக்க சமயம் வந்துவிட்டதை அறிந்த கம்யூனிஸ்டுகள், படைகளுடன் எங்கும் பரந்து சென்றனர். நான்கு ஆண்டுகளில் அவர்கள் 80 லட்சம் எதிர்ப்படையினரை அடக்கியும், அழித்தும் வெற்றி கொண்டார்கள். போராட்டம் இல்லாமலேயே பற்பல நகரங்கள் அவர்களுக்குக் கிடைத்துவிட்டன. 1840 முதல் நூறு ஆண்டுகளுக்கு மேலாகப் போர்களாலும், புரட்சியாலும், கலகங்களாலும் அல்லலுற்றுத் தவித்துவந்த மக்கள் அவர்களை ஆவலோடு வரவேற்க முற்பட்டனர்.

சீன நாட்டின் புகழ்பெற்ற பழைய தலைநகரான பீகிங்கில் 1949, அக்டோபர் முதல் தேதியன்று மாஸே-துங்கின் தலைமையில் சீனாவின் 'மக்கள் குடியரசு' (The People's Republic of China) நிறுவப்பெற்றது. சூ என்-லாய் பிரதம மந்திரியாகவும், வெளிநாட்டு மந்திரியாகவும் நியமனம் பெற்றார்.

சீன மக்களின் பிரதிநிதியாகக் கம்யூனிஸ்டுகளின்

தலைமையில் புதிய மக்கள் குடியரசு ஏற்பட்டுவிட்டது. உடனே ஸோவியத் ரஷ்யா அதை அங்கீகரித்தது. அடுத்தாற்போல், ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகளான பல்கேரியா, ருமேனியா, ஹங்கேரி, செக்கோஸ்லோவேகியா, போலந்து, கிழக்கு ஜெர்மனி, அல்பேனியா ஆகியவையும், கொரியா, மங்கோலியா, வியட்னுமும் அதற்கு அங்கீகாரம் அளித்தன. இந்தியா, பர்மா, இந்தோனீஷியா, பாகிஸ்தான், டென்மார்க், ஸ்விட்சர்லாந்து, ஃபின்லந்து நாடுகள் அதனுடன் ஸ்தானிக உறவுகள் கொண்டன. இங்கிலாந்து, இலங்கை, நார்வே, இஸ்ரயேல், ஆப்கானிஸ்தான், ஹாலந்து நாடுகளும் அதையே சீன அரசாங்கமாக ஏற்றுக்கொண்டன.

சீனுவில் கம்யூனிஸ்டு அரசாங்கம் ஏற்பட்டது உலக ஸோஷலிஸத்தின் மூன்ருவது பெரிய வெற்றியென்று கம்யூனிஸ்டுகள் பாராட்டுகின்றனர். ரஷ்யாவில் 1919-ஆம் வருடம் புரட்சியின் பயனுக ஸோவியத் அரசாங்கம் அமைக்கப்பெற்றது முதல் வெற்றி; ஹிட்லருடைய பாஸிஸ்டுப் படைகளை இரண்டாவது உலகப்போரில் முறியடித்தது இரண்டாவது வெற்றி; பீகிங்கில் மக்கள் குடியரசு அமைந்தது மூன்ருவது வெற்றி.

நிலைமை முற்றிவிட்டதை யறிந்த சியாங் கை-ஷேக், 1949, டிஸம்பர் 8-ந்தேதி ஃபர்மோஸா தீவுக்குச் சென்றுவிட்டார். அவரைத் தொடர்ந்து 6 லட்சம் படையினரும், 10 லட்சம் சீன அகதிகளும் அங்கே குடியேறினர். அங்கேயே அவர் தமது சீனத் தேசிய சர்க்காரையும் அமைத்துக்கொண்டார். ஃபர்மோஸா 13, 810 சதுர மைல் பரப்புள்ள அழகான தீவு. இது சீனுவுக்குத் தென்கிழக்கில் நூறு மைல் தூரத்திலுள்ளது. இதில் ஏராளமான மலைத்தொடர்கள் உள்ளன.

இதன் பூர்வ குடிகள் ஒன்றரை லட்சம் பேர்கள்; ஜனத்தொகை ஒரு கோடி. இங்கு முக்கியமாக நெல் லும் கரும்பும் பயிர் செய்யப்பெறுகின்றன; கர்ப்பூர மரங்களும் அதிகம்; உலோகச் சுரங்கங்களும் மிகுதி யாக உண்டு. இங்கு டைபே தலைநகரில் சியாங் தங்கி யிருக்கிறார். அவருக்குப் பக்கபலமாக அமெரிக்காவின் ஆதரவும் கடற்படையும் உள்ளன.

## கம்யூனிஸ்ட் சீனு

'சீனுவின் புரட்சி (ரஷ்யாவின்) பெரிய அக்டோபர் புரட்சியின் தொடர்ச்சியாகும். மா பெரும் அக்டோபர் புரட்சி மானிட சரித்திரத்தின் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்து, உலகத்தின் தோற்றத்தையே மாற்றத் தொடங்கியது .....சீனப் புரட்சியின் வெற்றி உலகின் தோற்றத்தை மேலும் மாற்றிவிட்டது...புதிய சீனு ஸோவியத் யூனியனைத் தலைமையாகக் கொண்ட ஸோஷலிஸ்ட் முகாமைச் சேர்ந்தது. ஸோவியத் யூனியனும், சீனுவும், மற்ற ஸோஷலிஸ்ட் நாடுகளும் ஒற்றுமையும் நேசப்பான்மையுமுள்ள பெரிய ஸோஷலிஸ்ட் குடும்பமாக அமைந்துள்ளன. ஐரோப்பாவிலும், ஆசியாவிலும் தொடர்ச்சியான மிகப் பெரிய நிலப்பரப்பில் உலக மக்களில் மூன்றில் ஒரு பகுதியினரைக் கொண்டது இக் குடும்பம்.'

—லியு ஷௌ - சி

---

**'மக்கள் குடியரசு'**

16 ஆண்டுகளாகச் சீனுவில் கம்யூனிஸ்ட் ஆட்சி நடந்துவருகின்றது. சீன அரசாங்கத்தை 'மக்கள் குடியரசு' என்று சீனக் கம்யூனிஸ்ட் கட்சி கூறுகின்றது. ஆட்சி முறைக்குப் பெயர் 'ஜனநாயக சர்வாதிகாரம்' (democratic dictatorship). உலகம் முழுதும் ஜனநாயகம் வேறு, சர்வாதிகாரம் வேறு என்றும், ஒன்றுக்கொன்று நேர் எதிரானது என்றும் கருதப்படும். சீனுவில் நடப்பது கம்யூனிஸ்ட் கட்சியின் சர்வாதிகார ஆட்சியானுலும், அதில் ஜனநாயகத்திற்கும்—அல்லது

மக்களின் ஆட்சிக்கும்—சிறிது இடமளிக்கப்பட்டிருப்ப தாகக் காட்டுவதற்கு 'ஜனநாயகம்' என்று சொல்லு கின்றனர் போலும்! 'சீன ஜனநாயக லீக், கோமிண்டாங் புரட்சிக் கமிட்டி முதலிய எட்டுச் சிறு கட்சிகளுக்கும் கம்யூனிஸ்ட் ஆட்சியில் இடம் கொடுக்கப்பட்டிருக்கின் றது. இவைகளின் உறுப்பினர்களும் குறைவு; இவை களின் செல்வாக்கும் அற்பம். 1957-58-இல் இவை களில் முதன்மையான அங்கத்தினர்கள் கம்யூனிஸ்ட் ஆட்சியின் குறைகளை எடுத்துச் சொன்னதற்காக மேலும் அடக்கப்பட்டனர்.

கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தை உருவாக்கி உலகுக்கு அளித்த ஜெர்மானிய அறிஞர் கார்ல் மார்க்ஸ் எதையும் மூடி மறைக்காமல் அப்பட்டமாக எழுதி வைத்திருக் கிறார். அவருடைய சித்தாந்தத்தைச் செயலில் நடத் திக் காட்டிய ரஷ்யத் தலைவர் லெனினும் சொற்களில் ஐயம், திரிபு, புரட்டுக்கு இடமில்லாமல் பச்சை பச்சையாகவே எழுதியுள்ளார். ஆனால் சீனக் கம்யூ னிஸ்ட் கட்சி மட்டும் புதிது புதிதாகச் சொல்லடுக்கு களை உண்டாக்கி, மக்களையும், பிற நாட்டார்களையும் திகைக்க வைக்கின்றது. அது 'மக்கள் குடியரசு' என் பது 'கம்யூனிஸ்ட் கட்சியின் சர்வாதிகாரம்' ஆகும். அது 'காலனிகளுக்கு உதவி' என்பது 'காலனி நாடு களில் தான் தலையிட்டுக் குழப்பமும் கலகமும் உண்டாக் குதல்' என்று பொருள்படும். 'நாடுகளின் விடுதலை' என்பதை 'நாடுகளின் மீது சீனப் படையெடுப்பு' என்று கொள்ளவேண்டும்.

சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் சரித்திரம் ஒரு பெரிய இதிகாசம் போன்றது. அதைத் தோற்றுவித்த தலைவர் களே இப்போதும் தலைமையில் இருந்து அதை நடத்தி வருகின்றனர். கட்சியின் தலைவர் மாஸே-துங்; அவ ருக்கு வலது கரமாகவும் இடது கரமாகவும் இருப்

பவர்கள் லியு ஷௌ-சியும், சூ என்-லாயும். நாற்பது ஆண்டு கட்கு மேலாக இவர்களும் மற்றும் பல தலைவர்களும், பலபோராட்டங்கள் புரிந்து,பல இயக்கங்கள் நடத்தி, லட்சக் கணக்கான உயிர்களைத் தியாகம்செய்து, கட்சி வெற்றி பெறச் செய்தார்கள். போர், போராட்டம், உதிரப் பெருக்கு, இயக்கம், எதிர்ப்பு, பிரசாரம், சமாதானம், ஒத்துழைப்பு முதலியவையெல்லாம் இவர்கள் நாள்தோறும் பழகியவை. இவர்களுடைய முதல் நோக்கம் சீனு முழுவதிலும் கம்யூனிஸ்ட் ஆட்சியை நிறுவி நிலை நிறுத்துவது. அதில் பூரண வெற்றியும் பெற்றுவிட்டார்கள்.

மாஸே-துங்கும் தோழர்களும் கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தை நன்கு அறிந்தவர்கள். அதாவது கார்ல் மார்க்ஸின் தத்துவங்களையும், அத்தத்துவங்களைக் காலத்திற்கும் நாட்டிற்கும் ஏற்ற முறையில் நிறைவேற்றிக் காட்டிய லெனினுடைய விளக்கங்களையும் நன்ருகக் கற்றவர்கள். லெனினுக்கு அடுத்தாற்போல் ரஷ்ய சர்வாதிகாரியா யிருந்து 1953-இல் காலமான ஸ்டாலினுக்குப் பின்னுல், இப்போது கம்யூனிஸ்ட் சித்தாந்தத்திற்கு விளக்கம் கேட்க வேண்டுமானுல், சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்களிடம்தான் கேட்க வேண்டுமென்ற அளவுக்கு இவர்கள் கொள்கைப் பிடிப்புடையவர்கள். ஆயினும் தத்துவ வாதிகளான மாஸே-துங்கும் அவருடைய தோழர்களும் தலைசிறந்த காரிய வாதிகள், செயல் திறன் படைத்தவர்கள். இனிய பேச்சினுல் அவர்களை ஏமாற்ற முடியாது. பன்முறை சிந்திக்காமல் அவர்கள் ஒரு முடிவுக்கு வருவதில்லை. அவர்கள் எதிலும் வினைத்திட்ப முடையவர்கள், வினைத்திட்பம் என்பது அவர்கள் மனத்திட்பமே. அவர்கள் குடியரசு நிறுவிய நாள் முதலே இந்த உறுதியை உலகம் கண்டு வருகின்றது.

புதிதாக ஓர் அரசு ஏற்பட்டால், அது பிற நாடுகளின் ஒப்புதலைப் பெறவேண்டும். சீனக் குடியரசு தோன்றியபின், கம்யூனிஸ்ட் தலைவர்கள் பெயரளவில் பிற நாடுகளின் வெறும் அங்கீகாரத்தை மட்டும் கோரவில்லை. எந்தெந்த நாடுகள் சீனாவுக்குரிய நிலப்பகுதிகளையோ, நகரங்களையோ தம் வசம் வைத்திருக்கின்றனவோ, அந்த நாடுகள், அந்தப் பிரதேசங்களின் உரிமையைச் சீனாவுக்கு விட்டுக்கொடுத்த பிறகே, சீன மக்களின் குடியரசை அங்கீகரிக்க வேண்டும் என்று கோரினர். முன்பு எக்காலத்திலாவது சீன ஆதிக்கியம் நிலவி வந்திருக்கும் நாடுகளையோ, இடங்களையோ, பின்பு மறுபடி தாங்கள் பிடித்துக்கொள்ள வேண்டும் என்பதும் அவர்களின் உறுதி.

## ஸோஷலிஸ்ட் முகாமும் ஜனநாயக முகாமும்

சீனாவில் கம்யூனிஸ்ட் குடியரசு ஏற்பட்டதிலிருந்து அதன் விளைவுகள் என்னவென்பதை உலகம் கவனிக்க வேண்டி யிருக்கின்றது. முதல் விளைவு உள்நாட்டில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சி என்னென்ன திட்டங்களை நிறைவேற்றி வருகின்றது என்பதைப் பொறுத்தது. இரண்டாவது விளைவு மற்ற உலக நாடுகளைக் கம்யூனிஸ்ட் சீனா எவ்விதம், எந்த அளவுக்குப் பாதிக்கின்றது என்பதாகும். ஸோவியத் ரஷ்யாவும், அதன் ஆதரவு பெற்ற கிழக்கு ஐரோப்பிய நாடுகள் சிலவும் ஸோஷலிஸ்ட் முகாமைச் சேர்ந்தவை. அவற்றுடன் 65 கோடி ஜனத் தொகையுள்ள சீனாவும் 1949 முதல் சேர்ந்துவிட்டது. எனவே உலகின் நிலப் பரப்பில் நான்கில் ஒரு பகுதியில், உலகின் ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பகுதியினரைக் கொண்ட நாடுகள் ஸோஷலிஸ்ட் முகாமைச் சேர்ந்திருக்கின்றன. எஞ்சியுள்ள பல நாடுகள் ஜனநாயக ஆட்சி முறையை மேற்

கொண்டவை. ஆகவே இன்றைய உலகம் ஜனநாயக முகாம், ஸோஷலிஸ்ட் முகாம் என இரண்டு முகாம்களாகப் பிரிந்திருக்கின்றது. ஸோஷலிஸ முகாமுக்குத் தொழில் உற்பத்தியில் தழைத்தோங்கும் வல்லரசான ஸோவியத் ரஷ்யா தலைமை வகித்திருக்கின்றது; ஜன நாயக முகாமுக்குத் தொழில் உற்பத்தியில் முதன்மையாயுள்ள வல்லரசான அமெரிக்க ஐக்கிய நாடு தலைமையாக நிற்கின்றது.

இரண்டு முகாம்களுக்கும் வேற்றுமைகளும் அதிகம். ஸோஷலிஸ்ட் முகாமில் ஒற்றுமை அதிகம்; எல்லா நாடுகளும் ஒரே லட்சியம், ஒரே சித்தாந்தத்தைக் கொண்டவை. ஜனநாயக முகாமில் பெரிய வல்லரசுகள், முதலாளித்துவ முறையிலே முழு நம்பிக்கையுள்ள நாடுகள், தொழில் உற்பத்தியில் பின்தங்கிய நாடுகள், புதிதாகச் சுதந்தரம் பெற்ற நாடுகள், ஸோஷலிஸப் பாணியில் பெருந் தொழில்களையும், தனி மனிதர் முயற்சியில் மற்றைத் தொழில்களையும் நடத்திவரும் நாடுகள் ஆகிய பலதிறப்பட்ட நாடுகள் இருக்கின்றன.

ஸோஷலிஸ்ட் முகாமில் இரண்டாவதான சீனு தொழில், வாணிபம், படைவலி ஆகியவற்றில் முன்னேறிப் பெரிய வல்லரசாக விளங்குகின்றது. ஆதிக்கியம் பெற்ற பத்து ஆண்டுகளுக்குள் கம்யூனிஸ்ட் கட்சியின் மாபெரும் சாதனைக்கு உறுதுணையாயிருந்தவை கட்சியின் உறுதியும், சர்வாதிகாரமும், 'கான் பூக்கள்' என்று சொல்லப்பெறும் தொண்டர் படையினரும், நாட்டின் நிலைமையும், மக்களின் உற்சாகமும். விவசாயத்தை விரைவில் விருத்தி செய்யவேண்டும், தொழில்களை விரைவில் வளர்க்கவேண்டும், முதன்மையான உலக வல்லரசுகளில் சீனுவும் ஒன்ருக நிற்கும்படி செய்யவேண்டும் என்று மக்கள் ஆசைகொண்டு, ஆவே

சத்துடன் வேலைகளில் ஈடுபட்டுள்ளனர். இந்த ஆசையைக் காட்டுவதும், ஆவேச முண்டாக்குவதும், அரசாங்க வல்லமையால் கட்டாயப்படுத்தி வேலை செய்யத் தூண்டுவதும் கம்யூனிஸ்ட் கட்சியின் வேலைகள்.

## மார்க்ஸும் மாஸே-துங்கும்

கம்யூனிஸ்ட் புரட்சியில் ஈடுபட்ட ரஷ்யாவுக்கும் சீனாவுக்கும் பல வேற்றுமைகள் உண்டு. ரஷ்யா பின் தங்கிய நாடாக இருந்த போதிலும், அங்கு ஜார் சக்கரவர்த்தி காலத்திலேயே இயந்திரத் தொழில்கள் சில இருந்தன. முதல் உலகப் போரின் இறுதியில், படைவலி குறைந்து, ஆட்சி தளர்ச்சியுற்று வருகையில், லெனின் தலைமையில் புரட்சி தோன்றிற்று. 1917-இல் நேரடியாகப் புரட்சி செய்து முடியாட்சியைக் கவிழ்த்துவிட்டு, கம்யூனிஸ்ட் கட்சியின் சர்வாதிகாரத்தை அங்கே அமைக்க முடிந்தது. சீனாவிலோ, ஷாங்கை போன்ற இரண்டோரிடங்களைத் தவிர, நாடெங்கிலும் பெருந்தொழில் எதுவுமில்லை. எனவே கம்யூனிஸ்ட் புரட்சிக்கு ஆதாரமாக விளங்க வேண்டிய ஆலைத் தொழில்கள் அதிகமாயில்லை. 1911-இலேயே தேசியப் புரட்சியில் முடியாட்சி ஒழிக்கப்பட்டு விட்டது. தேசிய அரசாங்கத்தையும், மாகாணங்களில் பெரும்படைகளுடன் விளங்கிய பிரபுக்களையும் எதிர்த்தே போராட வேண்டியிருந்தது. ரஷ்யப் புரட்சிக்குப் பின் 30 ஆண்டுகள் கழித்தே சீனப் புரட்சி ஏற்பட்டது. அந்த இடைக்காலத்தில் ரஷ்யாவில் அபரிமிதமான முன்னேற்றங்கள் ஏற்பட்டிருந்தன. சீனா கோடிக் கணக்கான மக்களின் உடல் வலிமையைத் தவிர வேறு கருவிகள் எதுவுமில்லாமல் இருந்தது. ஆனால் அந்த மக்களின் வலிமையோ ரஷ்யர்களைவிட நான்கு மடங்கு கூடுதலாக இருந்தது.

கார்ல் மார்க்ஸின் கருத்துப்படி, இயந்திரத் தொழில்கள் பெருகியுள்ள நாடுகளிலேதான் கம்யூனிஸ்ட் புரட்சி எளிதில் ஏற்பட முடியும். உடல் வலிமையைத் தவிர வேறு கதியில்லாத கோடிக்கணக்கான தொழிலாளர்கள் முதலாளித்துவ முறையில் அமைந்த தொழிற்சாலைகளில் கூலிக்கு வேலைசெய்து, களைத்து, நொந்துபோ யிருக்கையில் புரட்சிப் படைக்கு அவர்களே மிகவும் ஏற்றவர்கள். புரட்சியால் அவர்கள் தங்களைப் பிணித்துள்ள விலங்குகளைத் தவிர வேறு எதையும் இழக்கப் போவதில்லை என்று மார்க்ஸ் கூறியுள்ளார். வீடு, நிலம், சொத்து, சுகம் ஏதாவது இருந்தால்தானே அவர்கள் கவலைப் படவேண்டும்! மேலும், அவர்களை ஆயிரக் கணக்கில் ஒவ்வொரு தொழிற்சாலையிலும் ஒன்று சேர்த்து வைத்துப் போராட்டத்திற்கு வசதி செய்திருப்பதும் முதலாளித்துவமே. தொழிற் சங்கங்களின் மூலம் அவர்கள் ஐக்கியப்படுகிருர்கள்; வேலை நிறுத்தங்களின் மூலம் அவர்கள் தங்கள் வல்லமையை உணர்கிருர்கள். வேலை நிறுத்தங்களே அவர்களுடைய போராட்டப் பயிற்சிகள். தொழிலாளர்கள் தலைமையில், சொந்தத்தில் நிலமில்லாமல் கூலிக்காக விவசாயம் செய்யும் கோடிக் கணக்கான குடியானவர்களும் சேருவார்கள். தொழிலாளர்களைப்போல் குடியானவர்கள் அதிதீவிரப்புரட்சியாளர்களாக விளங்க மாட்டார்கள். நாட்டுப் புறங்களில் ஒதுங்கி மண்ணை உழுதுகொண் டிருக்கும் அம்மக்கள் பலவிதமான மூட நம்பிக்கைகள் கொண்டிருப்பார்கள். ஆயினும் அவர்களையும் சேர்த்துக்கொண்டு தான் புரட்சி செய்யவேண்டும் என்பதை மார்க்ஸ் வற்புறுத்தி யிருக்கிருர். சீனுவில் தொழிலாளர்களுக்குப் பதிலாகப் பெரும்பாலும் கோடிக் கணக்கான குடியானவர்களைக் கொண்டே மாஸே-துங் புரட்சியை

நடத்த வேண்டியிருந்தது. ஆயினும் அப்படியும் செய்து வெற்றி பெறலாம் என்று அவர் துணிந்து திட்டம் வகுத்தார். பெரிய நகரங்களில் புரட்சி செய்து பிறகு நாட்டுப் புறங்களைப் கைப்பற்றுவது முன்பு வழக்கம். ஆனால் சீனாவில் ஒதுங்கிக் கிடந்த நாட்டுப் புறங்களை முதலில் வசப்படுத்திக்கொண்டு, பின்னால் தக்க சமயம் வந்ததும், கம்யூனிஸ்ட் கட்சி பயிற்சி பெற்ற குடியானவர் படைகளால் நகரங்களைச் சூழ்ந்துகொண்டது.

புரட்சியில் ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சிக்குத் தனிப் படை இல்லை. புரட்சியில் வெற்றி பெற்ற பிறகே அங்குச் செஞ்சேனை நிறுவப் பெற்றது. ஆனால் சீனாவில் ஆரம்பம் முதலே கம்யூனிஸ்ட் கட்சி செஞ்சேனையைப் பெற்றிருந்தது. அக்கட்சியின் சண்டைகளில் பெரும் பாலானவை வெறும் இராணுவப் போராட்டங்களாகவே இருந்தன. போராடிய வீரர்கள் கம்யூனிஸத்தில் ஓரளவு ஆர்வம் கொண்டிருந்திருக்கலாம்; ஆனால் அவர்கள் தொழிலாளரின் புரட்சிப் படையினர் அல்லர். இப்படிப் படைகளை வைத்துக்கொண்டு பல்லாண்டுகள் கொலைத் தொழில் செய்து கம்யூனிஸத்தை அமைக்கும் முறையை மார்க்ஸ் கூறவில்லை. மாஸே-துங்கே அதைக் கண்டுபிடித்தவர். அவர் வெற்றியும் பெற்றுவிட்டதால், அதுவும் சரிதான் என்றாகி விட்டது. கரடி கற்றவன் இடறி விழுந்தால், அதுவும் ஒரு வரிசை தானே!

விவசாய நிலங்கள், உலோகக்கனிகள், மூலாதார மான இயந்திரத் தொழிற்சாலைகள் முதலியவைகளைத் தனிப்பட்டவர்கள் கைகளில் விடாமல் சமுதாயத்தின் உடைமைகளாக வைத்துக்கொள்வது ஸோஷலிஸ முறை. இதை ஜனநாயக முறையிலேயும் அமைத்துக் கொள்ள முடியும். இதைப் பலாத்காரப் புரட்சியின்

மூலம் பெற்று, முதலாளித்துவ அரசாங்கத்தைத் தகர்த்தெறிந்து விட்டு, தொழிலாளர் குடியானவரின் சர்வாதிகாரத்தை நிலை நாட்டி, எதிர்ப்புக்கள் அனைத்தையும் ஒழித்துவிடுதல் கம்யூனிஸ்ட் முறை. தொடக்கத்தில் எல்லா மக்களுக்கும் வேலை கிடைக்கும்; வேலைக்குத் தக்க கூலிக்கும் உறுதியளிக்கப்படும். ஆனால் கம்யூனிஸத்தின் இறுதி லட்சியம் ஒவ்வொருவரின் திறமைக்குத் தகுந்த வேலை, ஒவ்வொருவரின் தேவைக்குத் தகுந்த ஊதியம் கிடைக்கவேண்டும் என்பது. இந்த இலட்சியம், 48 ஆண்டுகளாகியும், இன்றுவரை ரஷ்யாவிலேயே நிறைவேறவில்லை; ரஷ்யா இந்த இலட்சியத்தை நோக்கியே போய்க்கொண்டிருக்கின்றது. புதிதாகப் புரட்சி செய்த சீனுவில் இது ஏற்படுவதற்கு இன்னும் எவ்வளவோ காலமாகும். இந்த நிலை ஏற்பட வேண்டுமானுல், மின்சாரம், நீராவி, அணுச்சக்தி முதலிய இயற்கைச் சக்திகளின் உதவிகொண்டு தொழில்களெல்லாம் மிக மிக நவீன முறையில் வளர்ந்தோங்க வேண்டும். விளை பொருள்களும், ஆலைப் பொருள்களும் மலை மலையாக உற்பத்தியாகிக் குவியவேண்டும். பொருள்களின் பெருக்கத்தைக் கொண்டுதான் மக்கள் அனைவருக்கும் தேவைக்குத் தகுந்த அளவு பகிர்ந்து அளிக்க முடியும். இந்தியாவில் ஸோஷலிஸத்தைப் பற்றி முன்பு பேசிய காலத்தில், உள்நாட்டு மந்திரியாயிருந்த ஸர்தார் வல்லபாய் பட்டேல், நாம் பொதுவில் பகிர்ந்து கொள்ளக்கூடிய பொருள் வறுமை ஒன்றுதான் இருக்கிறது என்று கூறினுர். அபரிமிதமாகப் பொருள்களை உற்பத்தி செய்து குவிக்காமல், ஸோஷலிஸம், கம்யூனிஸம் பற்றிப் பேசுவதில் பயனில்லை. ஆனுல் பெரும் அளவுக்கு உற்பத்தியைப் பெருக்குவதற்கும் ஸோஷலிஸம் அல்லது கம்யூனிஸம் தேவை. முதலாளித்துவ

முறை மக்களின் உற்பத்திச் சக்தியை வளரவிடாமல் அடக்கி வைத்திருக்கின்றது. தேங்கிக் கிடக்கும் அந்தச் சக்தியைப் பயன்படுத்திக்கொள்ளக் கம்யூனிஸத்தால்தான் முடியும் என்று மார்க்ஸ் எடுத்துக் காட்டியுள்ளார். முதலாளித்துவ முறை தொழில்களை ஓரளவுக்குமேல் வளர்ப்பது அவசியமில்லை. பழைய துருப்பிடித்த கருவிகளைக் கொண்டே முதலாளிகள் பல்லாண்டுகள் உற்பத்தி செய்துகொண்டிருப்பார்கள். எந்தப் பொருளை, எந்த அளவுக்கு உற்பத்தி செய்தால் தங்களுக்கு ஆதாயம் அதிகம் கிடைக்கும் என்பதே அவர்கள் நோக்கமாயிருக்கும். மக்களின் தேவை...ப் பற்றியோ, மக்கள் அனைவருடைய ஆற்றலையும் பயன்படுத்திக் கொள்வது பற்றியோ அவர்களுக்கு அக்கறை இராது. கம்யூனிஸ்ட் சர்வாதிகார முறையில்தான் பெரிய அளவில் தொழிற்சாலைகளில் உற்பத்திகளைப் பெருக்க முடியும்; நிலங்களில் விளைபொருள்களைப் பெருக்க முடியும்; வேலையில்லாமையை நீக்க முடியும்.

இந்த முறையில் கம்யூனிஸ்ட் சீனாவின் முதல் வேலை உயர்தரமான நவீனத் தொழிலுற்பத்தி, நவீன விவசாயம், நவீன விஞ்ஞானம், நவீனக் கலைப்பண்பாடு ஆகியவற்றுடன் நாட்டை ஒரு பெரும் ஸோஷலிஸ்ட்* வல்லரசாக அமைத்தல். இரண்டாவது வேலை ஸோவியத் ரஷ்யாவைத் தலைமையாகக் கொண்ட ஸோஷலிஸ்ட் முகாமில் சேர்ந்திருந்து, அந்த முகாமை வலுப்படுத்தல். மூன்றாவது வேலை அந்நியர் வசமுள்ள சீனா

* ஸோஷலிஸத்திற்கும் கம்யூனிஸத்திற்கும் முறைகளில் வேற்றுமைகள் இருப்பினும், கம்யூனிஸத்தை ஸோஷலிஸம் என்று கூறுவது உண்டு. ஆனால் ஸோஷலிஸத்தைக் கம்யூனிஸம் என்று கூறுவதில்லை.

வுக்குச் சொந்தமாயிருந்த பிரதேசங்களை மீட்டுக் கொள்ளல். நான்காவது வேலை ஆசியாவின் தலைமைப் பதவியைப் பெறுதல். ஐந்தாவது வேலை ஆசிய ஆப்பிரிக நாடுகளிலும், தென் அமெரிக்காவிலும், சமயமும் சந்தர்ப்பமும் கிடைப்பதற்கு ஏற்றபடி, கம்யூனிஸத்தைப் பரப்பிச் செல்வாக்குப் பெறுவதுடன், ஐரோப்பாவிலும் காலூன்றிக் கொள்ளல். உலக சமாதானம், 'சமாதான சக வாழ்வு' முதலிய கோஷங்களை வாயால் சொல்லிக்கொண்டு, வசதி கிடைக்கும் இடங்களி லெல்லாம் புகுந்து போரிட்டுக் கொண்டே யிருக்கவேண்டும். அணுகுண்டுகளையும் ஏவுகணைகளையும் எண்ணி மூன்ருவது உலகப்போருக்கு அஞ்சிக் கொண்டிராமல், அமெரிக்காவுடனும் மற்ற முதலாளித்துவ நாடுகளுடனும் பொருதிக்கொண்டேயிருத்தல் ஆருவது வேலை. இதுவரை கம்யூனிஸ்ட் சீனு பின்பற்றி வந்துள்ள கொள்கைகளைப் பார்க்கும் போது இக்குறிக்கோள்கள் தெளிவாகத் தெரிகின்றன.

சீனக் கம்யூனிஸ்ட் ஆட்சி முறையில் கம்யூனிஸம் மட்டும் ஏற்பட்டிருப்பதாகக் கருதக் கூடாது. நாட்டின் சுதந்தரமும் அதனுல் நிலை நிறுத்தப்பட்டுள்ளது. போர் வெறி பிடித்த பிரபுக்களின் கொட்டம் ஒடுங்கி இராஜ்யங்கள் ஐக்கியப்பட்டன. அரசியல் ஒரே ஒழுங்கு முறையில் நடைபெறத் தொடங்கிற்று. சென்ற 150 ஆண்டுகளாகப் பிறநாடுகளால் ஏற்பட்டு வந்த அவமானங்கள் யாவும் மறைந்து, கம்யூனிஸ்ட் சீனுவின் தூதர்களுக்கு எங்கும் மரியாதை ஏற்படலாயிற்று. கம்யூனிஸத்துடன் தேசப்பற்றும், தேசிய வெறியும் கலந்து விளங்குவதே இன்றைய கம்யூனிஸ்ட் சீனு. நாட்டின் நன்மைக்காக, மேன்மைக்காக, வளர்ச்சிக்காகக் கம்யூனிஸ்ட் ஆட்சியைச் சீனமக்கள்

ஆதரிக்கிறார்கள். மக்களும் அரசாங்கமும் ஒன்றாகக் கருதக்கூடிய நிலையில் விளங்குகின்றனர்.

## புதிய பொருளாதாரம்

சீனாவில் 22 மாகாணங்கள் இருக்கின்றன. இவைகளில் ஐந்து சுயாட்சி உள்ளவை. சீனாவின் பரப்பளவு உலகில் 14-இல் ஒரு பங்காகும்; ஜனத்தொகை 65 கோடிக்குமேல் உள்ளது. உழுது பயிரிடக்கூடிய நிலங்கள் 26 கோடி ஏக்கருக்குக் கூடுதலாக இருக்கின்றன.

நாட்டில் எல்லாத் தொழில்களையும், வாணிபத்தையும் ஒரேயடியாகத் தேசிய உடைமைகளாக மாற்றிவிடாமல் அரசாங்கமும் தனி மனிதர்களும் சேர்ந்தே நடத்திவர ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது. நாளடைவில், பல்லாண்டுகளுக்குப்பின், படிப்படியாக எல்லாம் தேசிய மயமாவதே நோக்கம் என்று அரசாங்கம் அறிவித்திருக்கின்றது. ஆயினும் பல துறைகளில் திடீரென்று பலாத்காரத்தினால் மாற்றங்களும் செய்யப்படுகின்றன.

விவசாயம் கூட்டுப் பண்ணைகளாலேயே நடைபெறுகின்றது. வியாபாரத்திலும் தொழில்களிலும் கூட்டுறவு முறை, அரசாங்க முறை, தனியார் முறை மூன்றும் கலந்திருக்கின்றன. சமீப காலத்தில் தனியார்கள் பெரும்பாலும் ஒதுக்கப்பட்டு வருகின்றனர். எண்ணெய்க் கிணறுகள் முதலியவற்றில் எண்ணெய் எடுப்பதற்கும், சுத்தம் செய்வதற்கும், சீனாவும் ஸோவியத் ரஷ்யாவும் சேர்ந்து முதலீடு செய்து பெரிய கூட்டுக் கம்பெனிகளை அமைத்திருக்கின்றன.

## இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள்

1952-1957-இல் முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேற்றப்பட்டது. இதனுல் மொத்தப் பொருளுற்பத்தி 128 சத விகிதம் அதிகரித்ததாகவும், விவசாய உற்பத்தி 25 சத விகிதம் அதிகரித்ததாகவும் சொல்லப்படுகின்றது. 1958-ம் ஆண்டு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் தொடங்கிற்று. இந்த ஆண்டில் தான் அளவுக்கு அதிகமான பெரிய முன்னேற்றம் ஏற்பட்டதாகவும், நாடே முன்னேறிப் 'பாய்ந்து' விட்டதாகவும் அரசாங்கம் பெருமைப்பட்டுக் கொள்கின்றது. ஆனுல் பின்னுல் ஒவ்வோர் ஆண்டிலும் இந்தப் 'பாய்ச்சல்' நீடித்திருக்கவில்லை.

1950 முதல் 1958 வரை இயந்திரத் தொழிற்சாலைகளில் 2,812 கோடி கிராம் தங்கத்தின் மதிப்புள்ள பணம் மூலதனமாக முடக்கப்பட்டது. முக்கியமான இயந்திரத் தொழில்களில் 15 ஆண்டுகளில் பிரிட்டனை மிஞ்சிவிட வேண்டும் என்பது சீனரின் நோக்கம். சென்ற 10 ஆண்டுகளில் ஏற்பட்டுள்ள தொழில் வளர்ச்சி போல் முன்பு எக்காலத்திலும் ஏற்பட்டதில்லை. தேசிய வருமானம் ஆண்டுதோறும் 14·9 சத விகிதம் அதிகரித்து வருவதாகவும் அரசாங்கம் அறிவித்துள்ளது. உருக்கு, நிலக்கரி, தானியங்கள், பருத்தி முதலிய முக்கியமான பொருள்களின் உற்பத்தி விவரமும், தேசிய வருமான விகிதமும் அடுத்த பக்கத்தில் குறிக்கப்பெற்றுள்ளன :

| பொருள் | 1949 | 1959 |
|---|---|---|
| உருக்கு | 1,58,000 டன் | 1,20,00,000 டன் |
| நிலக்கரி | 3,24,30,000 டன் | 33,50,00,000 டன் |
| மின்சாரசக்தி | 431,00,00,000 கி.வா. | 3900,00,00,000 கி. வா. |
| மின்சார ஜெனரேட்டர் | — | 18,00,000 கி. வா. |
| பருத்தி நூல் | 18,00,000 பேல் (3,26,592 டன்) | 82,00,000 பேல் (14,87,808 டன்) |
| காகிதம் | 2,28,000 டன் | 20,00.000 டன் |
| தானியங்கள் | 10,81,00,000 டன் | 27,50,00,000 டன் |
| பருத்தி | 4,44,500 டன் | 23,10,000 டன் |

## தேசிய வருமானம்

| ஆண்டு | 1949 = 100 | 1952 = 100 | முந்திய வருடம் = 100 |
|---|---|---|---|
| 1950 | 118 6 | — | 118·6 |
| 1951 | 138·8 | — | 117·0 |
| 1952 | 169·7 | 100·0 | 122·3 |
| 1953 | 193·4 | 114·0 | 114·0 |
| 1954 | 204·4 | 120·4 | 105·7 |
| 1955 | 217·8 | 128·3 | 106·5 |
| 1956 | 248·3 | 146 3 | 114·0 |
| 1957 | 259·7 | 153·0 | 104·6 |
| 1958 | 348·0 | 205·0 | 134·0 |

விவசாயம், தொழில்களின் வளர்ச்சியைப் போலவே அரசாங்க வருமானமும் செலவும் ஆண்டு தோறும் அதிகரித்திருக்கின்றன. 1950-இல் அரசாங்க வருமானம் 652 கோடி யுஆன் நாணயம், செலவு 681 கோடி யுஆன்; 1958 இல் 4,186 யுஆன், செலவு 4096-கோடி யுஆன். தொடக்கத்தில், 1950, 1951-ஆம் ஆண்டுகளில், தேசியப் பாதுகாப்புக்காக அதிகமாய்ச் செலவிடப்பட்டது. அவ்வாண்டுகளில் மொத்தச் செலவில் முறையே 100-க்கு 41·5, 42·5 இராணுவச் செலவு. பின்னல் வரவர இச் செலவைக் குறைத்து, தொழில்களுக்கான முதலீடு கூட்டப்பட்டது. 1950-இல் தொழில்களில் முதலீடு செலவில் 100-க்கு 25·5; 1958-இல் 64·1.

1949-இலிருந்து மூன்றுவருட காலத்திற்குள் நிலச் சொந்தக்காரர்கள் ஒழிக்கப்பட்டு, நாட்டு நிலங்கள் யாவும் நிலமற்ற 30 கோடி ஏழைக் குடியானவர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டன. நிலங்களோடு வீடுகளும் விவசாயக் கருவிகளும், கால்நடைகளும் அவர்களுக்குக் கிடைத்தன. பின்னர் விவசாயம், கைத்தொழில்கள், ஆலைத்தொழில்கள் ஆகியவற்றில் ஸோஷலிஸ்ட் முறையை விரைவில் அமைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 1956 முடிவில் 12-கோடிக் குடியானவர் குடும்பங்கள் கூட்டுறவுப் பண்ணைகளில் இணைந்திருந்தன. அவைகளில் 10கோடிக் குடும்பங்கள் தீவிர உற்பத்திப் பண்ணைகளில் சேர்ந்திருந்தன. கைத்தொழில்கள் செய்து வந்தவர்கள் 60 லட்சம் பேர்களைக்கொண்ட இலட்சம் கூட்டுறவுச் சங்கங்களும் ஏற்பட்டிருந்தன. சிறு வியாபாரிகள் கடைக்காரர்களுடைய வியாபாரமும் 1956-க்குள் கூட்டுறவு முறைக்கு மாற்றப்பட்டது. அதே காலத்தில் 70,000 தனியார் தொழில் நிலையங்கள் அரசாங்கமும் தனியார்

களும் கூட்டாக நடத்தும் நிலையங்களாக மாற்றப் பட்டு விட்டன. பெரிய, சிறிய, நடுத்தரமான 'ஷாப்பு' களில் 19 லட்சம் அரசாங்க வர்த்தகத் துறைக்கு மாற்றப்பட்டும், கூட்டுறவு முறைக்கு மாற்றப்பட்டும், அரசாங்கமும் தனியார்களும் சேர்ந்து நடத்தும் முறைக்கு மாற்றப்பட்டும் தனி முதலாளித்துவப் பிடியிலிருந்து விடுவிக்கப்பெற்றன.

1958-ல் 7,40,000 கூட்டுறவு விவசாயப் பண்ணை கள் 26,000 பெரிய 'கம்யூன்க'ளாக மாற்றி அமைக் கப்பெற்றன. விவசாயக் குடும்பங்களில் 99 சத விகி தத்தினர் இவற்றில் பலவந்தமாகச் சேர்க்கப்பட்ட னர். இந்தக் கம்யூன்களில் விவசாய வேலைகளுடன், இரும்பு காய்ச்சுதல், நிலக்கரி எடுத்தல், மின்சார உற் பத்தி, சிமிண்டு உற்பத்தி, செயற்கை உரங்கள் தயா ரித்தல், விவசாயக் கருவிகளைத் தயாரித்தல், உணவுப் பொருள் கெடாமல் நீடித்திருக்கும்படி பதனிட்டு வைத்தல் ஆகிய தொழில்களும் மேற்கொள்ளப்பெற் றன. 1959 ஆரம்பத்தில் கம்யூன்கள் நடத்தி வந்த இத்தகைய 7 லட்சம் தொழில் ஸ்தாபனங்கள் 7,100 கோடி யுஆன் பெறுமானமுள்ள பொருள்களை உற்பத்தி செய்ததாகக் கூறப்படுகின்றது. நாட்டின் மொத்தப் பொருள் உற்பத்தியில் இது 10 சத விகிதமாகும்.

கனரகத் தொழில்களை வளர்ப்பதே ஸோஷலிஸ நிர்மாணத்தின் அடிப்படை என்று அரசாங்கம் அதற்கு முதலிடம் கொடுத்துள்ளது. 1952-58-இல் மொத்தம் அரசாங்க முதலீடாக ஒதுக்கப்பட்ட தொகை 8,600 கோடி யுஆன். இதில் கனரகத் தொழில்களுக்காக மட்டும் 100-க்கு 43.8 அளிக்கப் பட்டுள்ளது. மற்றைத் தொழில்களுக்கு முதலீடு 7.3%தான். 1950-லிருந்து ஒன்பது வருட காலத்தில் 50,000 தொழிற்சாலைகளும், உலோகங்கள், நிலக்

கரிச் சுரங்கங்களும் நிறுவப்பட் டிருக்கின்றன. இவை களில் ஆயிரத்திற்கு மேற்பட்டவை அதிக முதலீடுகள் உள்ளவை. (சாதாரண முதலீடு என்பது 50 லட்சத்தி லிருந்து 100 லட்சம் யுஆன் வரை. இதற்கு மேற்பட் டதே அதிக முதலீடாகக் கருதப்படுகின்றது.) இந்த 1000-ல் ஸோவியத் ரஷ்யாவின் உதவியுடன் அமைக் கப்பெற்றவை 113, கிழக்கு ஜெர்மனி, செக்கோஸ் லோவேகியா, போலந்து, ஹங்கேரி, ருமேனியா, பல்கேரியா ஆகிய மற்றைக் கம்யூனிஸ்ட் நாடுகளின் உதவியுடன் அமைக்கப்பெற்றவை 40க்கு மேற்பட் டவை. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் சரா சரியாக மூன்று நாட்களுக்கு ஒரு பெரிய தொழிற் சாலை அல்லது சுரங்கத் திட்டம் வீதம் தோன்றிக் கொண்டிருந்தது. 1958-இல் நாள்தோறும் இரண்டு திட்டங்கள் வீதம் செயற்படத் தொடங்கின. பெரிய தொழிற்சாலைகளில் அன்ஷான் இரும்பு உருக்கு ஆலை ஆண்டுக்கு 30 லட்சம் டன் உற்பத்தி செய்யக்கூடி யது. இது உலகிலுள்ள பத்து மாபெரும் உருக்காலை களில் ஒன்று.

நாட்டில் உலோகக் கனிகளும், நிலக்கரி, எண் ணெய் கிடைக்கும் இடங்களும் ஏராளமாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. பெரிய நதிகள் பலவற்றில் அணைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மஞ்சள் நதிக்கு அணையமைக்கும் பெருந்திட்டமும் 1957-ல் ஆரம்ப மாகியிருக்கின்றது. பெரும்பாலான ஆறுகளின் கரை கள் செம்மைப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒன்பது வருட காலத்தில் மண்ணாலும் 'காங்கிரீட்'டாலும் அமைக்கப்பட்ட அணைகள் ஏரிக்கரைகள் எல்லாவற் றையும் சேர்த்துப் பார்த்தால் 7,000 கோடி கன மீட்டர் (ஆயிரம் கன அடி கொண்ட சுமார் 250 கோடிக் குழி அல்லது யூனிட்) ஆகும்.

1950-லிருந்து 1958 வரை புதிய ரயில் பாதைகள் 10,230 மைல் நீளத்திற்குப் போடப்பட்டிருக்கின்றன. 1958-ல் சீனுவில் மொத்தம் 19,028 மைல் நீளத்திற்கு ரயில் பாதைகள் இருந்தன. அவ்வருடத்தில் 2,44,000 மைல் நீளமுள்ள நெடுஞ்சாலைகள் போக்குவரத்துக்கு ஏற்றவையா யிருந்தன. இவை 1949-லிருந்ததற்கு ஐந்து மடங்கு அதிகமானவை.

ஸோவியத் ரஷ்யாவின் உதவியுடன் டிரக்குகள், ரயில் வண்டிகள், டிராக்டர்கள், விமானங்கள் முதலியவை சீனுவிலே தயாரிக்கப்பெறுகின்றன. இராணுவத்திற்குத் தேவையான தளவாட உற்பத்தியும் படிப்படியாக முன்னேறி வருகின்றது.

1949-ல் 80 லட்சம் தொழிலாளர்கள், ஆலைச் சிப்பந்திகள் இருந்தனர். 1957 இறுதியில் மூன்று மடங்குக்கு மேலாக, 2,45,10,000 பேர்களாகப் பெருகிவிட்டனர். 1958-ல் தொழில் வளர்ச்சிக்காகப் 'பாய்ச்சல்' முறையில் விசேட ஏற்பாடுகள் செய்ததில், 4,53,20,000 உழைப்பாளர்கள் உற்பத்தியில் ஈடுபட்டனர். முற்காலத்திய வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிந்துவிட்டது என்று சொல்லப்படுகின்றது. தொழிற்சங்கங்கள் ஒவ்வொரு தொழிற்சாலையிலும் திறமையும், கடமை யுணர்ச்சியுமுள்ள 'மாதிரி'த் தொழிலாளர்களைத் தேர்ந்தெடுத்து அறிவிக்கின்றன. அவர்களைப் பார்த்து மற்றவர்களும் வேகமும் உற்சாகமும் பெற இம்முறை வாய்ப்பாகும். மேலும் தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும் மேலும் மேலும் செலவைக் குறைத்து, அதிக வேலை நடைபெறச் செய்வதற்கும், குறைகளைக் களைவதற்கும் ஆங்காங்குள்ள தொழிற்சங்கங்கள் கூறும் ஆலோசனைகளை அரசாங்கம் உடனுக்குடன் கவனித்துப் பயன்படுத்துகின்றது.

முதல் 9 ஆண்டுகளில் இத்தகைய ஆலோசனைத் திட்டங்கள் மூன்று கோடிக்குமேல் கிடைத்திருக்கின்றன.

சீனாவுக்குச் சென்று வந்தவர் பலரும் ஒரு விஷயத்தை வற்புறுத்திச் சொல்லியிருக்கின்றனர்; கோடிக்கணக்கான நாட்டு மக்கள் அனைவரும் வேலை செய்துகொண்டேயிருக்கின்றனர் என்பதுதான் அவ் விஷயம். பீகிங்கிலும், மற்றும் பல பெரிய நகரங்களிலும், இரவு முழுதும் பொது மின்சார விளக்குகளை அணைக்காமல், இரவிலும் வேலை நடந்து வருகின்றது. புதிய ஆலைகள், நாடக அரங்குகள், வீடுகள், சாலைகள் முதலியவைகளை மக்கள் அமைத்துக்கொண்டேயிருக்கிறார்கள். எல்லா இடங்களிலும் 8 மணி நேர வேலைக் கணக்கில், உழைப்பாளர்கள் பகலிலும் இரவிலும் மூன்று கூட்டங்களாகச் சென்று தொழில் செய்கின்றனர். நாட்டின் அளவுக்கும் பெரிய ஜனத் தொகைக்கும் சீனா அடைந்துள்ள முன்னேற்றங்கள் பிரமாதமில்லை என்று தோன்றலாம். ஆயினும் குறுகிய கால அளவில் அது முடித்துள்ள சாதனைகள் யாவும் வியப்புக்குரியவையே. ஆண்களோடு பெண்களும் இலட்சக்கணக்கில் வெளிவந்து வேலை செய்கிறார்கள். எல்லோரும் ஏதாவது பணியில் ஈடுபட்டிருக்கின்றனர். மௌனமாகச் சும்மா இருக்கும் சுதந்தரம்கூடச் சீனாவில் இல்லையென்று ஒருவர் கூறியுள்ளார்! தொழில்களிலே பின்தங்கிய நாடுகள் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்துதான் பல நூற்றாண்டுகளைத் தாண்டவேண்டியிருக்கிறது!

## முன்னேற்றமா, பின்னேற்றமா?

பெரிய பொருளாதாரத் திட்டங்களை நிறைவேற்றப் பலாத்காரமும் சர்வாதிகாரமும் அவசியம் என்று பலர் தவறாகக் கருதுகின்றனர். ஸோவியத்ரஷ்யாவின்

முன்னேற்றமும், கம்யூனிஸ்ட் சீனுவின் வளர்ச்சியும் சர்வாதிகாரத்தின் சாதனைகள் என்று கருதப்படுகின்றன. சர்வாதிகாரமுள்ள ஒரு கம்யூனிஸ்ட் கட்சி மிகுந்த வேகத்தில் சில திட்டங்களை நிறைவேற்ற முடிகிறது என்ருல், அந்த வெற்றியின் விலை என்ன என்பதையும் கவனிக்க வேண்டும். முதலில் இலட்சக் கணக்கான மக்கள் பலியிடப்படுகிருர்கள். பின் லட்சக் கணக்கான மக்கள் ஆடு மாடுகளைப் போல் விவசாய நிலங்களுக்கோ, தொழிற்சாலைகளுக்கோ விரட்டப் படுகிருர்கள். வேலை நேரம், ஊதியம், மற்ற வாழ்க்கை வசதிகள்-எதைப்பற்றியும், எவரும் எதிர்த்துப் பேச உரிமை கிடையாது. தேசத்திற்காகவோ, கம்யூனிஸ்ட் இலட்சியத்திற்காகவோ, யாவரும் எல்லாவிதத் தியாகங்களையும் செய்தாக வேண்டும். ஒரு சமுதாயத்தில் மக்கள் அனைவரும் தங்கள் மனிதத் தன்மையையே இழந்துவிட்டுத் திட்டங்களில் வெற்றி பெறுகிருர்கள் என்ருல், அந்த வெற்றியின் மதிப்பு எவ்வளவு?

1958-இல் மா ஸே-துங்கின் கட்டளைப்படி சீனுவில் விவசாயக் 'கம்யூன்கள்' அமைக்கப்பட்டன. வேலை செய்ய முடியாத வயோதிகர்களுக்கும் குழந்தைகளுக்கும் தனி இல்லங்கள் அமைக்கப்பட்டன. அவர்கள் குடும்பங்களை விட்டு வெளியேற்றப்பட்டனர். குடும்பங்களே உலைக்கப்பட்டு, இலட்சக்கணக்கான ஆடவரும் பெண்களும் வெவ்வேறு கம்யூன்களில் சேர்க்கப் பட்டனர். ஊண், உறக்கம், வேலை-எல்லாம் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்தே நடந்தன. 26,000 கம்யூன்கள் இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. யாவரும் கம்யூன்களிலேயே தங்கியிருக்க வேண்டும். கணவர்கள் தங்கள் மனைவியரைச் சந்திப்பதற்கு வாரத்தில் ஒரு நாள்-சனிக்கிழமை யன்று-சில நிமிடங்கள் அநுமதிக் கப்பட்டார்கள்! மனைவி, மக்கள், பெற்ருேர், சுதந்தர

வாழ்க்கை எல்லோரையும்விட - எல்லாவற்றையும் விட-தேசத்தின் விவசாயமே முக்கியம் என்று வற்புறுத்தப்பட்டது. ஒழிவு நேரங்களில் மக்களுக்கு இரும்பு காய்ச்சுதல், காகிதம் செய்தல் போன்ற வேறு தொழில்களும் கொடுக்கப்பட்டன. மொத்தத்தில் மக்கள் தங்களுக்கு ஏற்ற தொழில்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை இழந்தார்கள். அவர்கள் எப்பொழுது, எதைச் செய்ய வேண்டும் என்பதை அரசாங்கமே தீர்மானித்தது. இலட்சக்கணக்கான குடும்பங்கள் சின்னாபின்னமாகச் சிதறிப் போயின.' கம்யூனிஸம் விரைவில் பரவுவதற்குக் குடும்பங்கள் ஒழிவதுதான் நலமென்று தலைவர்கள் தீர்மானித்திருந்தார்கள். அது நிறைவேறிவிட்டது.

ஆனால் கம்யூன்களால் விவசாயப் பொருளுற்பத்தி பெரிய அளவில் விருத்தியாகவில்லை. குடியானவர்கள் தங்கள் வீடுகளில் குடும்பத்தோடு இருந்து கொண்டு உற்பத்தி செய்த அளவு கம்யூன்களால் குறைந்துவிட்டது. உடனே கம்யூன்களின் சட்ட திட்டங்களைத் தளர்த்தி, விவசாயிகள் முந்திய கூட்டுறவு முதலிய முறைகளில் உற்பத்தி செய்ய அநுமதிக்கப்பட்டார்கள். விளைபொருள் குறைந்தது என்றால், தொழிற்சாலைகளிலிருந்து இலட்சக்கணக்கான மக்களை வயல்களுக்கு விரட்டுவதும், அங்கிருந்து பிறகு ஆலைகளுக்கும் சாலைகளுக்கும் விரட்டுவதும் சீனாவில் வழக்கமாகி விட்டது. மக்கள் கம்யூனிஸ்ட் கட்சியின் கைப் பாவைகள்-அவர்களை எப்படியேனும் ஆட்டிவைக்கலாம்!

கம்யூனிஸ்ட் ஆட்சி நடக்கும் இடங்களிலெல்லாம் விவசாயம்தான் விரைவில் விருத்தியாகாமல் முட்டுக்கட்டையாக விளங்குகின்றது. ஸோவியத் ரஷ்யாவைப்போல் சீனாவிலும் விவசாயம் விசேட வளர்ச்சியடைவதற்கு இன்னும் 40 ஆண்டுகள் பயங்கர ஆட்

சியை அமல் நடத்த வேண்டி யிருக்கும் என்று கருதப் படுகின்றது.

**பயங்கரமான வறுமை !**

1957-இல் ஜனங்களில்ஒவ்வொருவருக்கும் மாதம் ஒன்றுக்கு அரிசி 32 இராத்தலும், இறைச்சி $1\frac{1}{2}$ இராத்தலும், மீன் $1\frac{1}{2}$ இராத்தலும், எண்ணெய் 1 இராத்தலும், சர்க்கரை 22 கிராமும் அரசாங்கத்தால் பங்கிட்டு அளிக்கப்பட்டு வந்தது. அடுத்த ஆண்டு 'கம்யூன்கள்' திட்டம் தொடங்கப்பட்டதால், வீடுகளில் குடும்பங்கள் தனிச் சமையல் செய்வது பெரும்பாலும் தடுக்கப்பட்டது. எல்லோரும் சர்க்கார் நடத்திய உணவு விடுதிகளிலேயே உண்ண வேண்டும் என்று கட்டாயப்படுத்தப் பெற்றனர். 100-க்கு 70 பேர்கள் அப்படி விடுதிகளில் உண்போராயினர். விடுதிகளிலும் முழு 'ரேஷன்'படி உணவளிக்கவில்லை; அரை வயிற்றுக்கே அங்கு உணவுகிடைத்துவந்தது. நாளுக்குநாள் உணவுப் பொருள்கள் குறைந்து கம்யூன்களையே மூட வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்பொழுது ஒரு நபருக்கு மாதத்திற்கு 25 இராத்தல் அரிசிப் பங்கீடு விதிக்கப்பட்டது. இந்த அரிசியிலும் பெரும் பகுதிக்குப் பதிலாக உருளைக்கிழங்கு முதலியவைகளையே பெற்றுக்கொள்ள நேர்ந்தது. சீன மக்கள், 'கம்யூனிஸம் வந்தால் சுபிட்சம் வரும் என்றார்களே ! இதுவரை கிடைத்துவந்த உணவும் இப்பொழுது கிடைக்கவில்லையே! இது என்ன கம்யூனிஸம் ?' என்று கேட்கலாயினர். எதிர்த்துப் பேசியவர்களுக்கு வழக்கம் போல் சர்க்கார் தண்டனைகளை மட்டும் விதித்து வந்தது.

1962 மத்தியில் ஷாங்கை முதலிய நகரங்களிலெல்லாம் அரிசித் தட்டுப்பாடு நிலைத்திருந்தது. 25 இராத்தல் அரிசிப்பங்கீட்டில் 10 இராத்தல் அரிசியும்,

15 இராத்தல் அரிசிக்குப் பதிலாக வேறு பொருள் களுமே கொடுக்கப்பெற்றன. நபர் 1-க்குக் காய்கறி கள் மாதத்திற்கு 15 கிராம் மட்டும் கிடைத்து வந்த தாம்! கம்யூன்களில் வேலை செய்த உழைப்பாளிகள் பலர் வேலையின் நடுவே செத்து விழுந்தார்களாம்!

உடை விஷயம் உணவைக் காட்டிலும் மோசமாக யிருந்தது. ஒரு நபருக்கு ஓர் ஆண்டுக்கு ஒரு கஜம் துணி வீதம் கூடக் கிடைக்கவில்லை. 2·6 அடி வீதமே கிடைத்தது! இந்தத் துணியைக் கொண்டு முகம் மட் டும் துடைத்துக் கொள்ளலாம் என்று ஷாங்கையி லிருந்த இந்தியர் ஒருவர் எழுதியுள்ளார்!

## கொலைகளும், அடக்கு முறைகளும்

செடி கொடிகள், விலங்குகள் உயிர் வாழ்வதற் குக் காற்றும், கதிரொளியும், நீரும், உணவும் இருந் தால் போதும்; ஆனல் மனிதன் வாழ்வதற்கு இவற் ரேடு சுதந்தரமும் இன்றியமையாதது. சுதந்தர மில்லாத மனிதன் வாழவோ, வளரவோ முடியாது. அவன் தன் ஆற்றல்களைப் பூரணமாக வளர்த்துக் கொள்ள முடியாது. தன் மனப்போக்குக்கு இசைந்த முறையில் உற்பத்தியில் ஈடுபடவும் முடியாது. பலாத் காரத்தால் மனிதனை ஓர் இயந்திரம் போலவே பயன் படுத்திக்கொள்ள முடியும். சீனுவில் பெரும்பாலான மக்கள் இத்தகைய இயந்திரங்களாக வெற்றிகரமாக மாற்றப்பட் டிருக்கின்றனர்.

எந்தச் சர்வாதிகாரியின் ஆட்சியிலும் நடக்காத அளவு கொலைகளும், கொடுமைகளும் சீனச் சர் வாதிகாரி மாஸே-துங்கின் ஆட்சியில் நடந்திருக் கின்றன. மக்களைக் கொலை செய்து மண்டை ஓடுகளை மலை மலையாகக் குவித்து வேடிக்கை பார்த்த தைமூர் காலத்திலிருந்து, இலட்சக் கணக்கான யூதர்களையும்

மற்ற வெளி நாட்டார்களையும் கூட்டம் கூட்டமாக வதைத்த ஹிட்லர் காலம்வரை இந்த அளவுக்குக் கொலைகளும் கொடுமைகளும் நடக்கவில்லை. 1949-இலிருந்து 1956-க்குள் சுமார் 200 லட்சம் சீன மக்கள் வதைக்கப்பட்டிருக்கிறார்கள். 230இலட்சம் மக்கள் கட்டாயவேலை செய்யும்படி சிறை முகாம்களுக்கு அனுப்பப்பட்டுள்ளனர்.

ரஷ்யாவில் ஸ்டாலின் காலத்தில் பாதுகாப்புப் போலீஸின் கொடுமைகள் இரசியமாகச் செய்து முடிக்கப்பெற்றன. சீனாவிலோ எல்லாம் அம்பலத்தில் செய்யப்படுகின்றன. விசாரணைகள் விளையாட்டு மைதானங்களில், மக்கள் கூட்டத்தின் நடுவிலேயே, நடைபெறுகின்றன. கைதிகளைச் சுட்டுத்தள்ளுவதும் கூட்டங்களின் முன்னிலையில்தான்! சீனக் கம்யூனிஸ்டுகள் தங்கள் பயங்கரத் தண்டனைகளை நாடும் நகரும் நன்கறிய வேண்டும் என்பதற்காக இப்படிச் செய்கிறார்களாம்!

ஜனங்களை வேவு பார்க்க ஊர் ஊராக, பட்டி தொட்டிகளிலேகூட, இரகசியப்பாதுகாப்புப் போலீஸ் படை அமைக்கப் பட்டிருக்கிறது. அடிக்கடி வீடுகளுக்குள் திடீரென்று புகுந்துபார்க்கத் தனியாகப் போலீஸ்காரர் இருக்கின்றனர். எந்த நேரத்திலும், எந்த வீட்டிலும், அவர்கள் போய் அடைத்திருந்த கதவைத் தட்டுவார்கள். அவர்களைக் கண்டாலே மக்களுக்குக் கதிகலக்கம்தான்!

ஆயுதம் தாங்கிய போலீஸ் படையில் 7 லட்சம் பேர் இருக்கின்றனர். இந்தப் படைக்குத் தலைவராயிருந்து, ஆறு ஆண்டுகளில் சீனா முழுதுமே கிடுகிடுத்து நடுங்கும்படி கொடுமைகள் புரிந்து, 1955-க்குள் மக்களை அடக்கி ஒடுக்கி வெற்றி கண்டவீரர் லோ ஜுயி சிங் என்பவர். மிராசுதார்களைத் தீர்த்துக்கட்ட வேண்

டுமா, கம்யூனிஸ்ட் எதிர்ப்பாளர்களை ஒழிக்கவேண்டுமா, எழுத்தாளர்கள், படிப்பாளிகளை மட்டம் தட்ட வேண்டுமா? எதற்கும் அவர் திறமையுடன் சீர்திருத்தி அமைத்திருக்கும் போலீஸ்படை தயார்! அப்படைக்கு உளவறிந்து கூறும் பிரிவினர், ஜனங்களில் ஒவ்வொருவருடைய சரித்திரம் மட்டுமின்றி, வமிச வரலாறுகளையும் குறித்து வைத்திருக்கின்றனராம். ஆகவே கோடிக்கணக்கான சீன மக்கள் கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தில் மோகம் கொண்டு மட்டும் அடிபணியவில்லை என்றும், பயங்கரத்திற்கும், பயங்கர ஆட்சி முறைக்குமே அடிபணிந்துவிட்டார்கள் என்றும் கருதவேண்டியிருக்கிறது.

கம்யூனிஸ்ட் ஆட்சியை நிலை நிறுத்தவும், கம்யூனிஸ்ட் திட்டங்களை நிறைவேற்றவும் சீனாவில் முதன்மையா யுள்ளவர்கள் நான்கு கூட்டத்தினர். முதற் பிரிவிலுள்ளவர்கள் 'கான்பூக்கள்' என்ற தொண்டர் படையினர். இவர்களே ஆயிரக் கணக்கில் கிராமங்களிலெல்லாம் பரவி, கட்சிப் பிரசாரம் செய்து, காரியங்களை நிறைவேற்றுபவர்கள். இரண்டாவது போலீஸ் படை. அடுத்த கூட்டம் இராணுவம்-'மக்களின் விடுதலைப்படை' என்று சொல்லப்பெறும் செஞ்சேனை. நான்காவது கூட்டத்தார் 43 ஆண்டுகளுக்கு மேலாகக் கட்சிக்குத் தலைமை வகித்துவரும் வயோதிகர்களான தலைமைக் குழுவினர். இந்த நான்கு கூட்டங்களிலும் எது உலைந்தாலும், இப்போதைய சீன சமுதாயக் கட்டுக் கோப்பே உலைந்துவிடும். இவை அவ்வளவு முக்கியமானவை. மக்கள் நிரந்தரமாக ஒடுக்கப் பட்டிருப்பதால் கான்பூக்களுக்கோ, போலீஸ் படைக்கோ, செஞ்சேனைக்கோ, தலைமைக் குழுவுக்கோ சமீப எதிர்காலத்தில் உள்நாட்டில் பலமான எதிர்ப்பு எதுவும் ஏற்பட முடியாது. வெளிநாடுகளின் விவ

காரங்களில் சீன சிக்கிக்கொள்வதில் பெரும் போராட்டங்கள் தோன்றினால், அல்லது மூன்றாவது உலகப் போர் ஏற்பட்டால், சீனாவில் அடிப்படையான மாறுதல்கள் ஏற்படலாம். ஆனால் அணுகுண்டுகளினாலும், ஏவுகணைகளாலும் ஏற்படக்கூடிய அழிவுக்கும் சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்கள் அஞ்சுவதாகத் தெரியவில்லை. அமெரிக்காவும் ரஷ்யாவுமே அத்தகைய போரின் கொடுமைக்கு அஞ்சிய போதிலும், சீனத் தலைவர்கள் மட்டும் போர் மனப்பான்மையுடனேயே ஆர்ப்பாட்டம் செய்துவருகின்றனர். உலகப் போரினால் எந்தெந்த நாடுகள் அழிந்தாலும், சீனாவில் பாதி ஜனத்தொகைக்குமேல் அழிந்தாலும், 30 கோடிச் சீனர்களாவது எஞ்சி யிருப்பார்கள் என்றும், அவர்கள் மீண்டும் உலகத் தலைமையை அடைந்து விடுவார்கள் என்றும் அத்தலைவர்கள் வெளிப்படையாகப் பிதற்றி வருகின்றனர்.

## வெளிநாடுகளுடன் தொடர்புகள்

சீனாவின் வெளிநாட்டுக் கொள்கை அதன் உள்நாட்டுக் கொள்கையின் பிரதிபலிப்பாகவே அமைந்துள்ளது. ஸோவியத் ரஷ்யாவுடன் அதற்கு மிக நெருங்கிய உறவு இருந்ததால், தொழில், இராணுவம் முதலிய துறைகளில் அதற்கு ரஷ்யா பேருதவிகள் செய்து வந்தது. ரஷ்யாவைத் தலைமையாகக்கொண்ட கிழக்கு ஐரோப்பிய நாடுகளுடனும் சீன இணைந்து நின்றது. 1950-இல் சீன ஏற்றுமதியில் 100-க்கு 70 ரஷ்யாவுக்கு அனுப்பப்பட்டது. ஸோவியத் நாட்டின் புகழ் பாடுதல் சீனாவில் தினசரி நிகழ்ச்சியாயிற்று. ஆயிரக்கணக்கான ரஷ்ய நிபுணர்கள், சீனாவில் நெடுநாள் தங்கியிருந்து, கனரகத் தொழில்களை அங்கே நடத்த வழி வகுத்துக் கொடுத்தனர். நாடு முழுதும் சீன-

ரஷ்ய நட்புறவுச் சங்கங்கள் பல இயங்கிவந்தன. சீன மாணவ மாணவிகள் ரஷ்ய மொழியையும் கற்க வேண்டுமென்று விதி செய்யப்பட்டது.

ஆயினும் சீன மக்களுக்கு ரஷ்யர்களிடம் அபாரமான மோகம் கிடையாது. தொன்று தொட்டே சீனுவின் சுதந்தரத்திற்கு ரஷ்யா முக்கியமான அபாயமாயிருந்து வருவதை அவர்கள் மறப்பதில்லை. ஸ்டாலின் காலத்திலிருந்தே அவருக்கும் மாஸே - துங்குக்கும் பல கருத்து வேற்றுமைகள் இருந்து வந்தன. பின்பு ரஷ்யத் தலைவர் குருஷ்சேவுக்கும் மா - வுக்கும் கருத்து வேற்றுமைகள் இருந்ததோடு, அவைகளைப் பற்றி வெளிப்படையாகப் பத்திரிகைகளிலும், கூட்டங்களிலும், ஒலிபரப்புக்களிலும் விவாதமும் நடந்து வந்தது. மற்ருெரு புறத்தில், உலகத்தில் முதலாவது ஸோஷலிஸ்ட் நாடு என்பதாலும், விஞ்ஞானத்திலும், இராணுவ வல்லமையிலும் அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் போட்டியிடும் அளவுக்கு அது வளர்ந்துள்ளது என்பதாலும், ரஷ்யாவிடம் சீனுவுக்கு மிகுந்த நேசமும் நம்பிக்கையும் இருந்து வந்தன.

ரஷ்யாவிடம் எவ்வளவு நேசம் இருந்ததோ, அதே அளவுக்கு அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சீனு துவேஷிக்கின்றது. நல்லதற்கெல்லாம் பிறப்பிடம் ரஷ்யா, தீயதற்கெல்லாம் பிறப்பிடம் அமெரிக்கா என்று அது கருதி வந்தது. 'சீன மக்களின் எதிரி அமெரிக்கா, ஏகாதிபத்தியச் சுரண்டல் கும்பலுக்குத் தலைமைப் பீடம் அமெரிக்கா, பிற்போக்காளரின் கோட்டை அமெரிக்கா, அழுகிப்போய்க் கொண்டிருக்கும் முதலாளித்துவத்தின் சின்னம் அமெரிக்கா' என்றெல்லாம் மக்களிடையே அது இடைவிடாமல் பிரசாரம் செய்கின்றது. அமெரிக்கா வெறும் அட்டைப் புலி, அதை முறியடிப்பது எளிது என்று மக்கள் நம்பும்

படி சொல்லப்படுகின்றது. குழந்தைகளும், இளைஞர்களும் அமெரிக்காவை வெறுக்கும்படி கற்பிக்கப்படுகின்றனர். இதே அமெரிக்காவின் ஆயுதங்கள், பணம் முதலிய உதவிகளைக் கொண்டுதான் சீனா ஜப்பானை எதிர்த்துப் போராடித் தன் சுதந்தரத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது. ஆனால் அது பழங்கதை.

## ஆதிக்கிய வேட்டை

மத்திய ஆசியா, தெற்கு ஆசியா, தென் கிழக்கு ஆசியா மூன்று பிரதேசங்களிலும் கம்யூனிஸ்ட் சீனா ஆரம்பம் முதலே ஆக்கிரமிப்பு நோக்கம் கொண்டு விளங்குகின்றது. பல நூற்றாண்டுகளாகச் சீனச் சக்கரவர்த்திகள் கொண்டிருந்த ஏகாதிபத்திய ஆசையை நவீனக் கம்யூனிஸ்ட் அரசாங்கமும் தன் கொள்கையாகக் கொண்டுவிட்டது. சிங்கியாங் மாகாணத்தின் பாலைவனத்தையும், இமயமலைத் தொடர்களையும் முற்காலத்தில் தாண்டிவர முடியாமலிருந்தது. ஆனால் இப்பொழுது சீனர்கள் அவைகளையும் தாண்டிவிட்டனர். ஸோவியத் ரஷ்யா புரட்சியில் வெற்றி பெற்றவுடன், கம்யூனிஸ்ட் தலைவர்கள் சுற்றியிருந்த எல்லைப்புற நாடுகளுக்கு விடுதலையளித்தனர். ஆனால் மாஸே-துங், வெற்றி கிட்டியதும், சுற்றியுள்ள நாடுகளை வளைத்துப் பிடித்துக் கொள்ளவே முற்பட்டுள்ளார்!

சீனா திபேத்தை அடிமைப்படுத்தியது ஒரு தனி நிகழ்ச்சியன்று. மேலும் பல நாடுகளைப் பிடிக்க அது ஒரு படியேயாகும். பழங்காலத்திலிருந்தே பர்மாவைக் கட்டாயப்படுத்திச் சீனா கப்பம் பெற்று வந்தது. 18-ஆம் நூற்றாண்டில் பர்மா சீனச் சக்கரவர்த்தியை முறியடித்த பிறகுதான், கப்பம் கட்டுவது நின்றது. மீண்டும் பர்மாவின் மீது கம்யூனிஸ்ட் சீனாவின் பார்வை விழுந்துகொண்டே யிருக்கின்றது. வியட்னாமும் பர்மா

வைப் போலவே அதற்கு ஆசை ஊட்டுவது. தென் கிழக்கு ஆசிய நாடுகளில் நேரடியாகப் படையெடுத்துச் செல்லாமல், ஆங்காங்கு வசிக்கும் சீனர்களைக் கொண்டே பீகிங் அரசாங்கம் தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளவும் எண்ணியிருக்கின்றது.

ஆசியாவில் தன் ஆதிக்கிய அபிவிருத்திக்கு அமெரிக்க ஐக்கிய நாட்டைப் பார்க்கினும் இந்தியாவே பெரிய தடையாக நிற்பதாகக் கம்யூனிஸ்ட் சீனு கருதுகின்றது. ஆதலால் இந்தியாவிடம் தன் வல்லமையைக் காட்டவும் அது தொடங்கியுள்ளது.

இவ்வாறு வெளி ஆதிக்கியத்திலேயே நாட்டமிருப்பதால், சீன அரசாங்கம் நாட்டு மக்களின் பசி, பட்டினி முதலியவற்றை அதிகமாய்ப் பொருட்படுத்திக் கொண்டிருக்க முடியவில்லை. என்ன செலவானுலும், இராணுவ வசதிகளைப் பெருக்கிக் கொண்டேயிருப்பது அதற்கு அவசியம். இரண்டாவது உலகப் போருக்கு முன் ஜப்பானும் இப்படித்தான் செய்து வந்தது. ஜப்பான் மேலை நாடுகளைப் பார்த்து, வெகு விரைவிலே முதலாளித்துவ முறையில் தொழில்களை வளர்த்துக்கொண்டது. அதே முறையில் இராணுவத்தையும் பலப்படுத்திக்கொண்டது. முடிவில் அது போரில் இறங்க வேண்டியதாயிற்று. ஆதிக்கிய வேட்டையில் சீனு இறங்குவதற்கு வெறும் கம்யூனிஸம் மட்டும் போதாது; ஆகவே கம்யூனிஸத்தின் பெயரால் மற்றும் தேவையான கொள்கைகளையும் மாஸே-துங் சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி தம் தோழர்களுக்கும் மக்களுக்கும் புகட்டிவருகிருர்.

## கம்யூனிஸமும் தேசியமும்

'ஸன் யாட்-ஸென்னுடைய 40 வருட அநுபவமும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் 28 வருட அநுபவமும்

நாம் வெற்றி யடையவும், அவ்வெற்றியை நிலைநிறுத்திக்கொள்ளவும் ஒரு பக்கத்தில் சார்ந்திருக்கவேண்டும் என்பதை நமக்குத் தெளிவுபடுத்தியுள்ளன. சீன மக்கள் ஏகாதிபத்தியத்தின் பக்கத்திலோ, ஸோஷலிஸத்தின் பக்கத்திலோ, ஏதாவது ஒரே பக்கத்தில் சேரவேண்டும் என்பதே அநுபவங்களிலிருந்து தெரிகின்றது. இரு பக்கத்திலும் இறங்காமல், மதில்மேல் அமர்ந்திருக்க முடியாது; மூன்றாவது பாதை இல்லை. நடுநிலைமை என்பது ஏமாற்று, மூன்றாவது பாதையே கிடையாது.' இவ்வாறு கூறி, சீனா ஸோஷலிஸத்தின் சார்பில் நிற்க வேண்டுமென்று மாஸே-துங் ஆதியிலேயே வழி வகுத்தார். ஸோஷலிஸத்துடன் நாடு முழுதும் ஒரு தேசிய வெறியும் எழுப்பப்பெற்றுள்ளது. 'நம் நாடு, நமது செல்வாக்கு, நம் ஆதிக்கியம்' என்ற முறையில் மக்களின் குறுகிய தேசபக்தி வளர்க்கப் பெற்றிருக்கின்றது. அத்துடன் கம்யூனிஸ்ட் தலைவர்கள் சீன நாட்டின் பழம் பெரும் தத்துவங்களிலும் தேர்ச்சி பெற்று அவற்றையும் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர். அவர்களுடைய சர்வாதிகாரம் கம்யூனிஸ்ட் சர்வாதிகாரமாக மட்டும் இருக்கவில்லை. பழைய சீனச் சக்கரவர்த்திகளின் எதேச்சாதிகார முறைகள், கன்பூஷியஸ் போன்ற சில சீன ஞானிகளின் போதனைகள் எல்லாம் அவர்களுக்கு உரமளித்திருக்கின்றன. இவை சீன வெளிநாட்டுக் கொள்கைகளிலும் இடம் பெற்றுள்ளன.

## வெளிநாடுகளில் பிரசாரம்

சீன வரலாற்றில் 4,000 ஆண்டுகளுக்கு இடையில் எக்காலத்திலும் இல்லாத முறையில், இப்போது கம்யூனிஸ்ட் சீனா உலகில் பல நாடுகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றது. ஆசியா, ஆப்பிரிகா, தென்

அமெரிக்கா ஆகிய மூன்று கண்டங்களிலும் அது இடைவிடாமல் பிரசாரம் செய்கின்றது. பிற நாட்டு மக்களுடனும், அரசாங்கங்களுடனும் தொடர்புகொள்ள அது கையாண்டு வரும் முறைகள் நான்கு. தனிமனிதர்களுடன் நேரடியான தொடர்பு, வர்த்தகம், பிரசாரம், அரசியல் மூலம் ஊடுருவல் ஆகிய அம்முறைகளை அது திறமையுடன் கையாள்வதுடன், அவற்றிற்காகக் கோடிக்கணக்கான பொருளையும் செலவழித்து வருகின்றது.

வெளிநாடுகளிலிருந்து அரசியல்வாதிகள், பத்திரிகையாளர்கள், படிப்பாளிகள், கலைஞர்கள், வர்த்தகர்கள் முதலியோர்களைக் கொண்ட குழுவினர்கள் அடிக்கடி சீனுவுக்கு வரவழைக்கப் பெறுகிருர்கள். அவர்களுடைய செலவுகள் யாவும் சீன சர்க்காரைச் சேர்ந்தவை. அவர்களுக்கு உயர்ந்த முறையில் வரவேற்பும் வசதிகளும் செய்யப்பெறுகின்றன. சீனுவில் கம்யூனிஸ்ட் ஆட்சியின் வெற்றிகளைக் காணக்கூடிய இடங்களுக்கும், புகழ்பெற்ற நகரங்களுக்கும், இனிய இயற்கைக் காட்சிகள் நிறைந்த இடங்களுக்கும் அவர்களைக் கம்யூனிஸ்ட் வழிகாட்டிகள் அழைத்துச் செல்கிருர்கள். முதன்மையான கம்யூனிஸ்ட் தலைவர்களும் அவர்களை நேரில் கண்டு வரவேற்று மகிழ்விக்கின்றனர்.

வெளிநாட்டு விருந்தினர்கள் புராதனத் தலைநகரான பீகிங்கைக் கண்டே பெரு வியப்படைகின்றனர். அடிக்கடி அங்கு கம்யூனிஸ்ட் இளைஞர்களுடைய விளையாட்டுக்களோ, ஊர்வலங்களோ, பொதுக் கூட்டங்களோ, தேசியக் கொண்டாட்டங்களோ நடப்பதில் பல்லாயிரம் மக்கள் பங்கு கொள்வதை அவர்கள் கண்டு பரவசமாகின்றனர். பதினன்கு மைல்கள் சுற்றளவும் கோட்டைச் சுவருமுள்ள பீகிங் நகர், சக்கரவர்த்திகளின் அரண்மனைகள், ஆலயங்கள், அழகிய

கட்டடங்கள், பூந்தோட்டங்கள் முதலியவற்றுடன், கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகின்றது. முற் காலத்தில் குவிந்து கிடந்த அசுத்தங்களெல்லாம் அகற் றப்பட்டு, நகரம் புதுமைப் பொலிவோடு விளங்குகின் றது. கோட்டைச் சுவர்களைத் துளைத்துப் புதுப் புதுச் சாலைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. பல புதிய தொழிற்சாலைகளும் அங்கே அமைந்துள்ளன. மேலும் பீகிங் நகரே என்றும் சீனக் கலாசாரத்தின் வளர்ப்புப் பண்ணையாகும். புதிய சீனாவின் பெருமைகளைக் காணத் தக்க பெருங் காட்சிச் சாலையாகவும் இப்போது அது விளங்குகின்றது. பீகிங் நகர் எவர் வசம் உளதோ அவர் வசமே சீனாவும் இருக்கும். 'உலகிலேயே இரண்டு நகரங்கள் தாம் உண்டு. ஒன்று பாரிஸ், மற்றது பீகிங்' என்று பீகிங்கில் வசித்த ஒரு பிரெஞ்சுக்காரர் புகழ்ந் துள்ளார்.

இவற்றை யெல்லாம் பார்த்துவிட்டுப் போகும் வெளி நாட்டார்கள், தத்தம் நாடுகளில் சீனாவைப் பற்றியும், கம்யூனிஸ்ட் ஆட்சியைப் பற்றியும் புகழ்ந்து பேசிக் கம்யூனிஸ்ட் சீனாவுக்காகச் சம்பளமில்லாத பிர சாரகர்களாக விளங்குகிறார்கள். மூன்று அல்லது ஆறு வாரங்கள் சீனாவைச் சுற்றிப் பார்ப்பவர்களே உற்சாக மாக அதன் புகழ் பாடுகிறார்கள் என்றால், வெளிநாடு களிலுள்ள கம்யூனிஸ்டுகளைப் பற்றிச் சொல்ல வேண் டியதில்லை. ஒவ்வோர் ஆண்டிலும் பீகிங்கில் நடை பெறும் அக்டோபர் புரட்சியின் ஆண்டு விழாவுக்கு 75 நாடுகளிலிருந்து 3,500 பிரதிநிதிகள் செல்கின் றனர். 1959-இல் ஆப்பிரிக, ஆசிய நாடுகளிலிருந்து 38 குழுவினரும், வட அமெரிக்காவிலிருந்து 20 குழு வினரும், 19 மேற்கு ஐரோப்பிய நாடுகளிலிருந்து 10 குழுவினரும், நியூசிலந்திலிருந்து 4 குழுவினரும் சீனா வைச் சுற்றிப் பார்க்கச் சென்றிருந்தார்களாம்.

எந்தக் காலத்தில், எந்த நாட்டிலிருந்து இப்படி இலவச யாத்திரைக்கு அன்பர்களை அழைத்துச் செல்ல வேண்டுமென்று சீன அரசாங்கம் அவ்வப்போது திட்டமிட்டுக் கொள்கின்றது.

சீனாவிலிருந்தும் வெளி நாடுகளுக்குப் பல குழுவினர் ஆண்டுதோறும் சென்று வருகின்றனர். 1959-இல் 5,000 சீனர்கள் 45 நாடுகளுக்குச் சென்று சுற்றிப் பார்த்தனராம்.

## வர்த்தகத் தொடர்பு

பொருளாதார முறையிலும் சீனா பல நாடுகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றது. நாட்டில் உற்பத்தியாகும் விளைபொருள்களையும் ஆலைப்பொருள்களையும் ஏற்றுமதி செய்வதில் அது மிகவும் அக்கறைகாட்டிவருகின்றது. 1956-லிருந்து அதன் ஏற்றுமதிஉலகை அளாவியதாக விரிந்து வருகின்றது. தென்கிழக்கு ஆசியநாடுகள் சீனப் பொருள்களுக்கு ஏற்ற சந்தைகளாகி வருகின்றன. முன்பு அவைகள் ஜப்பானியப் பொருள்களை இறக்குமதி செய்து வந்தவை. அந்த வாணிபத்தை இப்போது சீனா கைப்பற்றியுள்ளது. பர்மா, மலாய் முதலிய நாடுகளுக்கும் சீனப்பொருள்கள் ஏராளமாகச் செல்கின்றன. மத்தியக் கிழக்கு நாடுகளிலும், தென் ஆப்பிரிகாவிலும் அப்பொருள்களுக்கு ஏற்ற இடங்கள் கிடைத்திருக்கின்றன. அமெரிக்காவை அடுத்துள்ள கியூபா தீவிலிருந்து ஆண்டுதோறும் ஐந்து லட்சம் டன் சீனி வாங்கிக் கொள்ளவும், அதற்குரிய விலையில் 100-க்கு 80 பங்கைச் சீனப் பொருள்களாக அனுப்பவும் 1961-இல் சீனா அதனுடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கின்றது.

சாமான்களை ஏராளமாக அனுப்புவதில், சீனா மற்ற நாடுகளின் விலைகளைவிடக் குறைத்தும் விற்கிறது

அசலுக்கும் குறைத்து விற்பதாகத் தெரிகிறது. முதலில் எப்படியாவது வாங்குவோர் தொகை பெருகட்டும் என்று அது கருதியிருக்கலாம். மேலும் அசல் விலையைக் கணக்கிடுவதிலும் உற்பத்திச் செலவைக் குறைத்துக் கணக்கிட்டுக் கொள்கின்றது. எகிப்தில் லட்சக் கணக்கில் சீனப் 'பௌண்டன்' பேனுக்கள் விலையாகின்றன. ஒன்றின் விலை ரூ. 7. கெய்ரோ தலை நகரத்து வியாபாரி ஒருவர் மட்டும் வருடத்திற்குப் பத்து லட்சம் பேனுக்கள் வரவழைத்து விற்கிறாராம். அங்கு இந்திய சைக்கிளின் விலையில் பாதி விலைக்குச் சீன சைக்கிள்கள் விற்பனையாகின்றன. காலால் மிதித்து ஓட்டும் சீனத் தையல் மிஷின் ரூ. 50-க்குக் கிடைக்கின்றது. சில நாடுகளுக்குச் சீனு அரிசி முதலிய உணவுப் பொருள்களையும் ஏற்றுமதி செய்கின்றது. பர்மாவில் அரிசி வாங்கி, கிழக்கு ஐரோப்பியக் கம்யூனிஸ்டு நாடுகளுக்கு அதை விற்று விடுகின்றது. வர்த்தகத்திலும் சீனு தன் அரசியல் கொள்கைக்கு ஆதரவு தேடிக்கொள்கின்றது.

## புத்தகங்கள், பத்திரிகைகள், நிருபர்கள்

அடுத்தாற்போல் கவனத்துக்குரிய விஷயம் சீனுவின் பிரசாரம். பல மொழிகளில் புத்தகங்கள், சிறு பிரசுரங்கள், பத்திரிகைகள் முதலியவற்றை மிக நேர்த்தியான முறையில் தயாரித்து அது வெளிநாடுகளுக்கு அனுப்பி வருகின்றது. அச்சுக் கலைக்கே தாயகம் சீனு. கண்ணைக் கவரும் வர்ணச் சித்திரங்கள் வரைவதில் சீனக் கலைஞர்கள் எக்காலத்திலுமே சிறந்து விளங்கியவர்கள். நல்ல படங்கள், புகைப் படங்கள் முதலியவற்றுடன் வெளிவரும் மலிவான சீனப் பிரசுரங்கள் பல நாடுகளிலும் வெள்ளமாகப்

பெருகி வருகின்றன. இவைகளோடு ஏராளமான சினிமா படங்களும் அனுப்பப்படுகின்றன.

வெளிநாடுகளிலிருந்து சீனப் பத்திரிகைகளுக்குச் செய்திகள் அனுப்புவதற்காகப் பல நிருபர்கள் அனுப்பப்பட் டிருக்கின்றனர். 'நவ சீனச் செய்தி ஏஜன்ஸி' என்ற ஒரு ஸ்தாபனத்திற்கு எகிப்து, ஸூடான், லெபனன், இராக், மொராக்கோ, கானு, கியூபா முதலிய பல நாடுகளிலும் சீன நிருபர்கள் இருக்கின்றனர். இவர்கள் செய்திகள் அனுப்புவதை மட்டும் தொழிலாய்க் கொண்டிருப்பதில்லை; கம்யூனிஸ்ட் சீனுவின் வலிமையையும் பெருமையையும் பிரசாரம் செய்கின்றனர்; அந்தந்த நாடுகளில் சீனுவுக்கு ஆதரவாளர்களைத் திரட்டுகின்றனர். உலகின் பல பாகங்களிலும் சீன நட்புறவுச் சங்கங்களை நிறுவுகின்றனர். இச்சங்கங்களின் மூலம் பின்னுல் நெருங்கிய அரசியல் தொடர்புகளுக்கு வாய்ப்பு ஏற்படும்படி அவர்கள் செய்துவருகின்றனர்.

எல்லாவற்றிற்கும் மேலாகப் பீகிங் ரேடியோ சீனச் செய்திகளை நாள்தோறும் பல மணிநேரம் வெளிநாடுகளுக்கு அறிவித்து வருகின்றது. பிரெஞ்சு, ஆங்கிலம், ஸ்பானிய மொழிகளிலும், அரபு, துருக்கிய மொழிகளிலும்கூட அதில் ஒலிபரப்புக்கள் செய்யப்படுகின்றன.

இவ்வாறு வெளி நாட்டார்களை வரவேற்று உபசரித்தனுப்புவதற்கும், வெளிநாடுகளில் பிரசாரம் செய்வதற்கும் ஆண்டுதோறும் சீன அரசாங்கம் ரூ. 128 கோடி செலவிட்டு வருகின்றது!

### சீன ராணுவம்

'அரசியல் ஆதிக்கியத்தைக் கைப்பற்றுவதும், பிரசினைகளைப் போரினுல் தீர்ப்பதுமே புரட்சியின் முக்

கியமான வேலை, அதுவே தலைசிறந்த முறை என்பது மாஸே-துங் வகுத்த கொள்கை. போரிடவும், பலாத்காரத்தால் எதிரிகளை அடக்கவும் சீனச் செஞ்சேனை 1927, ஆகஸ்ட் 1-ந் தேதி அமைக்கப்பெற்றது. அது ஆண்டுதோறும் வளர்ந்து, இப்போது உலகின் பெரிய படைகளில் ஒன்ருக உள்ளது. 1955, ஜூலை 30-ந் தேதி கட்டாய ராணுவ சேவை பற்றிப் பிரகடனம் செய்யப்பட்டது. பழைய ராணுவ வீரர்கள் பலர் ஆலைத் தொழில்களுக்கு அனுப்பப்பட்டனர். புதிய வாலிபர்கள் பலர் சேனையில் சேர்க்கப்பட்டனர். பயிற்சிக்குரிய லட்சக் கணக்கானவர்களுக்கு ஆங்காங்கே பயிற்சி நிலையங்கள் அமைக்கப்பட்டன. ஜனத்தொகையில் ஒவ்வோர் ஆண்டிலும் 20 வயதாகக்கூடிய வாலிபர் 50 லட்சம் பேர், தோன்றுவதால், கட்டாய ராணுவ சேவையில் அவர்களுக்கும் பயிற்சி அளிக்கப்படுகின்றது. கட்டாயத்திஞல் இராணுவ சேவைக்குச் சேரக்கூடியவர்களின் தொகை 8 கோடியாகும். இத்தனை பேர்களுக்கும் தளவாடங்கள், ஆயுதங்கள் கொடுக்கக்கூடிய நிலையில் அரசாங்கம் இல்லாததால், தேவைக்கு வேண்டிய அளவில் அவ்வப்போது பயிற்சி கொடுக்கப் பெறுகின்றனர். ஆயுதங்களுக்கும் தளவாடங்களுக்கும் சீஞ ரஷ்யாவையும், கிழக்கு ஜெர்மனியையும், செச்கோஸ்லோவேகியாவையும் எதிர்பார்த்து நிற்க வேண்டியிருக்கின்றது. இன்னும் பல ஆண்டுகளுக்கு இந்த வெளி உதவிகள் இன்றியமையாதவை.

கப்பற்படை, விமானப்படை ஆகியவற்றிற்குச் சீஞ ஸோவியத் பயிற்சியை எதிர்பார்க்கும் அளவுக்குத் தரைப் படைக்கு வெளி நாட்டாரின் பயிற்சி அவசியமில்லை. செஞ்சேனை நீண்டகாலம் போர்களில் ஈடுபட்டு அநுபவமும் பெற்றிருக்கின்றது. 'கொரில்லா'ப் போராட்டமும், ஆயிரக் கணக்கில் சிப்பாய்களை அணி

வகுத்து அலை அலையாக வெள்ளம்போல் பாயும்படி அனுப்புவதும் தரைப் படைக்குப் போதிய முறைகள் என்று கருதப்படுகின்றன. புதிய ஆயுதங்களில் பயிற்சி பெறவும், இராணுவ இயந்திர சாதனங்களைப் பயன் படுத்திக் கொள்ளவுமே வெளியார் உதவி தேவைப் படுகின்றது.

கம்யூனிஸ்ட் சீனாவில் எந்த நேரத்திலும் போருக்குத் தயாராயுள்ள நவீன ரஷ்ய ஆயுதங்களைத் தாங்கிய படையினர் 25 லட்சம் பேர்கள் இருக்கின்றனர். 4,000 போர் விமானங்கள் இருக்கின்றன. விமானப் பயிற்சி பெற்ற 75,000 பேர்களும் இருக்கின்றனர். கடற்படையில் பயிற்சி பெற்றவர்கள் 66,000 பேர்கள் இருக்கின்றனர். இராணுவத்திற்குத் தேவையான பயிற்சியும். தக்க வயதும் பெற்றவர்கள் 1,25,00,000 பேர்களும், பின்னணியில் பயிற்சி பெற்ற 3,00,00,000 பேர்களும் உள்ளனர். சீன ராணுவ வலிமை பற்றி அமெரிக்க நிபுணர்கள் இவ்வாறு கணக்கிட்டுக் கூறுகின்றனர்.

சீனாவின் கப்பற் படையிலுள்ள கப்பல்கள் முக்கியமாக ரஷ்யாரிடம் வாங்கியவை. நீர்மூழ்கிக் கப்பல்கள் யாவும் ரஷ்யாவில் தயாரானவையே. கப்பல் கட்டும் தொழில் சீனாவில் ஆரம்ப நிலையிலேதான் இருக்கின்றது. எனவே அமெரிக்கா, பிரிட்டன், ரஷ்யாவைப் போலச் சீனக் கப்பற்படை சமீப எதிர்காலத்தில் வளர்ச்சிபெற முடியாது.

சீனாவின் விமானப்படை உலகின் நான்காவது பெரிய படையாகக் கருதப்படுகின்றது.

கொரியா, இந்தோ சீனா முதலிய இடங்களில் சீனப் படைகள் போரிட்டதில் பல வெற்றிகள் பெற்றன. எனினும் சிப்பாய்கள் படையை விட்டு ஓடி விடுவதும், எதிரியிடம் சரணடைவதும் காணப்

பட்டன. பெரிய உலகப் போரில் சீனப்படை எப்படிப் போரிடும் என்பதும், எவ்வளவு தாக்குப் பிடிக்கும் என்பதும் அநுபவத்திலேதான் தெரியும்.

### கம்யூனிஸ்ட் கட்சி

சீனக் கம்யூனிஸ்ட் கட்சியில் 1,70,00,000 உறுப்பினர்கள் இருக்கின்றனர். ஜனத்தொகையில் இந்த எண்ணிக்கை சிறு பகுதிதான். 39 பேர்களில் ஒருவரே கட்சி உறுப்பினர் எனினும் உலகக் கம்யூனிஸ்ட் கட்சிகளில் சீனக் கட்சியே அளவில் பெரியது. அங்கத்தினர்களைச் சேர்த்தல் இடையிடையே நிறுத்தி வைக்கப்படுகின்றது. முன்சேர்ந்த அங்கத்தினர்களை முறைப்படுத்தி, அவர்களுக்குப் பயிற்சியளித்துக் கட்சியை நன்கு கண்காணித்துக் காப்பதற்காகவே இவ்வாறு நிறுத்தி வைத்தல் வழக்கமாயுள்ளது. அரசாங்கம் கட்சிக்கு அடக்கம்; அதுபோல் நாட்டின் எல்லாத் துறைகளிலும் கட்சியின் ஆதிக்கியம் பரவி நிற்கின்றது.

ரேடியோ, பத்திரிகைகள், பிரசுரங்கள் எல்லாம் கட்சியின் மேற்பார்வையிலேயே நடந்து வருகின்றன. அறிவாளிகள், படிப்பாளிகள், கலைஞர்கள் பலர் கட்சியில் சேராமல் விலகியிருப்பதைக் குறைத்து, அவர்களை அதிகமாய்ச் சேர்க்கவும் முயற்சிகள் நடந்து கொண்டேயிருக்கின்றன.

மற்ற கம்யூனிஸ்ட் நாடுகளில் கட்சித் தலைமைக் குழுவில் அடிக்கடி மாற்றங்கள் நிகழ்வது போலில்லாமல், சீனுவில் ஒரே தலைமைக் குழு 28 ஆண்டுகளுக்கு மேலாக இருந்து வருகின்றது. ஆதிக் கம்யூனிஸ்ட் தலைவர்கள் பலரும் இப்பொழுதும் உயர்ந்த மரியாதைக் குரியவர்களாகவே விளங்குகின்றனர்.

2,000 ஆண்டுகளாகச் சீன மக்கள் கன்பூஷியஸ்

முனிவரைப் போற்றி வந்தவர்கள். அவருடைய உபதேசங்களும், வாசகங்களும் அறிஞர்களுக்குத் தலை கீழ்ப் பாடமாகத் தெரியும். வீதிகளில் ரிக்ஷா இழுப்பவர்கள்கூடக் ''கன்பூஷியஸ் சொன்னபடி' என்று மேற்கோள்கள் கூறுவர். அத்தகைய பெரியாருடைய பீடத்தில்தான் இப்பொழுது கம்யூனிஸ்ட் மகரிஷி மா ஸே-துங் அமர்ந்திருக்கிறார். கன்பூஷியஸ் உலக வாழ்க்கைபற்றியும், ஒழுக்கம், நாகரிகம், குடும்ப ஒற்றுமை, நல்ல அரசாட்சி முதலியவை பற்றியும் தத்துவங்களைப் போதித்துப் பெருமைபெற்றார். ஆனால் மா-வுக்குத் துப்பாக்கியே தெய்வம். ஆயிரக்கணக்கான மக்களை அரிந்து தள்ளச் செய்வதே ஆராதனை. மார்க்ஸின் கம்யூனிஸ்ட் தத்துவங்களையும், ஏகாதிபத்தியவாதிகளின் ஏமாற்று வாசகங்களையும், தேசபக்தர்களின் வீர முழக்கங்களையும் ஒன்றாகக் குழைத்து அவர் புதிதாகக் கூறும் கொள்கைகளே மக்களுக்கு மந்திரங்கள். கன்பூஷியஸ் குடும்பங்களை அடிப்படையாகக் கொண்டு சமுதாயத்தை அமைத்தார். மா-குடும்பங்களைத் தகர்த்து வருகிறார். 'மனிதர்களுக்குள் உள்ள சம்பந்தத்தின் முதல் தத்துவம் நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருத்தல்' என்று கன்பூஷியஸ் உபதேசம் செய்தார். கம்யூனிஸ்ட் சீனாவை நம்பினால் தயங்கித் தவிக்க வேண்டியதுதான் என்ற அளவுக்கு உலகிலே பல நாடுகளும் புரிந்து கொள்ளும்படி மா ஸே-துங் தமது நாட்டைத் தயாரித்து வருகிறார். போரில் தர்மம், சத்தியம், கருணை, ஒழுங்கு எதையும் கவனிக்கக் கூடாது என்பது அவர் உபதேசம்.

பதின்மூன்று நூற்றாண்டுகட்கு முன்னால் சீனாவில் ஸியாங் குங் என்று ஒரு பிரபு இருந்தார். அவருடைய ஸுங் நாட்டின் மீது சூ-நாட்டு மன்னன் கி. மு. 638 இல் படையெடுத்து வந்தான். எதிரியின் படைகள்

ஓர் ஆற்றைக் கடந்து வரும்போது, ஸியாங் பிரபுவிடம் அவருடைய அதிகாரி ஒருவர், அப்போதே ஆற்றின் நடுவிலுள்ள அப்படைகளை அழித்துவிடலாம் என்று கூறினார். ஆனால் பிரபு அதற்குச் சம்மதிக்கவில்லை. ஆற்றினுள் சிதறி நிற்கும் படைகளை வதைப்பது கனவானுக்கு ஏற்றதன்று என்று அந்த யோசனையை மறுத்துவிட்டார். எதிர்ப்படைகள் கரையேறியதும், அதிகாரி, அப் படைகள் ஆயத்தமாவதற்கு முன் தாக்குதல் நலமென்று கோரினார். எதிரிகள் அணிவகுத்து நிற்பதற்குள் தாக்குதல் கனவானுக்கு ஏற்றதன்று என்று பிரபு மீண்டும் மறுத்துவிட்டார். எதிர்ப்படைகள் பிரபுவின் படைகளைவிட மிக அதிகமாயிருந்தன. கடும் போர் நடந்தது. ஸியாங் குங் படுதோல்வியடைந்ததுடன், உடலில் காயங்களும் பெற்றார். ஆயினும் தாம் தர்மத்தைக் கைவிடவில்லை என்று அவர் திருப்தியடைந்திருப்பார். 2,600 ஆண்டுகட்கு முன்பு இருந்த இந்த ஸியாங் குங் பிரபுவைக் கம்யூனிஸ்டுகள் பின்பற்றக் கூடாது என்று மாஸே-துங் எச்சரித்திருக்கிறார். அவர் கூறியிருப்பதாவது: 'நாம் ஸுங் நாட்டு ஸியாங் பிரபு அல்லர்; போரில் நன்மை, நியாயம், ஒழுக்கம் முதலிய அவருடைய முட்டாள்தனமான கொள்கைகள் நமக்குப் பயனற்றவை.' இராமாயணத்திலே, 'இன்று போய், நாளை வா!' என்று கோசல மன்னன் இராவணனுக்குக் கூறியதை இந்தியர் இன்றும் போற்றுகின்றனர். பாரதத்தில், 'ஐந்து ஊர் வேண்டு; அவை இல்லையெனில், ஐந்து இல்லம் வேண்டு; அவையும் இல்லையெனில் அடுபோர் வேண்டு!' என்று தர்மபுத்திரர் சொல்லியனுப்பியதில் பொறுமையின் ஆழத்தையும் எல்லையையும் காண்கிறோம். இவையெல்லாம் சீன ஞானி மா ஸே-துங்கின் நவீன சித்தாந்தப்படி முட்டாள்தனமான கொள்கைகள்! பொய், புலை,

வஞ்சனை, கொலை ஆகியவையே அறிவின் எல்லைகள், புதிய மனித தர்மத்தின் சிகரங்கள்!

சீன-ஜப்பான் யுத்தத்தில் சீன வாலிபர் படையைச் சேர்ந்த ஓர் இளைஞனை ஜப்பானியர் பிடித்து, அவனையும் ஒரு கிராமாதிகாரியையும் சேர்த்துக் காவலில் வைத்தனர். காவற்கூடத்திற்கு வெளியில் ஜப்பானியரின் கையாளான ஒரு சீனச் சிப்பாய் காவல் காத்து நின்றான். இளைஞன், இரவு நேரத்தில் காவற்காரன் உறங்கி விழுவதைக் கண்டு, தன் கூட இருந்த கிராமாதிகாரி தப்பியோடும்படி வழி செய்தான். ஆனால் அவருடன் தான் ஓடவில்லை. நேராகக் காவற்காரனிடம் போய் அவனை எழுப்பினான். கிராமாதிகாரி தப்பி யோடிவிட்டதை அறிவித்தான். 'இனி உன் பாடு அதோகதிதான்! காலையில் ஜப்பானியர்க்கு என்ன பதில் சொல்லுவாய்? இருக்கிற நிலையில் நீயும் என்னுடன் ஓடி வந்து விடுவதுதான் நலம்! வெளியே போய்க் கம்யூனிஸ்ட் படையில் நீயும் சேர்ந்துகொள்ளலாம்!' என்றான். வேறு வழியில்லை. காவற்காரனும் இசைந்து கிளம்பிவிட்டான். அப்போது இளைஞன், 'நமக்கு முக்கியமான பொருள் துப்பாக்கி! அதையும் எடுத்துக்கொண்டு வா!' என்று ஆலோசனை கூறினான். பிறகு காவற்கூடமே காலியாகிவிட்டது.

இந்த இளைஞன் உற்சாகத்தில் இப்படியெல்லாம் செய்திருக்கலாம். ஆனால் இதே போன்ற தந்திரங்களையே அரசியல் தர்மமாகப் பின்பற்றினால், நேபாவிலும், லடாக்கிலும், டில்லியிலும், லண்டனிலும், மாஸ்கோவிலும்-எங்கும் இவைகளையே பின்பற்றினால், சீனக் கம்யூனிஸ்டுகளை யார்தாம் நம்பப் போகின்றனர்? எவர் நம்பினாலும் நம்பாவிட்டாலும், துப்பாக்கிக் குழாயையே நம்பி யிருக்கும்படி மா ஸே-துங் போதித்துள்ளார்.

## தலைவர் மா ஸே-துங்

தலைவர் மா ஸே - துங் 1893-இல் ஹுனன் மாகாணத்தில் பிறந்தவர். அவருடைய பெற்றோர்கள் வாழ்க்கை வசதிகளெல்லாம் பெற்றிருந்தனர். ஆயினும் மா - சிறுவயதில் படிக்க மனமில்லாமல் பள்ளியை விட்டு ஓடிவந்துவிட்டார். அவருடைய பதினன்காவது வயதில் இருபது வயதுள்ள பெண் ஒருத்தி அவருக்கு மணம் செய்து வைக்கப் பெற்ருள். ஆனல் அவர் அவளுடன் வாழ மறுத்துவிட்டார். பின்னல் 1920-இல் பீகிங் சர்வகலாசாலைப் பேராசிரியர் ஒருவருடைய மகளான யாங் கை-ஹுயி என்ற பெண்ணை அவர் இரண்டாம் முறையாக விவாகம் செய்து கொண்டார். அவளைக் கோமிண்டாங் அரசாங்கம் கொலை செய்துவிட்ட பின், அவர் முதலில் ஒரு மாணவியையும், பின்னர் ஒரு சினிமா நடிகையையும் மணந்து கொண்டார்.

இளமையில் அவர் பல சமயங்களில் தம் அரசியல் கொள்கைகளை மாற்றிக்கொண்டு வந்தார். ஆனல் 1920 முதல் கம்யூனிஸமே பூரணமான புரட்சித் தன்மை வாய்ந்தது என்று அதிலேயே உறுதி கொண்டுள்ளார்.

அவருடைய நெடிய உருவமும், உருண்ட தோள்களும், இருபுறமும் தொங்கிக் கொண்டிருக்கும் நீண்ட கைகளும், பருத்த தலையும், சிறிய கண்களும் அவர் எத்தனை பேர் மத்தியிலிருந்தாலும் அவரை அடையாளம் தெரிந்துகொள்ளும்படி அமைந்திருக்கின்றன. ஆனல் குரல் மட்டும், பெரிய உடலுக்கு ஏற்றபடி கம்பீரமா யில்லாமல், கீச்சுக்குரலாக உள்ளது என்று நேரில் தெரிந்தவர்கள் சொல்கிருர்கள்.

மா - படைகளைத் தலைமை வகித்து நடத்தியிருக்கிருர். கொரில்லாப் போர் முறையில் அவர் தேர்ந்த

வர். அவர் அரசியல் ஞானி, கவிஞர், தத்துவ ஞானி என்ற பல முறையில் போற்றப்பட்டு வருகிறார்.

1949-இல் குடியரசை நிறுவிய பின், டிசம்பர் 16-ந் தேதி மா - ஸோவியத் ரஷ்யாவுக்குச் சென்று ஸ்டாலினுடன் இரண்டு மாதங்களுக்கு மேல் தங்கியிருந்தார். அப்பொழுதுதான் அவர் முதலாவது கம்யூனிஸ்ட் நாடான ரஷ்யாவையும் சுற்றிப் பார்க்க முடிந்தது. பின்னால் ஏழு ஆண்டுகள் கழிந்து, மீண்டும் அவர் அங்குச் செல்லவேண்டியிருந்தது. ஆனால் மா - தாம் நேரில் செல்லாமல் பிரதமர் சூ என்-லாயை அனுப்பி வைத்தார். அப்போது கம்யூனிஸ்ட் நாடுகளான போலந்தும் ஹங்கேரியும் ரஷ்யாவுக்கு எதிராகக் கிளம்பியிருந்தன. சூ-போலந்துக்கும் ரஷ்யாவுக்கும் மத்தியஸ்தம் செய்து வைத்தார். ஹங்கேரி 1956-இல் ரஷ்யாவுக்கு எதிராகப் புரட்சி செய்ததில், ரஷ்யா ஸோவியத் டாங்குகளை அனுப்பித் தலைநகரான புடா பெஸ்ட் நகரையே தகர்த்தெறிந்துவிட்டது. ஸ்டாலினுக்குப் பின்னால் ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகளிலும் மா ஸே-துங்கின் செல்வாக்கும் பரவலாயிற்று.

ரஷ்யாவில் லெனின் மரணத்திற்குப் பின்னால் கட்சித் தலைமைக்குப் போட்டி ஏற்பட்டது. ஸ்டாலினுக்குப் பின்னாலும் தலைமைக் குழுவில் பெருங் குழப்பம் தோன்றிய பிறகே குருஷ்சேவ் தலைமைப்பதவி ஏற்றார். சீனாவில் மாவுக்குப் பின்னால் குழப்பம் ஏற்படக்கூடும். மாவுக்கும் வயது எழுபத்து மூன்றாகின்றது.

### யதேச்சாதிகாரம்

கம்யூனிஸ்ட் தலைவர்கள் ஆரம்பத்தில் பெரிய புரட்சி வீரர்களாகவே தோன்றுகின்றனர். ஆனால் அவர்கள் பதவிகளில் அமர்ந்த பிறகு, அவர்களுடைய நிலைமையே மாறிவிடுகின்றது. இதற்கு மிகச் சிறந்த

உதாரணமாக ரஷ்யத் தலைவர் ஸ்டாலினையே குறிப்பிடலாம். சாகும்வரை ஒவ்வொரு விஷயத்திலும், அவர் சர்வாதிகாரியாகவே விளங்கினார். உள் நாட்டில் அவர் எந்தத் தலைவரையும் ஓரளவுக்குமேல் வளர விடவில்லை. சகல அதிகாரிகளையும், அதிகாரங்களையும் தன் கைக்குள்ளேயே வைத்திருந்தார். இராணுவத்திற்கும் தானே தலைவர் என்று கூறிக் கொண்டு 'மார்ஷ'லாக விளங்கினார். அப்போது பெரும் புகழ் பெற்ற ஸோவியத் தளபதிகள் கூடத் தம் கருத்துக்களை வெளியிட அனுமதி கிடையாது. ஸ்டாலினுக்கு மேலாக ராணுவ விஷயங்களில் அபிப்பிராயம் கூற யாரால் முடியும் என்றே பேசப்பட்டு வந்தது. இதனால் தளபதிகளும், சேனையின் தலைமைக் காரியாலய அதிகாரிகளும் ஸ்டாலின் இருக்கும்வரை ராணுவ விஷயங்களைப் பற்றிச் சிந்தனை செய்வதையே விட்டுவிட்டனர். ஸ்டாலினின் மறைவுக்குப் பிறகுதான் தளபதிகளின் அபிப்பிராயங்கள் ரஷ்யாவில் வெளிவருகின்றன.

சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்களான மா ஸே-துங், சூ என்-லாய், சூதேஹ், லியு ஷௌ-சி முதலியோரும் தீவிரப் புரட்சிக்காரர்களாகவே கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார்கள். கம்யூனிஸத்தைப் பிரசாரம் செய்ததால்தான் நாடுமுழுவதையும் அவர்கள் தங்கள் ஆதிக்கியத்தில் கொண்டுவருவது எளிதாயிற்று. வெறும் இராணுவப் போராட்டங்களால் மட்டும் இது முடிந்திராது. ஆனால் அவர்கள் ஆட்சிப்பீடங்களில் அமர்ந்த பிறகு எப்படிக் காட்சியளிக்கிறார்கள்? கார்ல் மார்க்ஸ் கூறியுள்ள கம்யூனிஸத்தின் தலைவர்களாகவா விளங்குகிறார்கள்? பழைய சீன ஏகாதிபத்தியவாதிகளாக அல்லவா விளங்குகிறார்கள்! நாடு பிடிக்கும் வேட்டையில் இறங்கிவிட்டார்கள்! அண்டை அயல் நாடுகளில் எவ்வளவு பகுதிகளைச் சீனாவுடன் சேர்த்துக் கொள்ள

முடியுமோ அவ்வளவையும் பிடிக்க முனைந்து நிற்கிறார்கள்! இதற்கும் கம்யூனிஸத்திற்கும் சம்பந்தமேயில்லை. இது ஏகாதிபத்திய வெறி. இந்த வெறியால் கம்யூனிஸத்திற்கு ஆசியாவிலும் உலகிலும் கெட்டபெயர்தான் பரவும். ஏகாதிபத்தியத்தை எதிர்க்கக் கிளம்பியவர்களே ஏகாதிபத்தியவாதிகளாக மாறிவிட்டால், பிறகு கம்யூனிஸம் எப்படிப் பிழைத்திருக்கும்!

'துப்பாக்கிக் குழாயிலிருந்துதான் அரசியல் வலிமை தோன்றுகின்றது.......துப்பாக்கிக் குழாயிலிருந்துதான் எதுவும் தோன்ற முடியும்' என்பது மாஸே-துங்கின் வாக்கு. கம்யூனிஸ்ட் புரட்சிக் கூட்டத்தார் பலாத்காரத்தின் மூலம் சமூகத்தை மாற்றியமைக்க முடியும் என்று நம்புவது வழக்கம்தான். ஆயினும் சீனக் கம்யூனிஸ்டுகளைப் போல் பலாத்காரத்தையே—துப்பாக்கிக் குழாயையே - கும்பிட்டு வணங்குவோர் இல்லை. பலாத்காரம் ஒரு வழியேயன்றி அதுவே குறிக்கோள் அன்று. உள்நாட்டில் பஞ்சத்திலும், பட்டினியிலும் கிடந்துழன்ற மக்களிடையே கம்யூனிஸ்ட் கொள்கையையும், துப்பாக்கியையும் பயன்படுத்திச் சீனத்தலைவர்கள் வெற்றி பெற்றது போலவே, உலக ஆதிக்கியத்திலும் வெற்றி பெற முயலுகின்றனர். இதனால் ஆசிய ஆப்பிரிக நாடுகள் பலவும் சீனாவின் உண்மை உருவைக் கண்டுகொண்டு, நாளடைவில் அதற்கு எதிராகவே சேரவேண்டியிருக்கும். நாடு பிடிக்கும் காலமும், ஏகாதிபத்தியக் காலமும் மலையேறிவிட்டன. பெரிய வல்லரசுகள் தாங்கள் நெடுங்காலம் ஆண்டுவந்த சிறு நாடுகளைக்கூட அடக்கி வைத்துக்கொள்ள முடியாமல் கைவிட்டு ஓடுகின்ற இன்றைய நிலையில், சீனா இந்த வேட்டையில் இறங்கியிருப்பது அது அழிவுப் பாதையில் திரும்பியுள்ளதையே காட்டுகின்றது.

## சீன ரஷ்ய உறவுகள்

'ரஷ்யாவைக் காட்டிலும் சீனுவில் தேசிய நன்மையிலுள்ள பற்றுதலே அதிகமாக ஆட்சிமுறையை ஆதரித்து நிற்கின்றது.'

— எட்கார் ஃபௌரே

---

கம்யூனிஸ்ட் சீனு பல நாடுகளுடன் உறவுகொண்டிருப்பதில், ஸோவியத் ரஷ்யாவுடனும், போலந்து, செக்கோஸ்லோவேகியா, கிழக்கு ஜெர்மனி, ருமேனியா, அல்பேனியா முதலிய ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகளுடன் கொண்டுள்ள உறவு மிக முக்கியமானது. இந்த உறவு அரசியல், பொருளாதாரக் காரணங்களுடன், கொள்கை சம்பந்தமான ஒற்றுமை மீதும் ஏற்பட்டது. அந்தப் பொதுவான கொள்கை கம்யூனிஸம். சீனக் குடியரசு ஏற்பட்டது முதல் அதற்கு ஸோவியத் உதவிகள் பல வகையில் கிடைத்து வந்தன. அவை கிடைத்திராவிட்டால், சீன முன்னேற்றம் என்பது பகற் கனவாகவே இருந்திருக்கும்.

பதினுயிரத்திற்கு மேற்பட்ட ஸோவியத் நிபுணர்கள் சீனுவுக்குச் சென்று தங்கி, அங்குள்ள செஞ்சேனைக்குப் பயிற்சி அளித்து வந்தார்கள். சீன விமானங்கள் யாவும் ஸோவியத்திடம் வாங்கியவை. இப்போது சீனச் செஞ்சேனை போதிய காலாட்படைகளும், ஏராளமான இயந்திர சாதனங்களும், விமானங்களும்

பெற்றிருந்த போதிலும், அதற்கு ஸோவியத் ரஷ்யா வின் உதவி தொடர்ந்தும் தேவையாக இருக்கின்றது. சீனு போரில் இறங்கினுல், எண்ணெய் ரஷ்யாவி லிருந்து கிடைத்து வரவேண்டும். இயந்திர சாதனங் களையும் விமானங்களையும் சில வாரங்கள் பயன் படுத்தியவுடன், பழுதுபோன பாகங்களை மாற்றி யமைக்க வேண்டும். இதற்கு ரஷ்யாவின் உதவி வேண் டும். 'சீன இராணுவத்தின் நாபிக் கொடி ரஷ்யத் தாயோடு ஒட்டிக்கொண்டிருக்கிறது' என்று ஒரு சீன அரசியல் நிபுணர் கூறியுள்ளார். சீனத் தரைப்படை கள் சுற்றியுள்ள நாடுகளில் அட்டகாசம் செய்ய முடி யுமேயன்றி, வெளியிலிருந்து சீனு மீது சாதாரண நாடு ஒன்று படையெடுத்தாலும், சீனு ஸோவியத் உதவியில் லாமல் எதிர்த்து வெல்ல முடியாது. மேற்கொண்டு தேவையான போர் விமானங்களையும், தளவாடங்களை யும் சீனு தானே தயாரித்துக் கொள்ளும்வரை இந்தச் சார்பு அவசியமாகும்.

சீனுவின் தொழில் வளர்ச்சிக்காக ரஷ்யா ஏராள மாகப் பொருள் கொடுத்து உதவியதுடன், தேர்ந்த தொழில் நிபுணர்களையும் அனுப்பிவைத்தது. 1956 வரை ரஷ்யா கடனுகக் கொடுத்தது ஆயிரம் கோடி ரூபாய்க்குமேலாகும். பின்னுலும் உதவியளித்துள்ளது. புதிய ரயில்பாதைகள் அமைத்ததிலும் ரஷ்யா பெரும் பங்கெடுத்துக் கொண்டது. இத்தகைய உதவிகளால் பொருளாதாரத் துறையிலும் சீனு ரஷ்யாவுடன் பிணைக்கப் பட்டிருக்கின்றது. ஐந்தாண்டுத் திட்டங் களின்படி சீனுவில் அமைக்கப்படும் பெருந் தொழிற் சாலைகளும், ரயில் பாதைகளும் ரஷ்யாவின் எல்லையை ஒட்டியிருக்கும் ஸிங்கியாங், வடக்கு மஞ்சூரியா, உள் மங்கோலியா மாகாணங்களிலேயே அதிகமாயுள்ளன. இந்த மாகாணங்களை அடுத்திருக்கும் தன் பிரதேசமான

சைபீரியாவில் ரஷ்யாவும் பெருந் தொழில்களையும், ரயில் பாதைகளையும் அமைத்துக்கொண்டிருக்கின்றது. ரஷ்யாவுக்கும் சீனுவுக்கும் நேரடியான தொடர்பு அமைந்துள்ளது. இந்த விஷயங்களை அரசியல் நிபுணர்கள் மிகவும் கவனிக்கிறார்கள்.

இராணுவத்தின் பயிற்சிக்கும், கனரகத் தொழிற்சாலைகளை நிறுவுவதற்கும், சீனர்களுக்குத் தொழிற் பயிற்சி யளிப்பதற்கும் பல்லாயிரம் ஸோவியத் நிபுணர்கள் சீனுவுக்கு வரவழைக்கப் பெற்றனர் என்றாலும், சீன அரசாங்கத்திற்கோ, அல்லது அதன் வெளிநாட்டு இலாகாவுக்கோ ஆலோசனை கூற ரஷ்யர் அழைக்கப்பெறவில்லை. தவிரவும் இராணுவத்திற்குப் பயிற்சி யளித்ததோடும், தொழில்களில் பயிற்சியளித்ததோடும் ரஷ்ய நிபுணர்களின் வேலை முடிந்தது. நாட்டின் அரசியலில் அவர்கள் நுழைய மாஸே-துங் விடவில்லை. இராணுவத் தலைமைக் குழுவினரின் மந்திராலோசனைகள் சீனர்களுக்குள் இரகசியமாக நடந்தனவேயன்றி, அவற்றிலும் ரஷ்ய நிபுணர்களுக்கு இடமில்லை.

விவசாய விருத்திக்குச் செலவிட வேண்டியதைச் சுருக்கியே சீனு தொழில்களில் ஏராளமாக மூலதனம் போடவேண்டி யிருக்கின்றது. அத்துடன் விவசாய விளைபொருள்களை ஸோவியத் தலைமையிலுள்ள கம்யூனிஸ்ட் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து, வேறு பொருள்களை அது இறக்குமதி செய்கிறது. இவ்வாறு இரண்டு பொறுப்புக்களையும் விவசாயம் நெடுங்காலம் தாங்கி யிருக்க முடியாது. விவசாயமும் தொழில்களும் போதிய அளவு முன்னேறுவதற்குச் சீனுவுக்கு ஸோவியத் முகாமிலிருந்து பெருவாரியான பொருளுதவி தேவையாகும். ஸோவியத் ரஷ்யாவும் விளைபொருள்களையே அதிகமாக ஏற்றுமதி செய்து, சீனுவைப்

போலவே இயந்திரங்கள், உலோகங்கள் முதலியவைகளை இறக்குமதி செய்து வருகின்றது. தகரம், கம்பளி, தோல், தேயிலை, உயிருள்ள பன்றிகள் முதலியவைகளையே யுத்தத்திற்கு முன்னால் ரஷ்யா வாங்கி வந்தது. இப்பொழுது முன்னைவிட அதிகமாக அவைகளையும் வேறு பொருள்களையும் வாங்கிக்கொள்ளலாம். ரஷ்ய வர்த்தகத்தில் ஐந்தில் ஒரு பகுதி அது சீனாவுடன் செய்து வரும் வாணிபம் என்று ஐக்கிய நாடுகளின் சபை கணக்கிட்டிருக்கிறது. ரஷ்யா ஏற்றுமதி செய்யும் பொருள்களில் கருவிகளும், இயந்திர சாதனங்களுமே அதிகம்.

ஸோவியத் ரஷ்யாவின் உதவியால் பெருந்தொழில்களை அமைத்துக்கொண்ட பின்பும், பாதுகாப்புக்குரிய செஞ்சேனையை அமைத்துக் கொண்ட பிறகும், சீனா முன்போல் ரஷ்ய உறவை உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொண்டிருக்குமா? சீன - ரஷ்ய உறவு இன்னும் பல்லாண்டுகள் நீடித்திருக்குமா? சீனா ரஷ்யாவுடன் நெருங்கி உறவாடுவதில் மற்றை உலக நாடுகளுக்கு நன்மையா, அல்லது அவைகளுக்குள் பிணக்கு ஏற்படுவதில் நன்மையா? இனியேனும் ரஷ்ய உதவி இல்லாமல் சீனா தனித்தியங்க முடியுமா?

## கொள்கை வேற்றுமை

சமீப காலத்தில் ஸோவியத் ரஷ்யாவுக்கும் சீனாவுக்குமிடையே கொள்கை வேற்றுமை வளர்ந்து வருவதாகப் பத்திரிகைகளில் அடிக்கடி செய்திகள் வந்தன. ஒரு சமயம் ரஷ்யத் தலைவர் குருஷ்சேவ் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியைத் தாக்கி விளாசிப் பேசினார். உடனே சீனத் தலைவர் மாஸே-துங், 'ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சி புரட்சிகரமான நோக்கத்திலிருந்து விலகி விட்டது; கொள்கையில் பின்னேற்றம் ஏற்பட்டு

விட்டது' என்று சீனப்பத்திரிகைகள் மூலம் சுடச்சுடப் பதிலளித்தார். சில சமயங்களில் குருஷ்சேவ் செக்கோஸ்லோவேகியத் தலைவர் மூலம் தாக்கினுர்; மா-அல்பேனியத் தலைவர் மூலம் தாக்கினுர். கம்யூனிஸ்ட் நாடுகளின் பிரதிநிதிகள் மகாநாடாகக் கூடி இக் கொள்கை வேற்றுமைகள் பற்றி விவரமாக விவாதிக்க வேண்டும் என்று சீனு கோரிற்று. குருஷ்சேவ் சீன-ரஷ்யக் கட்சிகள் முதலில் நேரிலே பேசித் தீர்த்துக்கொள்ளலாம் என்று கூறினுர். இவை யெல்லாம் வெளியுலகுக்காக நடித்துக் காட்டப்பெற்ற நாடகங்கள் அல்ல. உண்மையிலேயே இரு நாடுகளுக்குள்ளும் கொள்கை வித்தியாசங்கள் விளைந்து விட்டன. வெளிப்படையாகச் சண்டை போட்டுக்கொள்ள வேண்டிய அளவுக்கு அவை அவ்வளவு முக்கியமானவையா? அவ்வாறில்லையென்ருல், இரு பெரும் கம்யூனிஸ்ட் நாடுகள் உலகறிய மோதிக்கொள்ளவேண்டிய அவசியமில்லை.

48 ஆண்டுகளாகத் தொழில்களிலும், வலிமையிலும் வளர்ந்தோங்கியுள்ள ஆதிக் கம்யூனிஸ்ட் நாடாகிய ஸோவியத்தைப் புதிய கம்யூனிஸ்ட் நாடான சீனு எதிர்த்துப் பேசத் துணிந்தது வியப்புக்குரிய விஷயமே. ரஷ்யக் கொள்கையில் தவறிருந்தாலும்கூட, தன் அரசியல், பொருளாதாரத் தேவைகளுக்காகச் சீனு அடக்கத்துடன் மௌனமா யிருந்துவிடக் கூடாதா? ரஷ்யாவைத் தட்டிக் கேட்கக்கூடிய வல்லமை தனக்கு வந்து விட்டதாகச் சீனு கருதியது என்பது இதிலிருந்து தெளிவாய்த் தெரிகின்றது.

## கியூபா நிகழ்ச்சி

கியூபா விஷயமாகச் சீனுவும் ரஷ்யாவும் பூசலிட்டுக் கொண்டன. சுமார் அறுபது லட்சம் ஜனத்தொகையுள்ள கியூபா பஸிபிக் கடலில் அமெரிக்க ஐக்கிய

நாட்டுக்கு அருகிலுள்ள ஒரு தீவு. அந் நாட்டு அதிபர் காஸ்ட்ரோ, தம் நாட்டில் கம்யூனிஸ்ட் அரசாங்கத்தை நிறுவிக்கொண்டு, ஸோவியத் உதவிகளைப் பெற்று வருகிறார். கியூபா 44,206 சதுரமைல் விஸ்தீரண முள்ள சிறு தீவாயினும், அங்கிருந்து கொண்டே அவர் நாள்தோறும் வல்லரசாகிய அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சண்டைக்கு அறைகூவி அழைத்துக் கொண்டே யிருக்கிறார். கியூபா காரணமாக அமெரிக்கா உலகப் போரில் குதிக்கத் தயாராயில்லை. ஆனால் அங்கு நடப்பதை யெல்லாம் உன்னிப்பாய்க் கவனித்துக்கொண்டே யிருக்கின்றது. இந்நிலையில் ஸோவியத் ரஷ்யா கியூபாவில் ஏராளமான ஏவுகணைகள் முதலிய போர்க் கருவிகளைப் பல இடங்களில் குவித்து வைக்க ஏற்பாடு செய்தது. அமெரிக்கா அக் கருவிகள் யாவும் தனக்கு எதிராக ஆயத்தமானவை என்பதைக் கண்டு கொண்டது. 1962, செப்டம்பரில் புதிதாக ஆயுதங்களையும் ஏவுகணைகளையும் ஏற்றிக்கொண்டு கியூபாவை நோக்கி வந்து கொண்டிருந்த ரஷ்யக் கப்பல்களைப் போதிய முன்னறிவிப்புடன் அமெரிக்கா தடுத்து நிறுத்திவிட்டது. இந்த நடவடிக்கையை எடுத்துக்கொள்ள முந்திய அமெரிக்க ஜனாதிபதி கென்னடி எல்லையற்ற துணிவுடன்தான் முனைந்திருக்க வேண்டும். ஏனெனில் அதுவே மூன்றாவது உலகப் போரின் ஆரம்பமாகியிருக்கும். ஆனால் குருஷ்சேவ் தம் ரஷ்யக் கப்பல்கள் கியூபா செல்லதபாடி அவைகளைத் திருப்பி யழைத்துக் கொண்டார். கப்பல்களை அனுப்பும்போது, எவர் தடுத்தாலும் அவை கியூபாவை அடைந்தே தீரு மென்று வீரம் பேசிய குருஷ்சேவ் பின்வாங்கி விட்டார். இந்த விவகாரத்தில் யார் கெட்டிக்காரர் என்று பார்க்க வேண்டிய அவசியமில்லை. இரு பெருந் தலைவர்களுடைய செய்கைகளால் உலகம் போர

லிருந்து அப்பொழுது தப்பியதுதான் முக்கியம். வாயால் மிரட்டிக் கொண்டேயிருந்த குருஷ்சேவுக்குக் கென்னடி ஒதுங்கி இடம் கொடுத்துக் கொண்டேயிருந்தார். ஆனால் நிலைமை எல்லை கடந்து முற்றி விட்ட பிறகு, 'வந்து பாருங்கள்!' என்று அவரும் சவால் விடத் துணிந்துவிட்டார். அவரைப் போலவே குருஷ்சேவும் சவாலை ஏற்றுக்கொண்டு துணிந்து எதிர்த்து நின்றிருந்தால், போரினால் இதற்குள் உலகில் பெரும் பகுதி நாசமாகி யிருந்திருக்கும். கியூபா காரணமாக உலகப் போர் ஏற்பட்டு விடுமென்று அஞ்சிக் கொண்டிருந்த உலக மக்களுக்குக் குருஷ்சேவின் செயல் ஆறுதலளித்தது.

இந்தச் செயலைத்தான் சீனா கண்டிக்கின்றது. அமெரிக்காவை எதிர்த்து ரஷ்யா ஒரு கை பார்த்திருக்க வேண்டும் என்று கூறுகின்றது. அணுகுண்டுப் போருக்கும், ஏவுகணைகள் பாய்வதற்கும் அஞ்சாமல் போரை நடத்தியிருக்க வேண்டும் என்பது அதன் கருத்து.

கியூபாவுக்கு ரஷ்யா ஏவுகணைகள் முதலியவற்றை அனுப்பியது நியாயமா என்றால், அமெரிக்கா ஐரோப்பிய நாடுகளில் தன் ஏவுகணைகளைக் குவித்து வைத்திருப்பது நியாயமா என்று பதில் கேள்வி பிறக்கும். நியாயம், அநியாயம் ஒருபுற மிருக்க, உலகிற்கே நெருக்கடியான ஒரு நிலைமை ஏற்பட்ட பொழுது, குருஷ்சேவ் நடந்து கொண்ட முறையைப் பெரும்பாலான உலக மக்கள் பாராட்டினார்கள். ஆயினும், சீனா, அமெரிக்கா வெறும் அட்டைப் புலி, அதற்கு அஞ்சக் கூடாது என்று கூறி வந்தது. இதற்குப் பதிலாகத் தான் குருஷ்சேவ், அந்த அட்டைப் புலிக்கு 'அணு குண்டுப் பல்' இருக்கிறது என்று எச்சரிக்கை செய்தார்.

சீனா கியூபாவுடன் நெருங்கி உறவாடிக்கொண்

டிருக்கின்றது. கியூபாவின் அதிபர் காஸ்ட்ரோ கம் யூனிஸ்ட் நாடுகளிலிருந்து ரூ. 130 கோடிக்கு மேல் பெறுமானமுள்ள ஆயுதங்களை வாங்கி வைத்திருக் கிறார். பழைய பட்டாளங்களை நம்பாமல், புதிதாக ஐந்து லட்சம் தொழிலாளர், குடியானவர்களைக் கொண்டு செஞ்சேனை ஒன்றை அமைத்துக் கொண்டு வருகிறார். அவருக்கு நாட்டில் எதிர்ப்பும் வளர்ந்து வரு கின்றது. இந்நிலையில் கியூபாவைக் கருவியாக வைத் துக் கொண்டு அமெரிக்காவை எதிர்க்காமல் விலகியது குற்றம் என்று சீனு ரஷ்யாவைக் கண்டிக்கின்றது.

**ரஷ்ய மக்களின் நிலை**

இன்றைய ரஷ்யா லெனின் காலத்துப் புரட்சிகர மான நாடன்று; ஸ்டாலின் காலத்தில் பெட்டிப் பாம்பு போல் அடங்கி, இட்ட பணிகளை யெல்லாம் நிறைவேற்றி வந்த நாடு மன்று. ஓரளவு சுகமான வாழ்க்கையை விரும்பும் நாட்டையே நாம் காண் கிறோம். அதற்கேற்றபடிதான் தலைவர் குருஷ்சேவும் நடந்து கொள்ள முடிந்தது. ரஷ்ய மக்களும், அவர் கள் தலைவரும் போரில்லாத சமாதானத்தையே விரும்புகின்றனர். மற்ற நாட்டார்களைப் போலவே மூன்றாவது உலகப் போருக்கு அவர்களும் அஞ்சுகின்ற னர். எனவே குருஷ்சேவ் மேலை நாடுகளுடன் 'சமா தான சகவாழ்வு'க் கொள்கையை ஏற்றுக் கொண் டிருந்தார். முதலாளித்துவ நாடுகளுடன் சக வாழ்வு கூடாது என்றும், அவைகளுடன் போராடிக் கொண்டே யிருக்க வேண்டும் என்றும் சீனு கூறிற்று.

சீன ரஷ்ய உறவு நீடித்து நிற்பதற்குப்பல காரணங் கள் இருக்கின்றன. ஆயினும் அவைகளுக்குள் போட் டியும் பூசலும் ஏற்படுவதற்கும் போதிய காரணங்கள் இருக்கின்றன. ஒற்றுமை நிலவுமா, பூசல் விளையுமா

என்பது இரு நாடுகளின் நடத்தையைப் பொறுத்திருக்கின்றது.

ஸ்டாலினுக்குப் பின்னால் குருஷ்சேவின் தலைமையில் ரஷ்யாவில் பல மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இம் மாற்றங்கள் ஏற்படாதபடி நெடுநாளாகத் தடுத்து வந்தது ஸ்டாலின் சர்வாதிகாரம். பெரும்பாலான மக்கள் பூரணமான சர்வாதிகாரத்தி லிருந்து ஓரளவு விடுபட்டிருக்க ஆவல் கொண்டிருந்தனர். நிலைமையை அறிந்து குருஷ்சேவும் பழைய முறைகளை மாற்றி விட்டார். முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக ரஷ்ய மக்கள் தாய்நாட்டிற்காகவும், கம்யூனிஸத்திற்காகவும் பெருந் தியாகங்கள் செய்து, தாங்கொணாத கொடுமைகளையெல்லாம் தாங்கி வந்தனர். 1953-க்குப் பின் அவர்கள் நன்றாக மூச்சு வாங்க அவகாசம் கிடைத்தது. ஓரளவு சுதந்தரத்தை அநுபவித்த பிறகு, இப்பொழுது அவர்கள் மேற்கு ஐரோப்பிய நாட்டினர்களைப் போலச் சுகவாழ்வு வாழ விரும்பினால் ஆச்சரியமில்லை. கொள்கைக்காக முன்போல் அவர்கள் எல்லாவற்றையும் தியாகம் செய்வார்களென்று இனி எதிர்பார்க்க முடியாது.

## சீனக் கம்யூனிஸம்

ஆனால் சீனா கம்யூனிஸ்ட் பாதையில் பூரணமாக இறங்கிப் பதினாறு ஆண்டுகளே ஆகின்றன. அதனால் சீனக் கம்யூனிஸ்டுகள் இளமை வெறியுடன், துடுக்கும் மிடுக்கும் பெற்றிருப்பதும் இயல்புதான்.

சீனாவுக்கும் ரஷ்யாவுக்குமுள்ள கொள்கை வேற்றுமைகள் கியூபா நிகழ்ச்சியிலிருந்து மட்டும் ஏற்பட்டவையல்ல. ரஷ்யக் கம்யூனிஸத்திற்கும் சீனக் கம்யூனிஸத்திற்கும் அடிப்படையிலேயே வேற்றுமையுண்டு. பாட்டாளி மக்களின் சர்வாதிகாரத்தின் மூலமே கம்

யூனிஸத்தை ஏற்படுத்த முடியுமென்பதை லெனின் அழுத்தம் திருத்தமாக விளக்கிச் செயலிலும் செய்து காட்டியுள்ளார். சீனுவில் ஏற்பட்டிருப்பது 'பாட்டாளி மக்களின் சர்வாதிகாரம்' அன்று; முதலாளி வர்க்கத்தினர், நடுத்தர வகுப்பினர், குடியானவர், பாட்டாளிகளைச் சேர்த்து அமைத்துள்ள கம்யூனிஸ்ட் கட்சியின் சர்வாதிகாரமாகும். இந்த முறையினுல் நாளடைவில் மற்ற வகுப்பாரிடையிலும் பூரணமான கம்யூனிஸம் பரவிவிடும் என்று மாஸே-துங் புது வழி வகுத்துள்ளார். மேலும் ரஷ்யாவில் 'பூர்ஷுவாக்க'ளின் எதிர்ப்பு அதிகமிருந்ததால் பாட்டாளி மக்களின் சர்வாதிகாரம் அவசியமாயிற்று என்றும், சீனுவில் 'பூர்ஷுவாக்கள்' சக்தி குன்றிக் கிடப்பதால், அது அவசியமில்லை என்றும் சீனக் கம்யூனிஸ்டுகள் விளக்கம் கூறினர். 'பாட்டாளி மக்களின் சர்வாதிகார'த்திற்குப் பதிலாகச் சீனுவில் 'பாட்டாளிகளை முதன்மையாய்க் கொண்ட சர்வாதிகாரம்' ஏற்பட்டிருப்பதாக அவர்கள் பிரசாரம் செய்தனர். முன்னுல் கம்யூனிஸம் என்பது கார்ல் மார்க்ஸ் கூறியது மட்டுமன்று; லெனின் கூறியுள்ள விளக்கத்தையும் அத்துடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். அது மட்டுமன்று; ஸ்டாலின் கருத்துப்படி அது மாஸ்கோவின் அங்கீகார முத்திரையையும் பெற வேண்டும். இப்பொழுது அந்த நிலை மாறிவிட்டது. இனி பீகிங்கின் முத்திரை பெறவேண்டும்.

## கம்யூனிஸமும் தேசிய நலன்களும்

யுகோஸ்லேவிய நாட்டுக் கம்யூனிஸ்ட் அதிபரான டிட்டோ ஸோவியத் முறையை எதிர்த்துத் தமது நாட்டிற்கு ஏற்ற முறையில் அதை மாற்றி யமைத்துக் கொண்டார். இதற்காக ரஷ்யாவும், சீனுவும் அவரை

ஏசித் தாக்கி வந்ததற்கு அளவேயில்லை. ஆனால் குருஷ் சேவ் டிட்டோவுடன் சமாதானம் செய்து கொண்டு, அவரை 1963 தொடக்கத்தில் ரஷ்யாவுக்கு அழைத்து, விசேட மரியாதைகள் செய்தார். சீனா மட்டும் இன்னும் டிட்டோவையும், அவர் நாட்டையும் தாக்கிப் பேசுவதை நிறுத்தவில்லை. மற்றொரு சிறு கம்யூனிஸ்ட் நாடான அல்பேனியாவைச் சீனா தாங்கிப் பிடித்து மடியில் வைத்துக் கொஞ்சுகின்றது. குருஷ்சேவ் அல்பேனியா என்ற பெயரைக் கேட்டாலே சீறிப் பாய்ந்து வந்தார்.

இவ்வாறு கொள்கையிலும் கருத்திலும் வேற்றுமைகள் பல இருக்கின்றன. நாடுகளின் வல்லமையைப் பொறுத்து அவைகளின் கொள்கைகள் நிலைக்கலாம், அல்லது விழலாம். ஸ்டாலினுக்குப் பின்னால் ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சியைப் பார்க்கிலும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியே முனைப்பாக நின்றது. ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சிக்குள்ளேகூடச் சீனருக்கு ஆதரவாளர் இருப்பதாகச் சொல்லப்பட்டது. ரஷ்யத் தலைவர் குருஷ்சேவ் தம் நாட்டில் தமது செல்வாக்கை நிலைநிறுத்திக் கொள்வதிலும், கிழக்கு ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகளை இணைத்து இழுத்துக்கொண்டு போவதிலும், மேற்கு ஜெர்மனி முதலிய மேலைநாடுகளுடன் பொருதுவதிலும் தமது காலத்தைக் கழித்துக் கொண்டிருக்க வேண்டியிருந்தது. சில சமயங்களில் அவரே சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் உதவியை நாடவும் வேண்டியிருந்தது. ஸ்டாலினுக்குப் பின் உலகக் கம்யூனிஸ்ட் தலைவராக அதிகாரத்தோடு விளங்குபவர் மா ஸே-துங்கே என்று பலரும் அபிப்பிராயப்படுகின்றனர். ஆனால் மா-ஸ்டாலினைப் போல் இல்லை. 'சீன லெனின்' என்றே அவரைச் சீனக் கம்யூனிஸ்டுகள் குறிப்பிடுகின்றனர்.

கொள்கை வேற்றுமைகள் எப்படியிருந்த போதிலும், குருஷ்சேவ் சீனர்களைச் 'சீனச் சகோதரர்கள்' என்றும், இந்தியர்களை 'இந்திய நண்பர்கள்' என்றுமே குறிப்பிட்டு வந்தார். 'பிராவ்தா' முதலிய ரஷ்யப் பத்திரிகைகளும் அப்படியே தவருமல் குறிப்பிட்டன. எனினும் சகோதரர்களுக்குள்ளும் பகைமை ஏற்படுவதைச் சரித்திரத்தில் காண்கிறேம். ரஷ்யாவிலும் தேசியப்பற்று உச்ச நிலையில் இருந்து வருகின்றது; சீனவிலும் தேசியத்தைக் கொண்டே கோடிக்கணக்கான மக்களை ஐக்கியப்படுத்தி முன்னே செலுத்த முடிகின்றது. முன்னுள் பிரெஞ்சுப் பிரதம மந்திரி ஒருவர் கூறியது போல், ரஷ்யா என்ருல் 'கம்யூனிஸம்+ரஷ்ய தேசியம்' சீன என்ருல் 'கம்யூனிஸம்+சீனத்தேசியம்'. இதுதான் உண்மையான நிலைமை. கம்யூனிஸத்தால் ஒற்றுமை ஏற்பட்டது; ஆனல் இருவகைத் தேசியங்களும் முரண்பாடுள்ளவை.

## போட்டிகள்

சீனவும் ரஷ்யாவும் அண்டை நாடுகள். இரண்டுக்கும் பொதுவான நீண்ட எல்லையுள்ளது. ஒன்றின் எல்லைப்புற ராஜ்யங்களில் மற்றதன் கண்பார்வை இருந்து கொண்டேயிருக்கின்றது. இது இன்று நேற்றுத் தோன்றிய விஷயமன்று. பண்டைக்காலம் முதலே இந்த முரண்பாடு நிலைத்திருக்கின்றது.

இந்த நிலையில் ரஷ்யாவைக் காட்டிலும் சீன அதிக வல்லமையும் செல்வாக்கும் பெற்று, ஆசியா மட்டுமின்றி, ஐரோப்பாவிலும் தலையிடுகையில், இதுவரை ஐரோப்பிய விவகாரங்களில் ஆதிக்கியம் செலுத்தி வந்த ரஷ்யா பின்னடைந்து ஒதுங்கிவிட முடியுமா? அல்லது சீன தனக்கு அருகிலுள்ள தென்

கிழக்கு ஆசிய நாடுகளில் மட்டும் தன் செல்வாக்கைப் பரப்பிக்கொண்டு, அதுவே போதுமென்று ஒதுங்கி வாழ முடியுமா?

ஸோவியத் ரஷ்யாவின் நிலப்பரப்பு ஐரோப்பாவி லும் ஆசியாவிலும் பரந்திருக்கின்றது. அது மேற்கு ஐரோப்பிய நாடுகளுடன் சேர்ந்து வாழ்வது நலமா, அல்லது சீனுவுடன் சேர்ந்து வாழ்வது நலமா என்ற பிரசினை 1949-க்குப் பின் தோன்றிவிட்டது. கம்யூ னிஸ்ட் சீனுவைக் கட்டியிழுப்பதைவிட மேலே நாடு களைச் சரிக்கட்டிக் கொள்வதுதான் எளிது என்பதை ஸோவியத் தலைவர்கள் விரைவிலே தெரிந்து கொண் டார்கள். அதனுல்தான் மேலே நாடுகளின் பிரசினை களை விரைவில் முடித்துக்கொண்டு, சமாதான வாழ் வுக்கு அடிகோலுவதில் குருஷ்சேவ் இடைவிடாது முயன்று வந்தார். சீனு கம்யூனிஸ்ட் தோழன் என்ற முறையில் அதற்கும் உதவி செய்ய வேண்டியதுதான்; ஆனுல் அதையே நம்பி நெடுந்தூரம் காலை விட்டுக் கொண்டு விழிக்கக்கூடாது என்பதையும் அவர் புரிந்து கொண்டார்.

சீனுவும் ரஷ்யத் தலைவர்களின் போக்கை உணராம லில்லை. வெளிப்படையாக இரு நாடுகளும் எவ்வளவு நெருங்கிய 'சகோதரர்க'ளாயிருந்தாலும், அடிப்படை யான வேற்றுமைகளை இரண்டும் தெரிந்திருக்கின்றன. வெளியில் தோழமை, உள்ளூறப் போட்டி. இந்தப் போட்டி காரணமாகவே மாஸே-துங் சீனுவில் திடீ ரென்று விவசாயக் கம்யூன்களை அமைக்க ஏற்பாடு செய்தார். 40 ஆண்டுகளாக ரஷ்யாவே செய்து முடிக் காத 'கம்யூன்' அமைப்பைச் சீனு முன்னதாகச் செய்து காட்டவேண்டும் என்று அவர் முனைந்தார். பல காரணங்களால் அதில் அவர் வெற்றி பெற முடிய வில்லை. குடியானவர்கள் 'கம்யூன்க'ளில் சிரத்தை

கொள்ளவில்லை. அரசாங்கத்திற்கும் இதனல் தோல்வியே ஏற்பட்டது.

குருஷ்சேவும் ரஷ்யாவில் ஏழாண்டுத் திட்டம் ஒன்றைத் தொடங்கினர். இத்திட்டம் மிக முக்கியமானது, ரஷ்ய மக்களின் சுக வாழ்வுக்கு ஆதாரமானது. பல்லாயிரம் ரஷ்ய வாலிபர்களைத் தூண்டி, சைபீரியாவில் குடியேறி, அங்கே புதிய தொழில்களை அமைக்கவும் குருஷ்சேவ் ஏற்பாடு செய்தார். வான மண்டல ஆராய்ச்சியில் ஸோவியத் விஞ்ஞானிகளை ஊக்குவித்துச் சில அதிசயங்களைச் செய்து காட்டினர். சீனவும் இவைகளைக் கண்டு வியப்படைந்திருக்கும்.

ரஷ்யாவின் கிழக்குப் பகுதியான சைபீரியா 75 லட்சம் சதுர மைல் பரப்புள்ளது. அந்தப் பெரிய நாட்டில் 2 கோடி மக்களே குடியேறிருக்கின்றனர். கோடிக்கணக்கான சீன மக்களுக்கு நாட்டைவிட்டு வெளியேறி வசிப்பதற்கு இடமில்லாதிருக்கையில், சீனக் கம்யூனிஸ்ட் தலைவர்களுக்கு சைபீரியா பற்றிய நினைவு இருந்துவருதல் இயற்கை. ஜப்பானுக்கும் சைபீரியாவைப் பற்றிய ஆசையுண்டு. ஆனல் இது வரை சீனக் கம்யூனிஸ்டுகள் எவரும் சைபீரியப் பிரசினையை வெளிப்படையாக எழுப்பவில்லை; அடக்கமாகவே வைத்துக்கொண்டிருக்கின்றனர்.

சீன, கொள்கை ஒரு புறமிருக்க, ஜப்பானுடன் நெருங்கி ஒத்துழைக்கும்படியான காலம் வந்தால், இரண்டு நாடுகளும் முதலில் சைபீரியாவை வசப்படுத்திக் கொள்ளவே விரும்பும். சீனத் தொழில் முன்னேற்றத்திற்கு ஜப்பானின் ஒத்துழைப்பு அவசியம். ஜப்பான் அளவில் சிறிதாயினும், பெரும் தொழில் வளத்தைப் பெற்றுள்ளது. சீன அளவில் பெரிதாயினும், தொழில் வளத்தில் சிறியது. இவ்விரு நாடுகளும் ஒத்துழைக்கத்

தீர்மானித்தால், ஆசியப் பொருளாதாரத்திலேயே பெரும் புரட்சி ஏற்பட்டுவிடும்.

இதேபோல் ரஷ்யாவும், கொள்கை ஒருபுறமிருக்க, அமெரிக்காவுடன் ஒத்துழைக்க முன் வந்தால், அதுவும் உலகுக்குப் புரட்சிகரமான மாறுதலாகவே யிருக்கும். சீனத் தலைவர்களும், ரஷ்யத் தலைவர்களும் காரியவாதிகள்; கண் முன்பு காணும் நிலைமையை விட்டுக் கனவு கண்டு ஏமாறுபவர்கள் அல்லர். அதனால் சீன-ஜப்பான் கூட்டுறவும், ரஷ்ய-அமெரிக்கக் கூட்டுறவும் ஏற்படுவதில் வியப்பில்லை என்று பிரெஞ்சு அரசியல் நிபுணர் ஒருவர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்.

## எல்லைப்புற நாடுகள்

மஞ்சூரியா: இரண்டாவது உலகப் போருக்குப் பின்னால் ஜப்பான் வசமிருந்த மஞ்சூரிய நாடு சீனாவுக்குத் திரும்பக் கிடைத்தது. இது இப்போது சீனக் குடியரசின் ஒரு மாகாணம். இது பிரான்ஸும் ஜெர்மனியும் சேர்ந்தால் எவ்வளவு பெரிதாயிருக்குமோ அவ்வளவு பரப்புள்ளது. இயற்கை வளங்கள் நிறைந்திருப்பதோடு, பாதுகாப்புக்கும் இது முக்கியமானது. சீனா, ரஷ்யா, ஜப்பான் மூன்றுக்கும் இது சம்பந்தமாக 1890-லிருந்தே போட்டி அதிகம். பெரும்பாலும் சீன மக்களே இங்கு வசிக்கின்றனர். பின்னால் ஜப்பானியர்களும், ரஷ்யர்களும், சில கொரிய நாட்டு அகதிகளும் இங்கு வந்துள்ளனர்.

இரண்டாவது உலகப்போரில் இதைக் கைப்பற்றியிருந்த ரஷ்யத் துருப்புக்கள் சமாதானம் ஏற்பட்டதும், இதைக் காலி செய்து விட்டன. பின்னாலும் ரஷ்யா இந்தப் பிரதேசத்தில் தனக்கிருந்த ரயில்வே முதலிய உரிமைகளையும் விட்டுக் கொடுத்துவிட்டது. எனினும் ரஷ்ய நாட்டின் பாதுகாப்புக்கும் இது மிக

முக்கியமானது என்றே ஸோவியத் தலைவர்களும் கருதுவார்கள். கம்யூனிஸ்ட் சீனு தன்னுடன் நெடுங் காலம் ஒத்துழைக்கும் என்ற எண்ணத்தினுல், ரஷ்யா தன் ஆசையை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளா மல் இருந்து வருகின்றது. வேறு சில இடங்களில் சீனு தவருக நடக்கத் தொடங்கினுல், ரஷ்யா மஞ்சூரியா வில் தன் திறமையைக் காட்ட நேரிடும்.

மங்கோலியா : மங்கோலியா வெளி மங்கோலியா, உள் மங்கோலியா என்ற இருநாடுகளா யிருக்கின்றன. வெளிமங்கோலியா தனிக் குடியரசு. இது ஸோவியத் யூனியனுடன் தொடர்புள்ளது. இது தனி ராஜ்யமாக இருப்பது தான் ரஷ்யாவின் விருப்பம். உள் மங்கோலியா சீன மாகாணம். சீன அரசாங்கப் படங்களில் வெளி மங்கோலியாவும் சீனுவைச் சேர்ந்ததாகக் காட்டப்பட் டிருக்கின்றது. கம்யூனிஸ்ட் சீனு தான் பிடித்துக் கொள்ளக் கருதும் பிரதேசத்தை முதலில் தேசப்படத் தில் சேர்த்து வரைந்து கொள்வது வழக்கமாகிவிட் டது. வெளி மங்கோலியாவில் சீன அரசாங்கம் கண் வைத்திருக்கின்றது. வெளி மங்கோலியத் தலைவர் களைப் புகழ்ந்தும், உபசரித்தும் மங்கோலியா இரு பிரிவுகளா யில்லாமல் ஒன்ருக இருத்தல் நலமென்று அது புத்தி புகட்டியும் வருகின்றது.

உள் மங்கோலியா பீகிங் அரசாங்கத்தின் கீழே சுயாட்சியுள்ள ராஜ்யமாக அறிவிக்கப்பட்டிருந்தது. அங்கேயிருந்த மங்கோலியர்கள் சீன ஆட்சியை வெறுத் துக் கிளம்பாம லிருக்க வேண்டுமென்பதற்காக அவ் வாறு சுதந்தரம் வழங்கப்பட்டது. ஆனுல் 1954-ல் பீகிங் அரசாங்கம் உள் மங்கோலியாவுடன் ஸுய்யுவான் என்ற பிரதேசத்தையும் சேர்த்துவிட்டது. இதனுல் புதிதாக அமைந்த உள் மங்கோலியாவில் இப்பொழுது பத்து லட்சம் மங்கோலியரும், அவர்களைப்போல

ஆறு மடங்கு அதிகமாகச் சீனரும் இருக்கின்றனர். சட்டப்படி மங்கோலியர்களுக்குச் சுயாட்சி கொடுக்கப் பட்டிருந்தும், அரசியல் தந்திரத்தால் அவர்கள் ஜனத் தொகையில் சிறுபான்மையினராகச் செய்யப்பட்டுள்ள னர்.

வெளி மங்கோலியாவிலுள்ள மக்களுக்குத் தங் களைச் சேர்ந்த ஆசியச் சீனர்களைப் பார்க்கினும் மாஸ்கோவிடமே பற்றும் நம்பிக்கையும் அதிகம். ஆயினும் காலக்கிரமத்தில், எத்தனையோ மாறுதல்கள் ஏற்படுகையில், இனம் இனத்தோடேயே சேர்ந்து கொள்ளவும் கூடும். வெளி மங்கோலியாவும் உள் மங்கோலியாவும் சேர்ந்து கொண்டாலும், ஒன்று சேர்ந்த முழுமங்கோலியா மாஸ்கோவுடன் இருப்பதா, பீகிங்குடன் இருப்பதா என்ற பிரசினை எழும்.

**ஸிங்கியாங்:** இது சீனுவின் வடமேற்கு எல்லையி லுள்ள மாகாணம். ஸிங்கியாங் என்ற பெயருக்குப் 'புது எல்லை' என்று பொருள். இதைச் சீனத் துருக்கி ஸ்தான் என்றும் குறிப்பிடுவதுண்டு; ஏனெனில் ரஷ்யத் துருக்கிஸ்தான் வேறு இருக்கின்றது. இந்த மாகா ணத்தில் பனிக்கட்டி மூடிய பல மலைத்தொடர்களும், நெடிய பாலைவனங்களும் இருக்கின்றன. இது சீனுவின் ஆறில் ஒரு பகுதியாகும்; ஃபிரான்ஸ் நாட்டைப்போல் இது மும்மடங்கு பெரிது. பண்டைக்காலம் முதல் சீனு, இந்தியா, மேற்கு ஆசியப் பகுதிகளுக்குள் வர்த்தகத் தொடர்பும், கலைத்தொடர்பும் இந்த மாகாணத்தின் வழியாகவே நிகழ்ந்து வந்தன.

ஸிங்கியாங்கிலுள்ள மக்களில் பெரும்பகுதியினர் சீன இனத்தைச் சேராத முஸ்லிம்கள். மொழி வழி யாக அவர்களுக்கு ரஷ்யத் துருக்கிஸ்தான் மக்களுட னேயே அதிகத் தொடர்புண்டு. ஸிங்கியாங் ஜனத் தொகையான 48,70,000-த்தில் 36,00,000 மக்கள்

உய்குர் என்ற இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் எந்தக் காலத்திலும் சீன அரசாங்கத்திற்கு அடங்கி யிருக்க விரும்பியதில்லை. சீனச் சக்கரவர்த்திகளின் வலிமை ஓங்கிய காலங்களில் அவர்கள் இந்த மக்க ளுடன் போராடி இவர்களை ஒடுக்குவார்கள்; மற்றைக் காலங்களில் இவர்கள் பெரும்பாலும் சுதந்தரமா யிருப் பார்கள். மேலும் பீகிங் தலைநகர் வெகு தொலைவி லிருந்ததால், அங்கே யார் ஆண்டபோதிலும், ஸிங்கி யாங்கை முழுதும் அடக்கி வைத்திருக்கவோ, அங்கே முன்னேற்றமான திட்டங்களை நிறைவேற்றவோ வசதி யில்லாதிருந்தது. சென்ற 200 ஆண்டுகளாகச் சீனர் இங்கே குறிப்பிடத்தக்க அளவு ஆதிக்கியம் பெற்றிருந் தனர். பெரிய இராணுவப் போராட்டங்களுக்குப் பின் 1884-இல் ஸிங்கியாங் சீன ராஜ்யத்தின் பத்தொன்ப தாவது மாகாணமாகச் சேர்க்கப்பட்டது. கம்யூனிஸ்ட் ஆட்சி ஏற்பட்ட பிறகு ஏராளமான படைகள் இங்கு வைக்கப்பட் டிருக்கின்றன.

ஸிங்கியாங் ஸோவியத் ரஷ்யாவை ஒட்டியிருக்கும் நாடு. இந்தியாவுக்குத் திபேத்து எப்படி முக்கியமோ, அதுபோல ரஷ்யாவுக்கு இது முக்கியம். ஸிங்கியாங் தனிச் சுதந்தர நாடாக இருந்தால், ரஷ்யாவுக்கு நல்லது. சீனுவிலிருந்து எக்காலத்திலாவது வடமேற் குத் திசையில் தாக்குதல் தொடங்கினுல், முதலில் ஸிங்கியாங் அதை எதிர்த்து நிற்கும். ஆனுல் இப்போ தைய நிலையில் ஸிங்கியாங் தனி நாடாகக்கூட இல்லா மல், ஒரு சீன மாகாணமாகவே இருக்கிறது. அங் குள்ள மக்கள் பலமுறை சீனக் கம்யூனிஸ்ட் அரசை எதிர்த்துப் போரிட்டபின்புதான் அடங்கியிருக்கின் றனர்.

ஸிங்கியாங்கின் எதிர்ப்பு உணர்ச்சி ரஷ்யாவுக்கு உதவியானது. ரஷ்யா சீனக் கம்யூனிஸ்டுகளைச் 'சகோ

தரர்கள்' என்று வாயால் சொல்லிக்கொண்டிருந்த போதிலும், பல ரஷ்யர்கள் ஸிங்கியாங்கில் தங்கி, அடிக்கடி மக்களைப் போராட்டத்திற்குத் தூண்டிவிடுவது வழக்கமாகிவிட்டது. இவர்களுடைய வேலைகள் வெளியிலே தெரியமாட்டா. பத்திரிகைகளிலும் அவை வெளியிடப்படுவதில்லை. ரஷ்யாவுக்குச் சொந்தமான அடுத்துள்ள சைபீரியப் பகுதியிலோ, மணற்பாங்கான காஸாக் - உஸ்பெக் பகுதியிலோ நாட்டங்கொண்டு அங்கே சீனர்கள் புகுந்துவிடக்கூடாது என்பதில் அவர்களுக்கு அக்கறை அதிகம். அந்தப் பகுதிகளைப் பல நூற்றுண்டுகளாகப் பாடுபட்டுப் பழத்தோட்டங்களாகப் பண்படுத்தி வைத்திருப்பதால் அவைகளைக் காவல் புரிவதில் கண்ணும் கருத்துமாயிருக்கிறுர்கள். '1960-61இல் தூங்குகின்ற நாடு எக்காலத்தும் தூங்கவேண்டியதுதான்' என்று ஒரு ரஷ்யர் கூறியதாக டாக்டர் சத்திய நாராயண ஸின்ஹா 'சீன ஆக்கிரமிப்பு' என்ற தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். சீனர்களைப் பற்றி ரஷ்யாவைப்போல் இந்தியர் எச்சரிக்கையாயில்லாமலிருப்பதால் நாட்டின் சுதந்தரமே பறிபோகக்கூடும் என்றும் அந்த ரஷ்யர் எச்சரிக்கை செய்தாராம். ஆகவே சீனு உக்கிரமாக வேலை செய்வதும், ரஷ்யா விழிப்புடன் இருப்பதும் ஸிங்கியாங் மாகாண சம்பந்தமாக அவசியமாயிருக்கின்றன. முன்னுல் ஸிங்கியாங்கின் அபிவிருத்திக்காகவும் ஸோவியத் நாடு சீனுவுக்குப் பேருதவி செய்துள்ளது.

இரு நாடுகளுக்கும் முக்கியமான ஸிங்கியாங் போன்ற இடங்களில் எழக்கூடிய பெரிய பிரசினைகளைப் பீகிங்கும் மாஸ்கோவும் வழக்கம்போல் அமைதியாகத் தீர்த்துக்கொள்ளுமா, அல்லது பூசல்கள் விளையுமா என்பதை முன்னதாகக் கண்டுகொள்வது எளிதன்று. ஆனுல் பல ரஷ்யக் கம்யூனிஸ்டுகள் சீனர்களுக்குத்

தாங்கள் போய்ப் படைப்பயிற்சியும், தொழிற்பயிற்சியும் அளித்தது பற்றிப் பின்னால் வருந்துவதாகவே தெரிகின்றது.

## மாஸ்கோவும் பீகிங்கும்

1949 முதல் ரஷ்யாவும் சீனாவும் நெருங்கிய ஒத்துழைப்புடன் பல உடன்படிக்கைகள் செய்துகொண்டிருக்கின்றன. நெருக்கடியான நிலைமைகளில் இரண்டும் துணிவுடன் சேர்ந்து வேலைகள் செய்துவந்தன. ஆயினும், கிழக்கு ஐரோப்பிய நாடுகள் மாஸ்கோவின் உத்தரவுகளுக்குப் பணிந்து நடப்பதுபோல், பீகிங் பணிவதில்லை என்பது வெளிப்படை. மாஸ்கோவும் பீகிங்கிடம் அதிகாரத்தைக் காட்டாமல் நடந்து வந்திருக்கலாம். இதுவரை இருந்துவந்த ஒற்றுமையில் இப்பொழுது பிளவு ஏற்பட்டிருக்கின்றது. சீனாவிலிருந்த ரஷ்ய நிபுணர்கள் வெளியேறிவிட்டார்கள். மற்ற உறவுகளும் குறைந்துகொண்டே வருகின்றன. இனி பீகிங் இங்கிலாந்து முதலிய மேலை நாடுகளின் உதவியை அதிகமாக நாடவேண்டி யிருக்கும். ஆசியாவிலும், வெளியிடங்களிலும் பீகிங் தான்தோன்றியாக நடந்துகொள்வதில் மாஸ்கோவுக்குச் சங்கடம் ஏற்படுகின்றது. அமெரிக்காவுடன் போராடக்கூடிய நிலைமையை உண்டாக்காமல் பீகிங் தன் காரியங்களைச் செய்து கொண்டிருந்தால், மாஸ்கோ தலையிடவேண்டிய அவசியம் இராது. அமெரிக்காவுடன் போர் ஏற்படுமாயின், அப்பொழுது மாஸ்கோவுக்குத்தான் பொறுப்பு அதிகம்.

அத்தகைய நிலைமையைச் சீனா உண்டாக்குமா? அல்லது பெரும் போரில்லாமல், தீவிர அரசியல் பொருளாதார முறைகளின் மூலமும், மிரட்டல்கள் மூலமும் தன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளுமா?

பாண்டுங்கில் நடந்த ஆசிய ஆப்பிரிக நாடுகளின் மகாநாட்டில் மற்ற நாடுகளுடன் சமாதான சகவாழ்வுக் கொள்கையைச் சீனு ஒப்புக் கொண்டிருந்தது. ஆனல் பின்னல் சீனுவின் செயல்களைப் பார்த்தால், அது சமாதானத்தையும் விரும்பவில்லை, சகவாழ்வையும் விரும்பவில்லை என்பது தெளிவாகியுள்ளது. ஏதோ காலங் கருதிக் காத்திருப்பதற்கே அது சமாதானக் கொள்கையை ஆதரிப்பதாகக் காட்டிக்கொண்டது. இப்பொழுது நாள்தோறும் சீனு ரஷ்யாவிடம் தனக்குள்ள வெறுப்பை வெளிப்படையாகவே காட்டி வருகின்றது. ஆசிய, ஆப்பிரிக நாடுகளின் மகா நாடுகளுக்கு ரஷ்யாவுக்கு அழைப்பே அனுப்பக்கூடாதென்று தடுக்கும் அளவுக்குச் சீனு முனைந்துவிட்டது! எந்த நாட்டுக்கும் ரஷ்யா உதவி செய்து வந்தால், சீனு அந் நாட்டின் எதிரியுடன் குலாவி, அவனுக்கு உதவி செய்து தூண்டிவிடுகின்றது.

சமாதானக் கொள்கையுடன் சீனு ஒதுங்கியிருந்தாலும், ஆசிய நாடுகளில் அமைதியான முறையில் கம்யூனிஸம் பரவுவதற்கு உழைத்துவர முடியும். 'ஸோஷலிஸம் அமைதியான முறையிலும், சட்டசபைகளின் மூலமும்கூட ஏற்படமுடியும்' என்று குருஷ்சேவும் மற்ற ரஷ்யத்தலைவர்களும் இருபதாவது ரஷ்யக் கம்யூனிஸ்ட் காங்கிரஸ் கூட்டத்தில் பேசினர்கள். அந்த முறையைச் சீனு ஏற்றுக்கொண்டு நடக்குமா?

சீனுவின் நோக்கங்கள் பல இன்னும் பூர்த்தியாகாமலிருக்கின்றன. வடகொரியா, தென்கொரியா இரண்டையும் ஒன்று சேர்த்துக் கொரியாவை அது தன் அதிகாரத்திற்குள் வைத்துக்கொள்ள வேண்டும்.

வியட்னும் இரு பிரிவுகளாயிருப்பதையும் கம்யூனிஸ்ட் ஆதிக்கியத்தில் ஒன்ருகச் சேர்க்கவேண்டும்.

பர்மாவிலும் இந்தோனீஷியாவிலும் சீன ஆதிக்கி யத்தை நிலை நிறுத்தவேண்டும்.

மலாசியாவில் அதன் அதிகாரத்திற்கு இடம் செய்துகொள்ள வேண்டும்.

தேசியச் சீன அரசாங்கத்தை அமைத்துக் கொண்டிருக்கும் தெய்வான் தீவைப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

கீழ்த்திசை நாடுகளின் அருகே, பஸிபிக் கடலில் அமெரிக்காவுக்குச் செல்வாக்கில்லாமல் செய்துவிட வேண்டும்.

இந்த நோக்கங்களிலே சிலவற்றை நிறைவேற்றிக் கொள்ளச் சீனு பலாத்காரத்தில் இறங்கினுல், அமெரிக்காவின் எதிர்ப்பு ஏற்படும். பலாத்காரத்தில் இறங்காமல் காரியத்தில் மட்டும் கண்ணுயிருந்து வந்தால், நாளடைவில், 'தெய்வானுக்காகவும் கொரியாவுக்காகவும் நாம் ஏன் போரில் கலந்துகொள்ள வேண்டும்?' என்று அமெரிக்கா ஒதுங்கியிருக்கும் காலமும் வரக் கூடும்.

அந்தச் சூழ்நிலை ஏற்படாதவாறு சீனு செய்து வருகின்றது. அது ஆத்திரத்துடனும் ஆவேசத்துடனும் பலாத்காரத்தில் இறங்குகின்றது. இதுவரை ரஷ்யா ஆலோசனை கூறித் தடுத்து வந்திராவிட்டால், இதற்குள்ளாகவே கீழ்த்திசையில் சீனு பெரிய உலகப்போரை மூட்டியிருக்கும்.

1962 இறுதியில் சீனு இந்தியாவின்மீது படையெடுத்ததை ரஷ்யத் தலைவரும் கிழக்கு ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் தலைவர்களும் கண்டித்திருக்கின்றனர். படையெடுப்புப் பற்றிக் குருஷ்சேவிடம் சீனு கலந்து கொள்ளவேயில்லையாம். மாஸே-துங்கின் தந்திரம் இதுதான். தாம் வகுக்கும் திட்டங்களில் ரஷ்யா வந்து மாட்டிக்கொள்ள வேண்டும்; அவர் சூழ்ச்சிப்படி

ரஷ்யா நடந்தாக வேண்டிய நிலைமையை உண்டாக்க வேண்டும்.

இதுவரை கூறியவற்றிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகத் தெரியும். கம்யூனிஸத்திற்காக மாஸ்கோவும் பீகிங்கும் தங்கள் நாடுகளின் சொந்த லாபங்களுக்கு எதிராக நடக்கமாட்டா. ரஷ்யமக்களிற் பெரும்பாலார் சீன மக்களிடம் மோகம் கொண்டிருக்கவில்லை. தங்களுடைய நலன்களுக்கு அமெரிக்கா, மேலை நாடுகளைப் பார்க்கிலும் சீனுதான் முக்கியமான எதிரி என்பதை அவர்கள் அறிவார்கள். சீனுவை மற்ற நாடுகள் தோற்கடித்தால், அவர்கள் மகிழ்ச்சியே அடைவார்கள். தாங்களே எதிர்க்க நேர்ந்தாலும், அவர்கள் தயங்கமாட்டார்கள். இருபதாம் நூற்றுண்டின் இணையற்ற ஒரு சூழ்நிலையில் அவர்கள் சீனர்களுடன் 'சகோதர' வேடம் புனைய நேர்ந்துள்ளது!

இந்தியா சம்பந்தப்பட்டவரை சீனு நம் பகைநாடு. ஆனுல் ரஷ்யா நம்மை ஆதரித்துவந்தது. பதினெட்டு ஆண்டுகளாக நம்மைப் பாகிஸ்தான் உறக்கமில்லாமல் செய்து வருவதற்குக் காரணமான காஷ்மீர் பிரசினையில் ரஷ்யா நம்மை முழுக்க முழுக்க ஆதரித்து நிற்கின்றது. காஷ்மீர் இந்தியாவைச் சேர்ந்த - இந்தியாவுக்கே உரிய - ஒரு மாகாணம் என்பதை ரஷ்யா ஏற்று நிற்கின்றது. குருஷ்சேவுக்குப் பின்வந்த ரஷ்யப் பிரதமர் கோசிஜின்னும் இதை உறுதி செய்துள்ளார். ஆனுல் சீனு பாகிஸ்தானுடன் சேர்ந்துகொண்டு, நமக்குச் சொந்தமான காஷ்மீர் நிலத்தில் பெரும் பிரதேசத்தை அதனிடமிருந்துதான் தானம் வாங்கியிருப்பதாக அறிவித்துள்ளது.

அமெரிக்கா, இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி முதலிய நாடுகளிடமிருந்து இந்தியா பலவித உதவிகளைப் பெற்றுவருவதை ரஷ்யா ஒருபோதும் ஆட்சேபித்த

தில்லை. அத்துடன் தானும் இந்தியாவுடன் பூரணமாக ஒத்துழைத்து வருகின்றது. ஆனால் சீனா அமெரிக்க ஏகாதிபத்திய வெறியர்களுக்கு இந்தியாவால் பிடிப்ப தாக நாள்தோறும் வசை புராணம் பாடி வருகிறது.

இந்தியா-பாகிஸ்தான் போராட்டத்தில் எந்த நாடும் பாகிஸ்தானுடன் சேர்ந்து போரை விரிவுபடுத் தாமலிருக்க வேண்டும் என்று ரஷ்யா எச்சரிக்கை செய்துகொண்டே யிருக்கிறது. ஆனால் சீனா இந்தியா வுக்கு எதிராக முதலில் தன் கைப்பாவையான இந்தோ னீஷியாவைக் கிளப்பிவிட்டிருப்பதுடன், வேறு பல பகை வேலைகளையுமே செய்து வருகின்றது.

இவ்வாறு நேர்ந்துள்ள பல விஷயங்களையும் கவ னித்தால், இனி முன்போல் ரஷ்யாவும் சீனாவும் இணைந்து வேலை செய்யும் வாய்ப்பு ஏற்படாதென்றே தோன்றுகிறது. சீனாவின் பகைவர்கள் அனைவரும் ரஷ்யாவின் தோழர்கள் என்ற நிலைமை ஏற்பட்டுவிட் டால், உலகில் வல்லரசுகள் இரண்டு முகாம்களாக இல்லாமல் ஒரே முகாமில் கூடியிருக்கவும் வாய்ப்பு ஏற்படலாம்.

# திபேத்து

*'சீனாவில் கம்யூனிஸம் ஏற்பட்டுப் பன்னிரண்டு (இப்போது 16) ஆண்டுகளே ஆகின்றன; ஆனால் எங்களுடைய தர்மம் (பௌத்த தர்மம்) இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளாக நிலைத்து நிற்கின்றது. அந்தத் தர்மம் இன்னும் அதே அளவு காலம் நீடித்திருக்கும் என்று பகவான் புத்தர் நமக்கு உறுதி சொல்லியிருக்கிறார்; அதன் பிறகு மீண்டும் ஒரு புத்தர் தோன்றி அதைப் புதுப்பிப்பார்.'*

*—தலாய் லாமா*

---

## நாடும் மக்களும்

திபேத்தைப்போல அமைதியாக ஒதுங்கி வாழ்ந்த நாடு உலகத்திலேயே வேறு கிடையாது. அந்த இமாலயப் பீடபூமி பெரும்பாலும் கடல் மட்டத்திற்குமேல் 15,000 அடி உயரமுள்ளது. அதில் மிகவும் உயரமான பகுதிகளில் குளிர்ச்சி மிகுதியால் பருப்பு வேகாது. அங்கு அரிசியைச் சமைத்தால் உலையிலிருக்கும்போது சோறாகவும், கீழே இறக்கியவுடன் ஊறிய அரிசியாகவும் ஆகிவிடுமாம்.

உலகமெல்லாம் கார்களும், ரயில்களும், விமானங்களும் பாய்ந்து சென்று கொண்டிருக்கின்றன; இயந்திரசாலைகள் பொருள்களை உற்பத்தி செய்து குவிக்கின்றன; ஒலிபரப்பும் வானொலி நிலையங்களும், பத்திரி

கைக் காரியாலயங்களும், சினிமா கொட்டகைகளும் நிறைந்திருக்கின்றன. சமீப காலம்வரை திபேத்தில் இவைகளில் எதுவும் கிடையாது. அங்கிருந்த இந்தியத் தூதுவர் காரியாலயத்தில் அமைந்திருந்த தந்தி நிலையம் மட்டும் இந்தியாவுடன் தொடர்பு கொண்டிருந்தது.

உலக மக்கள் யாவரும் நவநாகரிகச் சுழலில் சிக்கியிருக்கிறார்கள். எங்கும், எதிலும் வேகமாகப் போய்க் கொண்டேயிருக்கிறார்கள். தாம் நிற்கின்ற பூமியையோ, வானத்திலுள்ள தாரகைகளையோ பார்க்கக் கூட மக்களுக்கு நேரமில்லை. எல்லாம் ஒரே வேகம் தான். எல்லா நகரங்களிலும் ஒரே பேரொலிதான். இந்த வேகம், இரைச்சல் எதுவுமில்லாமல், திபேத்திய மக்கள் எதையும் மெதுவாகச் செய்துகொண்டு, ஆன்ம சிந்தனையிலே ஆழ்ந்திருந்தார்கள். சமயம்தான் அவர்களுடைய உயிர் நாடி. புத்த பகவானிடத்திலும் அவருடைய போதனைகளிலும் அவர்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கையுண்டு. அவர்கள் மதிநுட்பமுடையவர்கள், சகிப்புத் தன்மையுள்ளவர்கள், உல்லாசமாய்ப் பழகுபவர்கள். ஆனால் மூட நம்பிக்கையில் திளைப்பவர்கள். அவர்களுக்குள் கட்டுப்பாடு அதிகம். நாடெங்கும் பௌத்த மடங்கள் நிறைந்திருக்கின்றன. சிறந்த பௌத்தத் துறவிகளை அங்குலாமாக்கள் என்று சொல்வார்கள். நாட்டு மக்களில் பத்தில் ஒரு பகுதியினர் லாமாக்கள்! பெண்களிலும் பல துறவிகள் இருந்தனர்.

## தலாய் லாமா

லாமாக்களுக்கும் மக்களுக்கும் சமயத்தலைவராக விளங்குபவர் தலாய் லாமா. அவரே நாட்டுக்கும் அதிபதி. ஒவ்வொரு தலாய் லாமாவும் பகவான் புத்தரின் அவதாரமாகக் கருதப்பெறுகிறார். முதலாவது தலாய்

லாமா 1391-ஆம் ஆண்டில் அவதரித்தவர். இப்போதுள்ள தலாய் லாமா பதினன்காவது பட்டத்திற்கு வந்தவர். ஒரு தலாய் லாமா தம் பூத உடலை நீத்ததும், அவரே நாட்டில் ஓரிடத்தில் மீண்டும் ஒரு குழந்தையாக அவதரித்திருப்பார். அக்குழந்தையைத் தேடிக் கண்டுபிடித்து, எடுத்து வந்து வளர்க்க வேண்டும். அக் குழந்தை தக்க பருவமடைந்து கல்வி கேள்விகளில் தேர்ந்து விளங்கும் பொழுது, அதுவே அடுத்த தலாய் லாமாவாகப் பதவி பெறும். மங்கோலிய மொழியில் 'தலாய் லாமா' என்ற பெயருக்குப் 'பெருங் கடல்' என்று பொருள். திபேத்திய மக்கள் தலாய் லாமாவைக் 'கியல்போ ரிம்போச்' (மதிப்பரிய மன்னர்) என்றே அழைப்பது வழக்கம்.

பழைய தலாய் லாமா காலமானதும், நாட்டின் ஆட்சியை ஓர் அரசப் பிரதிநிதி ஏற்றுக்கொள்வார். புதிய தலாய் லாமா எங்கே அவதரித்துள்ளார் என்பதைக் கண்டுபிடிக்க அவரும் முக்கியமான லாமாக்களும் முயற்சி செய்வர். இதற்காகச் சில தேவாலயங்களில் குறி கேட்கப்படும். தெய்விக அறிகுறிகள் தென்படுகின்றனவா என்று கவனிக்கப்படும். பதின்மூன்றுவது தலாய் லாமா 1934-இல் புகழுடம்பு எய்தியபின், அரசப் பிரதிநிதி லாமாய் லாட்ஸோ என்ற ஏரிக்குச் சென்று, பல நாட்கள் தியானமும் பிரார்த்தனையும் செய்து கொண்டிருந்தார். அந்தப் புனிதமான நிலையில் ஏரி நீரில் அறிகுறிகள் தெரியும் என்பது திபேத்தியர் நம்பிக்கை. அது போலவே நீரில் சில எழுத்துக்களும், ஒரு மடாலயமும், அதை அடுத்து ஓடு வேய்ந்த ஒரு வீடும் தெரிந்தன. இவைகளை அடையாளங்களாகக் கொண்டு அரசப் பிரதிநிதி, மற்றும் சில லாமாக்கள் பெரிய மனிதர்களையும் அழைத்துக்கொண்டு, பல

இடங்களுக்கு யாத்திரை சென்றூர். கடைசியாகக் கீழ்த் திசையில் கும்பும் என்ற மடாலயத்தைக் கண்டு, அதனருகில் டக்ட்ஸர் என்ற கிராமத்தில்,ஏரியில்தெரிந்தது போன்ற ஓடு வேய்ந்த ஒரு வீட்டில் எதிர்காலத்தில் தலாய் லாமாவாக வரவேண்டிய சிறுவனை அவர்கள் கண்டுகொண்டனர். அவர்களை முன்னுல் அறிந்திராத அச்சிறுவன் அங்கு வந்திருந்தவர்களில் முக்கியமான லாமாக்களின் பெயர்களைக்கூறினுன். அவர்களுள் முதன்மையான லாமா தமது கழுத்தில் அணிந்திருந்த ஜபமாலையை அச்சிறுவன் கேட்டு வாங்கித் தானே அணிந்துகொண்டான். அது காலஞ்சென்ற 13 ஆவது தலாய் லாமாவுடைய மாலை. மறுநாள் அரசப் பிரதிநிதியின் கூட்டத்தார் புறப்படும்பொழுது, சிறுவனும் தானும் அவர்களுடன் புறப்பட ஆயத்தமாயிருந்தான். அவனே தலாய் லாமாவின் அவதாரம் என்பதையும், 14 ஆவது தலாய் லாமாப் பட்டத்திற்குரியவன் என்பதையும் யாவரும் தெரிந்துகொண்டு மகிழ்ச்சியடைந்தனர்.

1939-இல் இளம் தலாய்லாமா திபேத்தின் தலைநகரான லாஸாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அப்போது அவருக்கு நாலரை வயது. ஆறுவது வயதிலிருந்து அவருடைய பதவிக்குரிய பௌத்த தர்ம நூல்களும், கலைகளும், தர்க்கம், தத்துவஞானம் முதலிய சாத்திரங்களும், சமஸ்கிருத மொழியும் போதிக்கப்பட்டன. பதின்மூன்ருவது வயது நிரம்பிய பின் அவர் திபேத்தில் முதன்மையாயுள்ள திரேபங், ஸேரா என்ற இரு மடாலயங்களிலும் உறுப்பினராக ஏற்றுக்கொள்ளப்பட்டார். மடாலயங்களுக்குச் சொந்தமான ஐந்து சமயக் கல்லூரிகளில் மகா பண்டிதர்களான லாமாக்கள் சமய சம்பந்தமாகக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அவர் வியக்கத் தகுந்த முறையில் மறுமொழ

புகன்று பரீட்சைகளில் வெற்றி பெற்ருர். பதினுறு வயது வரையில் அவர் இவ்வாறு நூற்றுக்கணக்கான பௌத்த நூல்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றுக்கொண்டிருந்தார். மேலும் சில ஆண்டுகள் கழிந்து அவர் பட்டத்தை ஏற்றுக்கொள்ளுமுன், கம்யூனிஸ்ட் சீனு திபேத்தின்மீது படையெடுத்து விட்டது! படையெடுப்பின் காரணமாக அவர் உடனேயே தலாய் லாமாப் பதவியை வகிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

## அரசியல்

தலாய் லாமாவுக்கு இரு பிரதம மந்திரிகளும், மந்திரி சபையில் நான்கு அங்கத்தினர்களும் இருந்தார்கள். இவர்களுக்கு அடுத்தபடியாக அரசாங்கத் தலைமைக் காரியாலயத்தில் சமய விஷயங்களைக் கவனிப்பதற்கு ஒரு தனி இலாகாவும், பொருளாதார அரசியல் விஷயங்களைக் கவனிப்பதற்கு ஓர் இலாகாவும் இருந்து வந்தன. அவசியமான இடங்களி லெல்லாம் லாமாக்கள் பதவி வகித்தனர். உதாரணமாகப் பிரதம மந்திரி ஒரு லாமா; மந்திரி சபையிலும் ஒருவர் லாமாவாயிருந்தார். எல்லா விஷயங்களிலும் தலாய் லாமாவுக்கே முழு அதிகாரம் உண்டு. பெயரளவுக்கே ஓர் இராணுவப்படை இருந்து வந்தது. நாட்டின் எல்லைகளில் அந்நியர்கள் வருவதைக் கண்காணிப்பதும், உள்நாட்டில் போலீஸ் வேலைகளைச் செய்வதும், சமய சம்பந்தமான ஊர்வலங்களில் முன்ஞல் அணிவகுத்துச் செல்வதுமே இராணுவ வீரர்களின் முக்கியமான வேலைகள்.

நாட்டின் பொருளாதார அமைப்பு பழங்காலத்திய நிலப்பிரபுத்துவ முறையில் இருந்தது. செல்வம் மிகுந்த பண்ணையார் அல்லது பிரபுக்களிடம் குடியான

வர்கள் விவசாயம் செய்து பிழைத்து வந்தனர். ஒரு பக்கத்திலே செல்வம் மிகுந்த சிலர், மறுபுறத்தில் ஏழைகளின் கூட்டம். இவ்வாறு பல நூற்றாண்டுகளாக நிலைத்திருந்த சமுதாய அமைப்பில் எல்லா மக்களும் அமைதியுடன் இன்பமாக வாழ்ந்து வந்தனர்.

திபேத்தில் வெளிநாட்டார்களை நுழைய விடுவதில்லை. அந்நியர்களைக் கண்டாலே அவர்களுக்கு அச்சம். முற்காலத்தில் சீனர்களால் தொல்லை ஏற்பட்டதிலிருந்து, அவர்கள் பிறநாட்டார் எவராயினும் ஐயுற்றுப் பார்த்தல் வழக்கமாகிவிட்டது. இயற்கையான பூகோள' அமைப்பில் திபேத்து ஒதுக்கமாயிருப்பதுடன், மக்களும் வெளி உறவுகளில்லாமல் ஒதுங்கி வாழவே விரும்பினார்கள். இப்படி ஒதுங்கி வாழ்ந்த நாடுகளான சீனாவிலும், ஜப்பானிலும்கூட ஐரோப்பியர் நுழைந்து விட்டனர். ஆனால் திபேத்தில் மட்டும் ஐரோப்பியர் ஒருவர் இருவர் போய் வந்ததைத் தவிர கூட்டமாகச் சென்றதில்லை.

## வெண்ணெய்த் தேநீர்

கயிலாய யாத்திரை சென்ற இந்தியர்களும், ஐரோப்பியர் சிலரும் அந்நாட்டைப் பற்றியும், மக்களைப் பற்றியம் பல அரிய செய்திகளை நூல்களாக எழுதியுள்ளார்கள். எங்கும் கடல் போன்ற பெரு வெளி, செடி கொடிகள், மரங்கள் இல்லாத மலைகள், அவைகளின் மீது உருகாத பனியடைகள், பனிக்கட்டி மழை, எங்கும் வரட்சியும் குளிர்ச்சியும்—இவ்வாறுள்ள நாட்டில் திபேத்தியர் தங்கள் செம்மறி ஆடுகளையும், வெள்ளாடுகளையும் மேய்த்துக்கொண்டு விவசாயம் செய்து வாழ்ந்து வருகின்றனர். பெரும்பாலானவர் ஆயர் வாழ்க்கை வாழ்பவர்கள். யாக்கு எனப்படும் சடைமாடுகள் அவர்களுக்கு மிகவும் உதவி புரிகின்றன.

சாமான்களை ஏற்றிச் செல்வதற்கு யாக்குகள்தாம் அவர்களுக்கு 'லாறிக'ளாக விளங்குகின்றன. யாக்குகளில் பசுக்களும் உண்டு. அவைகளின் பாலும், வெண்ணெயும் இல்லாவிட்டால், திபேத்தியர் வாழ்க்கையே தடைப்பட்டுவிடும். குளிருக்காக அவர்கள் சடைமாடுகளின் வெண்ணெயை உடல்களின்மீது பூசிக்கொள்வார்கள். தேநீரிலும் அவ்வெண்ணெயைப் போட்டுத்தான் பருகுவார்கள். நாள் முழுதும் வெண்ணெய்த் தேநீர் குடிப்பது அவர்கள் வழக்கம். சிலர் ஒரு நாளைக்கு 200 'கப்' தேநீர் பருகுவார்களாம்! திபேத்தியர் அருகில் வந்தாலே வெண்ணெய் வாடைதான் வீசும்! பல வண்ணக் குடைகளுக்கும், வெய்யிலை மறைக்கும் தொப்பிகளுக்கும் திபேத்தில் கிராக்கி அதிகம். ஏனெனில் லாமாக்களுக்கும் அல்லாதாருக்கும் அவைகள் தேவை. மக்கள் எல்லோரும் கம்பள உட்சட்டை, காற்சட்டை, கையுறை முதலியவைகளை அணிந்து கொள்கிறார்கள்.

## சாத்திரங்களும் சகுனங்களும்

ஆண்களும் பெண்களும் ஒரே மாதிரியான கம்பளி உடைகள் அணிவதுடன், இருபாலாரும் தலைமுடியைப் பின்னல்களாகப் பின்னித் தொங்க விட்டிருப்பார்கள். சில பெண்கள் 108 பின்னல்கள் போட்டுக்கொள்வார்கள். ஏனென்றால் லாமாக்களின் புனித சாத்திரங்கள் 108 இருந்தன!

பழமையான உளுத்துப்போன பல வழக்கங்கள் திபேத்தியரிடம் உண்டு. எதற்கெடுத்தாலும் சாத்திரம், சகுனம், குறி, ஆரூடம் முதலியவற்றின் உதவியை அவர்கள் நாடுவார்கள். மந்திரங்களும், தந்திரங்களும், மூடத்தனமான நாட்டு வைத்திய முறைகளும் நவீன முறையில் மக்களை முன்னேற விடவில்லை. மழை

பெய்யச் செய்வதற்கு மந்திரம், வளர்ந்த பயிரை வாழ்த்துவதற்கு மந்திரம் என்று பல சடங்குகள் அமைந்திருக்கின்றன. பயிர்களை வாழ்த்தும் சடங்கில் பல துறவிகள், ஏராளமான மக்கள் புடை சூழ, சமய நூல்களின் நூற்றெட்டுப் பகுதிகளையும் சுமந்து கொண்டு கிராமங்களில் ஊர்வலம் வருவார்களாம். அரசாங்கக் காரியங்களுக்கும் மந்திரிகள் குறி கேட்பது வழக்கம். நாட்டிலே பொற்சுரங்கங்கள் ஏராளமாயிருக்கின்றனவாம். ஆனால் பூமியிலிருந்து பொன்னை வெட்டியெடுத்துச் சுத்தம் செய்து வைத்துக்கொள்ளும் முறை மக்களுக்குத் தெரியாது. அதில் அவர்களுக்கு ஆசையுமில்லை, அக்கறையுமில்லை. தலை நகரிலும் சுற்றியும் ஓடும் ஓடைகளின் நீரில் தங்கத் துகள்கள் மின்னி மிதந்து கொண்டிருந்த போதிலும் அவைகளைக் கவனிப்பாரில்லை.

குடும்பத்திற்கு ஒருவராவது துறவியாவதாலும், பலதார மணத்தாலும், ஒருத்தி பல ஆடவரை மணந்து கொள்ளும் முறையாலும், அதிகமான குழந்தைகளின் மரணத்தாலும், தக்க நவீன வைத்திய சிகிச்சை இல்லாததாலும், திபேத்தில் மக்களின் தொகை அதிகமாய்ப் பெருகுவதில்லை. ஜனத்தொகை தொன்று தொட்டு ஒரே நிலையில் இருந்து வருவதுபோல் தோன்றுகிறது.

## நீதி முறை

திபேத்தில் கொலைக்குற்றம் செய்தவர்களுக்குக் கூட மரண தண்டனை கிடையாது. ஆனால் கசையடி அடிப்பார்கள். அந்த அடிகளிலேயே உயிர் பிரிவதும் உண்டு. களவு, கொள்ளை, மோசடி முதலியவற்றிற்குக் கடுமையான தண்டனைகள் விதிக்கப் பெறுகின்றன. கொள்ளைக்காரரின் கால்களோ, கைகளோ வெட்டப்

படும். அல்லது அந்த அங்கங்களைக் கொதிக்கும் எண்ணெயில் ஆழ்த்தி விடுவார்கள். ஒரு சமயம் கோயிலின் தங்க விளக்கைத் திருடியவனின் கைகளை வெட்டியதுடன், அவனை மாட்டுத் தோலில் சுற்றி மலை உச்சியிலிருந்து உருட்டி விட்டார்களாம்! அரசியல் குற்றங்களுக்கு மிகக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்படும். ஊர்தோறும் நீதி மன்றங்கள் இல்லாததால், அவ்வப்போது லாமாக்களிலும் பெருங்குடி மக்களிலும் சிலரைத் தேர்ந்தெடுத்து வழக்குகளை விசாரித்து முடிவு செய்து கொள்கிறார்கள்.

## பண்பாடு

மொத்தத்தில் மக்களின் பண்பாட்டை வெளி நாட்டு யாத்திரிகர்கள் அனைவரும் பாராட்டுகிறார்கள். புத்தர் பெருமானின் அன்பும், அஹிம்சையும் சமுதாயம் முழுதும் ஊடுருவிப் பரந்துள்ளன. நாட்டில் பெரும்பாலான ஏரிகளில் மீன் பிடித்தல்கூடத் தடை செய்யப்படுகின்றது. அங்கே புகைபிடித்தல்கூடக் கண்டிக்கப்பகின்றது. ஏழு ஆண்டுகள் திபேத்தில் தங்கியிருந்த ஹென்றிச் ஹேர்ரர் என்ற ஜெர்மானியர் பின் கண்டவாறு எழுதியுள்ளார். 'நான் திபேத்தில் வாழ்ந்த நாட்களி லெல்லாம் புத்தர் பெருமானின் அறவுரைகளில் கடுகளவாவது ஐயம் கொண்டுள்ள ஒரு திபேத்தியனைக்கூடக் கண்டதில்லை. இந்த நாட்டில் வாழ்ந்த பிறகு, கருத்தற்ற முறையில் ஓர் ஈயைக் கொல்வதற்குக்கூட ஒருவனுடைய மனம் இடம் தராது.'

## தலைநகர்

ஐரோப்பிய நாடுகளில் ஃபிரான்ஸ், ஜெர்மனி, ஸ்பெயின் ஆகிய மூன்று நாடுகளின் விஸ்தீரணத்தை ஒருங்கே கொண்ட பெரிய நாடாகிய திபேத்தைப்

பார்க்கிலும் அதன் தலைநகரான எழில் மிகுந்த லாஸாவைப் பார்க்கவே வெளிநாட்டார்களுக்கு ஆவல் அதிகம். லாஸா ஒரு குன்றின் சாரலில் அமைந்த அணி நகரம். அதன் உச்சியில் அமைந்துள்ள தலாய் லாமாவின் மாரிக்கால அரண்மனையான பொட்டாலாவின் பொற்சிகரங்களை வெகு தூரத்திலிருந்தே கண்டு கொள்ளலாம்.

பொட்டாலா உலகத்திலேயே மிகப் பெரியனவாயுள்ள மாளிகைகளில் ஒன்று. அதன் மத்தியப் பகுதிக்கு மட்டுமே பதின்மூன்று மாடிகள் இருக்கின்றன. 1,300 ஆண்டுகளுக்கு முன் ஒரு திபேத்திய மன்னர் அதைக் கட்ட ஆரம்பித்ததாகச் சரித்திரம். அதைத் தேவதைகளே கட்டி முடித்ததாக மக்கள் நம்புகின்றனர். பின்னால் ஒவ்வொரு தலாய் லாமாவும் பழைய கட்டடத்துடன் புதிது புதிதாக மாளிகைகள் கட்டிச் சேர்த்திருக்கின்றனர். பொட்டாலாவில் துறவிகள் தங்கும் மடங்களும், பிரார்த்தனைக் கூடங்களும், துறவிகள் பள்ளியும், தங்கத் தகடுகளால் மூடப்பெற்ற பழைய தலாய் லாமாக்களின் சமாதிகளும், ஆலயங்களும், மந்திரி சபை, இராஜ்ய சபை கூடும் பெரிய மண்டபங்களும், மற்றும் அரசாங்க அலுவலகங்களும் அமைந்துள்ளன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்தியாவிலிருந்து வரவழைத்த பனை ஓலைகளில் எழுதப்பெற்ற ஏடுகள் ஆயிரக் கணக்கில் அங்கே பாதுகாத்து வைக்கப்பெற்றிருக்கின்றன. சீனச் சக்கரவர்த்திகளும், மங்கோலியச் சக்கரவர்த்திகளும் முந்திய தலாய் லாமாக்களுக்கு அளித்த காணிக்கைகளும், மற்றும் பொன்னும், வெள்ளியும், இரத்தினங்களும், பொக்கிஷங்களும் அங்கே குவிந்து கிடக்கின்றன. பழங்காலத்துத் திபேத்திய ஆயுதங்கள், கவசங்கள், கேடயங்களையெல்லாம் அங்கேதான் காணமுடியும்.

கட்டடங்களுக்கு அடியில் பூமிக்குள்ளும் பல அறைகள் உள்ளன. பௌத்த மடாலயங்கள், விகாரைகள், இராணுவம் முதலியவற்றிற்கு அனுப்புவதற்கான வெண்ணெய், தேயிலே, துணிகள், உணவுப் பொருள்கள் பலவும் அவைகளில் சேமித்து வைக்கப் பெறுகின்றன. அவைகளின் கிழக்கு அற்றத்தில் ஒரு சிறைச்சாலேயும் உண்டு. நான்கு எல்லேகளிலும் இராணுவ வீரர் பாதுகாத்து நிற்கக் காவல் நிலேயங்களும் இருக்கின்றன.

பொட்டாலாவுக்கு இரண்டு மைல்களுக்கு அப்பால் தலாய் லாமா கோடைக் கால்த்தில் வசிக்கும் அரண்மனேயான நர்புலிங்கா அமைந்துள்ளது. பொட்டாலா எவ்வளவு பெரிதாயிருப்பினும், அதனுள்ளே பல மண்டபங்களிலும் அறைகளிலும் போதிய வெளிச்சம் கிடையாது. ஆனுல் நர்புலிங்கா வசிப்பதற்கு ரமணீயமான இடம். கோடைக்கால்ம் தொடங்கியதும் தலாய் லாமா பொட்டாலாவை விட்டுத் தங்கச் சிவிகையில் நர்புலிங்காவுக்கு ஊர்வலமாகச் செல்லும்பொழுது, நகர மக்களும், நாட்டு மக்களிலே பலரும் வழியெங்கும் குழுமியிருந்து வணங்குவது கண்கொள்ளாக் காட்சியாகும். எடுபிடிகள், தோரணங்கள், கொடிகள், வெண்ணெயிலே செய்த பெரிய உருவங்கள், எக்காளம், துந்துபி, சங்கம், கொம்பு, முரசு முதலிய வாத்தியங்கள்-எதிலும் குறைவு கிடையாது. இராணுவத்தார் அணிவகுத்துச் செல்வர். ஆயிரக்கணக்கான துறவிகள் துதி பாடிக்கொண்டு முன்னுல் நடப்பர். செல்வம் மிகுந்த குடும்பத்தார்கள் பகட்டான பட்டுடைகள் அணிந்து குழுமியிருப்பார்கள். சாதாரண மக்களும் சிறந்த ஆடைகள், அணிகள் பூண்டு திருவிழாக் கோலத்துடன் காட்சியளிப்பார்கள். எல்லாவற்றிற்கும் மேலாகத் திரள் திரளாக நிற்கும் அந்த

மக்களின் பக்தி எல்லையற்று விளங்கும். ஆண்கள், பெண்கள் எல்லோருமே வணங்கிய தலைகளுடன் சிலை களாகச் சமைந்து விட்டார்களோ என்று எண்ணும் படி தலாய் லாமாவை வணங்குவது வழக்கம்.

லாஸாவில் ஆண்டு முழுதும் புத்தாண்டுத் திரு விழா, தண்ணீர்த் திருவிழா, குளிக்கும் விழா, காற் றாடி விழா முதலிய திருவிழாக்களும் விருந்துகளும் நடைபெறுவது வழக்கம். வசந்தம், மாரிக்காலம் எப் பொழுதும் திருவிழாக்கள் உண்டு. இலையுதிர்காலம் தொடங்கியவுடன் காற்றாடி விடும் திருவிழா ஒரு மாதம் நடைபெறும். குழந்தைகள் மட்டுமின்றி, வயது வந்த ஆடவர், பெண்டிர்களும் பல வண்ணங்களில் காகிதப் பட்டங்கள் செய்து, மாடிகளில் நின்று கொண்டு அவற்றைப் பறக்கவிடுவார்கள். மாத இறு தியில் விழா முடிந்தது என்று அறிவிக்கப் பெற்றதும், காற்றாடிகள் போகும் இடம் தெரியாமல் எல்லாம் மறைந்து விடும்.

விழாக்களில் புத்தாண்டுத் திருவிழாவே மிக முக்கியமானது. வழக்கமாக அது மார்ச் மாத முதல் வாரத்தில் வரும். திருவிழாக் காலம் மூன்று வாரம் முழுதும் லாஸா நகரில் திபேத்தியரோடு லடாக்கியர், பூட்டானியர், மங்கோலியர், சிக்கிம் மக்கள் முதலிய ஜனங்களின் கூட்டத்தை அளவிடல் அரிது. அக்காலத் தில் ஒரு நாள் பொட்டாலா அரண்மனைக்குள்ளே புனிதத் தலாய் லாமா மக்களுக்குத் தரிசனம் அளிப் பது வழக்கம். ஜனங்கள் மிகுந்த பக்தியுடன் சென்று பட்டுப் பீதாம்பரங்களால் அலங்கரித்த அரியாசனத் தில் அமர்ந்துள்ள தலாய் லாமாவைத் தரிசித்து வணங்கித் தத்தம் காணிக்கைகளைச் செலுத்துவார் கள். அச்சமயத்தில் அரியணை அருகில் காணிக்கைப் பொருள்களான பணப்பைகளும், பட்டுச்சுருள்களும்,

வெள்ளைச் சால்வைகளும் மலை மலையாகக் குவிந்திருக்கும் என்று சொல்லுகிறார்கள்.

புத்தாண்டுத் திருவிழாவில் தலைநகருக்கு வந்திருக்கும் எல்லா லாமாக்களும் அரசாங்க விருந்தினராகவே இருப்பார்கள். அவர்களுக்காகச் செலவாகும் தேயிலை மூன்று டன், வெண்ணெய் ஐம்பது டன், கைச்செலவுக்காகக் கொடுக்கும் பணம் 40,000 பவுன் என்று ஒருவர் கணக்கெடுத்துள்ளார். பொதுவாகவே எல்லா மடாலயங்களுக்கும் நிலங்களும் சொத்துக்களும் இருந்த போதிலும், தலாய் லாமாவின் சர்க்காரும் ஆண்டு தோறும் பற்றுக்குறைகளை ஈடு செய்யப் பணமளிப்பதுண்டு.

லாஸாவில் நேப்பாளியர்களும், சீனர்களும் இருக்கிறார்கள். அவர்கள் வியாபாரம் செய்து நல்ல செழிப்பான நிலையிலிருப்பவர்கள். இந்தியாவிலிருந்து முற்காலத்தில் அங்கே சென்ற முஸ்லிம்கள் பலரும் அங்கு வாழ்ந்து வருகிறார்கள். அவர்களின் தொழுகைக்காகத் தனிப் பள்ளியும் இருக்கின்றது.

லாஸாவிலிருந்து ஐந்து மைல் தூரத்தில் திரேபங் என்ற மாபெரும் மடாலயம் இருக்கின்றது. அங்கு மட்டுமே 10,000 துறவிகள் வசிக்கிறார்கள். திபேத்திய மடாலயங்களில் இதுவும், ஸேரா மடமுமே முதன்மையானவை.

## திபேத்து - சீனா உறவு

2,000 ஆண்டுகளுக்கு முன்பு திபேத்தில் முடியாட்சி ஏற்பட்டிருந்தது. நிய-திரி-ஸென்போ என்பவரே முதல் மன்னர். அவருக்குப்பின் நாற்பது தலைமுறைகளாக அரசர்கள் நாட்டை ஆண்டுவந்தனர். இருபத்தெட்டாவது மன்னர் காலத்தில் புத்தர் பெருமானின் அறவுரைகள் அடங்கிய திரிபிடக நூல்கள்

இந்தியாவிலிருந்து அங்கு முதன் முதலாக எடுத்துச் செல்லப்பட்டன. அது முதல்தான் பௌத்த தர்மம் அங்குப் பிரசாரம் செய்யப்பெற்றது. பிற்காலத்தில் பௌத்த நூல்கள் வடமொழியிலிருந்து திபேத்திய மொழியில் ஏராளமாகப் பெயர்த்தெழுதப் பெற்று நாடெங்கும் பரவிவிட்டன. கி. பி. 1642-இல் சமயத் தலைவரே நாட்டிற்கும் அதிபதியாயிருக்கும் முறை ஏற்பட்டது. அது முதல் தலாய் லாமாக்களின் ஆட்சி தொடர்ந்து நடைபெற்றுவந்தது. சீனச் சக்கரவர்த்திகள் தலாய் லாமாக்களைத் தங்கள் சமயாசாரியராகப் போற்றி வந்ததுடன், அரசியல் விஷயங்களில் அவர்ளுக்கு உதவியாக 'அம்பான்கள்' என்று அழைக்கப் பெற்ற தங்கள் பிரதிநிதிகள் இருவரைத் திபேத்தின் தலைநகருக்கு அனுப்பிவைப்பதும் வழக்கமாயிருந்தது.

33ஆவது தலாய் லாமாவின் காலத்தில்தான் திபேத்து வெளிநாடுகளுடன் சிறிது தொடர்புகொள்ளத் தொடங்கிற்று. சில உடன்படிக்கைகளும் செய்துகொள்ளப்பட்டன. படிப்புக்காகச் சில மாணவர்கள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பெற்றனர். அப்பொழுதிருந்த பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம், திபேத்துடன் வியாபாரம் செய்வதற்காக நேராக அதனுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளாமல், சீனவுடன் ஒப்பந்தம் செய்துகொண்டது. திபேத்திய அரசாங்கம் இதை மதிக்கவேயில்லை. கர்ஸான் பிரபு இந்தியாவில் பிரிட்டிஷ் அரசப்பிரதிநிதியாயிருந்த சமயம் பிரிட்டிஷ் படை ஒன்று லாஸாவுக்குச் சென்று போரிட்டுத் திபேத்தியப் படையை வெற்றிகொண்டது. தலாய் லாமா கீழ்த் திசையை நோக்கி ஓடிவிட்டார். 1904-இல் பிரிட்டிஷார் திபேத்திய அரசாங்கத்துடன் ஒப்பந்தம் செய்துகொண்ட பின், அவர்கள் படையும் நாட்டைவிட்டு வெளியேறிவிட்டது.

மேலே குறித்த ஒப்பந்தத்தின் மூலம் எல்லை விஷயங்களும் வியாபார உரிமைகளும் உறுதி செய்யப்பட்டன. பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கலந்துகொள்ளாமல் திபேத்து உள்நாட்டு விவகாரங்களில் எந்த அந்நிய நாடும் தலையிட இடமளிக்கக் கூடாது என்றும் முடிவு செய்யப்பெற்றது. திபேத்து சுதந்தரமும் சுய நிர்ணய உரிமையும் பெற்றிராவிட்டால், இத்தகைய ஒப்பந்தம் செய்துகொண் டிருக்கமுடியுமா? மேலும் சீனு இந்த ஒப்பந்தத்தை ஆட்சேபித்தது மில்லை.

பின்னல் சீனு தன் வர்த்தகத்தில் குறுக்கிடக் கூடாது என்பதற்காகப் பிரிட்டிஷ் அரசாங்கம் திபேத்திய ஒப்பந்தத்தைச் சீனு ஏற்றுக்கொள்வதாக 1906-இல் அதனுடனும் ஒப்பந்தம் செய்துகொண்டது. ஆயினும் பிரிட்டிஷார் ஒரே நிலையாக நிற்கவில்லை. சந்தர்ப்பத்திற்கு ஏற்றுற்போல் தங்கள் கொள்கையை மாற்றிக்கொண்டனர். 1907-இல் அவர்கள் ரஷ்யாவுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தில், பிரிட்டனும் ரஷ்யாவும் திபேத்து விஷயத்தில் சீனு மூலமாகவே பேச்சு வார்த்தைகள் நடத்துவதாக ஒப்புக்கொண்டன. இந்த ஒப்பந்தத்தில் திபேத்தோ, சீனுவோ கையொப்பம் இடவில்லை; ரஷ்யாவும் பிரிட்டனும் தாமாகச் செய்துகொண்ட ஒப்பந்தமேயாதலால், இது மற்ற இரு நாடுகளையும் கட்டுப்படுத்தவில்லை.

இவ்வாறு 1720 முதல் 1890 வரை சீனுவுக்குத் திபேத்தின்மீது ஏதோ அதிகாரம் இருந்து வந்தது போலவே மேலைநாட்டு அரசியல்வாதிகள் கருதி வந்தனர். சீனுவின் அதிகாரத்தைப் 'பரம ஆதிபத்தியம்' என்ற முறையில் ஆங்கிலத்தில் குறிப்பிடுவது வழக்கம். திபேத்தின் ஆதிபத்தியம் தலாய் லாமாவுக்குத்தான்; ஆனுல் மேற்பார்வை சீனுவுக்கு என்று இதற்குப் பொருள் கொள்ளலாம். இந்த மேற்பார்

வையும் பல சமயங்களில் இல்லாமற் போயிருக்கிறது ; தவிரவும் திபேத்தில் தங்கியிருந்த சீனப் பிரதிநிதிகள் எது செய்யினும் திபேத்திய அரசாங்கத்திடம் சொல்லியே நடத்தி வந்தனர் என்பதும் கவனிக்கத்தக்கது. மேலான ஆதிபத்தியம் சீனுவுக்கு இருந்திருந்தால், பிரிட்டிஷார் முன்பு திபேத்தின் மீது படையெடுத்த பொழுது, சீனு அந்நாட்டைப் பாதுகாக்க முன்வந்ததா? தோல்வியுற்ற திபேத்து தானுகவே பிரிட்டனுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளவில்லையா ?

ஆனுல் ரஷ்யாவும் பிரிட்டனும் செய்து கொண்ட ஒப்பந்தத்தால், சீனு திமிர் பிடித்து 1910-இல் திபேத்தின் மீது படையெடுத்தது. தலாய் லாமா இந்தியாவுக்கு ஓடி வந்து பிரிட்டிஷ் பாதுகாப்பில் தங்கியிருந்தார். 1911-இல் சீனுவில் தேசியப் புரட்சி ஏற்பட்டதில் அங்கிருந்த மஞ்சூ சக்கரவர்த்தியின் ஆட்சி ஆட்டம் கண்டது. சீனப் படைகள் திபேத்திலின்று வெளியேற நேர்ந்தது. 1912-இல் திபேத்து சுதந்தர நாடாகி, சீனச் சக்கரவர்த்தியின் பிரதிநிதிகளாக அங்குத் தங்கியிருந்த இரண்டு அம்பான்களையும் விரட்டிவிட்டது. தலாய் லாமாவும் இந்தியாவிலிருந்து திரும்பி வந்து மீண்டும் தமது பதவியை ஏற்றுக் கொண்டார். அது முதல் 1950 வரை 38 ஆண்டுகளாகத் திபேத்து, சீனுவுக்கோ, வேறு எந்த வெளி நாட்டுக்கோ சிறிதும் கட்டுப்பட்டிராமல், பூரண சுதந்தரமாக இருந்து வந்தது.

ஆனுல் திபேத்து தான் சுதந்தர நாடு என்பதைப் பிரகடனம் செய்து, மற்ற நாடுகளுக்குத் தெரிவித்து, அவைகளின் அங்கீகாரத்தைப் பெறவில்லை. இக்காலத்து உலக முறைப்படி இதைச் செய்திருக்க வேண்டும். திபேத்து விரும்பியிருந்தால், ஐக்கிய நாடு

களிலும் ஓர் இடம் பெற்றிருக்க முடியும். திபேத்து இரண்டையும் செய்யாமல் ஒதுங்கி யிருந்துவிட்டது. உலக அரசியல் போக்குகளைப் பற்றி அதற்கு அப்போது எடுத்துச் சொல்வாரில்லை.

## சீனப் படையெடுப்பு

முன்கூட்டியே படைகளைத் திபேத்தின் கிழக்கு எல்லைகளில் குவித்து வைத்துக் கொண்டு, கம்யூனிஸ்ட் சீனு 1950-இல் அந்நாட்டின்மீது படையெடுத்தது. திபேத்து முக்கியமான நாடுகளுக்குச் செய்தி அனுப்பி இராணுவ உதவி கோரியது. பிரிட்டன் இந்தியாவுக்குச் சுதந்தரம் அளித்து விட்டதால், அது தொலைவிலிருந்து உதவிசெய்ய முடியாததற்கு வருந்துவதாகத் தெரிவித்தது. அமெரிக்காவும் அதேபோல் கையை விரித்துவிட்டது. இந்திய அரசாங்கம், தான் இராணுவ உதவி அனுப்ப இயலாதென்றும், திபேத்தும் எதிர்த்துப் போரிடாமல், 1914-ஆம் வருடத்திய ஸிம்லா ஒப்பந்தத்தை அடிப்படையாகக் கொண்டு, சீனுவுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளும்படியும் ஆலோசனை கூறிற்று.

இந்நிலையில் திபேத்தியப் படைகள் சில இடங்களில் சீனரை எதிர்த்துப் போரிட்டுத் தோற்றுவிட்டன. வாலிபத் தலாய் லாமாவே பட்டம் கட்டிக் கொண்டு அரசப் பிரதிநிதியிடமிருந்து தாமே ஆட்சியை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று மக்கள் விரும்பினர். அப்பொழுது தலாய் லாமாவுக்கு வயது பதினறுதான். எனினும் மக்களின் வேண்டுகோளை அவர் ஏற்றுக் கொண்டார். ஐக்கிய நாடுகளின் சபைக்கு உதவி கோரி மனு அனுப்பப்பட்டது. போரை நிறுத்திச் சமாதானம் செய்து கொள்ளும்படி தலாய் லாமா சீனுவுக்கும் செய்தி அனுப்பினர்.

ஐக்கிய நாடுகளின் சபை திபேத்து விஷயத்தை விவாதிக்க விரும்பவில்லை. திபேத்தின் சுதந்தர நிலை தெளிவாயில்லை என்று சபையில் பிரிட்டிஷ் பிரதிநிதி எடுத்துக் கூறினர். திபேத்து சீனவுடன் எப்படியும் சமாதானமாய்ப் போக வாய்ப்பிருப்பதாயும், அதன் படி திபேத்தின் சுதந்தரத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியுமென்றும், ஐ. நா. சபையில் விவாதம் செய்வதால் அந்த வாய்ப்பு வீணுகிவிடக் கூடாதென்றும் இந்தியப் பிரதிநிதி அபிப்பிராயப்பட்டார். எல்லாமாகச் சேர்ந்து திபேத்துக்கு ஐ. நா. உதவியும் கிடைக்காதபடி செய்துவிட்டன.

## அடிமைச் சாசனம்

சீனவுடன் சமாதானம் பேசுவதற்காக ஐந்து பேர்கள் அடங்கிய திபேத்தியக் குழு ஒன்று 1951 ஆரம்பத்தில் பீகிங் நகருக்குச் சென்றது. அங்கே போனதும் முதற் சந்திப்பிலேயே சீன அரசாங்கத்தின் பிரதிநிதிக் குழுவின் தலைவர் பத்து ஷரத்துக்கள் அடங்கிய ஓர் ஒப்பந்த நகலில் அவர்கள் கையெழுத்துப் போடும்படி கோரினர். திபேத்தியப் பிரதிநிதிகள் அதை மறுத்துத் தங்கள் நாடு சுதந்தரமுள்ளது என்று பல ஆதாரங்களுடன் வாதாடிப் பார்த்தனர். பின்னர் பதினேழு ஷரத்துக்களுள்ள புது ஒப்பந்தம் ஒன்று தயாராயிற்று. அதில் கையெழுத்துச் செய்யாவிட்டால், திபேத்தியப் பிரதிநிதிகளின் உடல்களின் மீதே சீனர் கைவைத்து விடுவார்கள் என்று தெரிந்தது. திபேத்திய அரசாங்கத்திடமோ, தலாய் லாமாவிடமோ விவரம் சொல்லி அவர்களின் ஒப்புதல் பெறுவதற்குச் சீனர் அவகாசம் கொடுக்க மறுத்து விட்டனர். இறுதியில் கட்டாயத்தின் பேரில் திபேத்தியப் பிரதிநிதிகள் தாங்கள் விரும்பாத ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்டனர். திபேத்திய

அரசாங்கத்தின் முத்திரை வைத்தால்தான் எந்த ஒப்பந்தமும் செல்லுபடியாகும். சீனர் பீகிங்கிலேயே அந்த முகரைப்போல ஒன்றைத் தயாரித்து முத்திரை வைக்கச் செய்தனர். உடனே பீகிங் ரேடியோவிலும் சீன-திபேத்து ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டதாக அறிவிக் கப்பட்டது! ஜெர்மானிய சர்வாதிகாரி ஹிட்லர் காலத்தில் இத்தகைய கட்டாய ஒப்பந்தங்கள், உருட் டல் மிரட்டல்கள், ரேடியோ புளுகுகள் முதலியவை வழக்கமா யிருந்தன. ஏகாதிபத்தியவாதிகளின் பிடியி லிருந்து ஆசிய ஆப்பிரிக நாடுகளை விடுவிப்பதாகக் கருணையோடு புறப்பட்டுள்ள கம்யூனிஸ்ட் சீனு அர சியல் சூதாட்டத்தில் அடோல்ப் ஹிட்லரின் அடிச் சுவட்டையே பின்பற்றியதற்கு இந்தத் திபேத்து ஒப் பந்தம் ஓர் எடுத்துக்காட்டாகும்.

திபேத்திய மக்கள் ஒன்று சேர்ந்து ஏகாதிபத்திய ஆக்கிரமிப்புச் சக்திகளை நாட்டிலிருந்து விரட்டுவதா யும், திபேத்து தன் தாய்நாடான சீனுவுடன் மீண்டும் சேர்ந்து சீனுவின் மக்கள் குடியரசில் அங்கம் பெறுவ தாயும், சீனப் படையினர் திபேத்து முழுவதிலும் தீவிரமாக உதவி செய்ய வேண்டுமென்றும், திபேத்தி லுள்ள சிறு படையும் சீன ராணுவத்தில் ஐக்கியமாகி விடவேண்டு மென்றும் சீன-திபேத்து ஒப்பந்தத்தில் குறிக்கப் பெற்றிருந்தது. அதன் 14-வது ஷரத்துப்படி வெளிநாட்டு விவகாரங்களில் திபேத்துக்கு யாதொரு அதிகாரமும் இல்லாமற் செய்யப்பட்டிருந்தது.

ஒப்பந்தத்தின் சில ஷரத்துக்களில் சீனு கடைப் பிடிக்கப்போகும் கொள்கைகளும் குறிக்கப்பெற்றி ருந்தன. திபேத்தில் அமைந்திருந்த ஆட்சி முறையை மாற்றுவதில்லை யென்றும், தலாய் லாமாவின் அந் தஸ்து, கடமைகள், அதிகாரங்களில் கைவைப்பதில்லை யென்றும், திபேத்திய மக்களின் சமய சம்பிரதாயங்

களையும், பழக்க வழக்கங்களையும் மதிப்பதாயும், மடாலயங்களைக் காப்பதாயும், விவசாயத்தை விருத்தி செய்து, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதாயும், சீர்திருத்தங்களை ஏற்றுக்கொள்ளும்படி பலவந்தம் செய்யாமலிருப்பதாயும் சீன சர்க்கார் உறுதியளிப்பதாக அந்த ஷரத்துக்கள் கூறின. இவையெல்லாம் வெறும் பசப்புச் சொற்கள். ஒப்பந்தத்தில் முக்கியமான விஷயம் ஒன்றுதான்—திபேத்து தன் சுதந்தரத்தை இழந்து சீனுவுக்கு அடிமையாதலே அது. வேறு ஒரு கதியு மில்லாததால், திபேத்து மௌனமாகத் தலை சாய்த்து நின்றது.

## சீனுவின் திருவிளையாடல்கள்

சீன அரசாங்கத்தின் பிரதிநிதியாகத் தளபதி சாங் சின் - வு லாஸாவுக்கு வந்து சேர்ந்தார். பிறகு சீனப் படையினர் 3,000 பேர்கள் வந்தனர். அதற்கப்பால் 6,000 படைவீரர் வந்தனர். லாஸாவிலும் சுற்றுப்பக்கத்திலும் அவர்களுக்கு வேண்டிய வீடுகளையும் மனைகளையும் எடுத்துக்கொண்டனர். அவர்களுக்கு உணவுப் பொருள் சேகரித்துக் கொடுப்பதும் திபேத்திய அரசாங்கத்தின் கடமையாயிற்று. விரைவில் தலைநகரிலேயே பஞ்சம் தோன்றியது. திபேத்தியக் குழந்தைகள்கூடச் சீனரை வெறுத்து அவர்கள் மீது கற்களை எறியத் தொடங்கின. ஜனங்கள் பொதுக் கூட்டங்கள் கூடிச் சீனப் படையினர் வெளியேற வேண்டுமென்று கோரினார்கள். தெருக்களி லெல்லாம் 'சீனுக்காரா, வெளியேறு!' என்று கோஷங்கள் ஒலித்தன. திரும்பிய இடமெல்லாம் சீனருக்கு எதிரான செய்திகள் அடங்கிய சுவர் விளம்பரங்கள் ஒட்டப் பெற்றிருந்தன.

இந்நிலையில் தலாய் லாமாவைச் சீனுவுக்கு விஜயம்

செய்யும்படி சீன அரசாங்கம் அழைத்தது. அவர் சீனுவுக்குச் சென்ருல், உயிரோடு திரும்ப மாட்டார் என்று மக்கள் அஞ்சினர். ஆயினும் அவர் 1954-இல் துணிந்து பயணமானுர். பீகிங்கில் மா ஸே – துங், பிரதமர் சூ என் - லாய் முதலியோரைக் கண்டு பேசினுர். அதே சமயத்தில் இந்தியப் பிரதம மந்திரி திரு. நேருவும் அங்கு விஜயம் செய்திருந்ததால், அவரையும் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தது. ஓராண்டு சீனுவில் சுற்றுப் பிரயாணம் செய்து அங்குக் கம்யூனிஸ்ட் ஆட்சியில் ஏற்பட்டிருந்த தொழில் முன்னேற்றங்களை வாலிபத் தலாய் லாமா நேரில் பார்க்க முடிந்தது. அந்தச் சர்வாதிகார ஆட்சியின்கீழ் மக்கள் ஒரே மாதிரி உடைகளணிந்தும், ஒரே மாதிரிப் பேசியும், ஒரே மாதிரியாகச் சிந்தனை செய்தும் வந்ததை அவர் கண்டார். புத்திசாலியாகத் தோன்றிய கம்யூனிஸ்ட் இளைஞர்கள்கூடச் சீனுவின் மேன்மையையும், ஆட்சியின் வெற்றிகளையும் பற்றிக் கிளிப்பிள்ளைகள்போலக் கற்றதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தனர் என்று அவர் கூறியுள்ளார்.

திபேத்திய அரசாங்கத்தை நடத்துவதற்குச் சீனு ஒரு கமிட்டியை நியமித்தது. அதில் 46 திபேத்தியரும், 5 சீனரும் உறுப்பினர்கள். தலாய் லாமாவே அதன் தலைவர். எந்த அங்கத்தினரையும் நியமிக்கும் அதிகாரம் சீனுவுக்குத்தான் உண்டு. திபேத்தில் தலாய் லாமாவுக்கு அடுத்தபடியாகச் சமய விஷயங்களில் மட்டும் பஞ்சென் லாமா என்பவருக்கும் முற்காலத்திலிருந்தே அதிகாரம் இருந்து வந்தது. அந்தப் பஞ்சென் லாமா கமிட்டியின் உபதலைவராக நியமிக்கப்பெற்ருர். அவரை அரசியலிலும் அதிகாரம் வகிக்கச் செய்து, தலாய் லாமாவுக்குப் போட்டியாக அவரை நிறுத்தி விளையாடுவதே சீனுவின் சதிநோக்கம். மொத்தத்தில்

கமிட்டியில் பெரும்பான்மையான உறுப்பினர் தன் சொற்படி ஆடக்கூடிய நிலையிலும், கமிட்டி தன்னை மீறிச் செல்லாத நிலையிலும் சீனு கவனித்துக் கொண்டது.

தலை நகரிலும் நாடெங்கிலும் கொந்தளிப்பாக இருந்தது. சீனுவின் வஞ்சகச் செயல்களையும், கொடுமைகளையும், பலவிதமான கொள்ளைகளையும் மக்கள் வெறுத்தனர். பஞ்சமும் நோயும் ஒரு புறம், பயமும் அடக்கு முறைகளும் ஒரு புறம். தலாய் லாமா சீனுவிலிருந்து திரும்பி வந்த சமயம் அவர் கண்ட காட்சிகள் இவைதாம். கம்யூனிஸ்ட் ஆட்சியில் சீனுவிலே சரித்திரப் புகழ்பெற்ற பெரும்பாலான பௌத்த மடங்கள் பாழடைந்து கிடப்பதையும், மடங்களைச் சேர்ந்த சில வயோதிகப் பிட்சுக்களையும் சர்க்கார் சந்தேகக் கண்ணோடு பார்ப்பதையும், துறவிகளிடையிலும் கம்யூனிஸ்டுகள் ஊடுருவி நின்று தங்கள் பிரசாரத்தை நடத்துவதையும் கண்டிருந்த தலாய் லாமா, தம் நாட்டிலும் என்னென்ன நேருமோ என்ற கவலையுடன், ஒவ்வோர் இடமாகப் பார்த்துக் கொண்டே லாஸா வந்து சேர்ந்தார்.

1955, ஆகஸ்ட் மாதம் அவர் மக்களுக்குச் சில சொற்பொழிவுகள் செய்தார். அவற்றிலிருந்து நாட்டில் நிலவிய நிலைமையை நன்கு தெரிந்து கொள்ளலாம். அவற்றில் ஒன்றின் சுருக்கம் வருமாறு :

'சமயமும் அரசியல் வாழ்க்கையும் சேர்ந்து இணைந்துள்ள நாடு திபேத்து. நம் வாழ்க்கையே அந்த இணைப்பைப் பொறுத்தது. சமயமில்லாவிடில் நம் அரசியல் வாழ்க்கை நடைபெருது. அரசியல் வாழ்க்கை யில்லாமல் நம் சமயமும் தனித்திருக்க முடியாது. திபேத்தின் சரித்திரத்தைப் பார்த்தாலே இது தெரியும்.

'இப்பொழுதும், பின்னும், நாம் நம் சமய வாழ்விலும், அரசியல் வாழ்விலும் பல புதிய மாறுதல்கள் செய்ய வேண்டியிருக்கின்றன. ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் நம் திபேத்திய மக்களுக்குப் பல இன்னல்கள் நேர்ந்துள்ளன. நமக்குச் சொந்த வலிமை யில்லை, அரசியல் அநுபவமும் இல்லை. எந்த வகையிலும் நாம் முன்னேற்ற மடைய வழியில்லை. இதனால்தான் திபேத்தைச் சீர்திருத்தி அமைக்கச் சீனக் கம்யூனிஸ்டுகள் தங்கள் ஆட்களை அனுப்பி யிருக்கிறார்கள். ஆனால் சீனக் கம்யூனிஸ்டுகள் நம்மை அடக்குவதற்கோ, நம் யஜமானர்களாவதற்கோ, நம்மைக் கொடுமைப்படுத்தவோ வரவில்லை என்பதற்கு நமக்கு உறுதி கூற வேண்டும்.

'அவர்கள் நமக்கு உதவியாக வந்திருந்தால், திபேத்திய மக்களுக்குச் சொந்தமாயுள்ள அமைப்பு, கலைப்பண்பு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை மதித்து நடக்கவேண்டியது முதன்மையான அவசியம். எல்லா மக்களுடைய நோக்கங்களையும் கௌரவிக்க வேண்டும். நம் தேசத்தாரின் உயரிய தத்துவங்களுக்குத் தடையில்லாமலும், கேடு நேராமலும் நடந்துவர வேண்டும். திபேத்துக்கு வந்துள்ள சீனக் கம்யூனிஸ்டுகள் இங்குள்ள நிலைமைகளைப் புரிந்துகொள்ளாமல் நடந்தோ, நம் மக்களுக்குத் தீங்கிழைத்தோ வந்தால், நீங்கள் அவைபற்றி உடனே அரசாங்கத்திற்குத் தெரிவிக்க வேண்டும்.

'ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் ஒவ்வொருவரும் தம்மைத் தாமே கட்டுப்படுத்திக் கொண்டு குடும்பக் காரியங்களை நிறைவேற்றி வந்தால், அந்தக் குடும்பம் பிறர் தயவை எதிர்பாராத சுதந்தரமான குடும்பமாகும். குடும்பத்தைப் போன்றதே தேசம்.

'திபேத்திலுள்ள காம், த்ஸாங், யூ, ஆம்தோ ஆகிய பிரதேசங்களிலுள்ள எல்லா மக்களும் திபேத்தியர்களே. நீங்கள் அனைவரும் பிரிவினையின்றி ஒற்றுமையா யிருக்க வேண்டும்.

'திபேத்து முழுவதிலுமுள்ள எல்லா மக்களும் ஒற்றுமையாகவும், ஒத்துழைத்தும் நம் வல்லமையைப் பெருக்குவீர்களென்றும், அரசியலும் சமயமும் இணைந்த அடிப்படைமீது புதியதொரு திபேத்தை நிறுவுவதற்கு உங்கள் ஆற்றல் அனைத்தையும் பயன்படுத்துவீர்களென்றும் நான் நம்புகிறேன்.'

1956, ஏப்ரல் மாதம் திபேத்திய அரசியல் கமிட்டியை ஆரம்பித்து வைப்பதற்குச் சீனாவிலிருந்து உதவிப் பிரதமர் மார்ஷல் சென் யி வந்திருந்தார். கமிட்டி கூடி, அரசியல் இலாகாக்களும் அமைக்கப்பட்டன. இந்த ஏற்பாடுகளைக் கண்ட ஜனங்கள் மேலும் மேலும் சீனரை வெறுக்கலாயினர். தங்கள் சுதந்தரத்தை அடியுடன் பறிப்பதற்கு இவையெல்லாம் மறைமுகமான வழிகள் என்பதையும் அவர்கள் கண்டுகொண்டனர். திபேத்தின் கிழக்குப் பகுதியான சாம்டோவில் மக்கள் கலகம் செய்ய ஆயத்தமாயிருந்தனர். மற்ற எல்லைப்புற மாகாணங்களிலும் முக்கியமான திபேத்தியத் தலைவர்கள், மலைப்பிரதேசங்களுக்கு ஓடி ஒளிந்து கொண்டு, சீனர்களோடு சண்டைசெய்யக் கொரில்லாப் படைகளுக்கு ஆட்கள் சேர்த்துவந்தனர். அந்த நிலையில் தலாய் லாமா, தாம் நாட்டில் தங்காமல் மீண்டும் சிறிது காலம் எங்காவது ஒதுங்கியிருந்தால் நலமென்று கருதினார். போதிய ஆயுதங்களும் பயிற்சியுமில்லாத திபேத்தியர் சீனப்படையினரை எதிர்த்துக் கலகம் செய்தால், ஆயிரக்கணக்கில் மக்கள் மடிவதுடன், நாடும் நாசமாகுமே என்று அவர் கலங்கினார்.

அச்சமயத்தில் அவர் இந்தியாவுக்கு ஒரு முறை விஜயம் செய்ய வேண்டுமென்று இந்திய மகா போதி சங்கத்தார் அழைப்பனுப்பியிருந்தனர். அந்த அழைப்பு சிக்கிம் இராஜ்யத்து இளவரசர் மூலம் தலாய் லாமாவுக்குக் கிடைத்தது. 1956 மே, 24-ந் தேதி இந்தியா

முழுதும் பகவான் புத்தருடைய 2,500ஆவது பிறந்த நாள் விழா கொண்டாட ஏற்பாடாகி யிருந்தது. அதில் கலந்துகொள்ளத் தலாய் லாமாவும் இந்தியா வுக்கு வந்தார். அவர் புறப்படுமுன்னுல், திபேத்தி லிருந்த சீனத் தளபதி, இந்தியாவில் அவர் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதைப்பற்றி அவருக்கு நீண்ட நேரம் உபதேசம் செய்தார். திபேத்தில் முத லில் கொஞ்சம் எதிர்ப்பு இருந்தாலும், எல்லாம் அமைதியாகிவிட்டதாகச் சொல்ல வேண்டுமென்றும், இந்தியத் தலைவர்கள் இந்திய—திபேத்து எல்லைகள் பற்றிக் கேட்டால், அவை பீகிங்கிலுள்ள வெளிநாட்டு இலாகாவுக்குரிய விஷயங்கள் என்று கூறிவிடவேண்டு மென்றும் அவர் எச்சரிக்கை செய்தார். புத்த ஜயந்தி யில் தலாய் லாமா ஆற்றவேண்டிய சொற்பொழிவை யும் லாஸாவிலேயே தயாரிக்கச் செய்து, அத்தளபதி அதையும் சரிபார்த்துத் திருத்திக் கொடுத்தாராம்!

இந்தியாவில் தலாய் லாமாவுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. ஆங்காங்கே மக்கள் திரள்திரளாகக் கூடி அவரைத் தரிசித்தார்கள். புது டில்லியில் தலாய் லாமா முதலில் ராஜகட்டத்திற்குச் சென்று தேசத் தந்தை காந்தியடிகளின் சமாதியில் அஞ்சலி செய்தார். அப்பொழுது உலகத்திலேயே தலைசிறந்த உத்தமரான மகாத்மா உயிரோடிருந்திருந்தால் தமக்கு என்ன உப தேசம் செய்திருப்பார் என்று தலாய் லாமா தமக்குள் கற்பனை செய்து பார்த்துக்கொண்டாராம்.

புத்த ஜயந்தி விழாக்களில் கலந்து கொண்டபின், அவர் பிரதம மந்திரி நேரு அவர்களைச் சந்தித்துப் பேசினுர். திபேத்திய மக்களின் உணர்ச்சிகளையும், நிலைமைகளையும் எடுத்துச் சொல்லி, தாம் இந்தியாவி லேயே தங்கியிருக்க விரும்புவதாயும், அவ்வப்போது உலக நாடுகளிடையே திபேத்தின் நிலைமையைப் பற்

றிப் பிரசாரம் செய்ய இது நல்ல வாய்ப்பாகுமென்றும் அவர் நேருஜியிடம் தெரிவித்தார். நேருஜி எல்லா வற்றையும் அன்போடு அமைதியாகக் கேட்டுவிட்டுத் தம் ஆலோசனைகளையும் கூறினார். அந்தச் சமயத்தில் திபேத்துக்கு எவ்வித உதவியும் செய்ய இயலாதிருந் ததையும், அந்நாட்டின் சுதந்தரத்தை எவரும் சாதா ரணமாகக்கூட ஒப்புக்கொண்டிருக்கவில்லை என்பதை யும் அவர் சுட்டிக்காட்டினார். சீனரை எதிர்த்துக் கலகம் செய்தால் சீனாவிலிருந்து மேலும் மேலும் படை களை வரவழைத்துத் திபேத்தியரை நசுக்கிவிட முடியு மென்றும், தலாய் லாமா திபேத்துக்கே திரும்பிச் சென்று சீனா அறிவித்துள்ள 17 பிரிவுகளுள்ள ஒப்பந் தத்தை அமைதியாக நிறைவேற்றி வருதல் நலமென் றும் அவர் ஆலோசனை கூறினார்.

அதற்கு மறுநாள் சூ என்-லாயே புது டில்லிக்கு விஜயம் செய்திருந்தார். அவருடன் நேருஜியும் பேசி னார், தலாய் லாமாவும் பேசினார். திபேத்தில் மக்க ளின் விருப்பத்தை மதிக்காமல் சீன அதிகாரிகள் புதிய திட்டங்களை அவசரப்பட்டு நிறைவேற்றுவதாகத் தலாய் லாமா தெரிவித்தார். பிரதமர் சூ, தாம் சீனா வுக்குத் திரும்பியதும் தலைவர் மாஸே-துங்கிடம் அதைத் தெரிவிப்பதாகக் கூறினார்.

தலாய் லாமா மீண்டும் லாஸாவுக்குத் திரும்பிச் சென்றார். சிறிது காலம் சீன அதிகாரிகள் அமைதியாக இருந்தார்கள். ஆனால் திபேத்தின் கிழக்குப் பகுதியில் வீரம் மிக்க கம்பா வகுப்பினர் பதினாயிரக்கணக்கில் மலைப்பகுதிகளில் இருந்துகொண்டு சீனரை எதிர்த்துக் கிளம்பினார். சீனப்படையினர் பீரங்கிகளையும் துப் பாக்கிகளையும் உபயோகித்து, அவர்களை வதைத்த துடன், விமானங்களிலிருந்து குண்டுகள் வீசிப் பல கிராமங்களையும் அழித்தனர். மடாலயங்கள் தகர்க்

கப்பட்டன. லாமாக்களையும், மக்களின் தலைவர்களையும் மானபங்கப்படுத்தினர், சிறையிலிட்டனர், வதைத்தனர், சித்திரவதையும் செய்தனர். புனிதமான சிலைகளை உடைத்தெறிந்தனர், பௌத்தக் கிரந்தங்களைக் கிழித்தெறிந்தனர். பகவான் புத்தரே ஒரு பிற்போக்காளர் என்று அவர்கள் சுவரொட்டிகளிலும், பத்திரிகைகளிலும் எழுதிப் பௌத்த சமயத்தை ஏளனம் செய்தார்கள். இவற்றையெல்லாம் கண்ட ஜனங்கள் மேலும் கொதிப்படைந்து கலகம் செய்தார்கள்.

நாள்தோறும் அகதிகள் ஆயிரக்கணக்கில் தலைநகரில் வந்து கூடினர். கம்பாக்களும் ஆம்தோ மக்களுமாக ஒரே சமயத்தில் பதினாயிரத்திற்கு மேலாக லாஸாவில் குழுமியிருந்தனர். திபேத்திய மந்திரிசபை கலகக்காரருடன் சேர்ந்திருப்பதாகச் சீனர்கள் பழி சுமத்தினார்கள். மந்திரிசபை சீனர்களுடன் ஒத்துழைப்பதாகக் கம்பாக்கள் குற்றஞ் சாட்டினர். சீனத் தளபதிகளின் தடபுடலான உத்தரவுகளைக் கண்டு மக்கள் தங்கள் தலாய் லாமாவை எதிரிகள் இரகசியமாக நர்புலிங்கா அரண்மனையிலிருந்து கடத்திக் கொண்டு போய் விடுவார்கள் என்று அஞ்சிக் கூட்டங் கூட்டமாக அரண்மனையைச் சுற்றி நிற்கத் தொடங்கினார்கள். 'திபேத்தைத் திபேத்தியரிடமே விடுங்கள்!' என்றும், 'சீனர்கள் வெளியேறித் தீரவேண்டும்!' என்றும் கோஷங்கள் ஒலித்துக்கொண்டே யிருந்தன. தலாய் லாமா அனுப்பிய செய்திகளுக்கு மக்கள் செவி சாய்க்கவில்லை. இடையில் சீனப்படையினர் நகரின் கோட்டை வாயில்களை நோக்கிப் பீரங்கிகளால் சுட ஆரம்பித்தனர்.

## தலாய் லாமாவின் வெளியேற்றம்

தலாய் லாமா தம்முடைய மெய்க்காப்பாளர், பரிவாரங்கள் எவருமின்றித் தனிமையாகச் சீனப் படையினர் இருக்குமிடத்திற்கு வரவேண்டுமென்று சீனத் தளபதி டான் குவான் ஸான் உத்தரவு அனுப்பினுர். மேற்கொண்டு தலாய் லாமா லாஸாவிலிருந்தால் அபாயமென்று கண்ட நண்பர்களும், அதிகாரிகளும், அவர் உடனே தப்பித்துக்கொண்டு குறிப்பிட்ட சில நண்பர்களுடன் இந்தியாவுக்குச் சென்றுவிட வேண்டுமென்று வற்புறுத்திச் சொன்னுர்கள். தலாய் லாமாவுக்கு எப்பொழுதுமே திபேத்தைவிட்டு வெளியேற மனம் கிடையாது. தினந்தோறும் குண்டுபட்டுச் செத்து வீழும் தம் மக்களுடனே தாமும் தங்கி மரிப்பதே மேல் என்பது அவர் கருத்து. ஆயினும் அவர் வெளியேறினுல், கலகம் குறைந்து மக்களின் உயிர்ச் சேதமும் குறையலாம் என்ற நம்பிக்கையில், அவர் இறுதியாக லாஸாவை விட்டுப் புறப்பட இசைந்தார். கடைசி முறையாகப் புத்தர் பெருமானை நினைத்துப் பிரார்த்தனை செய்துவிட்டு, அவர் ஒரு சிப்பாயைப் போல மாறுவேடம் புனைந்து கொண்டு, அரண்மனையிலிருந்து வெளியேறி விட்டார். முக்கியமான பல தஸ்தாவேஜுகளையும், முத்திரைகளையும் எடுத்துக் கொள்ள வாய்ப்பில்லை; அரசாங்கப் பொக்கிஷத்திலிருந்து பணம் எடுத்துக் கொள்ளவும் வழியில்லை. பொட்டாலா அரண்மனையில் குவிந்து கிடந்த பொன்னும் நவரத்தினங்களும் அவைகளுக்கு உரியவரான தலாய் லாமாவுக்கு ஆபத்து வேளையில் பயன்படாமல் இருட்டறைகளில் கிடந்த இடத்திலேயே கிடந்தன!

தலாய் லாமா வெளியேறிய விஷயம் சீனர்களுக்குத் தெரியாது. அதற்கு 48 மணி நேரத்திற்குப் பின்பு அவர்கள் நர்புலிங்கா அரண்மனையைப் பீரங்கிக்

குண்டுகளால் தாக்கிப் பெரும் பகுதியை அழித்து விட்டனர். அரண்மனை முழுதும் பிணக்காடாகிவிட்டது. பொட்டாலா அரண்மனையிலும் சில பகுதிகள் தாக்கப்பட்டன. லாஸா மக்களின் வீடுகள் பலவும் தீக்கிரையாயின. சீனர் படையெடுத்து எட்டு வருடங்கள் கழிந்த பின்பும் அவர்கள் ஒழிய வேண்டுமென்று ஆவேசத்துடன் கிளம்பிய திபேத்திய மக்களில் பல்லாயிரக்கணக்கானவர் தலைநகரின் வீதிகளில் பிணங்களாகக் கிடந்தனர். நர்புலிங்கா அரண்மனையில் சிதறிக் கிடந்த பிணங்களை நள்ளிரவில் சீனத் தளபதிகள் ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்து, அவைகளில் தலாய் லாமாவின் உடல் காணப் பெறாமையால். அவர் தப்பி ஓடியிருக்க வேண்டுமென்று தெரிந்து கொண்டனர். பின்னர் விசாரித்து விவரம் அறிந்தனர்.

## சீனரின் அசுரத்தனமான கொடுமைகள்

திபேத்தில் தங்கள் ஆட்சியை நிலைநிறுத்துவதற்காகச் சீனர்கள் சுமார் பத்து ஆண்டுக் காலமாக இயற்றி வந்த கொடுமைகள் அனைத்தையும் தொகுத்துக் கூறினால் அது படிப்பதற்கோ, கேட்பதற்கோ மிகப் பயங்கரமாயிருக்கும். அளவில் அது பல பாரதங்களாக முடியும். மேலும் வெளியில் மற்றவர்களுக்குத் தெரியாதபடி சீனர்கள் புரிந்த கொடுமைகள் என்றுமே வெளிவர முடியாதவை. படைகள் ஒன்றையொன்று சுட்டுத் தள்ளுவதையும், ஆயிரக்கணக்கான கலகக்காரர்களைப் பட்டாளம் குண்டுகள் வீசி வதைப்பதையும் நாம் கற்பனை செய்துகொள்ளலாம். ஆனால் மக்களில் பதினாயிரக் கணக்கானவர்களைத் தேர்ந்தெடுத்து, தனித் தனியே அவர்களை ஈவிரக்கமில்லாது துன்புறுத்தி, அவமானப்படுத்தி, பலவிதமான முறையில் சித்திர வதை செய்வதை எவரும் எளிதில் யூகித்துக்கொள்ள

இயலாது. அப்படி வதை செய்வதற்கும் இரக்கமற்ற சீனருக்கு நிகராக வேறு நாட்டார் இருப்பது அரிது.

நாடு முழுதும் இலட்சக்கணக்கான சீனப் படை வீரர்கள் வந்து குவிந்தனர். பத்து லட்சத்திற்கு மேற்பட்ட சீனக் குடியானவர்களும் உழைப்பாளிகளும் வந்து சேர்ந்தனர். சில ஆண்டுகளுக்குப் பின்பு ஜனத்தொகையில் சீனர்களே பெரும்பான்மையினராகவும், திபேத்தியர் சிறுபான்மையினராகவும் மாறிவிடும்படி செய்வதற்குரிய திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வந்தன. முதலில் திபேத்தியரின் பௌத்த சமயத்தை ஒழித்துக் கட்டுவதற்கு மடங்களைத் தகர்த்தெறிய வேண்டும்; பௌத்தத் துறவிகளை அழிக்க வேண்டும்; சமய வாடையே யில்லாது நாத்திகம் நிறைந்த சூழ்நிலையில் வளர்வதற்காக ஆயிரக்கணக்கான குழந்தைகளையும் சிறுவர்களையும் சீனுவுக்கே கொண்டுபோய் விடவேண்டும். இவ்வாறு திட்டமிட்டுச் சீனர் உறுதியுடன் வேலை செய்து வந்தனர்.

சீனப் படையினர் இடையிடையே அயர்ந்து விடாமல் ஊக்கப்படுத்தப்பட்டனர். திபேத்தை அடக்கி ஒடுக்கிய பிறகு, சிக்கிம், நேப்பாளம், பூட்டான் ஆகிய நாடுகளை 'விடுதலை' செய்ய வேண்டும்! அதன்பின் மாபெரும் உபகண்டமாகிய இந்தியாவையும் 'விடுதலை' செய்ய வேண்டும்! படைவீரர்களுக்கு இவ்வாறு அடிக்கடி உபதேசிக்கப்பட்டது. நாடுகளின்மீது காரணமில்லாமல் அக்கிரமமாகச் சீனு படையெடுத்து ஆக்கிரமிப்புச் செய்வதற்குப் பெயர்தான் 'விடுதலை' செய்தல்! மேற்கூறிய நாடுகளெல்லாம் மேலைநாட்டு ஏகாதிபத்தியவாதிகளின் கையில் சிக்கியிருப்பதாயும், அவைகளை 'விடுதலை' செய்து காப்பாற்றுவது சீனப் படைகளின் கடமை என்றும் சீன அரசாங்கம் பிரசாரம் செய்து வந்தது. கம்யூனிஸ்ட் சீனுவின் செஞ்சேனைக்கு

'விடுதலைப் படை' யென்றே பெயர். முதலில் அது சீனாவை 'விடுதலை' செய்தது ; பின்னர் ஒவ்வொரு நாடாகப் படையெடுத்து, அந்தந்த நாட்டு மக்களை யும், தலைவர்களையும், படைகளையும் வதைத்து அது தன் 'விடுதலை' வேலையைச் செய்துகொண்டே வருகின்றது! முடியாட்சி ஒழிந்து புதிதாகக் குடியரசு நிறுவிக் கொண்ட கம்யூனிஸ்ட் சீனா தன் நிலையை உறுதிப் படுத்திக் கொள்ளவும், தன் ஆதிபத்திய, அதிகார எல்லைகளை விரிவுபடுத்திக் கொள்ளவும், ஆண்டு தோறும் கோடிக் கணக்கில் பெருகிவரும் சீனர்கள் குடியேறி வாழ்வதற்கேற்ற வெளிநாடுகளைப் பிடித்துக் கொள்ளவும் கையாளும் முறையைத்தான் ஏகாதிபத்திய முறை யென்று கூறுவது பொருந்தும். அந்த ஏகாதிபத்திய ஆசைக்குத்தான் 'விடுதலை' இயக்கமென்று கம்யூனிஸ்ட் சீனர் பெயர் வைத்திருக்கின்றனர்! 'அடிமைத்தனம்' என்பதைத் தான் அவர்கள் 'விடுதலை' என்று சொல்லிக் கொள்கிறார்கள். பத்து ஆண்டுகளாக மக்களின் உதிரத்தை வெள்ளமாகப் பெருக்கிச் சீனர் திபேத்தையும் 'விடுதலை' செய்துள்ளனர்!

தொடக்கத்தில் 8 முதல் 15 வயது வரையுள்ள திபேத்தியக் குழந்தைகளை யெல்லாம் பிடித்து அவர்கள் சீனாவுக்கு அனுப்பினார்கள். பிறகு, சிறு குழந்தைகளையும் கொடுத்துவிடும்படி பெற்றோர்களிடம் கேட்டார்கள். அதற்குப் பின்னால், பிறந்த 10 அல்லது 15 நாட்களுக்குள் குழந்தைகளைத் தம்மிடம் ஒப்படைக்க வேண்டுமென்று கோரினர். சில பிராந்தியங்களில் பிறந்த குழந்தைகள் அனைத்தையும் பெற்றார்கள் ; வேறு சில இடங்களில் விகிதாசாரம் வகுத்து-'கோட்டா' முறைப்படி-குழந்தைகளை எண்ணி வாங்கிக் கொண்டனர். திபேத்திலேயே கம்யூனிஸ்ட்

கொள்கையைப் போதிக்கக் கம்யூனிஸ்ட் பள்ளிக் கூடங்களும் அமைக்கப் பெற்றிருக்கின்றன.

சீனர்களிடம் லாமாக்கள் பட்ட பாடுகளைப் பஞ்சு கூடப் பட்டிராது. திரஸங் மடத்தில் சீனர்களுக்கு வேலை செய்ய மறுத்த துறவிகள் அனைவரையும் அறைகளில் உணவில்லாமல் நான்கு நாட்கள் பூட்டி வைத்தார்கள். 'உங்கள் பகவான் உங்களுக்கு உணவளிப்பார்!' என்று ஏளனம் செய்தார்கள். பௌத்த தர்ம சாத்திரங்களைக் கிழித்துச் சீனப் படை வீரர்கள் ஜல-மலங்களைத் துடைத்துக் கொள்வதைத் துருக்லு-ஸுங்க்ராம் என்ற துறவி ஆட்சேபித்தார். அவருடைய முழங்கையைச் சீனர் வெட்டி யெறிந்துவிட்டனர். சில துறவிகளைச் சீனர் ஏர்களில் கட்டி உழுததுடன், அவர்கள் புல்லையே தின்னும்படியும், அவர்கள் முதுகுகளில் மற்ற ஜனங்கள் ஏறிச் சவாரி செய்யும்படியும், அடித்துத் துன்புறுத்தினார்கள். பொது மக்களைக் கூட்டமாகக் கூட்டி வைத்தே லாமாக்களை அவமானப் படுத்துவது வழக்கம். ஜனங்களைக் கொண்டே லாமாக்களை அடிக்கும்படி கட்டாயப் படுத்தினார்கள். அடிக்க மறுத்த ஜனங்கள் பலரைச் சீனப் படையினர் தாமே அடித்துக் கொன்றனர். ஷர் கால்டன் கியட்ஸோ, ஆர் ரோக் டோர்ஜி சுங், ஷராங் கார்ப்போ என்ற மூன்று லாமாக்களைத் திபேத்தியர் கூட்டத்தின் நடுவில் நிறுத்தி, முதலில் சீனப் பெண்கள் அவர்களை அடித்துத் தலை ரோமங்களைப் பிய்த்தெறியும்படி செய்தார்கள். அப்பால் மூன்று லாமாக்களையும் மூன்று குழிகளில் தள்ளி, அவர்கள்மீது சிறுநீர் கழிக்கும்படி மக்களைத் துன்புறுத்தினார்கள். இந்த நாடகம் முடிந்த பிறகு, மூவரையும் சேர்த்துக் கழுத்துக்களில் விலங்குகள் மாட்டி, தலைகளில் மலம் நிறைந்த கூடைகளை வைத்து, ஊரூராக அவர்களை அழைத்துச் சென்று மக்களுக்குக் காட்டி

ஞர்கள். துறவிகளின் தலைகளை வெட்டி யெறிவதற்கு முன்னுல் இப்படி யெல்லாம் அவர்களை அலங்கோலமாக அவமானப்படுத்துவது சீனருடைய வழக்கமாயிருந்தது.

பெரும்பாலான லாமாக்களைச் சீனப் படையினர் பரலோகத்திற்கே அனுப்பிவிட்டனர்; மற்றும் பல சந்நியாசிகளைக் கட்டாயப்படுத்திச் சம்சாரிகளாக்கிவிட்டனர். மூன்று லட்சத்திற்குமேல் எஞ்சியிருந்த துறவிகளைச் சுட்டுத்தள்ளி வீணுக்கவேண்டாமென்று, சாலைகள் அமைப்பதற்கும், ரயில் பாதைகள் அமைப்பதற்கும், கட்டடங்கள் கட்டுவதற்கும் உபயோகித்துக் கொண்டார்கள். பல மின்சார நிலையங்களும், பாலங்களும் அமைக்கப்பட்டன. உள்நாட்டில் பல ரஸ்தாக்கள் போடப்பட்டதுடன், திபேத்துடன் 'சீனுவை இணைத்து இரண்டு பெரிய சாலைகளும் அமைக்கப்பட்டன. இவற்றில் ஒன்று திபேத்து - சிங்கியாங் நெடுஞ்சாலை. 12 ஆறுகளின் மீது பாலங்கள் கட்டி, 14 மலைகளின்மீது அமைந்த இப் பெருவழி 1,400 மைல் நீளமுள்ளது. சாலைகளில் துறவிகள் காலையிலிருந்து இரவு வரை வேலை செய்யவேண்டும். உண்பதற்குக்கூட அவர்களுக்குப் போதிய நேரம் கிடையாது. அளித்த வேலைகளைக் குறித்த நேரத்தில் முடிக்காதவர்களுக்கு உணவு கிடையாது. கைகளில் கொப்புளம் அல்லது வெடிப்புக்கள் ஏற்பட்டிருப்பவர்களே நன்முக வேலை செய்தவர்களாகக் கருதப் பெற்ருர்கள்!

துறவிகளுக்கெல்லாம் கட்டாயத் திருமணம் செய்து வைக்கும் வேலையைச் சீனப் படையினர் தொடர்ந்து நடத்திவந்தனர். சீனுவிலிருந்து ஏராளமான பெண்கள் இதற்காக வரவழைக்கப் பெற்றிருந்தார்களாம். நாங்ஸாங் கோம்பா மடத்தில் தெர்கோங் சோஸே என்ற துறவியைச் சீனர்கள் தியானம் ஜபம்

முதலியவற்றைக் கைவிட்டுத் திருமணம் செய்து கொள்ளச் சொன்ஞர்கள். அவர் உறுதியுடன் மறுத்து விட்டார். அதனுல் சீனர்கள் அவருடைய ஆசிர மத்தை எரித்தார்கள். பிரார்த்தனே நூல்களேயும் பூசனேக்குரிய பொருள்களேயும் நெருப்பிலிட்டார்கள். ஊர் மக்களேக் கூட்டிவைத்து, அவர்கள் முன்னிலேயில் துறவியை இயந்திரத் துப்பாக்கியால் சுட்டுத் தள்ளி விட்டார்கள்!

பல இடங்களில் துறவிகளேக் கூட்டம் கூட்டமாகச் சீனர் அரிந்து தள்ளியிருக்கின்றனர். செல்வர்கள் பலர் வரிசையாக நிறுத்தி வைக்கப்பெற்றுச் சுடப்பட் டிருக்கின்றனர். இத்தகைய கொலே பாதகங்களில் பெரும்பாலானவை ஜனங்களின் முன்னிலேயிலேயே நடைபெற்றன. ஏனெனில் ஜனங்கள் பயந்து நடுங்கி, மதத்தைக் கைவிட்டுச் சீனர்களுக்குத் தலேவணங்கி நடக்கச் செய்வதற்கு இவை மிக்க உதவியாகக் கருதப் பெற்றன. துறவிகளுக்கு உதவி செய்தவர்களும் வதைக்கப்பட்டார்கள்.

தங்களேத் தாங்களே காத்துக்கொள்ள முடியாத துறவிகள் மக்களுக்கு உதவி செய்யமுடியாது என்ப தைக் காட்டுவதற்காகச் சீனர்கள் லிடாங் மடத்தில் மக்கள் முன்பு இரு கொடிய வதைகளேச் செய்து காட் டினர். நோரி ஜென், நோ-ஸாக் ஜென் என்ற இரண்டு துறவிகளே நிற்க வைத்துத் துப்பாக்கிகளால் சுட்ட னர். அவர்கள் உடனே மாண்டுவிடாதபடியே குண்டு கள் விடப்பட்டன. பிறகு நோரிஜென் உடலின்மீது கொதிக்கும் வெந்நீரை ஊற்றி, அவர் கழுத்தை நெரித்துக் கொன்ருர்கள். நோ-ஸாக் ஜென்னேக் கற்களால் அடித்து, கடைசியில் கோடரியால் பிளந்து தள்ளிஞர்கள்!

சிறு குழந்தைகளேக்கொண்டே அவர்களுடைய

பெற்ரேர்களைச் சுடும்படி சீனர்கள் செய்தார்கள் என்று தலாய் லாமா அவர்கள் தாம் சமீபத்தில் எழுதியுள்ள நூலில் குறிப்பிட்டிருக்கிருர். (அந்த நூலின் பெயர் 'என் நாடும் என் மக்களும்') ஆயிரக் கணக்கான திபேத்தியர் சிறையிடப்பட்டுள்ளனர்; பல்லாயிரக் கணக்கானவர்களை எங்கே கொண்டு சென்ருர்கள் என்பது தெரியவில்லை. ஆங்காங்கே பலர் துன்பம் தாங்கமுடியாமலும், கட்டாய வேலையின் கொடுமையாலும் தற்கொலையால் உயிரை மாய்த்துக் கொண்டனர். ஆடவர்கள் மலைகளுக்கு ஓடிக் கொரில்லாச் சண்டைகள் செய்கையில், ஊரிலிருந்த பெண்டிரையும், குழந்தைகளையும் இயந்திரத் துப்பாக்கிகளால் சுட்டுத் தள்ளுவது சீனர் வழக்கமாயிருந்தது. அநேகம் கிராமங்களில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஏதோ ஒரு கட்டாய 'ஆபரேஷன்' செய்து, அவர்கள் மேற்கொண்டு குழந்தைகள் பெருமலிருக்கும்படி சீனர்கள் செய்ததாகவும் சாட்சியங்கள் இருக்கின்றன. திபேத்தில் நடந்த கொடுமைகள் தாங்காமல், பல்லாயிரம் மக்கள் கால் நடையாக இந்தியாவுக்குள் ஓடி வந்துள்ளனர்.

65 கோடி ஜனத் தொகையுள்ள சீனு 70 அல்லது 80 லட்சம் மக்களை மட்டும் கொண்ட திபேத்தில் புகுந்து செய்து வரும் கோரக் கொடுமைகள் வெளியுலகுக்கு எப்படித் தெரிய வந்தன? தலாய் லாமா இந்தியாவுக்குள் வந்த பின் சர்வதேச வழக்கறிஞர் குழு ஒன்று ஏற்பட்டுத் தீவிரமாக விசாரணை செய்து, இக் கொடுமைகளையெல்லாம் குறித்து அறிக்கை வெளியிட்டுள்ளது. அந்த அறிக்கை 345 பக்கமுள்ளது. விசாரித்த குழு 50 நாடுகளைச் சேர்ந்த 30,000 வழக்கறிஞர்களின் சங்கத்தால் நிறுவப் பெற்றது. அதில் இலங்கை உயர்நீதி மன்றத்தின் நீதிபதி ஒரு

வரும், பர்மாவின் பழைய நீதிபதி ஒருவரும், தாய் லாந்தின் மாஜிப் பிரதமமந்திரி ஒருவரும், பிலிப்பைன் தீவின் வக்கீல்கள் சங்கத் தலைவரும், இந்தியா, கானா, நார்வே நாடுகளின் வக்கீல்களும், மற்றும் பல அறிஞர் களும் உறுப்பினர்களா யிருந்தார்கள். உலகில் எங்கா வது சட்டங்களுக்குப் புறம்பாக அநியாயமான படு கொலைகள் நடப்பதைக் கண்டு, நடுநிலை நின்று விசா ரித்து, உண்மையை வெளியிட வேண்டுமென்பதே அக் குழுவின் குறிக்கோள். இந்தியாவுக்குள் புகுந்த அகதி களான 20,000 திபேத்தியர்களில் பலர் அக் குழுவின் முன்பு தரங்கள் நேரிலே கண்ட கோரங்களை எடுத் துரைத்தார்கள். அவர்கள் கூற்றுக்களை யெல்லாம் மேலும் பல இடங்களுக்குச் சென்று விசாரித்துப் பரி சீலனை செய்த பிறகே விசாரணைக் குழு அறிக்கை வெளி யிட்டது. திபேத்திலுள்ள பௌத்த சமய மக்களை அழித் தொழித்து விடவே சீனர்கள் ஏற்பாடு செய்தார்கள் என்பதை அக் குழு உலகறியத் தெரிவித்து விட்டது.

இந்தியாவுக்கு வந்துள்ள தலாய் லாமா முதலில் முஸ்ஸௌரியில் சிறிது காலம் தங்கியிருந்தார். பின்னர் தர்மசாலா என்ற இடத்தில் அவர் தங்குவதற்காக இந்திய அரசாங்கம் ஒரு பெரிய பங்களாவை அளித் துள்ளது. அங்கு வசித்து வரும் தலாய் லாமா தமது நாட்டில் தம் மக்களுக்கு நேர்ந்துள்ள கொடுமைகளை யெல்லாம் அறிந்து உள்ளம் நொந்து போயிருக்கிறார். ஆயினும் உலகத்திற்கே அன்பு நெறி காட்டிய புத்தர் பெருமானிடம் அவருக்கு அசைவில்லாத நம்பிக்கை யிருக்கிறது. நேற்று வந்த சீனக் கம்யூனிஸம் நிலைக் குமா, அல்லது 2,500 ஆண்டுகளாக நிலவி வரும் பௌத்த தர்மம் நிலைக்குமா என்பதில் அவருக்குச் சந்தேகமேயில்லை. உலகமெங்கும் வல்லரசுகளின் ஆர்ப் பாட்டங்களும், இராணுவ வலிமையே முதன்மை

யான வலிமையென்ற கருத்தும் நிலவியுள்ள போதி லும், இறுதியில் திபேத்துக்கு நியாயம் கிடைக்கும் என்றே அவர் நம்புகிருர். உலக மக்கட் சமுதாயத் தின் உள்ளத்திலே உண்மைக்கும் நீதிக்கும் இன்னும் மதிப்பிருப்பதால், ஒரு நாள் சத்தியமே வெல்லும், பாவம் தோற்றே தீரும் என்றும் அவர் நம்புகிருர். திபேத்திய மக்களின் தீரத்திலும் அவருக்கு முழு நம் பிக்கை யிருக்கின்றது.

திபேத்து கம்யூனிஸ்ட் சீனுவுக்கு அடிமையாகி விட்டது. நாட்டில் முக்கியமான இடங்களிலெல்லாம் சீனர் இராணுவ முகாம்களை ஏற்படுத்தியுள்ளனர். அவர்கள் ஏராளமான விமான தளங்களை அமைத்துள் ளனர். இலட்சக்கணக்கான போர் வீரர்கள் திபேத் தில் நிரந்தரமாகத் தங்கியிருக்கின்றனர். ஆயுதங் களும், விமானங்களும் ஆயத்தமாக உள்ளன. பட்டா ளங்கள் போய் வருவதற்கு வசதியாகச் சாலைகளும், ரயில் பாதைகளும் அமைக்கப் பட்டிருக்கின்றன. திபேத்தின் எல்லைப்புறங்களில் சீனப் படைகள் குவிக் கப் பெற்றுள்ளன. அத்துடன் இந்தியப் பிரதேசங் களிலும் அவைகள் புகுந்து பல பிரதேசங்களை வசப் படுத்திக் கொண்டிருக்கும் வரலாறுகள் முன்னரே கூறப்பட்டுள்ளன.

ஆபத்து வேளையில் இந்தியா திபேத்துக்கு எவ்வித உதவியும் செய்ய முடியாமற் போய்விட்டது. இதைப் பற்றித் திபேத்தியருக்கு அளவற்ற வருத்தமுண்டு; பின்னல் வருத்தம் துவேஷமாகவும் முற்றிவிட்டது. உலக நாடுகளில் எதுவும் திபேத்துக்கு உதவ முன்வர வில்லை. திபேத்தைப் பிடித்துக் கொள்ளவேண்டும் என்பது மட்டும் சீனுவின் நோக்கமன்று. இந்தியா உள்பட்த் தெற்கு ஆசிய நாடுகளை அவர்கள் தாக்குவ தற்கும் அதுவே தக்க தளமாக விளங்குகின்றது.

திபேத்து சீனர் வசம் இல்லாதிருந்தால், அவர்கள் இந்திய எல்லைப் புறங்களில் படையெடுத்திருக்க முடியாது. சீனாவின் இந்தியப் படையெடுப்புக்குத் திபேத்து அடிமையானதுதான் வசதியாயிற்று.

திபேத்து அடிமையா யிருக்கும்வரை இந்தியாவுக்கும் ஆபத்து நீடித்திருக்கும். இந்தியாவின் சுதந்தரத்திற்குத் திபேத்தின் சுதந்தரம் பெரும் பாதுகாப்பாகும். இவை யெல்லாம் உண்மையே யெனினும், திபேத்து விடுதலை பெறுவது எப்படி? என்றைக்கும் திபேத்தைச் சீனா அடக்கி வைத்துக் கொண்டிருக்க முடியாது. நாட்டின் சுதந்தரத்திற்காக வல்லமை மிக்க பகைவரை எதிர்த்துப் பதினாயிரக் கணக்கான உயிரைப் பலி கொடுத்த திபேத்தியர் கை கட்டி வாய் புதைத்து நின்று கொண்டே யிருக்கமாட்டார்கள். திபேத்திய சுதந்தரத்திற்காகப் போரிடக்கூடிய வீர இளைஞர்கள் தப்பி வந்து தங்குவதற்கும், ஆயுதப் பயிற்சி செய்து கொள்வதற்கும், மற்ற வழிகளிலும் இந்தியா உதவி செய்வதாயிருந்தால், தர்மம் மறுபடி தலைதூக்கும்; திபேத்தின் புதிய சரித்திரமும் ஆரம்பமாகும்.

## திபேத்துக்குப் புதிய அரசியல் அமைப்பு

நாடுதுறந்து இந்தியாவில் தங்கியிருக்கும் புனிதத் தலாய் லாமா, 1963 மார்ச் 9-ந் தேதி எதிர்காலத்தில் திபேத்துக்குரிய அரசியல் அமைப்பைப் பிரகடனம் செய்துள்ளார். திபேத்தின் பழைய அரசியல் இந்தக் காலத்திற்கு ஏற்றதா யில்லாததாலும், எதிர்காலத்தில் திபேத்தின் வளர்ச்சிக்குத் தக்க முறையில் அதை மாற்றியமைக்க வேண்டியது அவசியம் என்பதாலும், இப்புது அரசியல் அமைப்பு ஏற்படுத்தப்பெறுவதாக அவர் தெரிவித்துள்ளார். இப்புதிய அரசியல் அமைப்

பின்படி மக்களுக்கு வாக்குரிமை உண்டு. அரசாங்க வேலைகளைத் தேசியச் சட்டசபை கவனிக்கும். மடாலயங்கள், மற்றும் சமய நிறுவனங்களை யெல்லாம் கவனித்து நடத்துவதற்குத் தலாய் லாமா ஒரு சமயக் 'கவுன்சி'லை நியமிப்பார். நாட்டு நிலங்கள் யாவும் அரசாங்கத்திற்கு உரியவை. அவைகளைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புவோர் அதற்காகக் குறிப்பிட்ட தீர்வை செலுத்தவேண்டும்.

பிரதம மந்திரியையும், மற்ற மந்திரிகளையும், உயர்நீதி மன்றத்தின் நீதிபதிகளையும், மாகாணக் கவர்னர்களையும் தலாய் லாமாவே நியமிப்பார். இது போல் அவருக்கு அரசாங்கத்தில் முக்கியமான வேறு அதிகாரங்களும் உண்டு.

நாட்டில் செல்வமும் உற்பத்திச் சாதனங்களும் சிலருடைய கையிலே குவிந்துவிடாமல், எல்லா மக்களுக்கும் பயன்படும் முறையில் பிரித்துக் கொடுக்கவும், குழந்தைகள் இளைஞர்களுக்குக் கல்வி புகட்டவும், மக்களின் ஆரோக்கியத்தைப் பேணிக் காக்கவும் அரசியல் அமைப்பில் தக்க விதிகள்சேர்க்கப்பெற்றுள்ளன.

மொத்தத்தில் தலாய் லாமா வகுத்துள்ள புதிய அரசியல் அமைப்பைத் திபேத்திய மக்கள் உற்சாகத்துடன் வரவேற்பார்கள். அது திபேத்தின் சரித்திரத்திற்கு ஏற்றபடியும், முன்னேற்றமாகவும், மக்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் முறையிலும் அமைந்துள்ளது. சீனாவிலேகூட மக்களுக்கு இவ்வளவு சுதந்தரம் கிடையாது.

ஆனால் நாடிழந்து நிற்கும் தலாய் லாமாவின் அரசியல் அமைப்பு எப்பொழுது அமலுக்கு வரமுடியும் என்றும், திபேத்தின்மீது கம்யூனிஸ்ட் சீனாவின் ஆதிக்கியம் எப்பொழுது ஒழியும் என்றும் சிலருக்கு ஐயம் தோன்றும். அல்ஜீரியா, சைப்ரஸ் முதலிய அடிமைப்

பட்ட நாடுகளெல்லாம் விடுதலையடைந்துள்ள சமீப காலச் சரித்திரத்தை நன்கு கவனிப்பவர்களுக்குத் திபேத்தில் சீனு நெடுங்காலம் வேரூன்றி நிலைக்க முடியாது என்பதை யூகித்துக் கொள்ள முடியும்.

இந்தியாவில் தங்கியிருக்கும் தலாய் லாமா அமெரிக்காவிலுள்ள ஐக்கிய நாடுகள் சபைக்குச் சென்று, தம் நாட்டின் நிலைமையை எடுத்துச் சொல்ல வேண்டும். இந்தியாவும், மற்றும் பல நாடுகளும் திபேத்தின் சுயநிர்ணய உரிமைக்காக வாதாட வேண்டும். எதைச் செய்தாகிலும் திபேத்து முன்போல் சுதந்தர நாடாக விளங்கும்படி செய்யவேண்டும்.

# சுதந்தர இந்தியா

'சுதந்தரமாக உங்கள் வேலையைத் தொடர்ந்து செய்யுங்கள். சமைத்த பிறகு பலர் சாப்பாட்டுக்கு வந்து அமர்வார்கள். (ஆதலால்) கவனமாயிருங்கள். வேலையைச் செய்யுங்கள்!'

—சுவாமி விவேகானந்தர்

---

## ஆசியாவின் விழிப்பு

இந்தியாவுக்குப் பாரதம் என்று பெயர், பரதக் கண்டம் என்றும் சொல்லுவார்கள். ஆயினும் வெளி நாட்டார் வைத்த இந்தியா என்ற பெயரே இப் பொழுது நிலைத்துவிட்டது. செல்வம் மிகுந்த நாடு என்று இது புகழ்பெற்றிருந்தது. இந்தியாவின் சுரங்கச் செல்வங்களையும், இரத்தினங்களையும் பற்றி ஷேக்ஸ் பியர் முதல் பல புலவர்கள் பாடியுள்ளனர். இதே போல இந்தியாவின் கலைச் செல்வங்களையும், ஆன்மீகச் செல்வங்களையும் பற்றி மேலை நாட்டாரும் பிறரும் புகழ்ந்திருக்கின்றனர். பழங்காலத்தில் ஜப்பானியர் இந்தியாவை 'டென்ஜிகு' என்று அழைத்து வந்தனர். இதன் பொருள் 'சுவர்க்கம், அல்லது தெய்விக நாடு' என்பது. நம் கீதையும், உபநிடதங்களும், திருக் குறளும், பௌத்த நூல்கள் முதலிய பலவும் பிறநாட்டு மொழிகள் பலவற்றில் உள்ளன.

பௌத்த நூல்கள் சீனு, ஜப்பான், மற்றும் கீழ்த் திசை நாடுகளிலும் இன்றும் நிலைத்து நிற்கின்றன. இந்த நாடுகளிலே இந்தியத் துறவிகள் நேரிலே சென்று பௌத்த தர்மப் பிரசாரம் செய்து வந்தனர். 1,400 ஆண்டுகளாகப் பௌத்த சமயம் ஜப்பானியர் வாழ்க்கையையும், உடைகள், வீடுகள், சமுதாய அமைப்பு முறைகள், அரசியல், பொருளாதாரம், இலக்கியம், கலைகள் முதலியவற்றையும் உருவாக்கி வந்திருக்கின்றது. 'ஜப்பானிய சரித்திரத்திலிருந்து பௌத்த தர்மத்தைக் கழித்துவிட்டால், ஜப்பானியர் தங்களுக்குள் இடைவிடாது சண்டைகள் புரிந்து கொண்டு அநாகரிக நிலையில் தீவுகளில் வசித்துவந் திருப்பவர்கள்' என்று புனித ரிரி நாகயாமா என்ற அறிஞர் கூறியுள்ளார்.

இந்த நூற்றுண்டிலே நம் காலத்திலேகூட, 1893-இல் சுவாமி விவேகானந்தர் தனியாக அமெரிக்காவுக்கும், மேலை நாடுகளுக்கும் சென்று, மக்கள் உள்ளங்களைக் கலக்கி, ஆன்மிக வாழ்வின் ஒளியைப் பரப்பிவந்தது எல்லோருக்கும் நினைவிருக்கும். சங்கரருடைய அறிவும், புத்தருடைய இதயமும் பெறுவதே இலட்சியமா யிருக்கவேண்டும் என்பது விவேகானந்தருடைய ஆசை. குமரி முதல் இமயம் வரை சங்கநாதம் செய்து, செயற் கரிய செயல்கள் பலவற்றைச் செய்துவிட்டு 39 வய துக்குள் அவர் புகழுடம்பு எய்தினர்.

கீழை நாடுகளில் இந்தியா, சீனு, ஜப்பான் மூன் றுமே முக்கியமானவை. உலக ஜனத் தொகையில் பாதி இந் நாடுகளில் இருக்கின்றது. பொருட் செல் வத்தில் இந்தியாவும் சீனுவும் மிகத் தாழ்ந்த நிலையி லுள்ளன. இன்று இந்தியா உலக நாடுகளுக்கு அபரித மாக ஏற்றுமதி செய்யக்கூடிய பொருள் அதன் வேதாந் தம்தான். சீனு ஏற்றுமதி செய்யக்கூடியது அது புதி

தாகக் கற்றுக் கொண்டுள்ள கம்யூனிஸம்தான்! ஜப்பான் ஒன்று மட்டும் மேலைநாட்டு விஞ்ஞானத்தையும், தொழில் நுட்ப முறைகளையும் விரைவிலே கற்றுக் கொண்டு, நவீனமான பொருளாதார முன்னேற்றத்தை அடைந்துள்ளது. இந்தியாவும், சீனுவும் இப்பொழுதுதான் விழிப்படைந்து, பெரிய அளவில் பெருந் தொழில்களை அமைக்க முன்வந்துள்ளன. இன்னும் சில ஆண்டுகளில் அமெரிக்க ஐக்கிய நாடு, ஸோவியத் ரஷ்யா, ஜெர்மனி ஆகிய மேலை நாடுகளுடன் இந்தியா, சீனு. ஜப்பான் நாடுகளும் சேர்ந்து உலகின் முதன்மையான ஆறு பெரிய வல்லரசுகளாக விளங்கக்கூடிய வாய்ப்பு ஏற்பட்டிருக்கின்றது. ஆனல் சீனு, திமிர் ஒடுங்கி, ஒழுங்காக நடந்து வந்தால்தான், இது முடியும்.

## ஜப்பான் காட்டும் வழி

நவீன இயந்திரங்களை உபயோகித்து உற்பத்தியைப் பெருக்கி, மேலை நாடுகளுடன் போட்டியிட்டு வென்ற முதல் ஆசிய நாடு ஜப்பான். 1905-இல் ஜப்பான் போரில் ரஷ்யாவை முறியடித்ததிலிருந்து ஆசிய நாடுகளில் தேசிய இயக்கங்கள் உரம் பெற்று வளரத் தொடங்கின. முக்கியமான நான்கு தீவுகளிலே நெருக்கமாக அடைக்கப் பெற்றிருந்த ஜப்பானிய மக்கள் முன்னேற்றமான நாடுகளிலிருந்து தொழில்களைக் கற்றுக்கொண்டனர். 'நாங்கள் இங்கிலாந்துக்குச் சென்று கப்பல் கட்டுதல், கடல் வாணிபம் ஆகிய தொழில்களைக் கற்றேம். ஃபிரான்ஸிலுள்ள சட்டத்தைப் பார்த்து எங்கள் சட்டத்தை அமைத்துக்கொண்டோம்; அமெரிக்காவிட மிருந்து வர்த்தகம், பாங்கு முறைகள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டோம்; எங்களுக்கு வேண்டிய விஞ்ஞானம், மருத்துவ முறை

களை ஜெர்மனியிட மிருந்து பெற்றுக் கொண்டோம். எங்கள் இராணுவத்தையும் அந்நாட்டு முறையிலே அமைத்துக்கொண்டோம். இருபத்தைந்து ஆண்டு களில், ஐரோப்பாவின் உதவி யில்லாமல், நாங்களே சுயேச்சையாகத் தொழில் புரிய முடிந்தது. அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளில் நாங்கள் பெரிய வல்ல ராசாகிவிட்டோம்!' என்று ஒரு ஜப்பானியப் பிரமுகர் கூறியுள்ளார். ஜப்பானியரின் ஊக்கமும், சுறுசுறுப் பும், நிலையான கவனமும் விவசாயத்திலும், தொழில் களிலும் வெகு வேகமாக அவர்கள் வளர்ச்சிபெற உதவியுள்ளன.

பெருந் தொழில்களுக்கு இயந்திரங்களும், உழைப் பாளர்களும் இருந்தால் மட்டும் போதாது; தொழில் களைப்பற்றி இடைவிடாமல் ஆராய்ச்சி செய்து முன் னேற்ற வழிகளை வகுக்கக்கூடிய ஆராய்ச்சிக் கூடங் களும் வேண்டும். ஜப்பானில் ஒவ்வொரு தொழிலிலும் இத்தகைய ஆராய்ச்சி நன்கு நடைபெறுகின்றது. அங்கு பெரிய கனரகத் தொழில்கள், ஆலைத் தொழில் களுடன், நடுத்தரமான தொழில்களும், குடிசைத் தொழில்களும் ஏராளமாக நடைபெறுகின்றன. கூடிய அளவுக்குச் சிறு இயந்திரங்களும் கருவிகளும் பயன் படுத்தப் பெறுகின்றன. சிறு தொழில்களை நிறுத்தவும் முடியவில்லை, பெருந் தொழில்களோடு சேர்க்கவும் முடியவில்லை. இதனால் ஜப்பானியத் தொழில்களுக்குப் போட்டி வெளி நாடுகளில் இல்லை, உள் நாட்டிலேயே இருக்கின்றது என்பார்கள். இரண்டாவது உலக யுத் தத்தில் பெரும் நஷ்டங்கள் ஏற்பட்டிருந்தும், 1945-க் குப் பின், 15 ஆண்டுகளுக்குள் ஜப்பான் மீண்டும் தொழில் வளர்ச்சி பெற்று விளங்குகின்றது.

ஆசிய நாடுகளில் ஜப்பானுடன் இந்தியா அதிகத் தொடர்புகொண்டு, அதன் ஒத்துழைப்பைப் பெற்று

வந்தால், இங்கும் விரைவிலே தொழில்வளர்ச்சி ஏற்படும். 1950-இலிருந்து இத்தகைய தொடர்பும், ஒத்துழைப்பும் ஏற்பட்டு வருகின்றன. விவசாயத்திலும் தொழில்களிலும் ஜப்பானியநிபுணர்கள் இந்தியாவுக்கு வந்து தங்கியிருந்து இந்திய மக்களுக்குப் பயிற்சி யளிக்கின்றனர். நதியா, ஸம்பல்பூர், ஷாஹாபாத், சூரத் முதலிய இடங்களிலுள்ள ஜப்பானிய மாதிரி விவசாயப் பண்ணைகளில் பயன்படுத்திக் காட்டுவதற்காக 90 வகை விவசாயக் கருவிகள் வந்திருக்கின்றன. இந்தியாவில் கனிகளில் வெட்டி யெடுத்த இரும்பு முதலிய பொருள்களை வாங்கிக்கொண்டு, ஜப்பான் உயர்தரமான உருக்கு இயந்திரங்களையும், மின்சாரத்தினால் ஓடும் ரயில்வே எஞ்சின்கள் முதலியவைகளையும் அனுப்பி வருகின்றது. ஆண்டுதோறும் சுமார் 57 கோடி பெறுமதியுள்ள பொருள்களை இந்தியா ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்தும், அத்தொகைக்குரிய பொருள்களை அங்கிருந்து இறக்குமதி செய்தும் வருகின்றது. இந்தியாவிலேயே தொழில்கள் நடத்துவதிலும் ஜப்பானிய மூலதனம் பெருகி வருகின்றது. ஆயினும் அந் நாடு பிரேஜில் முதலிய தென் அமெரிக்க நாடுகளில் போட்டிருக்கும் கோடிக்கணக்கான டாலர் மூலதன அளவு இந்தியாவில் போடவில்லை. அதற்குரிய வாய்ப்புக்களும், வரிச் சலுகைகளும் கிடைத்தால், ஜப்பானிய மூலதனத்தை இங்கு ஏராளமாக எதிர்பார்க்கலாம். மற்ற உதவிகளோடு, ஜப்பான் நம் ஐந்தாண்டுத் திட்டங்களுக்கும் கோடிக்கணக்கான தொகை கடன் கொடுத்து உதவி புரிகின்றது. முன்பு நாம் சீனாவை நம்பி, அதனுடன் கொண்டிருந்த உறவுக்குப் பதிலாக, நாம் ஜப்பானுடன் அதிக நெருக்கமாய்ப் பழகுவது அவசியம் என்பதற்காகவே இங்கு முதலில் ஜப்பானைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளோம்.

## இந்தியப் புரட்சி

1947-இல் இந்தியா விடுதலை பெற்றதுபோல ஆசியாவிலும், ஆப்பிரிகாவிலும் வேறு பல நாடுகள் விடுதலை யடைந்துள்ளன. இவைகளில் ஒன்றிரண்டு தவிர, பெரும்பாலானவை ஜனநாயக முறையில் குடியரசுகளாக விளங்குகின்றன. இவைகளிலே எல்லா வகையிலும் பெரிய நாடு இந்தியா.

ஆசியா முழுவதிலும் அரசியல், பொருளாதாரம், சமூகத்துறைகள் யாவற்றிலும் என்றுமில்லாத முறையில் புரட்சி நடந்து வருகின்றது. இந்தியாவிலும், மாபெரும் தொழிற் புரட்சி நடந்து வருகின்றது. விவசாயம், தொழில்கள் முதலியவற்றில் அமைதியான முறையில் மகத்தான மாறுதல் நடந்து வருகின்றது. வெள்ளத் தடுப்பு, பாசனவசதி, மின்சார உற்பத்தி, புதுக் குடியேற்றம் முதலிய பல வசதிகளை ஒருங்கே பெறும் வகையில், பெரிய ஆறுகள் பலவற்றில் மாபெரும் அணைகள் கட்டி முடிக்கப் பெற்றிருக்கின்றன; இன்னும் மக்கள் கட்டிக்கொண்டே யிருக்கின்றனர். முதல் பத்து ஆண்டுக் காலத்தில் இவைகளுக்காக ரூ. 1,200 கோடி முதல் ரூ. 1,300 கோடி வரை செலவிடப் பட்டிருக்கின்றது. மானிட சமுகத்தின் நன்மைக்காக இவ்வாறு மக்கள் கூடி உழைக்கும் இடங்களே தமக்குக் கோயில்களாகவும், குருத்வாரங்களாக்வும், மாதா கோயில்க்ளாகவும், பள்ளிகளாகவும் விளங்குவதாக இந்தியப் பிரதம மந்திரி திரு. நேரு கூறியுள்ளார். அணைகள் மட்டுமின்றி, ஆலைகளும், கனரகத் தொழில்களும் நாள்தோறும் பெருகி வருகின்றன.

1946-இல் மேட்டூர் அணையின் அதிசயத்தைக் கண்டு வியந்து கொண்டிருந்தோம். பின்னால் உலகிலேயே உயரமான பக்ரா அணையும், மிகவும் நீளமான ஹிராகூட்

அணையும், மிக அதிகமான அளவு தண்ணீர் தேங்கும் சம்பல் அணையும், காரைக் கட்டுமானத்தில் தலை சிறந்த நாகார்ஜுன சாகர் அணையும், வேறு எங்குமே காணமுடியாத பெரிய ராஜஸ்தான் வாய்க்காலும் அமைந்துள்ளன. இந்திய மக்களின் ஊக்கம், உறுதி, ஒத்துழைப்பு முதலியவற்றிற்கு இவைகளே சிறந்த எடுத்துக் காட்டுக்களாம். மக்களும், பணமும், இயந்திர சாதனங்களும் சேர்ந்து என்னென்ன செய்ய முடியும் என்பதை இவை காட்டுகின்றன.

சுதந்தர இந்தியா விரைவிலே தொழில் வளம் பெறவும், சமுதாய முன்னேற்றமடையவும் தீர்மானித்தது. இதற்குரிய வழி கம்யூனிஸமா அல்லது ஜனநாயக ஸோஷலிஸமா? இந்த இரண்டைத் தவிர மூன்றாவது மார்க்கம் இல்லாததால், இந்தியா ஜன நாயக ஸோஷலிஸ முறையை மேற்கொண்டது. அதன்படி மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்து நிறைவேற்றி, இப்பொழுது நான்காவது திட்டம் தயாரித்துள்ளது.

## முந்திய அடிமைச் சகாப்தம்

இந்தியா மாபெரும் நாடு. 12,59,797 சதுர மைல் அளவுள்ளது. 1961 ஆம் ஆண்டுக் கணக்குப்படி இங்குள்ள மக்களின் தொகை 43,64,24,429. இப்பொழுது சுமார் 47 கோடியாயிருக்கும். தமிழ்நாட்டைப்போல் மொத்தம் 15 ராஜ்யங்களும், மத்திய அரசின் நேர் ஆட்சியில் 8 சிறு பிரதேசங்களும் இருக்கின்றன. இந் நாட்டில் ஆறுகளும், மலைகளும், மற்ற இயற்கை வளங்களும் ஏராளமாக இருக்கின்றன. ஆயினும் நவீன இயந்திரத் தொழில்கள் பெருகாததால், இந்தியா பிற்போக்கான, தேக்க மடைந்த நாடாக விளங்குகின்றது. சுமார் இரண்டு நூற்றாண்டுகளாக அந்நியரின் ஆட்சி இங்கே நிலைத்திருந்ததால், அவசிய

மான அரசியல், பொருளாதார, சமூக முன்னேற்றத் திட்டங்களுக்கு இடமில்லாது போயிற்று. ஆங்கில ஆட்சியில் எத்தனை நன்மைகள் ஏற்பட்டதாகச் சொல்லப்படினும், நாட்டு மக்களால் நடத்தப்பெறும் பொறுப்புள்ள நல்லரசாட்சி இங்கே இருக்கவில்லை. சீமையிலே 'ஐ. ஸி. எஸ்.' முதலிய பரீட்சைகளில் தேர்வு பெற்ற சில ஆங்கில இளைஞர்கள் இந்தியாவுக்கு வந்து, மாவட்டங்களிலும், மாநிலங்களிலும் தலைமை அதிகாரிகளாக இருந்து, மக்களை ஆண்டு அடக்கி வந்தனர். ஒன்றரை லட்சம் ஆங்கிலேயர் முப்பதுகோடி இந்தியர்களை ஆடுமாடுகளை மேய்த்து அடைப்பது போல் அடக்கிவந்தனர். இந்தியா பெருந் தொழில்களை அமைத்து முன்னேறாமல் இருந்தால்தான் இங்கிலாந்தில் உற்பத்தியான பொருள்களை இங்கு விற்பதற்கு வாய்ப்புண்டு. எனவே இந்தியா இங்கிலாந்தின் பொருள்களுக்கு ஏற்ற சந்தையாக மட்டுமே விளங்கி வந்தது. எனினும் சில இந்தியத் தலைவர்களின் பெரு முயற்சியால் ஆங்காங்கே சில இயந்திரத் தொழில்கள் மட்டும் நிறுவப் பெற்றன. சமுதாய விஷயங்களில் ஆங்கில அரசாங்கம் தலையிட்டுப் பெரிய மாறுதல்கள் செய்ய விரும்பவில்லை. மொத்தத்தில் மக்கள் 'பாமரராய், விலங்குகளாய்' வாழ்ந்து வந்தனர்.

## விடுதலையால் பிறந்த வீரம்

நாடு விடுதலையடைந்தவுடன், சுதந்தர இந்திய அரசாங்கம் முதலில் தன்னை நிலைநிறுத்திக்கொண்டு, உடனே தொழில்களை நிறுவ முன்வந்தது. மிகவும் பிற்போக்காகத் தேங்கி நின்ற நாட்டில் பெருந் தொழில்களை நிறுவுவது எளிதான காரியமன்று. கோடிக்கணக்காகப் பொருள் வேண்டும். மக்களின் மனப்பான்மை மாற வேண்டும். குடிசைத் தொழில்கள், கைத்

தொழில்களால் பிழைப்பவர்கள் நசித்து விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். தொழில்களின் நுட்பங்கள் தெரிந்த இலட்சக்கணக்கான இளைஞர்களும், பொறியாளர்களும் வேண்டும். பல்வேறு தொழில்களுக்கும் ஏற்ற பலவகையான இயந்திரங்கள் வேண்டும். ஆலைத் தொழில்களுக்கு அடிப்படையாக விவசாயமும் சுரங்கத் தொழில்களும் நவீன முறையில் பெருக்கமடைய வேண்டும்.

## திட்டங்கள்

சுமார் 2,000 மைல் நீளமும் அகலமுமுள்ள இந்தப் பெரிய நாட்டில் எங்கு என்ன பொருள் கிடைக்கும் என்ற ஆராய்ச்சியையே புதிதாகத்தான் தொடங்க வேண்டியிருந்தது. நாட்டின் தேவைகள் என்ன, ஏற்றுமதி, இறக்குமதிக்குரிய பொருள்கள் எவை என்ற விஷயங்களையெல்லாம் ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டியிருந்தது. நாடு முழுதிலும் பலதிறப்பட்ட தொழிற்சாலைகளை நிறுவி நடத்துவதற்கு நீண்ட காலமாகும். எந்தத் தொழில்களை உடனடியாக நிறுவ வேண்டும்; எவைகளைப் பின்னால் படிப்படியாக நிறுவ வேண்டும் என்ற முறைகளை ஆராய்ந்து, பெருந்தொழிற்சாலைகளுக்குத் தேவையான மூலதனத்தின் அளவையும், அதை அடைவதற்குரிய வழிகளையும் ஆராய்ந்து, திட்டங்கள் வகுத்து, அத்திட்டங்களைக் குறித்த காலத்திற்குள் வரிசையாக நிறைவேற்றி வர வேண்டும் என்று அரசாங்கம் தீர்மானித்தது. இவ்வாறு தோன்றியவையே நம்முடைய நான்கு ஐந்தாண்டுத் திட்டங்களும்.

## பொதுத் துறையும் தனியார் துறையும்

திட்டங்களே தீமையானவை, தொழில்களை நடத்த மக்களுக்குச் சுதந்தரம் இருந்தால்தான் அவை

வேகமாக வளரமுடியும் என்று சில பொருளாதார நிபுணர்கள் கருதுகின்றனர். பொருளாதார சுதந்தரத்துடன் தனி மனிதர்களின் முயற்சியால் குறுகிய காலத்தில் பெருந்தொழில் வளர்ச்சி பெற்றுவிளங்கும். மேற்கு ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி, ஹாலந்து, ஜப்பான் ஆகிய நாடுகளை அவர்கள் எடுத்துக் காட்டாகக் கூறுகின்றனர். 1963-க்கு முந்திய ஆறு ஆண்டுகளில் அந்நாடுகளில் தேசிய வருமானம் 49%-லிருந்து 74% வரை வளர்ந்துள்ளது. கூலி விகிதங்களும் 25% லிருந்து 63% வரை வளர்ந்துள்ளன. விலைவாசிகளும் நிலையாக இருந்திருக்கின்றன; வேலையில்லாத் திண்டாட்டமும் அநேகமாக இல்லை எனலாம். அந் நாடுகளைப் போல் சமீபத்தில் ஸ்பெயினும், பிலிப்பைன் தீவுகளும் தனியார் முயற்சியில் மிகுந்த முன்னேற்றம் அடைந்துள்ளன.

பூரணமான பொருளாதாரச் சுதந்தரத்திற்கு மாருக, பொருளாதார அமைப்பில் முழுவதையுமே அரசாங்கம் மேற்கொண்டு, எல்லாத் தொழில்களையும் நடத்திவரும் கம்யூனிஸ்ட் சர்வாதிகார முறை ஸோவியத் ரஷ்யாவிலும், சீனுவிலும், மற்ற கம்யூனிஸ்ட் நாடுகளிலும் கையாளப்படுகின்றது. ரஷ்யாவில் தனியார் துறை என்பதே இல்லை; எல்லாத் தொழில்களும் அரசாங்கத்திஞல் பொதுத்துறையிலேயே அமைக்கப் பெற்றுள்ளன. முடிவில் இவ்வாறு அமைத்துக் கொள்வதே எல்லாக் கம்யூனிஸ்ட் நாடுகளின் திட்டமாகும்.

இந்திய அரசாங்கம் மேலே குறித்த இரண்டுக்கும் நடுவான பாதையை மேற்கொண்டுள்ளது. ஆளும் கட்சியாகிய காங்கிரஸ் நாட்டில் ஸோஷலிஸப் பாணியிலுள்ள சமுதாயத்தை அமைப்பதே தனது நோக்கம் என்று தீர்மானித்துள்ளது. ஸோஷலிஸம் என்பது என்ன என்பதைத் தெளிவாக வரையறுத்துக் கூறு

விடினும், அந்தப் பாணியில் - முறையில் - சமுதாயம் அமைய வேண்டும் என்பது தீர்மானம். இதை அரசாங்கமும் ஏற்றுக்கொண்டுள்ளது. எல்லாத் தொழில்களையும் தனியார் கையில் விட்டு விடுவதற்கில்லை. எல்லாத் தொழில்களையும் புதிய இந்திய அரசாங்கம் தானே ஏற்று நடத்துவதும் இயலாது. ஆகவே மூலாதாரமான பெருந்தொழில்களை அரசாங்கம் மேற்கொள்ளவும், மற்றும் பல தொழில்களைத் தனியார் மேற்கொள்ளவும் திட்டங்களில் வசதி அளிக்கப் பெற்றுள்ளது.

தனியார் விரும்பாதவையும், தொடக்கத்தில் மிகுந்த நஷ்டமுண்டாகக் கூடியவையுமான தொழில்களை மட்டும் அமெரிக்க ஐக்கிய நாட்டில் அரசாங்கம் நடத்தி, பின்னர் தனியார் கையில் அவைகளை ஒப்படைத்தல் வழக்கம். அப்படி நஷ்டத் தொழில்களை மட்டும் இந்திய அரசாங்கம் நடத்தமேற்கொண்டால், இங்குள்ள பொருளாதாரமே சீர்குலைந்துவிடும். தவிரவும் தனியார் இலாபம் பெறக் கூடிய சில நிறுவனங்களையும் அரசாங்கமே எடுத்துக் கொள்வது இங்கே அவசியமாயிற்று. இதுவரை அரசாங்கமே உடைமையாகக் கொண்டு நடத்திவரும் தொழில்கள் நான்கு வகைப்பட்டவை: உருக்கு இரசாயன உரம் முதலியவை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள், ரயில்வேக்கள், தபால்-தந்தி நிலையங்கள் முதலிய சமூக உதவியான ஸ்தாபனங்கள், நிலக்கரி போன்ற சுரங்கங்கள், பாங்குத் தொழில், இன்ஷுரன்ஸ் முதலியவை.

சில பெருந் தொழிற்சாலைகளை அரசாங்கமே மேற்கொண்டு நடத்த முடியும். மற்றும் சிலவற்றைத் தனியார் நடத்த முடியும் என்றாலும், நாட்டின் செல்வம் சிலருடைய கையில் குவிந்துவிடக் கூடாது என்பதற்காக அரசாங்கமே அவைகளையும் நடத்தவேண்டி

யிருக்கின்றது. பொதுத்துறை, தனியார் துறை என்ற இரு பிரிவின் எல்லைகளும் இன்னும் துலக்க மாகப் பிரிக்கப்படவில்லை. உதாரணமாக அரசாங்க மும் நிலக்கரி உற்பத்தி செய்கின்றது, தனியார்களும் செய்கின்றனர். ஆகவே நாட்டில் அரசாங்கமும் தனி யாரும் சேர்ந்தே தொழில்களை நடத்தி வரவேண்டி யிருக்கின்றது. இது கலப்புப் பொருளாதாரம். இதனால் விளையும் நன்மைகள் பல. ஆனால் தனியார் துறைக் குத் தேவையான எல்லா உதவிகளையும் அரசாங்கம் உடனுக்குடன் கவனித்துச் செய்து வரவேண்டும். அதேபோல், தனியார் துறையில் கையாளப்படும் சிக் கனத்தைப் பொதுத் துறை ஸ்தாபனங்களும் மேற் கொள்வதோடு, நாள்தோறும் திறமையை வளர்த் தும், செம்மையான முறையில் கணக்குகள் வைத்துக் கொண்டும் ஆதாயத்தைக் காட்ட முற்படவேண்டும். தனிப்பட்ட முதலாளிகள் தங்கள் தொழில்களில் காட்டும் அக்கறையைப் பொதுத் துறை ஸ்தாபனங் களின் தலைவர்களிடம் எதிர்பார்க்க முடியாது என்று சொல்லப்படுகின்றது. பெருந் தொழில்களை வளர்ப்ப தில் பொதுத்துறையிலுள்ளவர்களின் அக்கறையைப் போல் தனியாரிடம் காண்பதும் அரிது. நாடு சம்பந் தப்பட்டவரை பொதுத்துறை, தனித்துறை பற்றிய விவாதத்தை நிறுத்திக்கொண்டு, தீவிரமான தொழில் முன்னேற்றத்தையே குறிக்கோளாகக் கொள்வது தான் முறை. தொழில்களை நடத்தும் முதலாளிகளும், கம்பெனிகளின் தலைவர்களும், அரசாங்கத் தொழிற் சாலைகளின் தலைவர்களும், எல்லா நிர்வாக ஊழியர் களும், தொழிலாளர்களும், 'வீரமும், திறமையும், செழிப்பும் கொண்ட புதிய இந்தியாவைப் படைக்கும் பேற்றில் நமக்குப் பங்கு கிடைத்திருக்கின்றது; நாட் டின் செழிப்பே நமது செல்வம்!' என்ற ஒரே உணர்ச்சி

யுடன் செயல் புரிந்தால் துறை வேற்றுமைகள் குறைந்துவிடும்.

## தேசிய உடைமை

நாட்டு மக்கள் அனைவருக்கும் தொழில் கிடைக்க வேண்டும்; நோய்க்கும், முதுமைக்கும் பாதுகாப்புக் கிடைக்க வேண்டும். இவைகளுக்குப் பொறுப்பானது அரசாங்கம். கோடிக்கணக்காகவும், இலட்சக்கணக்காகவும் மக்கள் வேலையில்லாமல் திண்டாடித் திரிய வேண்டி யிருந்தால், நம் ஜனநாயகமும் தேய்ந்து மறைந்துவிடும். அரசியல் அதிகாரம் அனைத்தும் செல்வாக்குள்ள சிலர் கையிலேயே சிக்கிவிடும். ஆதலால் நாட்டின் விசேட நிலைமைக்கு ஏற்றபடி பெருந் தொழில்கள் பலவற்றை அரசாங்கம் மேற்கொள்வது இங்கு அவசியமாகின்றது. பொருள்களை உற்பத்தி செய்வோர் கையிலேயே அவைகளின் விநியோகமும் அமையும். தேசிய வருமானம் சிலரிடத்தில் குவிந்து விடாமல், பரவலாகப் பிரிவதற்கும் அரசாங்கம் தொழில்களைத் தேசிய உடைமையாக வைத்திருத்தல் நலமாகும். தேசிய உடைமையாக்குதல் மட்டுமே ஸோஷலிஸம் ஆகிவிடாது. முதலாளித்துவ நாடுகளிலும் சில தொழில்களைத் தேசியமாக்குதல் வழக்கமாயுள்ளது.

உள்நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநிறுத்தி, வெளிப் பகையால் ஆக்கிரமிப்பு ஏற்படாமல் பாதுகாப்பதே அரசாங்கத்தின் கடமையாக நெடுங்காலம் உலகில் இருந்து வந்தது. 'அரசாங்கம் தன் போலீஸை மட்டும் வைத்துக் கொண்டிருக்கட்டும்; ஆனல் மற்ற விஷயங்களில் கைகளைக் கட்டிக்கொண்டு தூங்கட்டும்' என்று ஒரு பொருளாதார நிபுணர் கூறியுள்ளார். மற்றெருவர், 'அரசாங்கம் தொழில்களை

ஒழுங்குப் படுத்துதல் தீமையானது; அவைகளில் அது பங்கு கொண்டு நடத்துதல் பொதுப்பணத்தை விரயம் செய்வதாகும்' என்று குறித்துள்ளார். இவை யெல்லாம் சில நாடுகளில் சில காலங்களுக்குப் பொருத்தமாயிருந்தன. ஆனால் தனி முதலாளிகளின் தொழில்களில் ஏற்பட்ட போட்டியும், வலிமை மிக்கவர்கள் மெலிந்தவர்களை நசுக்கியதும், செல்வர்கள் மேலும் செல்வம் குவித்தும் ஏழைகள் மேலும் வறுமையில் ஆழ்தும் வந்தமையும், இலாபம் ஒன்றையே குறியாகக் கொண்டு பெண்களையும் குழந்தைகளையும் ஆலைகளில் கொடுமையாக வேலை வாங்கியதும், மற்றும் பல கொடுமைகளும் தனியார் தொழில் நடத்தும் முறையை மாற்றக் காரணமாயின. சில நாடுகளில் கடுமையான சட்டங்கள் இயற்ற நேர்ந்தது; மற்றும் சில நாடுகளில் அரசாங்கமே தொழில்களை மேற்கொள்ள நேர்ந்தது. மொத்தத்தில் எல்லாத் தொழில்களையும் தனியார்கள் தம் விருப்பம் போல் நடத்தி வந்ததில், மக்களுக்குப் பெருந் தீங்கே நேர்ந்து வந்திருக்கின்றது. அரசாங்கம் தொழில்களில் தலையிட அவசியம் ஏற்பட்டது. முதலாளித்துவத் தொழில் முறையால் நாட்டு மக்கள் அனைவருக்கும் வேலை கொடுக்க இயலாமையும், செல்வத்தையும் வருமானங்களையும் நீதியற்ற முறையில் சிலர் மட்டுமே பெறுவதும் முக்கியமான குறைகள் என்று கீன்ஸ் பிரபு எழுதியுள்ளார். நாட்டின் பொருளாதாரத்திலும், முக்கியமாகத் தொழில்துறையில் முதலீடு செய்வதிலும் அரசாங்கம் தலையிடாமல் பெருங் காரியங்களைச் சாதிக்க முடியாது என்றும் அவர் உணர்த்தியுள்ளார். ஆனால் தொழில்களை அரசாங்கமே உடைமையாகக் கொள்ள வேண்டியதில்லை என்பது அவர் கருத்து.

தனியார் தொழில் முறையில் நெடுங்காலத்து

அநுபவம் உண்டு; அரசாங்கத்தின் பொதுத் துறையில் அத்தகைய அநுபவம் இல்லாதது பெருங் குறைதான். ஆயினும் எதிர்காலத்தில் பல்லாண்டுகளுக்கு-நீண்ட காலத்திற்கு-ஏற்ற திட்டங்களை அமைத்து நடத்துவதற்கும், இடையில் ஏற்படுகிற கஷ்ட நஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் குறிக்கோளை நிறைவேற்றுவதற்கும் அரசாங்கத்திற்கு உள்ள ஆற்றல் தனியார்களுக்கு இருக்க முடியாது. புகழ்பெற்ற பொருளாதார ஆசிரியரான ஜி. டி. எச். கோல் கூறியுள்ள அபிப்பிராயம் கவனிக்கத் தக்கது: 'இருபதாம் நூற்றாண்டின் நிலைமைகளில் மக்கள் அனைவருக்கும் தனியார் தொழில் முறை அதிக உதவி செய்ய முடியுமா, அல்லது பொருளாதாரக் கொள்கை சம்பந்தமான பெரும்பாலான விஷயங்களை அரசாங்கமும், அது அமைக்கும் தொழில் ஸ்தாபனங்களும் தங்கள் கையில் வைத்துக்கொள்வது அதிக உதவியாகுமா என்பதே அடிப்படையான விஷயம். கிடைக்கக்கூடிய உற்பத்திக்குரிய எல்லா வசதிகளையும் முழுதும் பயன்படுத்திக்கொள்ள இரண்டாவதாகச் சொல்லிய (அரசாங்கத்) துறையால்தான் இயலும் என்பதால், அதுவே விசேட நன்மையாகும். தேசிய நலனுக்குரிய மனித சக்தியோ, நிலமோ, பெரிய உற்பத்திக் கருவிகளோ எதுவும் பயனின்றி வீண்போகாது. பொருளாதாரத் துறைகளில் முக்கியமான கேந்திர ஸ்தானங்களில் அரசாங்க ஆதிக்கியம் இருந்தால், அதனல் வேலையில்லாத் திண்டாட்டம் அனைத்தையும் ஒழித்துவிடலாம். மக்களின் தேவைகளுக்கு ஏற்ற முறையில் பொருள் உற்பத்தியின் அளவையும், தன்மையையும் உறுதி செய்ய முடியும்.' சோஷலிஸத்தின் நோக்கம் இந்தத் தொழிலைத் தேசியமாக்குவதா, அந்தத் தொழிலைத் தேசியமாக்குவதா என்று பார்ப்பதன்று; சமுதாயத்தின் பொருளாதார வாழ்க்கையை

முறைப்படுத்திச் செலுத்தும் அதிகாரமே முக்கியமானது என்றும் கோல் தெரிவித்துள்ளார்.

உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானியான ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் கூறியுள்ள கருத்தும் சிந்திக்கத் தக்கது: 'சமுதாயத்தின் உற்பத்திச் சக்தி வியக்கத் தகுந்த முறையில் அபரிமிதமாக வளர்ந்திருந்த போதிலும், தற்கால மனிதன் தன் நிலை நிலையானதில்லை என்று ஏன் அஞ்சுகிறான்? என் அபிப்பிராயத்தில் இன்றுள்ள முதலாளித்துவ சமுதாயத்தின் பொருளாதாரக் குழப்பமே தீமையின் உண்மையான காரணம்.'

## வெளிநாடுகளில் தேசிய மயமாக்குதல்

தொழில்களைத் தேசிய மயமாக்கும் முறையைவெளி நாடுகள் சில எவ்வளவு கையாண்டிருக்கின்றன என்று பார்ப்போம். இங்கிலாந்து பல நூற்றாண்டுகளாக முதலாளித்துவ முறையிலேயே முன்னேறிய நாடு. இந்த நூற்றாண்டில்தான் அங்கு தேசிய உரிமையாக்குதல் ஓரளவு கையாளப்பெற்றுள்ளது. லண்டனில் நதியில் போக்குவரத்து, பாலங்கள், துறைமுகக்கிட்டங்கிகள் முதலியவைகளை நிர்வகிப்பதற்கு 'லண்டன் துறைமுகக் கழகம்' ஒன்று அமைந்திருக்கின்றது. விளக்குகள் எரியவும், அடுப்பெரியவும் பயன்படும் 'கியாஸ்', மின்சாரம் ஆகியவற்றின் உற்பத்தியும் விநியோகமும் தேசியமாக்கப்பட்டிருக்கின்றன. 1947-இல்ரயில்வேக்களும், 35.மைல் அல்லது அதற்கு மேற்பட்ட தூரம் செல்லும் லாறிப் போக்குவரத்து, லண்டன் நகரப் பிரயாணிகளுக்கான பஸ் முதலிய வாகனங்கள் யாவும் தேசியமாயுள்ளன. ஆனால் 1958-இல் லாறிப் போக்குவரத்து மீண்டும் தனியார் வசம் விடப்பட்டது. பருத்தி இறக்குமதியும் விற்பனையும் அரசாங்கத்தைச் சேர்ந்

தவை. நிலக்கரி வெட்டுதல், விமானப்போக்குவரத்து, குடியேற்ற நாடுகளில் தொழிற்சாலைகள் அமைத்தலும், உணவுப் பொருள் உற்பத்தியும் அவ்வாறே அரசாங்கத்தின் கையிலுள்ளன. நாட்டின் தலைமையான 'பாங்க் ஆப் இங்கிலாந்து'ம் தேசியமாக்கப் பெற்றுள்ளது. ஆனல் போர்த் தளவாடங்களின் உற்பத்தி தனியார் வசம் விடப் பெற்றிருக்கிறது. தொழிற் கட்சியினரின் ஆட்சியில் பல தொழில்களையும் தேசியமாக்க எண்ணியபோதிலும், மற்றைக் கட்சியினர் அதற்கு எதிர்ப்பாக இருந்தனர்.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் எல்லாத் தொழில்களும் தனியார் துறையிலேயே நடைபெறுகின்றன. போரினலோ, பொருளாதார நெருக்கடியாலோ, குறிப்பிட்ட கால அளவுக்கு அரசாங்கம் சில தொழில்களை மேற்கொண்டபோதிலும், பெரும்பாலாக அது தொழில்களில் தலையிடுவதில்லை. தலையிடுதல் ஜனநாயக இலட்சியத்திற்கு முரணனது என்றும் அங்கே கருதப்படுகின்றது. பொதுமக்களுக்கு உதவியாக அமைந்துள்ள தபால்-தந்தி, ரயில்வேக்கள் முதலிய சாதனங்கள், தேசத் தற்காப்புக்குரிய சில பொருள்களின் உற்பத்தி முதலியவையே பொதுத் துறையில் உள்ளன. 1923-ல் டெனஸ்ஸி நதிப் பள்ளத்தாக்கை அபிவிருத்தி செய்வதற்காக அரசாங்கத்தால் அமைக்கப்பெற்ற குழு பல அணைகள் கட்டி, காடாகக் கிடந்த இடங்களையெல்லாம் உணவுப் பொருள்களும், உலோகப் பொருள்களும் கொழிக்கும் நாடாக மாற்றியுள்ளது. இந்த வேலைகள் பலவற்றில் அரசாங்க அதிகாரிகளும் தனியார்களும் சேர்ந்து ஒத்துழைக்க வழி செய்யப்பட்டுள்ளது. பொதுவாக அமெரிக்கா மிகவும் முற்போக்கடைந்த நாடு. அந்த முற்போக்குக்கு நாட்டின் அமைப்பும், வரலாறும், அரசியலும் போன்ற பல

விசேடக் காரணங்கள் உண்டு. அங்கு ஜனத்தொகை சுருக்கம், விளை நிலங்கள் மிகுதி.

ஃபிரான்ஸ் தேசத்தில் தேசிய முறை வெகுகாலத்திற்கு முன்பிருந்தே நிலைத்து வந்துள்ளது. போர்த் தளவாடங்களின் உற்பத்தி, ரயில்வேக்கள், நாட்டின் வடபகுதியிலுள்ள நிலக்கரிச் சுரங்கங்கள், கியாஸ், மின்சார உற்பத்தியும் விநியோகமும் முதலியவைகளை அரசாங்கம் நடத்திவருகிறது. இன்ஷூரன்ஸ், பாங்குத் தொழிலில் பெரும்பகுதி தேசியமாகியுள்ளன. தொழில்கள் பலவற்றை அரசாங்கம் நடத்துவதில் நூற்றுக்கு மேற்பட்ட கம்பெனிகள் இருக்கின்றன. ஆனால் பொதுத்துறை ஸ்தாபனங்களால்தான் அரசாங்கத்திற்குப் பண முடைகள் ஏற்படுவதாயும், இவைகளிலே சிலவற்றையாவது உதறிவிடுதல் நலமென்றும் சில பிரெஞ்சு அறிஞர்கள் கருதுகின்றனர்.

இத்தாலியில் பெரிய தொழில்களில் முடக்கப்பெற்றிருக்கும் மூலதனத்தில் பாதி அரசாங்கத்தினுடையது. நார்வே, ஸ்வீடன் ஆகிய மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் தேசிய உடைமைத் தொழில்கள் அதிகமாயுள்ளன.

1956-இல் எகிப்திய அரசாங்கத் தலைவர் கர்னல் நாஸர் சூயஸ் கால்வாயைத் தேசிய உடைமையாக்கினார். அதனால் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு மாபெரும் 'அஸ்வன்' அணையைக் கட்டி முடிக்க வேண்டும் என்பது அவர் கருத்து. ஃபிரான்ஸூம் இங்கிலாந்தும் கால்வாயைத் தேசியமாக்கும் திட்டத்தை எதிர்த்தன; ஆயினும் முடிவில் அது தேசிய உடைமையாக்கப் பட்டுவிட்டது. பாகிஸ்தானில் 1950 முதல் பொதுத் துறையில் தொழில்கள் அமைக்க ஏற்பாடாயிற்று. உருக்கு, இரசாயன உரம், சணல், சிமிண்டு முதலியவற்றின் உற்பத்தியில் மிகுந்த கவனம் செலுத்தப்பட்டு வருகின்றது.

இவ்வாறு பல நாடுகளில் தேசியப் பொதுத் துறை பல படிகளில் அமைந்துள்ளது. ஆனால் தொழில்களில் அரசாங்கத்தின் தலையீடு எங்கும் அதிகமாகி வருகின்றது. ஐரோப்பிய நாடுகளில் தனியார் துறையிலுள்ள தொழில்களில் பொதுத் துறையைப் போலவே அரசாங்க ஆதிக்கியம் அதிகமாயுள்ளது. அமெரிக்க ஐக்கிய நாட்டிலும்கூட அரசாங்கம் நாட்டின் பொருளாதாரத்தை ஒழுங்குபடுத்தும் அதிகாரம் அனைத்தையும் பல முறைகளில் பயன்படுத்தியே வருகின்றது.

## திட்டங்களின் அவசியம்

எங்கு, எப்படியிருந்த போதிலும், நம் நாடு சம்பந்தப்பட்டவரை மக்கள் அனைவரும் கடுமையாக உழைக்காமல் எவ்வித முன்னேற்றமும் ஏற்படமுடியாது. கடுமையான உழைப்பு, ஆடம்பரமற்ற வாழ்க்கை, பலாத்காரமான பூசல்களுக்கு இடமில்லாதபடி நேசப்பான்மையுடன் இருத்தல் ஆகியவையே நமக்கு அவசியமானவை. எந்தத் திட்டம் வகுத்தாலும், அது மக்களின் மனத்தைக் கவர வேண்டும். தொடக்கம் முதல் இறுதிவரை மக்கள் அதில் ஒத்துழைக்கும்படி செய்ய வேண்டும்.

சென்ற பதினைந்து ஆண்டுகளில் இந்திய சரித்திரத்திலே என்றுமில்லாத முறையில் மகத்தான வேலைகள் செய்து முடிக்கப் பெற்றுள்ளன. மாபெரும் அணைகள், தொழிற்சாலைகள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. ஆயினும் அவைகளைப் பற்றியெல்லாம் போதிய அளவில் நாட்டிலே விளம்பரமில்லை. பெரும்பாலான மக்கள் எங்கோ ஏதோ நடந்துவருவதாகக் கருதுகின்றனரே அன்றி, நாடு அடைந்துள்ள வெற்றிகளை அவர்கள் விரிவாகத் தெரிந்து கொள்ளவில்லை.

ஒவ்வொரு திட்டமும் ஐந்தாண்டுக் காலத்தில்

நிறைவேறும்படி அமைக்கப்பெற்ற போதிலும், அந்தக் கால அளவுக்குள் பெரிய காரியங்கள் முற்றுப் பெறமாட்டா. ஒவ்வொரு திட்டமும் அடுத்த திட்டத்துடன் தொடர்புடையது; ஒன்றின் தொடர்ச்சியாகவே மற்றதும், அதன் பின்னதும் நடந்து வருகின்றன. திட்டங்கள் பல நிறைவேறிய பின்பே மொத்தத்தில் முன்னேற்றத்தின் அளவைத் தெளிவாய்த் தெரிந்துகொள்ள முடியும். நிலக்கரிச் சுரங்கத்தின் பயன் உருக்கு ஆலை முதலியவை ஏற்பட்ட பிறகே தெரியும். இயந்திரங்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையின் பயன், அந்த இயந்திரங்கள் நாடெங்கும் பரவி, பல தொழில்கள் வளர்ந்தாலே தெரியும். ஆயினும் இப்பொழுது நாம் கண்டு கொள்ளக்கூடியது நாடு எவ்வளவு வேகத்தில் முன்னேறி வருகிறது என்பதே. இரண்டு, மூன்று நூற்றாண்டுகளாக உறங்கிக் கிடந்த நாடு விழித்தெழுந்துவிட்டது; தன் வல்லமையைத் தெரிந்துகொண்டு வேகமாக முன்னேறியும் வருகிறது. 'இந்தியா விழித்தெழும் அசுரன்' என்ற பெயரில் ஓர் அமெரிக்கர் புத்தகம் எழுதியுள்ளார். அசுரன் என்ற பெயரைப் பீமனைப் போன்ற மகா வல்லமையுள்ள மகாபுருடன் என்ற கருத்திலேயே அவர் கூறியுள்ளார்.

ஆசியாவிலேயே செல்வம் கொழிக்கும் நாடாக இந்தியா முன்பு விளங்கியது. இடைக்காலத்தில் பல காரணங்களால் வளர்ச்சி தேங்கி, வறுமை மிஞ்சிவிட்டது. மீண்டும் இந்நாடு பழைய உன்னத நிலையை அடைவதோடு, வெகு விரைவிலே உலகத்தின் முன்னணி நாடுகளில் ஒன்ருக விளங்கவும் முடியும். கோடிக் கணக்கான மக்களின் வறுமையைப் போக்கவும், போதிய சத்துள்ள உணவுப் பொருள்கள் கிடைக்கவும், வருவாயைப் பெருக்கவும், வேலையில்லாத் திண்டாட்

டத்தை ஒழிக்கவும், வெளிநாடுகளுடன் சிறந்த முறையில் வாணிபம் செய்யவும் நீண்ட காலத் திட்டங்கள் வகுத்து நிறைவேற்றுவதே வழி என்று இந்திய அரசாங்கம் தீர்மானித்ததில் வியப்பில்லை. திட்டங்களின் மூலம் ஸோவியத் ரஷ்யா மாபெரும் முன்னேற்றமடைந்ததை உலகறியும். ஆனால் ரஷ்யாவுக்கும் இந்தியாவுக்கும் சில வேற்றுமைகளும் உண்டு. 1917-இல் ரஷ்யா இருந்த நிலையிலேயே 1947-இல் இந்தியா பிற்போக்கான நிலையில் இருந்ததாக வைத்துக்கொள்வோம். ரஷ்யக் கம்யூனிஸ்ட் அரசாங்கத்திற்கு அளவற்ற அதிகாரம் இருந்தது. இந்திய அரசாங்கம் ஜனநாயக முறையில் அமைந்தது. ஆனால் ரஷ்யாவுக்கு வெளி நாடுகளின் உதவிகளில்லை; இந்தியாவுக்கு அவை ஏராளம். ரஷ்யாவே பல தொழில்களில் நமக்கு உதவி செய்து வருகின்றது.

## முதல் திட்டம்

நமது முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் 1951-ஆம் ஆண்டு வகுக்கப் பெற்றது. திட்டத்தின் பயன்களைத் தெரிந்து கொள்வதற்கு 1948-49இல் நம் தேசிய வருமானம் எந்த இனங்களில், எவ்வளவு இருந்தது என்பதை அடிப்படையாகக் கொள்ள வேண்டும்.

1948-இல் ஜனத் தொகை சுமார் 34 கோடி என்று வைத்துக் கொண்டால் ஒரு நபரின் சராசரி வருமானம் ரூ. 255 ஆகின்றது. கீழேயுள்ள கணக்கின்படி ஒன்பது கோடி மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டு, ரூ. 4,150 கோடிக்குப் பொருளுற்பத்தி செய்திருக்கின்றனர். மொத்தத் தேசிய வருமானத்தில் 100-க்கு 48 பகுதி விவசாயத்திலிருந்தே கிடைத்திருக்கின்றது. சுரங்கம் முதலிய தொழில்களில் 80 லட்சம் அதிக நபர்கள் ஈடுபட்டிருந்தபோதிலும், அவைகளைவிட வர்த்தகம்-

போக்குவரத்தில் கூடுதலான வருவாய் இருந்திருக்கின்றது. எனவே விவசாயத்திற்கு அடுத்த முக்கியமான தொழில் வர்த்தகமாக விளங்குகின்றது.

## 1948-49இல் இந்திய யூனியனின் தேசிய வருமானம்

| இனம் | நிகர வருமானம் தொகை | நிகர வருமானம் சராசரி | உழைத்தவர் தொகை | ஒரு நபரின் சராசரி வருமானம் |
|---|---|---|---|---|
| 1. விவசாயம் | கோடி ரூ. 4,150 | 47·6% | 9 05,00,000 | ரூ. 500 |
| 2. சுரங்கத் தொழில், ஆலைத் தொழில், கைத் தொழில்கள் | ரூ. 1,500 | 17·0% | 1,87,00,000 | ரூ. 800 |
| 3. வர்த்தகம், போக்குவரத்து | ரூ. 1,700 | 19·5% | 1,07,00,000 | ரூ. 1,600 |
| 4. உத்தியோகங்கள் | ரூ. 1,360 | 15 9% | 1,28,00,000 | ரூ. 1,100 |
| 5. மொத்தம் | ரூ. 8,710 | 100·0% | ... | ... |

முதல் ஐந்தாண்டுத் திட்டம் 1951—52 முதல் 1955—56 வரை நிறைவேற்றப்பட்டது. இத் திட்டத்திற்காக ரூ. 1,378 கோடி செலவிட உத்தேசிக்கப்பட்டது. இவ்வளவு பெருந் தொகையை வரிகளின் மூலம் மட்டுமே அரசாங்கம் பெற முடியாது. அரசாங்க வருவாயில் ரூ. 1,258 கோடி மிச்சம் பிடித்தது போகப் பாக்கித் தொகையை உள் நாட்டிலும் வெளி நாடுகளிலும் கடனாகப் பெற்றும், அரசாங்க வரவு

செலவுத் திட்டத்தில் வரவுக்கு மேல் செலவைக் கூடுதலாகக் காட்டியும் திட்டத்தை நிறைவேற்ற வேண்டியிருந்தது. இத் திட்டத்தின்படி விவசாயத்திற்கும் கிராம சமுதாய நலனுக்குமாக ரூ. 299 கோடியும், அணைகள் முதலிய பாசன வசதிக்கும் மின்சார உற்பத்திக்குமாக ரூ. 585 கோடியும் செலவிடப்பட்டன. ஆனால் தொழில்களுக்கு ரூ. 100 கோடி மட்டும் செலவிடப்பட்டது. விவசாயமே நாட்டின் அடிப்படைத் தொழிலாயிருப்பதாலும், முதலில் மக்களின் உணவுப் பிரசினைக்கு வழி செய்வது அவசியமாதலாலும், ஆரம்ப நிலையில் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கு விவசாய விளைபொருள்களே முக்கியமாதலாலும் விவசாயம், பாசன வசதி, மின்சார உற்பத்தி ஆகியவைகளுக்காகப் பெருந் தொகை செலவு செய்யப்பெற்றுள்ளது. போக்குவரத்து வசதிகள் அமைக்க ரூ. 532 கோடி செலவிடப்பட்டுள்ளது. இவ்வாறு அரசாங்கத்தின் பொதுத் துறையில் ரூ. 2,000 கோடிக்குமேல் செலவிடப்பட்டது தனியார் தொழில்களுக்கும் பேருதவியாகும்.

தனியார் தொழில்களுக்குக் கடன் வசதி முதலிய உதவிகள் செய்வதற்காக 1948-இல் தொழில் மூலதனக் கார்ப்பரேஷன் ஒன்றும், 1955-இல் ஒரு புதிய கார்ப்பரேஷனும் நிறுவப்பட்டுள்ளன. 1949-லேயே இந்திய ரிசர்வ் பாங்கு தேசியமாக்கப் பெற்றது. 1956-இல் இந்திய இம்பீரியல் பாங்கும் 'இந்திய ஸ்டேட் பாங்கு' என்ற பெயருடன் தேசியமாக்கப் பெற்றது. 1956-இல் இந்திய 'ஆயுள் இன்ஷுரன்ஸ்' தொழில் தேசிய உடைமையாயிற்று. அதே ஆண்டில் வெளி நாட்டு வர்த்தகத்தை ஊக்குவித்து நடத்த 'ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன்' அமைக்கப் பெற்றது.

திட்டங்களுக்காக நமக்குப் பணமாகவும் இயந்

திரங்களாகவும், பண்டங்களாகவும் கொடுத்துதவும் நாடுகள் அமெரிக்க ஐக்கிய நாடு, இங்கிலாந்து, மற்ற பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகள், மேற்கு ஜெர்மனி. ரஷ்யா, செக்கோஸ்லோவேகியா, ஜப்பான், ஃபிரான்ஸ் முதலிய பல. மேலும் இந்தியாவில் கனரகத் தொழிற்சாலைகளையும் மற்ற ஆலைகளையும் அமைப்பதற்காக அவைகளிலே சில நாடுகள் தேர்ந்த நிபுணர்களையும் அனுப்பி உதவி புரிந்து வருகின்றன. சில நாடுகள் தங்கள் மூலதனங்களை இந்தியாவில் முடக்கித் தொழில்களும் நடத்தி வருகின்றன. 1955 வரை பிரிட்டிஷ், அமெரிக்கக் கம்பெனிகள் ரூ. 308 கோடிக்குமேல் மூலதனத்தை இந்தியாவில் தொழில், வர்த்தகம், தோட்டப் பயிர்களுக்காக முடக்கி யிருக்கின்றன. இந்த வகையில் அமெரிக்க மூலதனத்திற்கும், பிரிட்டிஷ் மூலதனத்திற்கும் முறையே அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் கிடைப்பதைவிட இந்தியாவில் கூடுதலான இலாபம் கிடைப்பதாகத் தெரிகிறது. இந்தியாவில் அந்நியர் முதலீடுகளால் அவர்களுடைய ஆதிக்கியமும் செல்வாக்கும் மேலோங்கிவிடாதபடி இந்திய அரசாங்கம் சில ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றது. சில ஸ்தாபனங்களில் நமது அரசாங்கம் பங்கெடுத்துக் கொள்கின்றது; சிலவற்றில் முதலீடு செய்யக்கூடிய இந்தியர்களுக்குப் பங்குகள் அளிக்கப்பெறுகின்றன. தொழில்கள் யாவும் அரசாங்கத்தின் கண்காணிப்பிலேயே நடந்து வருகின்றன.

வெளி நாட்டவரோ, உள்நாட்டவரோ முதலீடு செய்து தொழில்களை வளர்ப்பதற்குத் தனியார் மூலதனம் அவசியம் என்பதை நமது அரசாங்கம் நன்கு உணர்ந்திருக்கின்றது. அத்துடன் பொதுத் துறையில் அரசாங்கம் நிறுவும் தொழில் நிலையங்களிலும் அநுபவமுள்ள தனியார்களின் திறமையைப் பயன்

படுத்திக் கொள்ளவும் அது வழி செய்திருக்கின்றது. பல தொழில் ஸ்தாபனங்களில், அரசாங்கம் ஏராள மான பங்குகளை எடுத்துக்கொண்டு, தனியார்களுக் கும் பங்குகள் கொடுத்து, ஒவ்வொன்றிலும் 50 பங்கு தாரர்களுக்கு மேற் போகாத 'பிரைவேட் லிமிடெட் கம்பெனி'களாக அமைத்திருக்கின்றது. இத்தகைய கம்பெனிகளில் ஒன்றுதான் பங்களூரிலுள்ள 'ஹிந்துஸ் தான் மிஷின் டூல்ஸ் லிமிடெட்'. இதன் மூலதனத்தில் 85% அரசாங்கத்தினுடையது; எஞ்சிய பகுதி ஒரு ஸ்விட்ஜர்லாந்துக் கம்பெனியினுடையது. அந்த ஸ்விஸ் கம்பெனியே ஸ்தாபன நிர்வாகத்தை நடத்தி வருகின்றது.

முதலாவது திட்டத்தின் பயனாக 1955-56 இல் உணவுத் தானியங்கள் 648 லட்சம் டன் உற்பத்தியாகி யிருந்தன. திட்டத்தின் குறிக்கோளைவிட இது 30 லட்சம் டன் கூடுதலான உற்பத்தி. பருத்தி, எண் ணெய் விதைகள், சணல் முதலியவையும் தக்க அளவு உற்பத்தியாகி யிருந்தன.

## இரண்டாவது திட்டம்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் 1960-61 இல் தயாராயிற்று. அதன்படி கீழ்க்கண்ட முறையில் ரூ. 4,800 கோடி செலவிட உத்தேசிக்கப்பட்டது:

| | | |
|---|---|---|
| விவசாயத்திற்கும், கிராம சமுதாய நலனுக்கும் ... | ரூ. | 568—கோடி |
| அணைகள் முதலிய பாசன வசதிக் கும், மின்சார உற்பத்திக்கும் | ரூ. | 913— ,, |
| சுரங்கம், தொழில்கள் | ரூ. | 890— ,, |
| போக்குவரத்து சாதனங்கள் | ரூ. | 1,385— ,, |
| சமுதாய சேவைக்குரிய திட்டங்கள் ... | ரூ. | 945— ,, |
| பல வகை | ரூ. | 99— ,, |
| மொத்தம் | ரூ. | 4,800—கோடி |

இந்தத் திட்டத்தில் போக்குவரத்துக்கான ரயில்வே முதலிய வசதிகளை அபிவிருத்தி செய்வதே முதல் இடம் பெற்றது. சுரங்கத் தொழில்களுக்கு முதல் திட்டத்தில் ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருந்ததை இதில் ரூ. 73 கோடியாகக் கூட்டப்பட்டது. பெரிய தொழில்களுக்கு ரூ. 800 கோடிக்கு மேல் செலவிட உத்தேசிக்கப்பட்டது. மொத்தச் செலவு ரூ. 4,800 கோடியாக முதலில் மதிப்பிட்டிருந்ததில், 4,600 கோடிதான் செலவாயிற்று.

## பத்து ஆண்டுகளின் முன்னேற்றம்

1951 முதல் பத்து ஆண்டுகளாக இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றியதில் முக்கியமான பயன்களைப் பார்ப்போம். தேசிய வருமானம் 100-க்கு 42 உயர்ந்துள்ளது. அதே சமயம் ஜனத்தொகையும் 8 கோடி கூடியுள்ளது. தனி நபரின் சராசரி வருவாய் 16% உயர்ந்திருக்கின்றது. ஜனத்தொகைப் பெருக்கத்தினால் மொத்த வருமானத்தை ஈவு வைத்துப் பார்க்கையில் அது குறைவாகத் தெரியும்.

மொத்தத்தில் அபிவிருத்தி வேலைகளுக்காக 10,110 கோடி முதலீடு செய்யப்பெற்றுள்ளது.

உணவுப் பொருள்களின் உற்பத்தி 45% முதல் 46% வரை பெருகியுள்ளது; இயந்திரத் தொழிலுற்பத்தி 94% கூடியுள்ளது.

பாசனத்திற்குரிய நிலங்கள் 36% அதிகரித்தன. மேலும் பாசன வசதிகள் பெருகியுள்ளன. மின்சார உற்பத்தி 148% உயர்ந்துள்ளது.

இந்த அபிவிருத்திகளைப் போலவே பள்ளி மாணவர் தொகை 85 சதவிகிதம் கூடிற்று; பொறியியல், தொழில் நுட்பக் கல்லூரிகளில் பயில்வோர் 238% அதிகரித்தனர்.

விவசாயத்தில் முதல் திட்டத்தின் பயனாக விளைவு 17% அதிகரித்தது. இரண்டாவது திட்டத்தில் இரண்டு ஆண்டுகளில் விளைவு குறைந்து விட்டது. ஆயினும் மொத்தத்தில் 16% விளைவு கூடியிருந்தது.

## சமுதாய நல அபிவிருத்தி

கிராமப் பகுதிகளிலுள்ள மக்களின் நலனுக்காக முதல் திட்டத்திலேயே சமுதாய நல அபிவிருத்தி இலாகா அமைக்கப் பெற்றது. இரண்டாவது திட்ட இறுதியில் 3,70,000 கிராமங்கள் சேர்ந்த 3,100 அபிவிருத்தி வட்டாரங்கள் (பிளாக்குகள்) ஏற்பட்டிருந்தன. மொத்தம் 59,000 கிராம ஊழியர்களும் அதிகாரிகளும் இவைகளில் தொண்டு புரிந்து வந்தனர். இரண்டு திட்டங்களிலும் சமுதாய நல அபிவிருத்திக்காக ரூ. 240 கோடி செலவிடப்பட்டது. இப்போது கிராமப் பஞ்சாயத்துக்களும் அமைந்திருப்பதால், வட்டார அபிவிருத்தி மேலும் வளர்ச்சியடைந்துள்ளது. மொத்தம் அநுமதிக்கப்பெற்றிருந்த 5,223 பிளாக்குகளில் இப்பொழுது 5,149-இல் வேலை நடக்கின்றது. எனவே கிராமப் பகுதியில் 99% இடங்களில் அபிவிருத்தி வேலைகள் தொடங்கி யிருக்கின்றன.

## கூட்டுறவு

கூட்டுறவு இயக்கம் மிகுந்த வளர்ச்சி யடைந்துள்ளது. அதன் அபிவிருத்தி வருமாறு :

| | 1950-51 | 1960-61 |
|---|---|---|
| பிரதம விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் | 1,05,000 | 2,10,000 |
| அங்கத்தினர்கள் தொகை | 44 லட்சம் | 170 லட்சம் |
| விநியோகித்த கடன் தொகை | ரூ. 23 கோடி | ரூ. 200 கோடி |

கூட்டுறவு விற்பனைச் சங்கங்களும் தொழிலுற்பத்திச் சங்கங்களும், பண்டக சாலைகளும், வீடுகள் கட்டும் சங்கங்களும் மிகுந்த முன்னேற்றமடைந்து பெருகியுள்ளன.

## பாசன வசதிகள்

இந்தியாவின் பிரசினைகள் என்னவென்றால், எத்தனையோ விஷயங்களைச் சொல்லலாம். ஆயினும் தண்ணீர்தான் நம் நாட்டின் முதன்மையான பிரசினை. கனிகளில் வெட்டி யெடுப்பது கட்டித் தங்கம், தண்ணீர் என்பது திரவத் தங்கம். நிலங்களுக்கு ஆறுகளிலிருந்தும், பூமிக்கு அடியிலிருந்தும் எவ்வளவு தண்ணீர் கிடைக்கின்றதோ அந்த அளவுக்கு விவசாயம் பெருக்கமடையும். இந்த வகையில் இரண்டாவது திட்ட இறுதியில் 180 லட்சம் ஏக்கர் நிலங்களுக்குக் கூடுதலான பாசன வசதி அளிக்கப் பெற்றுள்ளது. விவசாயத்திற்கும் தண்ணீர் இன்றி யமையாதது, தொழில்களுக்குப் பயன்படும் மின்சார உற்பத்திக்கும் தண்ணீர் அவசியம். புதிதாய்க் கட்டிய அணைகளின் மூலம் இந்த இரண்டு வசதிகளும் பெருகியுள்ளன. ஆறுகளில் ஓடிய தண்ணீரில் 100க்கு 17 பகுதிதான் 1951 வரை பயன்படுத்தப் பெற்று வந்தது. 10 ஆண்டுகளுக்குப் பின் 27% பயன்படுத்தப் பெறுகின்றது. இதனால் 700 லட்சம் ஏக்கர்களுக்குப் பாசன வசதி ஏற்பட்டிருக்கிறது.

## மின்சார உற்பத்தி

1950—51-இல் 23 லட்சம் கிலோவாட்டுக்களாக இருந்த மின்சார உற்பத்தி 57 லட்சமாகக் கூடியுள்ளது.

இருபதாயிரத்திற்கு மேற்பட்ட ஜனத் தொகையுள்ள நகரங்களுக்கெல்லாம் முதல் திட்டத்திலேயே

மின்சார உதவி கிடைத்து விட்டது. ஐயாயிரத்திலிருந்து இருபதாயிரம் வரை ஜனத் தொகையுள்ள நகரங்களில் சுமார் பாதி நகரங்களுக்கு மின்சாரம் அளிக்கப் பெற்றது.

பம்பாய்க்கு அருகில் தாரபூர் என்ற இடத்திலும், ட்ரோம்பேயிலும் அணு மின்சக்தி உற்பத்தி செய்யவும் ஏற்பாடு நடந்திருக்கிறது. தாரபூர் நிலையத்திற்கு வேண்டிய இயந்திரங்கள் அமெரிக்காவிலிருந்து வந்துள்ளன. இந்த நிலையத்திற்கு ரூ. 48½ கோடி செலவாகும். ராஜஸ்தான் பிரதேசத்தில் கனடா நாட்டு நிபுணர்களின் ஆலோசனைப்படி ரூ. 32 கோடிச் செலவில் ஓர் அணு மின் நிலையமும் அமைக்கப் பெறும். நம் நாட்டில் இப்பொழுதே அணுகுண்டுகள் செய்ய முடியும். ஆனால் அணுச் சக்தியை ஆக்க வேலைகளான தொழில்களுக்கு மட்டுமே பயன்படுத்த அரசாங்கம் தீர்மானித்துள்ளது.

நான்காவது திட்டத்தில் சென்னை அருகில் கால்பாக்கத்தில் ஓர் அணுமின் நிலையம் அமைக்க ஆராய்ச்சி முடிந்துள்ளது.

## தொழில்கள்

பத்து ஆண்டுகளில் தொழில்களின் வளர்ச்சி 94% கூடியுள்ளது. தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத கீழ்க்கண்ட பொருள்களின் உற்பத்தி குறிப்பிடத் தக்கது :

| பொருள் | 1950—51 | 1960—61 (உத்தேசம்) |
|---|---|---|
| இரும்பு | 32 லட்சம் டன் | 107 லட்சம் டன் |
| நிலக்கரி | 323 ,, ,, | 546 ,, ,, |
| சிமிண்டு | 27 ,, ,, | 85 ,, ,, |
| ரசாயன உரம் | 9,000 டன் | 1,10,000 டன் |
| அலுமினியம் | 3,700 ,, | 18,500 ,, |
| டீஸல்என்ஜின்கள் | 5,500 ,, | 40,000 ,, |

பெரிய அணைகளையும், பெருந் தொழிற்சாலைகளையும் அமைத்து வரும் இந்தியாவுக்குச் சிமிண்டு ஏராளமாகத் தேவை. 85 லட்சம் டன் உற்பத்தியானது அடுத்த திட்ட முடிவில் 154 லட்சம் டன்னுக உயர வேண்டும். 1932-33-ல் இங்கு உற்பத்தியான சிமிண்டு 6 லட்சம் டன்னுக்கும் குறைவு. அதைக் கொண்டு பார்த்தால், இப்பொழுது உற்பத்தி பெரிதாகத் தோன்றும். ஆனுல் வெளி நாடுகளில் சிமிண்டின் உபயோகம் வளர்ந்துள்ள அளவு மிக அதிகம். முக்கியமான சில நாடுகளில் சிமிண்டின் உபயோகம் வருமாறு :

**ஓராண்டில் சராசரியாக 1 நபர் உபயோகிக்கும் சிமிண்டின் அளவு**

| | |
|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடு | 600 ராத்தல் |
| பிரிட்டன் | 450 ,, |
| ஸ்வீடன் | 660 ,, |
| டென்மார்க் | 490 ,, |
| ஜப்பான் | 266 ,, |
| இந்தியா | 40 ,, |

இந்தியாவிலும் சிமிண்டு மற்ற நாடுகளைப் போலப் பயன்படுவதற்கு அதன் உற்பத்தி இன்னும் ஐந்து முதல் பத்து மடங்கு பெருகவேண்டும்.

மக்களின் உபயோகத்திற்கான முக்கியப் பொருள்களின் உற்பத்தி வருமாறு :

| பொருள் | 1950—51 | 1960—61 (உத்தேசம்) |
|---|---|---|
| மில் ஜவுளி | 371 கோடி கஜம் | 513 கோடி கஜம் |
| காகிதமும் அட்டையும் | 1,14,000டன் | 3,50,000 டன் |
| சர்க்கரை | 11,20,000டன் | 30,00 000 டன் |
| சைக்கிள்கள் | 1,01,000 | 10.50,000 |
| கார்கள் | 16,500 | 53,500 |

## சணல் ஆலைகள்

நம் ஏற்றுமதிப் பொருள்களில் முதன்மையானவை சணலைக் கொண்டு நெய்த பொருள்கள். பெரிய விரிப்புக்கள் நெய்வதற்கு 1962-ல் அகலமான பெருந்தறிகள் 650 விருந்து 1,350-ஆகப் பெருக்கப்பட்டன. விரிப்புக்களை ஏற்றுமதி செய்ததால் மட்டும் ரூ. 25 கோடி கிடைத்திருக்கிறது; சணலில் செய்த பொருள்களில் மொத்தம் ரூ. 150 கோடி கிடைத்திருக்கிறது.

கிராமத் தொழில்களும், குடிசைத் தொழில்களும் அபரிதமாக வளர்ந்துள்ளன. அவைகளுக்காகத் தனி ஸ்தாபனங்களும் ஏற்பட்டிருக்கின்றன. 'இன்டஸ்டிரியல் எஸ்டேட்ஸ்' என்ற 60 தொழிற் பண்ணைகள் அமைந்துள்ளன, இன்னும் ஏற்பட்டுக்கொண்டே வருகின்றன. சிறிய அளவில் இயந்திர சாதனங்களுடன் தொழில் செய்ய விரும்புவோர்களுக்கு அவை மிகவும் உதவியாக உள்ளன. மின்சார உதவியுடன் நடைபெறும் 1,000 சிறு தொழிற்சாலைகளும் ஏற்பட்டுள்ளன. கைத்தறித் துணி உற்பத்தி 74 கோடிக் கஜத்திலிருந்து 190 கோடியாகக் கூடியுள்ளது. கதர்த் துணி 70 லட்சம் கஜத்திலிருந்து 740 லட்சம் கஜமாகப் பெருகியுள்ளது. பட்டு உற்பத்தியும் சுமார் இரு மடங்காகியிருக்கின்றது.

தனியார் துறையில் நடைபெற்று வரும் தொழில்களுக்கும் அரசாங்கம் கடன் உதவி செய்வதுடன், தொழில் நிபுணர்களின் உதவியையும் அளித்து வருகின்றது; புதுத் தொழில் ஸ்தாபனங்கள் ஏற்படவும் ஊக்கமளிக்கின்றது. தனியார் தொழில்களும் அமோகமாக வளர்ந்து வருகின்றன.

அடிப்படையான கனரகத் தொழில்கள் அமைந்தால்தான் மற்றைத் தொழில்கள் வளர முடியும். அதனால் ஜாம்ஷெட்பூரிலுள்ள டாட்டா உருக்குத்

தொழிற் சாலையை அபிவிருத்தி செய்ய உதவியதுடன் அரசாங்கம் புதிதாக ரூர்கேலா, பிலாய், துர்க்காபூர் ஆகிய இடங்களில் மூன்று பெரிய உருக்குத் தொழிற்சாலைகளை அமைத்திருக்கின்றது. பெரிய 'கர்டர்கள்' முதல் கம்பிகள் வரை நம் நாட்டிலேயே தயாராகி வருகின்றன. 1950-ல் 3¼கோடி டன் நிலக்கரி தோண்டியெடுக்கப்பட்டது; இது 1961-ல் 5½கோடி டன்னாக உயர்ந்துள்ளது. ஸிந்திரி உரத்தொழிற்சாலை முதல் திட்டத்திலேயே அமைக்கப்பெற்று, நாள் தோறும் உர உற்பத்தி பெருகிவருகின்றது. பங்களூரிலுள்ள டெலிபோன் கருவிகள் உற்பத்திச் சாலையில் 1961-இல் பெருகவேண்டிய அளவு உற்பத்தி 1958-59 லேயே பூர்த்தியாகிவிட்டது. அங்கே ஆண்டுதோறும் ஒன்றேகால் லட்சம் கருவிகள் தயாராகின்றன. ஆந்திராவில் அமைந்துள்ள ஹிந்துஸ்தான் ஷிப்யார்ட் 1958—59 வரை 24 கப்பல்களைக் கட்டி முடித்திருக்கிறது. மத்தியப் பிரதேசத்திலுள்ள நேபா பேப்பர் மில்லில் மற்ற உயர்தரக் காகிதங்களுடன், பத்திரிகைகளுக்குத் தேவையான 'நியூஸ் பிரிண்ட்' காகிதமும் தயாராகின்றது. நாள்தோறும் 70 முதல் 75 டன் வரை அந்தக் காகிதம் உற்பத்தியாகின்றது. 'ஹிந்துஸ்தான் ஏர்கிராப்ட்' தொழிற்சாலையில் வியானங்கள் தயாரிக்கப் பெறுகின்றன. மின்சாரக் கருவிகள் பல போப்பாலில் உற்பத்தி செய்யப் பெறுகின்றன. ட்ரோம்பேயில் எண்ணெய் சுத்தம் செய்யும் இரண்டு தொழிற்சாலைகள் அமைந்துள்ளன; விசாகப்பட்டினத்திலும் புதிதாக ஒன்று 1956-இல் வேலை தொடங்கியுள்ளது.

இந்தியாவில் வருடத்திற்கு 30,000 மோட்டார் கார்களும், அதே அளவு டிரக்குகளும் உற்பத்தியாகின்றன. இப்பொழுது வருடத்திற்கு ரூ. 500 கோடிக்குத் தயாராகும் இயந்திரங்கள் 1970—71க்குள்

ரூ. 2,000 கோடிக்கு உயரவேண்டியது அவசிய மென்று நமது உருக்கு, கனரகத் தொழில்களின் மந்திரி அறிவித்துள்ளார்.

## போக்கு வரத்து வசதிகள்

திட்டக் காலத்தில் ரயில்வேக்களின் வளர்ச்சி அபாரமானது. 1,200 மைல் நீளத்திற்குப் புதிதாக ரயில் பாதைகள் அமைந்துள்ளன. 1,300 மைல் நீளத்திற்குப் பழைய பாதையுடன் கூடுதலாக ஒரு பாதை அமைத்து, இரட்டைப் பாதையாக்கப் பட்டிருக்கின்றது. 880 மைல் ரயில் பாதையில் மின்சார வண்டிகள் ஓட ஏற்பாடாகியுள்ளது. சாமான்கள் ஏற்றிச் செல்வதிலும் 1950—51-இல் 910 லட்சம் டன்னுக இருந்தது 1,540 லட்சம் டன்னுக உயர்ந்தது.

ரயில்வே எஞ்சின்கள் உற்பத்தி செய்வதற்காக 1950-இல் தொடங்கியுள்ள 'சித்தரஞ்சன் லோகோமோடிவ் ஒர்க்ஸ்' ஆசியாவிலேயே பெரிய எஞ்சின் உற்பத்தித் தொழிற்சாலையாக விளங்குகின்றது. ஆண்டுதோறும் அது 200 எஞ்சின்களையும், 100 தனி பாய்லர்களையும் உற்பத்தி செய்ய முடியும். 300 எஞ்சின்கள் உற்பத்தியாகும் வகையில் அதில் ஏற்பாடு செய்யப் பெறுகின்றது.

## கல்வி

நாட்டின் பள்ளிகள் 2,30,555 லிருந்து 3,98 200 ஆகப் பெருகியுள்ளன. தொடக்க நிலைப்பள்ளிகளின் வளர்ச்சி 63%, நடுநிலைப் பள்ளிகளின் வளர்ச்சி 191%, உயர்நிலைப் பள்ளிகளின் வளர்ச்சி 128%.

**பள்ளி சென்ற மாணவரின் சராசரி**

| | 1950—'51 | 1960—'61 |
|---|---|---|
| *6 வயது முதல் 11 வயது வரை* | *43%* | *61%* |
| *11 ,, 14 ,,* | *13%* | *23%* |
| *14 ,, 17 ,,* | *5%* | *12%* |

*கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் கலைகள், விஞ்ஞானம், தொழில்-துறைக் கல்வி பயின்ற மாணவர்களின் எண்ணிக்கை 1950-51-இல் 3,60,000 ஆக இருந்தது 1960-61-இல் 9,00,000 ஆக உயர்ந்துள்ளது. பல ராஜ்யங்களின் விஞ்ஞானத் துறையில் பயிலும் மாணவர் தொகை 33,36% வரை கூடியுள்ளது.*

**சுகாதாரமும் உடல் நலமும்**

*மக்களின் சுகாதார நிலையைத் திருத்தியமைப்பதில் அரசாங்கம் பெரும் பொருட் செலவு செய்து வருகின்றது. மலேரியாவைத் தடுப்பதிலும், மற்றத் தொற்று நோய்களைப் பரவாமல் குறைப்பதிலும் மிகுந்த வெற்றி கிடைத்திருக்கின்றது. சுகாதார ஊழியர்களுக்குப் பயிற்சி யளிக்கப் பல வசதிகள் செய்யப்பெற்றுள்ளன. நகரப் பகுதிகளில் குடிதண்ணீர் அளிக்கவும், கழிவு நீர் போக்குக்கு வழி செய்யவும் 664 திட்டங்கள் நிறைவேறியுள்ளன. நாட்டுப்புறங்களுக்குத் தண்ணீர் வசதிகளைப் பெருக்கவும் பெரிய அளவில் திட்டங்கள் நிறைவேறி வருகின்றன.*

*1950-51-இல் நாட்டில் உபயோகமான சோப்புகளின் அளவு சுமார் லட்சம் (மெட்ரிக்) டன்; 1960-61 இல் 3,75,920 டன் உபயோகமாகி யிருக்கிறது. மூன்றாவது திட்டத்தில் 5 லட்சம் டன் சோப்பு உற்பத்தி செய்ய உத்தேசிக்கப்பட் டிருக்கிறது.*

டும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை நடத்தி வைக்க 1955-56-இல் 144 நிலையங்களே இருந்தன; திட்ட இறுதியில், 1,649 ஏற்பட்டிருக்கின்றன. 330 நகர சுகாதார நிலையங்களிலும், 1,864 கிராம வைத்தியசாலைகளிலும் இத்திட்டப்படி மக்களுக்கு உதவி செய்யவும் வசதிகள் அமைந்துள்ளன.

இதுவரை திட்டங்களால் விளைந்த முக்கியமான நலன்களைப் பார்த்தோம். பொதுக் கார்ப்பரேஷன்களாகவும், இலாகாக்களின் மூலம் நிர்வகித்தும், கம்பெனிகளாகவும் அரசாங்கம் நடத்தி வரும் சில முக்கியமான ஸ்தாபனங்களைப் பற்றி இனி ஓரளவு கவனிக்கலாம்.

## பொதுக் கார்ப்பரேஷன்கள்

**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன்:** இதைச் சுருக்கமாக 'எல். ஐ. ஸி.' என்பார்கள். ஆயுள் இன்ஷ்யூரன்ஸைத் தேசியமாக்கிய சமயம், 1956, செப்டம்பரில் இது நிறுவப்பெற்றது. 26,000 சிப்பந்திகளுடனும் 2,00,000 ஏஜண்டுகளுடனும் நடந்து வந்த 243 தனியார் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் இதில் ஒன்றுகச் சேர்க்கப்பெற்றன. ரூ. 1,250 கோடிக்கு உரிய 50 லட்சம் பாலிஸிகளும், ரூ. 400 கோடிக்குரிய சொத்துக்களும் கார்ப்பரேஷனைச் சேர்ந்தன. கார்ப்பரேஷனின் மூலதனமான ரூ. 5 கோடியும் அரசாங்கம் அளித்தது. இந்த ஸ்தாபனம் பிரபலமான தொழில் அதிபர்கள் உள்ளிட்ட 15 உறுப்பினர்களைக் கொண்டு தனி அதிகாரமுள்ள ஒரு போர்டினுல் நிர்வகிக்கப் பெற்று வருகின்றது.

இன்ஷ்யூரன்ஸ் தொழிலை இந்தக் கார்ப்பரேஷன் எடுத்துக் கொண்டபின் நடைமுறையில் முன்னேற்றத்திற்குரிய பல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. புதிய

பாலிஸிகள் பெருவாரியாகச் சேருவதற்காகச் சில விதிகள் தளர்த்தப்பட்டுள்ளன. நாட்டுப்புறங்களிலும், தொழிலாளரிடையிலும் இன்ஷூரன்ஸ் முறை பரவுவதற்குத் தீவிர ஏற்பாடுகள் நடந்திருக்கின்றன. மொத்தத்தில் கார்ப்பரேஷன் மிகவும் இலாபகரமாக நடந்து வருகின்றது. அதன் நிதிகள் பொதுத் துறையிலும் தனியார் துறையிலும் நடந்து வரும் தொழில்களுக்கு உதவியாகக் கடனாகக் கொடுக்கப் பெறுகின்றன.

நாட்டை ஐந்து மண்டலங்களாக வகுத்துக் கொண்டு, ஐந்து மண்டலக் காரியாலயங்களுடனும்' முக்கியமான 33 இடங்களில் 'டிவிஷனல் ஆபீஸ்'களுடனும், 200 கிளை ஸ்தாபனங்களுடனும் கார்ப்பரேஷன் நடந்து வருகின்றது. 1961-இல் ரூ. 608 கோடிக்குப் புதிதாகத் தொழில் நடந்திருக்கின்றது. 1963, மார்ச் மாதம் முடிய 15 மாதங்களில் ரூ. 745 கோடிக்குப் புதுப் பாலிஸிகள் சேர்ந்துள்ளன. இது போதாதென்றும், இன்னும் பலவகையில் ஊக்கமளித்துத் தொழிலை வளர்க்க வேண்டுமென்றும், கார்ப்பரேஷனிடம் சேரக்கூடிய கோடிக்கணக்கான நிதியைக் கொண்டே திட்டங்களுக்குப் பெரிய அளவில் உதவி செய்ய முடியுமென்றும், அதனால் கட்டாயச் சேமிப்பு முதலிய முறைகளை அரசாங்கம் தவிர்க்க முடியுமென்றும் சமீபத்தில் 'ஹிந்து' பத்திரிகை எழுதியுள்ளது.

**விமானப் போக்குவரத்து :** உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும் விமான யாத்திரை செல்பவர்களுக்கு வசதி யளிக்கும் முறையில் விமானப் போக்குவரத்தை அரசாங்கமே மேற்கொள்ள நேர்ந்தது. முன்னால் அதை நடத்தி வந்த தனியார் கம்பெனிகள் சரிவர நிர்வகிக்க முடியவில்லை; ஆண்டுதோறும் அரசாங்கம் அவைகளுக்கு உதவித் தொகையும் அளித்துவர

வேண்டியிருந்தது. 1953-இல் அரசாங்கமே அத்தொழிலை மேற்கொண்டு, இரண்டு கார்ப்பரேஷன்களை அமைத்தது : 1. இந்திய ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன், 2. ஏர் இந்தியா இன்டர்நேஷனல். இவை அரசாங்க இலாகாக்களில் சம்பந்தமில்லாமல் தனியாக நடந்து வருகின்றன. இவை தங்களுடைய முந்திய சொத்துக்களை மூலதனமாகக் கொண்டு பராமரித்துக் கொள்வதுடன், வெளியில் கடன் எழுப்பிக் கொள்ளவும் அதிகாரமுடையவை. ஆனால் ரூ. 15 லட்சத்திற்கு மேற்பட்ட மூலதனச் செலவுகளுக்கு இவை அரசாங்க அநுமதி பெறவேண்டும். அரசாங்க ஆடிட்டர் ஜெனரலே இவைகளின் கணக்குகளையும் தணிக்கை செய்வார். விமானக் கட்டணங்களை நிர்ணயிப்பதற்கும் அரசாங்க ஒப்புதல் அவசியம். இந்தக் கார்ப்பரேஷன்களில் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன் சில ஆண்டுகளாக ஆண்டுதோறும் ஒரு கோடிக்குமேல் நஷ்டமடைந்து வந்தது. 1961-62-இல் ரூ. 7,88,000 இலாபம் கிடைத்திருக்கிறது ; 1962-63-இல் ரூ. 81,07,000 இலாபம் எதிர்பார்க்கப்பட்டது. 66 விமானங்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. மக்களும் விமான யாத்திரையில் முன்பிருந்ததைவிட அதிக ஊக்கம் காட்டி வருகின்றனர்.

| | | |
|---|---|---|
| 1947-இல் | விமான யாத்திரை செய்தவர்கள் ... | 2,50,000 |
| 1952-இல் | ,, ,, ,, ... | 4,34,480 |
| 1962-இல் | ,, ,, ,, ... | 10,00,000 |

நிதி உதவிகளுக்குரிய ஸ்தாபனங்கள் : தேசிய உடைமையாக்கப் பெற்ற 'இந்திய ரிஸர்வ் பாங்'கும், 'இந்திய ஸ்டேட் பாங்'கும் தொழில்களுக்கு மிகுந்த உதவி செய்ய முடியும். ஆயினும் முதலீடு செய்வதற்கும், குறித்த அளவுக்குமேல் பெருந்தொகைகள் அளிப்

பதற்கும் வசதியாக 'இந்திய நிதிக் கார்ப்பரேஷன்' (ஐ. எப். ஸி.) அமைக்கப்பட் டிருக்கின்றது. இதில் மத்திய அரசாங்கம் ரூ. 1 கோடியும், ரிஸர்வ் பாங்கு ரூ. 1 கோடியும் மூலதனமாகப் போட்டிருக்கின்றன. ரூ. 10 கோடிவரை இது மூலதனமாகப் பெறலாம். மேலும் தேவைப்படும்போ தெல்லாம் இது ரிஸர்வ் பாங்கிலிருந்து பணம் பெற்றுக்கொள்ளவும் வசதி செய்யப்பெற்றுள்ளது.

தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம்: பீஹார், மேற்கு வங்காள ராஜ்யங்களில் பாயும் தாமோதர் நதியின் பள்ளத்தாக்கில் அணைகள் கட்டியும், வாய்க்கால்கள் வெட்டியும், மின்சார நிலையங்கள் அமைத்தும் அபி விருத்திகள் செய்ய 1948-இல் 'தாமோதர் வேலி கார்ப்பரேஷன்' (டி. வி. ஸி.) நிறுவப்பெற்றது. இதற்குவேண்டிய மூலதனத்தை மத்திய அரசாங்கமும் சம்பந்தப்பட்ட இரு ராஜ்யங்களும் முதலீடு செய்ய ஏற்பாடாகியிருக்கிறது. தாமோதர் நதியும் அதன் கிளை நதிகளும் பாயும் படுகையின் பரப்பு 9,000 சதுர மைல். இந்தப் பிரதேசமே நம் நாட்டில் செல்வம் கொழிக்கும் தலை சிறந்த பிரதேசம். நம் நாட்டுக்குத் தேவையான உயர்தரமான செம்பு, இரும்பு, உலோகக் கனிகளும், நிலக்கரி, மைக்கா கனிகளும் அங்கிருப்ப தோடு, தொழில்களுக்கு உதவக்கூடிய சில வகைக் களிமண்களும் உள்ளன. தாமோதர் திட்டத்தின் நோக்கங்கள் வெள்ளத்தைத் தடுத்தல், பாசன வசதி, மின்சார உற்பத்தி ஆகியவை. தாமோதர் நதியிலும், அதன் கிளை நதிகளிலும் கோனர், திலையா, மெய்தோன், புஞ்செட் குன்று ஆகிய நான்கு இடங்களிலும் அணைகள் கட்டுதலும், பிந்திய மூன்றிலும் தண்ணீரின் உதவி கொண்டு இயங்கும் மூன்று மின்சார நிலையங்களும், பொகாரோவிலும் துர்க்காபூரிலும் இரண்டு அனல்

மின்சார நிலையங்களும், சுமார் 1,725 மைல்களுக்கு மின்சாரசக்தியைப்பிரித்துவிநியோகித்தலும், துர்க்கா பூரிலும் ஓர் அணை அமைத்து, 1,500 மைல் நீளத்திற் குக் கால்வாய்கள் வெட்டுதலும் டி. வி. கார்ப்ப ரேஷன் மேற்கொண்டுள்ள வேலைகள். சுருங்கச் சொன் ஞல், வெள்ளப் பாதுகாப்புடன், சுமார் 5 லட்சம் கிலோவாட்ஸ் மின்சார உற்பத்தியும், 10 லட்சம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதியும் அதன் பொறுப் பில் உள்ளன.

சில சமயங்களில் தாமோதர் நதியின் வெள்ளப் பெருக்கால் ரூ. 70-80 கோடி நஷ்டம் ஏற்படுவதுண்டு. நான்கு அணைகளையும் கட்டுவதற்குச் செலவு ரூ. 50 கோடிக்கு மேற் போகவில்லை. எனவே பல வருடங் களில் பல கோடி ரூபாய்ச் சேதம் ஏற்படுவதை இந்த அணைகள் தடுத்துவிட்டதே நாட்டுக்கு முதலாவது பெரிய ஆதாயம்.

மண்ணுலும் காங்கிரீட்டாலும் அமைந்துள்ள 160 அடி உயரமுள்ள கோனர் அணை 1955-இல் முடிந்து விட்டது. இதன் உத்தேசச் செலவு ரூ. 9¾ கோடி. இதில் தேங்கியுள்ள தண்ணீர் பொகாரோ அனல் மின் நிலையத்திற்கு உபயோகமாவதோடு, 1,04,000 ஏக்கர் பாசனத்திற்கும் பயன்படும். திலையா அணை 1952 இறுதியில் முற்றுப் பெற்றது. இது 1,200 அடி நீளமும் 99 அடி உயரமுமுள்ள முழு காங்கிரீட் அணை. உத் தேசச் செலவு ரூ. 3,59,00,000. 162 அடி உயரமுள்ள மெய்தோன் அணை 1188 அடி நீளம் காங்கிரீட்டும், 12,030 அடி மண்ணும் கொண்டு அமைந்தது. உத் தேசச் செலவு ரூ. 16,40,00,000. இதனால் 2,70,000 ஏக்கர்களுக்கு நீர் கிடைக்கும்; 60,000 கி. வா. மின் சார சக்தியும் உற்பத்தியாகும். பஞ்செட் குன்று அணையும் 1959-இல் பூர்த்தியாயிற்று. இது 134 அடி

உயரமும், 1215 அடி நீளம் காங்கிரீட்டும், 20,940 அடி மண்ணும் கொண்டு அமைந்தது. உத்தேசச் செலவு ரூ. 17,92,00,000. 2,271 அடி நீளமுள்ள துர்க்காபூர் அணையும், பாலமும் 1955, ஏப்ரலில் கட்டி முடிக்கப்பெற்றன. சுமார் ரூ. 23 கோடி இவற்றிற்காக ஒதுக்கப்பட்டிருந்தது. இந்த அணையின் தண்ணீரால் பயனடையக்கூடிய பரப்பு பத்து லட்சம் ஏக்கருக்கு மேற்பட்டது. மேலே குறித்த எல்லாத் திட்டங்களுக்குமாக மொத்தம் ரூ. 128½ கோடி ஆகுமென்று தெரிகிறது.

## அரசாங்கக் கம்பெனிகள்

**உருக்கு உற்பத்தி :** உருக்கு உற்பத்தி செய்வதற்காக ஹிந்துஸ்தான் ஸ்டீல் (பிரைவேட்) லிமிடெட் கம்பெனி 1954-இல் தோற்றுவிக்கப்பட்டது. இதன் மூலதன அளவு ரூ. 100 கோடி. இதற்கு ஆலோசனை கூறுவோர் மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த குருப் டெமாக் கம்பெனியார். ஆரம்ப நிலையில் நம் நாட்டிலேயே ஆண்டுதோறும் சுமார் 45 லட்சம் டன் உருக்கு உற்பத்தி செய்தல் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் நோக்கம். 1962-63-இல்தான் இது பெருமளவு நிறைவேறியுள்ளது. நம் உருக்குத் தொழிற்சாலைகளில் 40 லட்சம் டன் உற்பத்தியாகி யிருக்குமென்று தெரிகின்றது. இதுவே மகத்தான சாதனைதான். ஆனால் இந்த அளவு உற்பத்தியைக் காண்பதற்கு மொத்தம் ரூ. 1,000 கோடிவரை முதலீடு செய்ய வேண்டியிருந்தது! கனிகளில் இரும்பு, நிலக்கரி எடுப்பது முதல், தொழிற்சாலைகளுக்குக் கொணர்ந்து சேர்க்க ரயில் வசதிகள் செய்து, தொழிற் சாலைகளில் உருக்கி உருக்குத் தயாரிப்பதுவரை இவ்வளவு பெரும் தொகையில் நிறைவேறியுள்ளது. இதனால் நாட்டிற்கு மிகுந்த

பயன் ஏற்பட்டிருப்பதுடன், பெருமையும் உண்டு. இதுபற்றி, நம் கனவு நனவாகத் தொடங்கியிருப்பதாக இந்தியப் பிரதம மந்திரி குறிப்பிட்டுள்ளார். டில்லியிலே குதுப்மினருக்கு அருகில் நிறுத்தப்பட்டுள்ள அற்புதமான 6 டன் எடையுள்ள இரும்புத் தூணை 1,600 ஆண்டுகளுக்கு முன்பே வார்த்தெடுத்த இந்தியா இப்பொழுதுதான் பெரிய அளவில் உருக்கு உற்பத்தியை மேற்கொண்டிருக்கின்றது.

நாட்டில் இரும்பு, உருக்கு உற்பத்திக்குத் தக்க அடிப்படை அமைத்து வழிகோலிய பெரியார் ஜாம்ஷெட்ஜி டாட்டா. நவீன முறையில் இரும்பை உருக்குதல் ஜாம்ஷெட்பூர் டாட்டா தொழிற்சாலையில் 1911-ல்தான் ஆரம்பமாயிற்று. இப்பொழுது டாட்டா அயர்ன் ஸ்டீல் தொழிற்சாலையில் வருடந்தோறும் 15 லட்சம் டன் பூர்த்தியான உருக்கும், உருக்குக் கட்டிகள் 20 லட்சம் டன்னும், இந்தியன் அயர்ன் ஸ்டீல் தொழிற்சாலையில் பூர்த்தியான உருக்கு 8 லட்சம் டன்னும், உருக்குக் கட்டிகள் 10 லட்சம் டன்னும், இரும்புப் பாளங்கள் 4 லட்சம் டன்னும், மைசூர் அயர்ன் ஸ்டீல் தொழிற்சாலையில் பூர்த்தியான உருக்கு 1 லட்சம் டன்னும் உற்பத்தி செய்ய வசதிகள் அமைந்துள்ளன.

அரசாங்கப் பொதுத் துறையில் ஐந்தாண்டுத் திட்டங்களின்படி ஹிந்துஸ்தான் ஸ்டீல் கம்பெனி மூன்று பெரிய தொழிற்சாலைகளை ரூர்கேலா, பிலாய், துர்க்காபூர் ஆகிய இடங்களில் அமைத்துள்ளது. (இவை முறையே ஒரிஸா, மத்தியப் பிரதேசம், மேற்கு வங்காள இராஜ்யங்களில் உள்ளன). மூன்று தொழிற்சாலைகளுக்கும், அவைகளுக்கான நகரமைப்பு முதலியவற்றிற்குமாக உத்தேசிக்கப்பட்ட செலவு ரூ. 558 கோடி. ரூர்கேலா தொழிற்சாலை மேற்கு ஜெர்மனி

நிபுணர்களின் ஒத்துழைப்புடன் நடந்து வருகின்றது. பிலாய் தொழிற்சாலைக்கு ஸோவியத் ரஷ்ய நிபுணர்களும், துர்க்காபூர் தொழிற்சாலைக்கு ஆங்கில நிபுணர்களும் உதவி வருகின்றனர். இத் தொழிற்சாலைகளுக்குத் தேவைப்படும் எஞ்சினியர்கள் சுமார் 2,000 பேர்கள்; தொழில் நுணுக்கம் தெரிந்த தொழிலாளர்கள் சுமார் 19,000 பேர்கள்.

ரூர்கேலா, துர்க்காபூர் தொழிற்சாலைகளில் ஒவ்வொன்றும் 1963, மார்ச் முடிவுக்குள் 10 லட்சம் டன் உருக்குக் கட்டிகளை உற்பத்தி செய்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருந்தது. பிலாயில் திட்டப்படி உற்பத்தியாக வேண்டிய 10 லட்சம் டன்னுக்குக் கூடுதலாகவே 1962-இல் உற்பத்தி செய்யப்பெற்றது. ரூர்கேலாவில் அடிக்கடி இயந்திரங்களில் கோளாறுகள் ஏற்பட்டு உற்பத்தி குறைவதைப் பற்றிப் பரிசீலனை செய்து, உற்பத்தியைப் பெருக்க மேலும் புதிய இயந்திரங்கள் வரவழைக்க ஆலோசிக்கப் பெற்றுவருகிறது. துர்க்காபூர் 1963-இல் தனக்குரிய பகுதியை உற்பத்தி செய்தது. பிலாயில் வருடத்திற்கு 10 லட்சம் டன் உற்பத்தி செய்வதை 25 லட்சம் டன்னுகக் கூட்டுவதற்குத் திட்டம் தயாராகியுள்ளது. பிலாய் தொழிற்சாலைக்கு முன்னுல் செலவான சுமார் ரூ. 200 கோடியுடன், அபிவிருத்திக்கு இன்னும் ரூ. 140 கோடி செலவாகுமென்று உத்தேசிக்கப்படுகின்றது.

உருக்கு உற்பத்திக்காகப் பொதுத் துறையிலும், தனியார் துறையிலும் இதுவரை சுமார் ரூ. 1,000 கோடி மூலதனம் போடப் பெற்றிருக்கின்றது. இத் தொழிலை மேலும் வளர்ப்பதற்காக தேசிய உற்பத்திக் கவுன்சிலின் குழு ஒன்று ரஷ்யாவுக்கும், ஸெக்கோஸ்லோவேகியாவுக்கும் சென்று பார்வையிட்டு வந்திருக்கின்றது. குழுவின் தலைவரான திரு. லால்காகா,

மேற்கொண்டு தொழிலை வேறு சில பிராந்தியங்களில் பிரித்து நடத்த வேண்டுமென்றும், தென்னாட்டிலும், கடற்கரை ஓரங்களிலும் உருக்குத் தொழிற்சாலைகள் அமைக்க வேண்டுமென்றும் அபிப்பிராயம் கூறியுள்ளார்.

1948-இல் 15 லட்சம் டன் உருக்கு உற்பத்தியானதிலிருந்து 1962-இல் மொத்தம் 60 லட்சம் டன் உருக்குக் கட்டிகள் உற்பத்தி செய்யப் பெற்றிருக்கின்றன.

நிலக்கரி: நம் தொழில்கள் அனைத்திற்கும் நிலக்கரி அடிப்படையாக அமைந்துள்ளது. ஆயினும் நாட்டின் அளவுக்கும், மக்களின் தொகைக்கும் தக்கபடி இன்னும் போதுமான அளவு நிலக்கரி எடுக்க முடியவில்லை. உலகில் நிலக்கரி உற்பத்தியில் இந்தியா ஆறுவதாகவே நிற்கின்றது. அமெரிக்க ஐக்கிய நாடு, ஸோவியத் ரஷ்யா, இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி, போலந்து ஆகிய ஐந்து நாடுகளும் இந்தியாவைவிடக் கூடுதலாக நிலக்கரி வளத்தைப் பெருக்கி வருகின்றன. அமெரிக்க ஐக்கிய நாட்டில் உபயோகமாகும் நிலக்கரி நபர் 1-க்கு 8 டன், இங்கிலாந்தில் $4\frac{1}{2}$ டன், இந்தியாவில் $\frac{1}{10}$ டன். இந்நிலை மிக வேகமாக மாறுவிட்டால், நாம் பெருந் தொழில்களில் முன்னேற முடியாது.

1960-61-இல் இந்தியாவில் நிலக்கரி உற்பத்தி 548 லட்சம் டன். இதில் 443 லட்சம் டன் தனியார் துறையிலும், 105 லட்சம் டன் பொதுத்துறையிலும் வெட்டியெடுக்கப் பெற்றிருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டப்படி இது முறையே 450 லட்சமாகவும், 150 லட்சமாகவும் இருந்திருக்க வேண்டும். எனவே திட்டக் குறிக்கோளிலிருந்து 52 லட்சம் டன் குறைவாகவே கிடைத்திருக்கின்றது. 1961-62-இல் 560 லட்சம் டன் கிடைத்திருக்கின்றது. மூன்றுவது திட்டத்தின் முதல் ஆண்டான 1962-63-ல்தான்

சுமார் 640 லட்சம் டன் கிடைத்திருக்கின்றது. முக்கியமாக நிலக்கரிக் கனிகள் அதிகமாயுள்ள பீஹார், வங்காள ராஜ்யங்களில் ரயில்வே போக்குவரத்து வசதிகள் போதிய அளவிலில்லை. அதிக வாகன்களை அளித்து இக்குறையை நீக்கினால், உற்பத்தி பெருகும். மத்தியப் பிரதேசத்தில் இத்தகைய இடர்ப்பாடுகள் இல்லாததால், அங்கும் அதிக நிலக்கரி எடுக்கலாம். மற்றும் பல இடங்களிலே சிதறிக் கிடக்கும் கனிகளில் மேலும் தீவிரமாக வேலை செய்வதற்கு அரசாங்கம் தனியார்களுக்கு நிதி உதவிகள் செய்தும் உற்பத்தியைப் பெருக்க முடியும். மொத்தத்தில் வெடி மருந்துகள், இயந்திரங்களுக்குத் தேவையான தனி உறுப்புக்கள், புதுக் கருவிகள், மின்சாரம், வாகன்கள் ஆகியவைகள் போதிய அளவில் இல்லாமலே ஒரே ஆண்டில் 80 லட்சம் டன் நிலக்கரியைக் கூடுதலாக உற்பத்தி செய்ய முடிந்ததென்றால், எல்லாச் சாமான்களும் முறையாகக் கிடைத்து வந்தால் இன்னும் உற்பத்தி பெருகும். 1962-இல் நாள்தோறும் 6,363 வாகன்களை நிலக்கரிக்காக நம் ரயில்வேக்கள் ஒதுக்கி யிருந்தன. இவைகளையும் கூடுதலாக்க வேண்டும்.

நல்ல நிலக்கரிக்கு நாட்டில் இருக்கும் கிராக்கியினால் 'லிக்னைட்' என்ற பழுப்பு நிலக்கரி கிடைப்பதை எடுத்துப் பக்குவப்படுத்திக் கொள்வது நலமாயிற்று. தமிழ் நாட்டில் தென் ஆர்க்காடு மாவட்டத்தில் நெய்வேலியில் கனிகளில் பூமிக்கு அடியில் 100 சதுர மைல்களுக்கு மேலான பரப்பளவில் 55 அடி கனத்திற்குப் பழுப்பு நிலக்கரி இருக்கின்றது. ஆனால் நிலக்கரிப் பாளங்களுக்கு மேலே சுமார் 180 முதல் 200 அடி வரை அமைந்துள்ள மண்ணை அப்புறப் படுத்தியே கனிகளை வெட்ட முடியும். அப்படி வெட்டி யெடுப்பதற்காக அரசாங்கம் நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனை

அமைத்துள்ளது. நெய்வேலி சென்னையிலிருந்து 150 மைல் தொலைவிலுள்ளது. நிலக்கரி தோண்டுவதற்கு மட்டும் முதலில் ரூ. 17 கோடிக்குத் திட்டம் தயாரித்து வேலைகள் வேகமாக நடந்து முடிந்தன. 1957-ஆம் ஆண்டு மே மாதம் நிலக்கரி எடுக்கும் வேலை துவங்கியது. இதற்காகச் சுமார் 24 கோடி கன அடி மண்ணைத் தோண்டியெடுத்து வேறிடத்தில் 100 அடி உயரமுள்ள மலையாகக் குவிக்கப்பட்டு வருகின்றது. முதற்படியாக $5\frac{1}{2}$ சதுர மைல் பரப்புள்ள இடத்தில் தான் மண் வெட்டப்படுகிறது.

நிலக்கரிப் பாளங்களுக்கு அடியில் ஏராளமான தண்ணீர் தேங்கி அடங்கிக் கிடக்கின்றது. தண்ணீருக்கு மேலே நிலக்கரியும், அதற்கு மேலே சுமார் 180 அடிக்குக் கூடுதலாக மண்ணும் இருந்ததால் அது உள்ளே அழுத்தப் பட்டிருந்தது. மண்ணை நீக்கி நிலக்கரி தோண்டப்படுகையில் அத் தண்ணீர் விடுதலை பெற்று மேலே பீறிட்டுக் கொண்டு பாய்ந்து வருகின்றது. நிலக்கரி எடுக்குமிடங்களில் தண்ணீர் பாய்ந்து சேதம் விளைக்காமலிருப்பதற்காகத் தக்க இடங்களில் 48 பெரிய கிணறுகள் அமைத்துக் குழாய்கள் மூலம் தண்ணீரை வெளியேற்ற ஏற்பாடு நடந்திருக்கிறது. ஒரு நிமிடத்திற்கு 48,000 காலன் தண்ணீர் வீதம் வெளியேற்றப்பட வேண்டும்.

நெய்வேலியில் நடந்து வரும் வேலைகளைப் பலரும் புகழ்ந்துள்ளனர். காலை 6 மணியிலிருந்து இரவு 10 மணி வரை வேலைகள் நடக்கின்றன. மண் தோண்டுவதற்கும் அப்புறப்படுத்துவதற்குமாகப் 'புல்டோஸர்' முதல் பல கருவிகள் உபயோகமாகின்றன. ஒவ்வொரு நாள் இரவிலும் வேலை முடிந்தபிறகு இயந்திரங்களையும், கருவிகளையும் கழுவி, எண்ணெய் தடவிவைக்கத் தவறுவதே இல்லை. இதே போல அவைகளைப்

பழுது பார்த்தலும் உடனுக்குடன் நடைபெறு கின்றது.

நிலக்கரி எடுப்பதுடன், அனல் மின் சக்தி உற்பத்தி செய்தல் போன்ற வேறு சில திட்டங்களுக்கும் சேர்த்து நெய்வேலியில் இதுவரை சுமார் ரூ. 100 கோடி செலவாகி யிருக்கும். ரஷ்ய உதவியுடன் அமைக்கப் பெற்றுள்ள மாபெரும் அனல் மின் நிலையம் 1962 ஆகஸ்டு முதல் நன்கு வேலைசெய்து வருகின்றது. இதில் உற்பத்தியாகும் மின்சார சக்தியைப் போல் இன்னும் இரு மடங்காவது பெருகும்படி கூடுதல் ஏற் பாடுகள் நடைபெறுகின்றன.

நெய்வேலியில் மொத்தம் 16,000 தொழிலாளர் கள் வேலை செய்கின்றனர். அவர்களுக்காக 12,000 வீடுகள் கொண்ட ஒரு நகரமே அமைக்கப்பெற்றுள் ளது.

**இரசாயன உரங்கள் :** உணவுப் பொருள்களின் உற் பத்தி பெருகுவதற்கு உரங்கள் மிகுதியாகக் கிடைக்க வேண்டும். நம் நாட்டில் இயற்கையான உரங்களும் குறைவு, செயற்கையான இரசாயன உரங்களின் உற் பத்தியும் எதிர்பார்த்த அளவுக்கில்லை. போதிய உரங்களில்லாவிட்டால், விவசாயத் திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்ற முடியாது.

இரசாயன உரங்களை நாம் போதிய அளவு உற் பத்தி செய்ய முடியாமலும், வெளி நாணயச் செல வாணியின் நெருக்கடியால் அவைகளை வெளியிலிருந்து இறக்குமதி செய்ய முடியாமலும் இருக்கின்றது. 1961-62-இல் நாட்டுக்கு இரசாயன உரங்களின் தேவை சுமார் 5¼ லட்சம் டன் என்றும், 1962-63-இல் சுமார் 6 லட்சம் டன் என்றும், தேவையில் 60 சத விகிதமே கிடைக்குமென்றும் அரசாங்கம் கணக்கிட் டிருந்தது. 1965-66-க்குள் நைட்டிரஜன் இரசாயன

உப்புக்களின் உபயோகம் 10 லட்சம் டன்னுக்கு உயர்ந்துவிட வேண்டும் என்பது திட்டம். இதுவரை ஏற்பட்டுள்ள தொழிற்சாலைகளில் 2½ லட்சம் டன் மட்டுமே தயாரிக்க முடியும். இவைகளிலும், உற்பத்திக்கு அநுமதி பெற்று நிறுவப்பட்டு வரும் தொழிற்சாலைகளிலும் ஆண்டுக்கு 14 லட்சம் டன் உற்பத்தியாக வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது.

இரசாயன உர வகையைச் சேர்ந்த அமோனியம் ஸல்பேட்டின் உற்பத்தி 1951-இல் ஆண்டுக்கு 53,000 டன்னாக இருந்தது. 1961-இல் 3,88,000 டன்னாக உயர்ந்துள்ளது; சூபர் பாஸ்பேட்டுகள் 61,000 டன்னிலிருந்து 3,64,000 டன்னாக உயர்ந்துள்ளன. பயிர்களுக்கும் செடிகளுக்கும் உரமாகக் கூடியவைகளில் நைட்டிரஜன், நவச்சாரம், பாஸ்வரம் கலந்த உப்புக்களோடு, பொட்டாஷியமும் தேவை. பொட்டாஷியம் இதுவரை நம் நாட்டில் உற்பத்தி செய்யப்பெறவில்லை. ஆயினும் தமிழ் நாட்டில் உப்பு உற்பத்தி செய்யும் ஒரே தொழிற்சாலை பொட்டாஷியம் குளோரைடும் தயாரிக்க அனுமதிக்கப் பெற்றுள்ளது.

இரசாயன உர உற்பத்திக்காக ஸிந்திரி உரங்கள் கெமிகல்ஸ் லிமிடெட் கம்பெனி 1951-இல் நிறுவப்பெற்றது. இதன் பங்குகளில், கம்பெனியின் தலைவர், எட்டு டைரக்டர்களுக்கு ஒதுக்கப்பட்ட ஒன்பது பங்குகளைத் தவிர, மற்றவை இந்திய ராஷ்டிரபதியின் பெயரில் உள்ளவை; இதன் மூலதன அளவு ரூ. 30 கோடி. பீஹார் ராஜ்யத்திலுள்ள ஸிந்திரியில் உரத் தொழிற்சாலை அமைந்துள்ளது. இத் தொழிற்சாலை ஆரம்பம் முதல் வெற்றிகரமாக நடந்து, ஆண்டுக்கு 4 லட்சம் டன் இரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்து வருகின்றது. உற்பத்திப் பெருக்கத்தினால் உரத்தின் விலை

குறைந்திருக்கின்றது. உலகிலே ஸிந்திரி இரசாயன உரமே மிகவும் மலிவானது.

1963 தொடக்கத்திலிருந்து இத்தொழிற்சாலையின் பழைய பகுதியில் நாளொன்றுக்கு நவச்சாரம் 324·6 டன்னும், நவச்சார (அமோனியம்) ஸல்பேட் 976 டன்னும் உற்பத்தியாகி வருகின்றன. புதிதாக அமைந்த பகுதியில் சென்ற ஜனவரியில் யூரியா உரம் 1,867 டன் தயாராகியுள்ளது. மொத்தத்தில் இது வரை ஸிந்திரியில் ரூ. 100 கோடி பெறுமதிப்புள்ள 35 லட்சம் டன் உரங்கள் உற்பத்தியாகி யிருக்கின்றன.

நங்கல், ரூர்கேலா, நெய்வேலி, ட்ரோம்பே, நாம்ரூப், கோரக்பூர் ஆகிய இடங்களிலும் 3,20,000 டன் இரசாயன உர உற்பத்திக்கு ஏற்பாடாகியிருப்பது முடிந்தவுடன் உரத்திற்கான பஞ்சம் குறையக்கூடும்.

கிழக்குப் பஞ்சாபிலுள்ள நங்கலில் தொழிற்சாலையின் உத்தேசச் செலவு ரூ. 25 கோடி. 1961-இல் பிப்ரவரி மாதம் முதல் உர உற்பத்தி நடந்து வருகின்றது. இது நாள்தோறும் உற்பத்தி செய்யக்கூடிய கால்ஷியம் அமோனியம் நைட்ரேட் 1,176 டன்னில் $\frac{2}{3}$ பகுதி இப்பொழுது தயாராகின்றது. பாக்ரா அணையிலிருந்து கூடுதலான மின்சார சக்தி கிடைத்த பின்பு உற்பத்தி அதிகரிக்கும்.

ரூர்கேலாவில் இரசாயன உரங்களுக்கான தொழிற்சாலையை முதன் முறையாக இந்திய நிபுணர்களே அமைத்து அநேகமாக முடித்துவிட்டனர்.

நெய்வேலி உரத்தொழிற்சாலை அமைப்பு பல காரணங்களால் சுணக்கமடைந்திருக்கின்றது. அங்கு அடுத்த ஆண்டு மத்தியில்தான் உற்பத்தி தொடங்குமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. அங்கு பழுப்பு நிலக்கரியிலிருந்து யூரியா உப்பு தயாரிக்கப்படும். இதனால் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி குறைந்து,

வெளி நாட்டு நாணயத்தில் நமது சேமிப்பும் அதிகமாகும்.

ட்ரோம்பே உரத்தொழிற்சாலை அமைப்பும் அதைச் சுற்றி நகர நிர்மாணமும் மிகுந்த வேகத்துடன் நடை பெற்றிருக்கின்றன.

அஸ்ஸாமிலுள்ள நாம்ரூப் என்னுமிடத்தில் உரத் தொழிற்சாலைக்கு வேண்டிய நிலங்களைப் பெரும்பாலும் வாங்கியாகிவிட்டது. 1965-லிருந்து உற்பத்தி நடைபெறக்கூடும். உத்தரப்பிரதேசத்தில் கோரக்பூரில் ஓர் உரத்தொழிற்சாலை அமைக்கும் திட்டம் 1961-இல் அங்கீகரிக்கப்பெற்றது. 1966-இல் இது வேலை செய்யத் தொடங்கலாம். மத்தியப் பிரதேசத்திலும் நிலக்கரியிலிருந்து வருடத்திற்கு லட்சம் டன் யூரியா உரம் தயாரிக்கும் தொழிற்சாலை நிறுவ ஏற்பாடாகிவருகிறது.

மேலே குறித்துள்ள உரத்தொழிற்சாலைகளில் நெய்வேலியிலுள்ளதைத் தவிர மற்ற எல்லாவற்றையும் ஒரே நிர்வாகத்தின் கீழ் முறைப்படுத்தி நடத்துவதற்காகப் பழைய ஸிந்திரி கம்பெனி, ஹிந்துஸ்தான் கெமிகல்ஸ் உரங்கள் கம்பெனி ஆகியவைகளையெல்லாம் ஒன்ருகச் சேர்த்து, 1961, ஜனவரி 1-ந் தேதி இந்திய உரக் கார்ப்பரேஷனுக அரசாங்கம் நிறுவியுள்ளது.

கப்பல் கட்டுதலும் கப்பல் போக்குவரத்தும்: பண்டைக் காலம் முதலே இந்தியர் கடல் யாத்திரைகள் செய்து பல நாடுகளுடன் தொடர்பு கொண்டவர்கள். எனினும் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கப்பலோட்டும் தொழிலை அவர்களுடைய சொந்த உரிமையாகக் கொண்டிருந்தனர். ஒரு பழைய கப்பலை விலைக்கு வாங்கி 1906 ஆம் ஆண்டில் தூத்துக்குடிக்கும் இலங்கைக்கு மிடையே ஓட்டியதற்கு வீரர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களை ஆங்கில அரசு எதிர்த்துப் போட்டியிட்டது யாவர்க்கும் நினைவிருக்கும். சிதம்பரனர் ஆறு

வருடம் சிறையில் வைக்கப்பட்டார். அவர் சிறை புகுந்ததுமே அவர் நிறுவிய சுதேசிக் கப்பல் கம்பெனியும் முறிந்துவிட்டது. ஆயினும் முதல் சுதேசிக் கப்பல் ஓட்டி வழிகாட்டியவர் கப்பலோட்டிய தமிழ் வீரரே யாவர். கப்பல் கட்டும் தொழிலே இந்தியாவில் இல்லாமற் போய்விட்டது. 1941-இல் ஸிந்தியா கம்பெனியார் முதன்முதலில் அத்தொழிலை மேற்கொண்டனர்; விசாகப்பட்டினத்தில் தொழிற்சாலையும் அமைந்தது. 1948-இல் அங்கு கட்டப்பெற்ற 8,000டன் கப்பலான 'ஜல உஷா' கடல் யாத்திரைக்கு அனுப்பப் பெற்றது.

விசாகப்பட்டினத்தில் நடந்து வந்த கப்பல் கட்டும் தொழிலை 1952-இல் இந்திய அரசாங்கம் மேற்கொண்டு, அதற்காக ஹிந்துஸ்தான் ஷிப்யார்டு கம்பெனியை நிறுவிற்று. கம்பெனிப் பங்குகளில் 100-க்கு 78 அரசாங்கத்திற்கும், 22 சிந்தியா கம்பெனிக்கும் உரியவை. ஆரம்ப வேலைக்காக அரசாங்கம் ரூ. 2 கோடி அளித்தது. மேற்கொண்டும் முதலீடு செய்து தொழிலை வளர்க்க ஏற்பாடாகி வருகின்றது. தொழிற்சாலையில் அந்நிய நிபுணர்கள் மிகச் சிலரே; பெரும்பாலும் இந்தியரே எல்லா வேலைகளையும் நடத்தி வருகின்றனர். சாதாரணமாக ஒரு பெரிய கப்பல் கட்டுவதற்கு இங்கு 20 மாதக் காலமாகிறது. ஜெர்மனியில் 15 மாதங்களில் முடிக்கிறார்களாம். எல்லாச் சாமான்களும் உடனுக்குடன் கிடைப்பதானால், இங்கும் விரைவில் முடிக்க முடியும். ஆனால் கப்பல் கட்டுவதற்குத் தேவையான தனித் தேனிரும்பு உறுப்புக்கள் முதலியவையும், சில்லறைச் சாமான்களும் வெளிநாடுகளிலிருந்து வரவேண்டியிருக்கிறது. சொற்ப அளவில் தேவைப்படும் இந்த உறுப்புக்களில் பலவற்றையும் நம் உருக்கு ஆலைகளிலேயே தயாரிக்க முடியும் என்றாலும்,

பெரிய அளவில் நடைபெறும் அவைகளின் வேலைக்குப் பாதகமாகும்.

ஹிந்துஸ்தான் ஷிப்யார்டில் ஆண்டுக்கு நான்கு கப்பல்கள் கட்டி முடிக்க முடியும் எனினும், இப்பொழுதுள்ள வேகத்தில் 2½ கப்பல்கள் வீதமே தயாராகின்றன. எனவே நமக்கு அவசரமாகத் தேவையுள்ள கப்பல்களை நாம் வெளி நாடுகளில் கட்ட ஏற்பாடு செய்தும், பழைய கப்பல்களை விலைக்கு வாங்கியும் ஓட்ட வேண்டியிருக்கின்றது.

1947-இல் இந்தியாவில் 2½ லட்சம் டன் கப்பல்களே யிருந்தன. 1960-இல் ஓடிக்கொண்டிருந்த கப்பல்கள் 173; 82 வெளி நாடுகளுக்குச் சென்று வரவும், 91 கடலோர வாணிபத்திற்கும் பயன்பட்டு வந்தன. இப்பொழுது 10 லட்சம் டன் கப்பல்கள் இருக்கின்றன. இவை இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, மலாய், ஜப்பான், தென் அமெரிக்கா முதலிய பல நாடுகளுக்கும் சென்றுவருகின்றன. எனினும் நாம் ஏற்றுமதி செய்யும் பொருள்களிலும், இறக்குமதி செய்யும் பொருள்களிலும் சுமார் பத்தில் ஒரு பகுதிதான் நம் சொந்தக் கப்பல்களில் வந்து போகின்றன. வெளி நாட்டுக் கப்பல்களுக்குக் கூலி கொடுப்பதில் கோடிக் கணக்கான பணம் செலவாகின்றது; அத்துடன் வெளி நாணயங்களில் நமது சேமிப்பும் குறைகின்றது. 1961 இல் சுத்தம் செய்யப் பெறாத பெட்ரோலிய இறக்குமதிக்கு மட்டும் இந்தியா சுமார் ரூ. 5¾ கோடி கப்பல் கூலி கொடுத்திருக்கிறது.

முதலாவது திட்டத்தின்படி 4,80,000 டன் இந்தியக் கப்பல்களுக்கு ஏற்பாடு செய்யப்பெற்றது. இந்தியக் கப்பல் கம்பெனிக்குக் கடனுதவி செய்வதற்கு ரூ. 18,70,00,000 செலவாகி யிருக்கின்றது.

இரண்டாவது திட்டத்தின்படி 9 லட்சம் டன்

கப்பல்கள் இருந்தன; ரூ. 54½ கோடி செலவா யிற்று.

அடுத்த திட்டத்தில் 1965-66-க்குள் 14,20,000 டன் கப்பல்கள் வேண்டுமென்றும், இவைகளில் 10,80,000டன் கப்பல்கள் வெளிநாடுகளுக்குச் செல்ல வும், 3,40,000 டன் கப்பல்கள் இந்தியக் கரையோர வர்த்தகத்திற்கு உதவவும் தீர்மானிக்கப் பெற்றிருக் கிறது. இதற்கு ரூ. 55 கோடி செலவாகும். கப்பல் போக்குவரத்து அபிவிருத்தி நிதியிலிருந்து ரூ. 4 கோடியும், கப்பல் கம்பெனிகளே முதலீடு செய்யும் ரூ. 7 கோடியும் இதற்குப் பயன்படும்.

நமது தேவைக்கும், கப்பல்களை நாம் பெருக்கி வரும் வேகத்திற்கும் வெகு தூரம் இருக்கின்றது. ஆயினும் இந்தியா இத்துறையில் முன்னேற்றப் பாதை யில் முனைந்துள்ளது என்பதுதான் மகிழ்ச்சிக்குரிய விஷயம். எண்ணெய் ஏற்றிவரக்கூடிய 'டாங்கர்' என்ற கப்பல் நம்மிடம் ஒன்றுதான் உள்ளது. உலோ கங்கள், தானியங்கள், இரசாயன உரங்கள் முதலிய வற்றைச் சுமந்து செல்லக்கூடிய 'டிராம்ப்' வகைக் கப்பல்கள் நமக்கு ஏராளமாகத் தேவை. ஜப்பான், ருமேனியா, ஸெக்கோஸ்லோவேகியா முதலிய நாடு களுக்குக் கனிகளிலிருந்து எடுத்த இரும்பு அனுப்பு வதற்கு அரசாங்கம் ஒப்பந்தங்கள் செய்திருக்கின்றது. இரண்டு, மூன்று ஆண்டுகளில் நமது ஏற்றுமதி ஆண் டுக்கு 100 லட்சம் டன்னுக்கு வரக்கூடும். ஆயினும் நம்மிடம் போதுமான கப்பல்களில்லை. கப்பல்களும், விமானங்களும் கடைத்தெருக்களில் கிடைக்க மாட்டா. பிற நாடுகளிலும் முன்னதாகச் செய்து விற்பனைக்குத் தயாராக வைத்திருக்க மாட்டார்கள். இவ்விஷயத்தில் நம் நாடு படிப்படியாகவே முன்னேற வேண்டியிருக்கின்றது.

**பங்களூரிலுள்ள நான்கு தொழிற்சாலைகள்**

கீழே குறித்துள்ள முக்கியமான நான்கு பெரிய தொழிற்சாலைகள் பங்களூரில் அமைக்கப்பெற்றுள்ளன. நான்கு கம்பெனிகள் இவைகளை நிர்வகித்து நடத்தி வருகின்றன. பல தொழில்களுக்கு ஒரு கேந்திரமாக விளங்கும் பெருமை பங்களூருக்கு வாய்த்திருக்கிறது.

**ஹிந்துஸ்தான் மிஷின் டூல்ஸ் கம்பெனி:** பொதுத் துறையில் நடந்துவரும் ஸ்தாபனங்களில் இது முதன்மையான புகழ் பெற்று வளர்ந்து வருகின்றது. இது 1953-இல் நிறுவப்பெற்றது. மூலதன அளவு 12 கோடி. ஸ்விட்ஜர்லாந்துக் கம்பெனி ஒன்று இத்துடன் ஒத்துழைத்து வருகின்றது. ஸ்விஸ் நிபுணர்கள் தொழிற்சாலையில் உதவி செய்கின்றனர். மேற்கு ஜெர்மனியும், பிரான்ஸும் மிஷின்களின் உற்பத்திக்கு ஆலோசனை கூறியும் உதவி செய்தும் வருகின்றன.

ஹிந்துஸ்தான் டூல்ஸ் கம்பெனி புதிய தொழிற்சாலைகளுக்கு அவசியமான இயந்திரங்களை உற்பத்தி செய்வதால், தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத ஒரு பணியைச் செய்து வருகின்றது. பெரிய லேத்துகள், அரவைக்குரிய இயந்திரங்கள் முதல் பல ரக இயந்திரங்களை இது தயாரிக்கின்றது. 1957-58-இல் அது 131 இயந்திரங்கள் தயாரிக்க வேண்டுமென்று திட்டம்; ஆனால் 402 தயாரிக்கப்பெற்றன; அதாவது 300% கூடுதலாக உற்பத்தி! சிறு தொழிற்சாலையில் வைத்து இரும்பை உருக்குவதற்கு வேண்டிய இயந்திரம்கூட இதனால் தயாரிக்க முடிகின்றது!

1962, மார்ச் 31-ந்தேதி முடிய இதற்காக முதலீடு செய்துள்ள தொகை ரூ. 7½ கோடிக்குக் கூடுதலாகும். 1961-62-இல் இதில் உற்பத்தியான இயந்திரங்களின் மதிப்பு ரூ. 5 கோடி. முதலில் கட்டப்பெற்ற

தொழிற்சாலையைப்போல் புதிதாக ரூ. 2,88,00,000 செலவில் கூடுதலான தொழிற்சாலை ஒன்றும் கட்டப் பெற்றுள்ளது. இந்தத் தொகை கம்பெனியின் சொந்த இருப்பிலிருந்தே செலவிடப்பட்டுள்ளது. ஜப்பானிய நிபுணர்களின் ஒத்துழைப்புடன் கைக்கடிகாரங்கள் செய்யவும் ஏற்பாடாகி வருகின்றது. உற்பத்தி தொடங்கி, நல்ல முறையில் வேலை நடந்து வந்தால், வருடத்திற்கு 8½ லட்சம் கடிகாரங்கள் உற்பத்தி செய்ய முடியும்.

இந்தக் கம்பெனி வெற்றிகரமாக நடப்பதால் இது போல் நாட்டின் வேறிடங்களில் இன்னும் இரண்டு கம்பெனிகள் அமைக்க அரசாங்கம் ஆலோசித்து வருகின்றது.

ஹிந்துஸ்தான் ஏர்கிராப்ட் தொழிற்சாலை: பங்களூரிலுள்ள இத்தொழிற்சாலை விமானங்கள், ரயில் கோச்சுகள், மற்றும் பாதுகாப்பு இலாகாவுக்குத் தேவையான பல பொருள்களை உற்பத்தி செய்கின்றது. இதன் பங்குகளில் ⅔ பகுதி மத்திய அரசாங்கத்தினுடையது; எஞ்சிய ⅓ பகுதி மைசூர் அரசாங்கத்தினுடையது. மத்திய அரசாங்கப் பாதுகாப்பு இலாகாவே இதை நடத்தி வருகின்றது. 1959-60 வரை இதில் ரூ. 14,20,00,000 முதலீடு செய்யப்பெற்றுள்ளது.

நமது 'ஏர் இந்தியா இண்டர்நேஷனல்' கம்பெனியின் 6 பெரிய 'போயிங்' விமானங்களும் பல நாடுகளைத் தாண்டி டோக்கியோ, ஸிட்னி, நியூயார்க், மாஸ்கோ நகரங்களுக்கெல்லாம் போய் வருகின்றன. எல்லா ராஜ்யங்களிலும் விமானம் ஓட்டுதலும் பழக்கமாகி வருகிறது. விமானம் ஓட்டும் 'பைலட்டுகள்' பெருகி வருகின்றனர். ஆனால் அதிக விமானங்களே தேவை.

போருக்குரிய 'பாம்பர்' என்ற வெடி குண்டு

விமானங்களும், 'ஃபைட்டர்' விமானங்களும் நமக்கு ஏராளமாகத் தேவை. சில 'எம். ஐ.ஜி. 21' விமானங்களை ரஷ்யாவிடம் பெற்றுக் கொண்டதுடன் ரஷ்ய நிபுணர்களின் உதவியுடன், அவைகளை இங்கேயே உற்பத்தி செய்யவும் ஏற்பாடாகி வருகிறது. பெரிய வல்லரசுகள் அணுகுண்டுகளையும், ஏவுகணைகளையும் உற்பத்தி செய்வதில் ஈடுபட்டிருந்தபோதிலும், குறுகிய எல்லைகளுக்குள் நடைபெறும் போர்களுக்கு விமானங்கள் இன்னும் தேவையாகவே உள்ளன. நம்முடைய முக்கிய எதிரியாக விளங்கும் சீனாவிடம் 700 இலியுஷின் பாம்பர்களும், 2,000 ஃபைட்டர் விமானங்களும் இருப்பதாகத் தெரிகின்றது. இந்நிலையில் இந்தியாவும் விரைவில் விமானங்களைப் பெருக்கிக் கொள்ளல் அவசியமாகும்.

உலகில் விமான உற்பத்தி ரஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன், ஐரோப்பா ஆகிய சில இடங்களிலேயே மிகுதியாக நடைபெறுகின்றது. தற்கால விமானத்திற்கு ஒரு பெரிய கப்பலின் விலையாகிறது. சொற்ப விமானங்களை மட்டும் வாங்கினாலும், உற்பத்தி செய்தாலும், விலை அதிகமாகும். நூற்றுக் கணக்கில் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்தால்தான் செலவு குறைவாயிருக்கும்.

**இந்தியன் டெலிபோன் இண்டஸ்ட்ரீஸ் கம்பெனி:** இது ரூ. 4 கோடி மூலதனமுள்ளது. இதன் பங்குகளில் பெரும்பாலானவை மத்திய அரசாங்கத்திற்கு உரியவை. சராசரியாக இதன் தொழிற்சாலையில் ஆண்டு தோறும் 50,000 டெலிபோன்களும், 35,000 எக்சேஞ்சு லைன்களும், மற்றும் தொலைபேசிகளுக்குத் தேவையான பொருள்களும் உற்பத்தி செய்யப்பெறுகின்றன. நாட்டில் நல்ல முறையில் பணி செய்து வரும் தொழிற்சாலைகளில் இதுவும் ஒன்று. இங்குள்ள

தொழிலாளர் நலனும் மிகவும் கவனிக்கப் பெறுகின்றது.

இங்கிலாந்திலுள்ள ஸ்டாண்டர்ட் டெலிபோன்ஸ் கம்பெனி இத்துடன் ஒத்துழைத்து வருகின்றது. இத்தொழிற்சாலை நம் தபால் தந்தி நிலையங்களுக்குத் தேவையான டெலிபோன் ரிஸீவர், எக்ஸ்சேஞ்சு கருவிகள் யாவற்றையும் அளித்து வருவதுடன், ரயில்வேக்களுக்குத் தேவையான 'ஸிக்னலிங்' கருவிகளையும் தயாரிக்கின்றது. இதற்கு மேலும் ரூ. 3 கோடி முதலீடு செய்யவும், 1965-66-க்குள் வருடத்திற்கு 1,80,000 டெலிபோன்கள் வீதம் தயாரிக்கவும் திட்டமிடப் பட்டிருக்கின்றது.

**பாரத் எலக்டிரானிக்ஸ் கம்பெனி:** ஹாலந்து நாட்டு பிலிப்ஸ் கம்பெனியின் ஒத்துழைப்புடன் இதன் தொழிற்சாலையில் மின்சாரக் கருவிகளும், வாகுவம் வால்வுகள், டிரான்ஸிஸ்டர்கள், கம்பியில்லாத் தந்திக்குரிய கருவிகள், ரேடியோவுக்கு வேண்டிய உறுப்புக்கள் முதலிய பலவிதப் பொருள்கள் உற்பத்தியாகின்றன. அரசாங்கத்திற்குத் தேவையான பொருள்களோடு, ரேடியோ பெட்டிகள், கை ரேடியோக்கள் தயாரிப்பவர்களுக்கு வேண்டிய உறுப்புக்களையும் இத் தொழிற்சாலை அளிக்க முடியும். 1959—60 வரை இதில் ரூ. 5,31,00,000 முதலீடு செய்யப்பட்டிருக்கிறது.

## இதர கம்பெனிகள்

சர்வே கருவிகளும், விஞ்ஞானக் கருவிகளும் உற்பத்தி செய்யக் கல்கத்தாவில் ரூ. 3 கோடி மூலதன அளவுள்ள கம்பெனி ஒன்று நடந்து வருகின்றது. மத்தியப் பிரதேசத்தில் போபால் நகரில் ரூ. 30 கோடி மூலதன அளவுடன் மின்சாரக் கருவிகள் தயாரிக்கும் தொழிற்சாலை அமைந்துள்ளது. 15 ஆண்டுகளுக்கு ஆங்கில

நிபுணர்கள் இதற்கு ஆலோசனை கூறியும், இந்தியர்களுக்குத் தொழிற் பயிற்சி யளித்தும் வருவதற்கு ஒப்பந்தம் செய்யப் பெற்றுள்ளது. இமாசலப் பிரதேசத்திலுள்ள நஹான் என்ற இடத்தில் கலப்பைகள், தண்ணீர் பம்புகள் முதலிய விவசாயக் கருவிகளும், மாவரைக்கும் இயந்திரங்கள் முதலியவைகளும் உற்பத்தி செய்யப்படுகின்றன. மலேரியா ஒழிப்புக்காக உபயோகமாகும் 'டி. டி. டி.' பொடி ஒரு தொழிற்சாலையில் தயாராகின்றது. கூடுதலாக ஒன்று கட்டி முடிக்கவும் ஏற்பாடு நடக்கின்றது. பெனிஸிலின் உற்பத்திக்காக ரூ. 4 கோடி மூலதன அளவுள்ள கம்பெனி புனாவுக்கு அருகிலுள்ள பிம்ப்ரியில் நடந்து வருகின்றது. அரசாங்கத்திற்குச் சொந்தமான 11 நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை நடத்தவும், மேற்கொண்டு தேவையான சுரங்கங்களை வாங்கி நிலக்கரி உற்பத்தியைப் பெருக்கவும் தேசிய நிலக்கரி அபிவிருத்திக் கார்ப்பரேஷன் (என். ஸி. டி. ஸி.) வேலை செய்துவருகின்றது. ஒரிஸா ராஜ்யத்தில் இரும்புக் கனிகளை வெட்டியெடுக்கவும், ராஜஸ்தான் ஏரிகளில் உப்பு எடுக்கவும், அஸ்ஸாமில் மண்ணெண்ணெய் எடுக்கவும் தனிக் கம்பெனிகள் அமைந்திருக்கின்றன.

வெளி நாட்டு வர்த்தகத்தில் ஏற்றுமதி இறக்குமதியைக் கவனித்து நடத்துவதற்காக 'ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன்' ஒன்றும் நிறுவப் பெற்றிருக்கின்றது.

## அரசாங்க இலாகாக்களால் நடைபெறும் தொழில்கள்

பாதுகாப்புத் தளவாடங்கள், வெடிமருந்து முதலியவைகளை உற்பத்தி செய்ய நாட்டின் பல பகுதிகளில் 20 தொழிற்சாலைகள் அமைந்திருக்கின்றன.

ரூ. 960 கோடி மூலதனத்துடனும் மொத்தம் 35,000 மைல் ரயில்பாதைகளுடனும், 'இந்தியன்

ரயில்வேஸ்' நடந்து வருகின்றது. பொதுத் துறையிலுள்ள முதன்மையான தொழில் இதுதான். இதற்கு அடுத்ததாகக் குறிப்பிடத் தக்கது தபால் - தந்தி இலாகா. துறைமுகங்களை நிர்வகிக்கப் 'போர்ட் டிரஸ்டுகள்' ஏற்பட்டிருக்கின்றன. பெரிய துறைமுகங்களை மத்திய அரசாங்கமும், மற்றவைகளை அந்தந்த ராஜ்யமும் நிர்வகித்து வருகின்றன.

அணுச்சக்தி உற்பத்திக்காக ட்ரோம்பேயில் தோரியம்—யுரேனியம் தொழிற்சாலையும், அதுபற்றி ஆராய்வதற்குரிய ஸ்தாபனமும் அமைந்துள்ளன.

**சித்தரஞ்சன் லோகோமோடிவ் ஒர்க்ஸ் :** மேற்கு வங்காளத்தில் ரயில்வே எஞ்சின்கள் தயாரிக்கும் சித்தரஞ்சன் தொழிற்சாலை நாட்டிற்கே பெருமையளிக்கும் நிறுவனமாகும். 1950-இல் முதலாவது எஞ்சின் உற்பத்தியாயிற்று. ஆண்டுக்கு 300 பிராட்கேஜ் எஞ்சின்கள் தயாரிக்க ஏற்பாடாகி யிருக்கிறது.

**பெரம்பூர் கோச் பாக்டரி :** சென்னையிலுள்ள பெரம்பூர் 'இன்டெக்ரல் கோச் பாக்டரி'யில் ரயில் பெட்டிகள் (கோச்சுகள்) 1955ஆம் வருட இறுதியிலிருந்து தயாராகி வருகின்றன. இவை முந்தியிருந்த மரப் பெட்டிகளா யில்லாமல், முற்றிலும் உருக்கினால் தயாராகின்றன. இத்தகைய கோச்சுக்கு ஸ்விஸ் கம்பெனி ஒன்று தனி மாதிரி (டிசைன்) ஒன்று தயாரித்துக் கொடுத்திருந்தது. ஒரு நாளைக்கு 2 பெட்டிகள் வீதம் ஆண்டுக்கு 600 கோச்சுகளுக்கு மேலாகப் பெரம்பூரில் தயாரிக்க முடியும்.

இந்த ரயில் பெட்டித் தொழிற்சாலை உலகிலுள்ள பெரிய ரயில் பெட்டித் தொழிற்சாலைகளில் ஒன்று. இதுவரை பத்து ஆண்டுகளில் இது 4,500 பெட்டிகளைத் தயாரித்துள்ளது.

## மாபெரும் அணைகள்

**பாக்ரா அணை :** நாடு விடுதலையடைந்தவுடன் தொடங்கப் பெற்ற பெரிய வேலைகளில் பாக்ரா அணை, ஹிராகூட் அணை முதலியவை குறிப்பிடத் தக்கவை. இத்தகைய அணைகளுக்குப் பெரும் பொருளும் நீண்ட காலமும் தேவை. ரூ. 170 கோடிச் செலவில் சட்லெஜ் நதியில் பாக்ரா அணை கட்டி முடிக்கப் பெற்றிருக்கின்றது. இது முற்றிலும் காங்கிரீட்டில் அமைந்தது. அடிப்படையிலிருந்து இதன் உயரம் 740 அடி. அடியில் இதன் நீளம் 325 அடிதான். ஆனால் உச்சியில் நீளம் 1,700 அடி. அடியில் 625 அடி அகலமாயுள்ள இந்த அணை, மேலே போகப்போக ஒடுங்கி 30 அடி அகலத்திலுள்ளது. மொத்தம் போடப்பட்டிருக்கும் கான்கிரீட் 14,30,00,000 கன அடி. இந்த அணையில் தேங்கும் தண்ணீர் 35 லட்சம் ஏக்கர் நிலங்களுக்குப் பயன்படக்கூடியது. இதனால் பஞ்சாபிலும் ராஜஸ்தானிலும் 10 லட்சம் டன் உணவுத் தானியங்களும், 8 லட்சம் பேல் பருத்தியும், 5 லட்சம் டன் கரும்பும் விளையும் அணையிலும், அதிலிருந்து செல்லும் நங்கல் கால்வாயிலும் முறையே 8,10,000 கிலோவாட்டுகளும், 1,44,000 கிலோவாட்டுகளும் மின்சார சக்தி உற்பத்தி செய்ய முடியும். பாக்ரா அணை உலகிலேயே அதிக உயரமான அணையாகும்.

**ரீஹண்டு அணை :** உத்தரப் பிரதேசத்தில் அதிக விளைவில்லாத பகுதியில் ரீஹண்டு நதியில் இந்த அணை கட்டப் பெற்றுள்ளது. ரீஹண்டு விந்திய மலையிலிருந்து பாயும் ஒரு சிறிய ஆறு. 3,250 அடி நீளமும், 300 அடி உயரமும் கொண்ட இதன் காங்கிரீட் அணையால் 180 சதுர மைல் அளவுக்குத் தண்ணீர் தேக்கப் பெறுகின்றது. இந்தியாவில் இவ்வளவு பரப்புள்ள நீர்த்தேக்கம் வேறில்லை. சுற்றிலும் மலைப்பிரதேசமா

யிருப்பதால், இந்த நீர் நேரடியாகப் பாசனத்திற்கு அதிகமாக உபயோகமாகவில்லை. ஆயினும் இதிலிருந்து உற்பத்தியாகும் மின்சாரத்தைப் பயன்படுத்தி ஆயிரக் கணக்கான குழாய்களின் மூலம் பூமியிலிருந்து நீர் இறைக்கப்படுகின்றது. இந்த முறையில் உத்தரப் பிரதேசத்தில் 16 லட்சம் ஏக்கர் நிலங்களுக்கும், பீஹாரில் 5 லட்சம் ஏக்கர் நிலங்களுக்கும் நீர் கிடைக்கும். இந்த அணையிலிருந்து 3 லட்சம் கிலோவாட்டுகள் மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும். அணை கட்டி முடிக்க ரூ. 45 கோடிக்குமேல் செலவாகியுள்ளது.

**கோஸி அணை:** பீஹாரின் வட பகுதியில் அமைந்துள்ள கோஸி ஆற்றின் அணை பல வழிகளில் சிறப்புப் பெற்றது. இதில் காங்கிரீட் பகுதி 3,769 அடிதான், மண் அமைப்பு 4 மைல் நீளம். ஆனால் கிழ்ப்பக்கத்திலும் மேற்பக்கத்திலும் 75 மைல் நீளத்திற்குச் சுமார் 15 அடி உயரத்தில் வெள்ளத்தைத் தடுக்கும் கரைகள் அமைந்துள்ளன. இந்த இரு கரைகளுக்கும் இடையில் 3 மைலிலிருந்து 10 மைல்வரை இடைவெளி இருக்கின்றது. 'பாரத் சேவக் சமாஜ்'த்தின் முயற்சியால் பல்லாயிரம் குடியானவர்கள் இந்த அணை அமைக்க உழைத்தார்கள். எதிர்பார்த்த செலவு ரூ. 18 கோடியில், ரூ. 16 கோடியிலேயே வேலை முடிந்துவிட்டது. கிழக்குப் பகுதியில் கால்வாய் தயாராகியுள்ளது. இனி மேலைப் பகுதியில் ஒரு கால்வாய் அமையும். அந்தப் பிரதேசத்திற்கான மற்றும் பல வேலைகளைச் சேர்த்து மொத்தம் ரூ. 45 கோடி செலவாகி யிருக்கின்றது.

கோஸி ஆற்றின் வெள்ளத்தினால் பல சமயங்களில் நேர்ந்துவந்த பெரும் பொருட் சேதமும் உயிர்ச் சேதமும் இந்த அணையால் நிறுத்தப்பட்டிருக்கின்றன. 1934-இல் ஏற்பட்ட பீஹார் பூகம்பத்திற்குப்பின் இந்த ஆற்றின் வெள்ளப் பெருக்கால் செழிப்பான

10,000 சதுர மைல் அளவிலுள்ள நிலங்கள் பாழாகி விட்டன. இனி அந்தப் பிரதேசத்திற்கு வெள்ளத்திஞல் பயமில்லே. முதற் படியாக 14 லட்சம் ஏக்கருக்கும், இரண்டாம் படியாக 30 லட்சம் ஏக்கருக்கும் தண்ணீர் விட உத்தேசிக்கப் பட்டுள்ளது. 15,000 கிலோ வாட்டுகள் மின்சார உற்பத்திக்கும் ஏற்பாடாகி யிருக்கிறது.

**நாகார்ஜுன சாகர் திட்டம்:** ஆந்திர நாட்டில் கிருஷ்ணு, கோதாவரி நதிகளுக்கிடையில் மணல் மூடிப் போன விஜயபுரி என்னும் இடமுள்ளது. முற்காலத்தில் அங்கே சதவாகன வமிசத்து அரசர்கள் ஆண்டு வந்தனர். அங்கேதான் புகழ்பெற்ற பௌத்த ஆசாரியர் நாகார்ஜுனர் இருந்தார். பௌத்த தர்மத்தில் தேர்ந்த பேராசிரியர் பலரும் அங்கிருந்து பிரசாரம் செய்தும், கல்வி புகட்டியும் வந்ததால், இலங்கை, காந்தாரம், காஷ்மீர், சீஞ முதலிய இடங்களிலிருந்தும் பலர் அங்கு வந்து கூடியிருந்தனர். அந்த இடத்தின் பழைய கட்டடங்கள், மாளிகைகள், கலேக்கூடங்கள் ஆகியவற்றை யெல்லாம் கிருஷ்ணு நதியின் மணல் மூடிவிட்டது. 25 ஆண்டுகளுக்கு முன்பு பூமியில் தோண்டிப் பார்த்த பொழுதுதான், விஜயபுரியின் பழம் பெருமைகள் புலஞயின.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதே இடத்தில் அணேகட்ட வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்றது. இந்த அணேயின் உத்தேசச் செலவு முதற் படியில் ரூ. 87 கோடி, இரண்டாம் படியில் ரூ. 137 கோடி. அணேயின் நீளம் சுமார் 3 மைல். இதில் காரைக்கட்டுப் பகுதி மட்டும் 3,900 அடி. அணேயின் உயரம் முதலில் 330 அடியும், பின்னர் 380 அடியும் இருக்கத் தீர்மானிக்கப்பட்டது. இந்த அணேயின் வேலேகள் முழுதும் முடிந்தபின், சுமார் 50 லட்சம்

ஏக்கர் நிலங்களில் பயிர் செய்ய உதவியாகும். ஆந்திராவில் எப்பொழுதுமே பஞ்ச நிலையிலுள்ள ராயல சீமைப் பகுதிக்கு இதனால் விமோசன முண்டாகும். இந்த அணையினால் ஏற்படும் மாபெரும் ஏரிக்கு, பழம் பெருமையின் நினைவாக, நாகார்ஜுன சாகர் என்று பெயர் வைக்கப்பெறும். ஆனால் பழம் பெரு நகராயிருந்த விஜயபுரி மீண்டும் ஏரிக்கடியில் மூழ்கிவிட நேர்ந்துள்ளது.

அந்தப் பகுதியில் பூமியிலிருந்து கண்டெடுக்கப் பெற்ற அரிய பொருள்கள் பலவற்றையும் அருகிலுள்ள நாகார்ஜுன கொண்டா என்ற குன்றில் அமைக்கப்பெறும் காட்சிச் சாலையில் வைக்க ஏற்பாடாகி யிருக்கிறது.

நாகார்ஜுன சாகருக்கு உத்தேசிக்கப்பட்டுள்ள செலவு ரூ. 137 கோடியாகும். முதலில் இது ரூ. 75 கோடியென்று கருதப்பட்டது.

**துங்கபத்திரா அணை:** 7,942 அடி நீளம் காரைக் கட்டுள்ள அணை இது; உயரம் 162 அடி. இதற்கு உத்தேசச் செலவு ரூ. 60 கோடி. அணை 1953-54 லேயே கட்டி முடிந்திருந்தும், கால்வாய்கள் வெட்ட நாளாகி விட்டது. முதலில் 8 லட்சம் ஏக்கருக்கும், பின்னால் 12 லட்சம் ஏக்கருக்கும் தண்ணீரளிக்க உத்தேசிக்கப் பட்டிருக்கிறது.

**ஹிராகூட் அணை:** ஒரிஸா ராஜ்யத்திலுள்ள இந்த அணையில் முதற்பகுதி வேலை முடிந்திருக்கிறது. உத்தேசச் செலவு ரூ. 100 கோடியில், ரூ 71 கோடிப் பகுதி நிறைவேறியிருக்கிறது. சிப்லிமா மின்சார நிலையமும், பாசன அபிவிருத்தி ஏற்பாடுகளும் முடிய வேண்டும்.

ஹிராகூட் அணையின் உயரம் 200 அடி, நீளம் 3-மைல். இது காங்கிரீட், அல்லது மண்ணால் இல்லாமல்,

கலப்பு முறையில் கட்டப் பெற்றது. மண்கரைகள் மட்டும் 13 மைல்கள் போடவேண்டியிருந்தது. இந்த அணையின் பயனாக 40 லட்சம் ஏக்கர் நிலங்களுக்குத் தண்ணீர் கிடைப்பதுடன், 2,79,000 கிலோவாட்டுகள் மின்சார சக்தியும் உற்பத்தியாகும்.

சம்பல் பள்ளத்தாக்குத் திட்டம்: ரூ. 100 கோடிச் செலவில் மத்தியப் பிரதேசத்திலும் ராஜஸ்தானிலும் 14-லட்சம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி செய்ய ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. 2,10,000 கிலோ வாட்டுகள் மின்சாரமும் உற்பத்தி செய்ய முடியும். காந்திசாகர் அணை, ராணு பிரதாப் சாகா அணை, மற்றும் இரண்டு சிறு அணைகளும் கட்டவேண்டிய பெரிய திட்டம் இது.

ராஜஸ்தான் கால்வாய்: பஞ்சாபில் சட்லெஜ் நதியும் பியாஸ் நதியும் சேருமிடத்திலிருந்து சிறிது தூரத்திலுள்ள ஹரைக் அணையிலிருந்து 425 மைல் நீளத்திற்குக் கால்வாய் வெட்டி ராஜஸ்தானுக்குத் தண்ணீர் கொண்டு செல்லப்படுகின்றது. அக் கால்வாயின் அகலம் 134-அடி, ஆழம் 21-அடி. பாசனத்திற்காக உலகிலே இவ்வளவு பெரிய கால்வாய் வேறில்லை. ராஜஸ்தானிலுள்ள பாலைவனப் பிரதேசத்தை விவசாயப் பண்ணைகளாகச் செழிக்கச் செய்ய இந்தக் கால்வாய் மிகுந்த பயனுள்ளதாகும். இந்தக் கால்வாய்க்கு முதலில் உத்தேசிக்கப்பட்ட செலவு ரூ. 67 கோடி; ஆனால் மொத்தம் ரூ. 200 கோடி ஆகியிருக்கிறது.

## பால் பண்ணையில் ஒரு புதுமை

மாபெரும் தொழிற்சாலைகளும், அணைகளும் பெருகி வருவதோடு, மக்களின் மனப்பான்மையிலும் பெரிய மாறுதல் ஏற்பட்டு வருவதற்குக் கெய்ரா மாவட்

டத்தில் நடைபெறும் கூட்டுறவுப் பால் பண்ணையை ஓர் உதாரணமாகச் சொல்லலாம். நம் நாட்டுப்புறங்களில் நேர்மையும் திறமையுமுள்ள தலைவர்களும், உற்சாகமுள்ள மக்களும் சேர்ந்து வேலை செய்தால், நாடு வெகு விரைவாக முன்னேற முடியும் என்பதையும் இப்பண்ணை காட்டுகின்றது.

இது 1948-இல் தொடங்கப்பெற்றது. இதில் 138 கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் சேர்ந்திருக்கின்றன. மொத்த அங்கத்தினர் தொகை 40,000. அவர்களிடமுள்ள பால் கறக்கும் எருமைகள் 56,000. நாள் தோறும் பண்ணைக்கு வந்து சேரும் பாலின் அளவு கோடைக் காலத்தில் 1 லட்சம் பவுண்டு, மழைக் காலத்தில் 2½ லட்சம் பவுண்டு.

அன்றன்று விற்பனையாகும் பால் போக, மீதமுள்ள பால் அனைத்தும் இயந்திர உதவியால் பால் பொடியாகவும், வேறு இனிய பொருள்களாகவும் செய்யப் பட்டு வெளியிடங்களுக்கு அனுப்பப் பெறுகின்றன. அங்கு தயாராகும் பால் பொடிதான் நாடெங்கும் விற்று வரும் 'அமுல்' பால் பொடி டின்களில் உள்ளது. இக்காலத்துச் சுகாதார முறைகளின்படி, நவீன இயந்திர சாதனங்களுடன், கூட்டுறவு முயற்சியில் இப்படி ஒரு பண்ணை நடப்பதை நாட்டின் மற்றைப் பகுதிகளிலுள்ள மக்களும் பின்பற்றி ஆங்காங்கே பண்ணைகள் நடத்துதல் நலமாகும்.

கெய்ரா மாவட்டப் பால் பண்ணை யூனியனின் பங்கு மூலதனம் ரூ.4,68,200. 1957-58-இல் அதற்கு ரூ. 10,46,000 இலாபம் கிடைத்திருக்கின்றது. ஆண்டுதோறும் ரூ. 2 கோடிக்குக் குறையாமல் விற்பனை நடைபெறுகின்றது.

**சைக்கிள் தொழில் :** இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 13,7,000 சைக்கிள்கள் தயாராயின.

மூன்றாவது திட்டத்தில் 2,50,000 தயாரிக்கவேண்டும் என்பது குறிக்கோள். 1970-71-இல் 3-கோடி சைக்கிள்கள் தேவைப்படும்.

**ரேடியோ :** சுமார் 7-லட்சம் 'ரிஸீவர்கள்' இப்பொழுது தயாராகின்றன.

'டிரான்ஸிஸ்டர்' ரேடியோக்களுக்குக் கிராக்கி அதிகமிருக்கிறது. அவைகளிலே தீப்பெட்டி அளவுள்ள சிறு ரேடியோக்கள்கூட வந்துவிட்டன.

அகில இந்திய ரேடியோ நிலையங்கள் தங்கள் நிகழ்ச்சிகளை விரிவுபடுத்தி, ஒலிபரப்பும் நேரத்தையும் அதிகமாகக் கூட்டி வருவதால், நாடெங்கும், நகரங்களிலும், கிராமங்களிலும் மக்கள் செய்திகளையும், கலை நிகழ்ச்சிகளையும் கேட்டு இன்புற விரும்புவது இயற்கை.

மேலும் இப்பொழுது 'டெலிவிஷன்' என்ற படரேடியோவும் இந்தியாவுக்கு வந்துவிட்டது. இதன் மூலம் மக்கள் ஒரே நேரத்தில் செவிகளால் கேட்பதுடன், கண்களாலும் பார்த்துக் கொண்டிருக்க முடியும்.

## சிமிண்டு உற்பத்தி

பலவிதமான கட்டடங்களுக்கும், பாலங்களுக்கும், அணைகளுக்கும் ஆதாரமாகத் தேவையுள்ள பொருள் சிமிண்டு. சிமிண்டு உற்பத்தியில் நாம் மிகவும் முன்னேறியுள்ள போதிலும், நம் தேவையும் பெருகிக் கொண்டே போகின்றது. நம் நாட்டில் 38 தொழிற்சாலைகள் ஆண்டுக்கு 1,12,00,000 டன் சிமிண்டை உற்பத்தி செய்கின்றன.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முடிவில் ஆண்டுக்கு 1,26,00,000 டன் சிமிண்டு வீதம் உற்பத்தி செய்யப்பட்டது.

நான்காவது திட்டத்தின் முடிவில் ஆண்டுக்கு 2,06,00,000 டன் சிமிண்டு உற்பத்தியாக வேண்டும் என்பது நம் திட்டக் கமிஷனின் முடிவு.

## நான்காவது ஐந்தாண்டுத் திட்டம்

நான்காவது திட்டம் தயாரித்தவுடனேயே பாகிஸ்தானின் படையெடுப்பு ஏற்பட்டுவிட்டது. அதனால் ஒன்றும் குடி முழுகிப் போய்விடாது எனினும் நம் திட்டத்தில் போர்த் தளவாடங்கள், கருவிகளுக்காகப் பெரும் மாறுதல்கள் செய்ய நேரும். ஏனெனில், நாட்டின் கௌரவத்தையும், சுதந்தரத்தையும் பாதுகாப்பதே எந்தந் திட்டத்திலும் முதலிடம் பெறும். தற்கால நிலைமைகளை ஒட்டிக் கீழ்க்கண்ட நான்காவது திட்டத்தில் வேண்டிய மாறுதல்கள் செய்யப்படும். போருக்காகத் திட்டத்தைக் கைவிடவோ, ஒத்திவைக்கவோ முடியாது. விவசாய விருத்தியும், தொழிற் பெருக்கமும் தேசப் பாதுகாப்பிற்கும் மிகமிக அவசியமானவை. இக்காலத்து யுத்தம் போர்க்களங்களில் மட்டும் நடப்பதன்று; ஒவ்வொரு வயலிலும், ஒவ்வொரு தொழிற்சாலையிலும் அது நடப்பதாகும். களத்திலே நிற்பவர்கள் சில லட்சம் ஜவான்களே; ஆனால் நாடெங்கும் கட்டுப்பாட்டுடன், இரவும் பகலும் உழைக்க வேண்டியவர்கள் கோடிக்கணக்கான மக்கள்.

நான்காவது திட்டத்தின் மதிப்பீடு வருமாறு :

4-ஆவது திட்டத்திற்கு மொத்தம் ஏறத்தாழ ரூ. 22,600 கோடி செலவாகுமென்று மதிப்பிடப்படுகிறது.

எந்தெந்தத் தலைப்பின் கீழ் எவ்வளவு எவ்வளவு செலவாகக் கூடும் என்பதன் விவரம் :

| | கோடிக்கணக்கில் |
|---|---|
| விவசாயம், நீர்ப்பாசனம் | ரூ. 4,100 |
| மின்விசை, சிறு தொழில்கள் பெரிய தொழில்கள், போக்கு வரத்துச் சாதனங்கள் | ரூ. 12,100 |
| கல்வி, விஞ்ஞான ஆராய்ச்சி, சுகாதாரம், வீட்டுவசதி, பிற்பட்ட வகுப்புகள் நலன், சமூக நலன், தொழில் நுட்பப் பயிற்சி, தொழிலாளர் சுபிட்சம், கூட்டுறவு | ரூ. 5,075 |
| கிராம மராமத்துகள், புனரமைப்பு முதலியவை | ரூ. 1,325 |
| மொத்தம் | ரூ. 22,600 |

இதில் சர்க்கார் துறைக்கு சுமார் ரூ. 15,500 கோடியும், தனியார் துறைக்குச் சுமார் ரூ. 7,100 கோடியும் செலவாகும்.

தமிழ் நாட்டில் மத்திய அரசாங்க உதவி பெறும் திட்டங்களுக்காக ரூ. 750 கோடியும், மத்திய அரசாங்கம் ஊக்குவிக்கும் திட்டங்களுக்காக ரூ. 65 கோடியும் முதலீடு செய்ய உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

இந்த நான்காம் திட்ட முடிவுக்குள் தமிழகத்தின் கிராமங்கள் அனைத்துக்கும் மின்விசை கிடைக்கும். வேளாண்மைத் துறையில் நமது சாதனையைப் பொறுத்தே திட்டத்தின் வெற்றி அமையும்.

நான்காவது திட்ட ஆரம்பத்திலிருந்து, தேசப் பாதுகாப்புக்கு அடுத்தபடியாக விவசாய அபிவிருத்தியைக் கவனிக்க வேண்டியது அவசியம். மற்ற முன்

னேற்றமான நாடுகளைவிட நம் நாட்டில் விளைவு மிகவும் குறைவு. நவீனமான நல்ல முறைகளைப் பின்பற்றி, போதிய உரங்கள் வைத்து, கவனமாகப் பயிரிட்டால் நாம் விளைவுகளை எளிதில் அதிகப்படுத்த முடியும் என்றே நிபுணர்கள் கூறுகின்றனர்.

| பயிர் | நிலங்களின் அளவு-ஏக்கர் | 1963-ல் ஓர் ஏக்கரில் விளைவு - ராத்தல் | எளிதில் கூடுதலாக விளைவிக்கக்கூடியது ராத்தல் |
|---|---|---|---|
| நெல் | 700-லட்சம் | 821 | 3,000 |
| கோதுமை | 330 ,, | 738 | 3,000 |
| சோளம் | 100 ,, | 800 | 4,000 |

இவைகளைப் போலவே பிற தானியங்களிலும் விளைவைக்கூட்ட எல்லாவித முயற்சிகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

## தமிழ் நாடு

இனி இந்திய ராஜ்யங்கள் 15-ல் தென்கோடியிலுள்ள நம் தமிழ்நாட்டில் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களை ஓரளவு கவனிப்போம். தமிழ்நாட்டின் பரப்பளவு 50,132 சதுர மைல்; ஜனத்தொகை (1961-இல்) 3,36,50,917.

**விவசாய அபிவிருத்தி** : பத்து ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டில் உற்பத்தியான உணவுப் பொருள்களைவிட இப்போது சுமார் 20 லட்சம் டன் அதிகமாக உற்பத்தியாகின்றன. 1951-இல் சுமார், 1,600 கிராமங்கள் மட்டுமே மின்சார வசதி பெற்றிருந்தன. இப்பொழுது 8,500 கிராமங்கள் மின்சார உதவியைப் பெற்றுள்ளன. இவைகளுக்குக் காரணம் நாட்டின் நதிகளின் குறுக்கே அணைகள் கட்டி, நீரைத் தேக்கி,

விவசாயத்திற்கும் மின்சார உற்பத்திக்கும் அதைப் பயன்படுத்துவதாகும். 'வலை வீச ஆசை தரும் அலை வீசும் வயல்கள்' என்று நம் நிலவளத்தைப் பற்றி நாமக்கல் கவிஞர் மகிழ்ச்சியோடு பாடியுள்ளார். தண்ணீர்தான் நமது முதல் பிரசினை எனினும், விளைபொருள்களைப் பெருக்குவதற்கு மிகுந்த ஆராய்ச்சியுடன் நவீன விஞ்ஞானத்தையும் பயன்படுத்திக் கொண்டு, வேறு பல திட்டங்களையும் நிறைவேற்ற வேண்டும். விவசாயத்திற்குத் தேவையான உயர்ந்த ரகமான விதைகள், இரசாயன உரங்கள், இயற்கையான எரு, குழை முதலிய பசுந்தழைகள், கம்போஸ்ட் உரம் ஆகியவை விவசாயிகளுக்கு ஏராளமாகக் கிடைப்பதற்குச் சென்னை அரசாங்கம் ஏற்பாடு செய்துள்ளது. வறுமையால் வாடும் உழவர்களுக்குக் கடன் உதவிகள் செய்யப் பெற்றன. நவீன இயந்திரக் கலப்பைகளையும் புல்டோஸர்களையும் அரசாங்கம் வாங்கி வைத்துக் கொண்டு, தேவையானவர்களுக்கு வாடகைக்குக் கொடுத்து வந்தது. பயிர்களை அழிக்கும் பூச்சிகளுக்கும், பயிர் நோய்களுக்கும் மருந்துகள் அளித்து, அவைகளை உபயோகிக்கும் 'கருவிகளும் கொடுத்து உதவியுள்ளது. நகரங்களில் நகர் மன்றங்கள் கம்போஸ்ட் உரம் தயாரித்து ரூ. 2-க்கு ஒரு டன் வீதம் கொடுக்கும்படி ஏற்பாடு செய்துள்ளது. கிராமங்களிலேயே உமி, சருகுகள், காளான், சாணம் முதலியவற்றினால் இந்த உரம் தயாரிக்கச் சமுதாய நல வளர்ச்சி வட்டாரங்களில் தீவிர முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன.

வேர்க்கடலை, எள், ஆமணக்கு முதலிய எண்ணெய் வித்துக்களின் உற்பத்தி 1950-51-ல் 7,66,000 டன்னாக இருந்தது 10 லட்சம் டன்னாக உயர்ந்துள்ளது. பருத்தி 1,20,000 பேல்கள் அதிகமாக உற்பத்தியாகியுள்ளது. புகையிலை பயிராகும் நிலங்கள் பெருக்கப்பட்

டிருக்கின்றன. கரும்பு உற்பத்தியில் 10 லட்சம் டன் அதிகரிக்க ஏற்பாடு செய்யப்பட் டிருக்கின்றது. தென்னை, அரக்குப் பற்றும் மரங்கள், வாழை முதலியவைகள் அதிக இடங்களில் வைத்து உண்டாக்கப் பெறுகின்றன. வேளாண்மைக் கல்வி பெருகுவதற்காகக் கோவை வேளாண்மைக் கல்லூரியை விரிவாக்கி, அதிக மாணவர்களைச் சேர்த்துக்கொள்ள வசதி செய்யப் பெற்றிருக்கின்றது. மாடுகள், ஆடுகள் முதலான விலங்குச் செல்வங்களின் வளர்ப்புக்காக இரண்டாவது திட்டத்தில் ரூ. 2,16,18,000 ஒதுக்கப்பட்டது. முக்கியமான இடங்களில் விலங்குப் பண்ணைகளும், கோழிப் பண்ணைகளும், பால் பண்ணைகளும் அமைக்கப்பெற்றுள்ளன.

**மின்விசை உற்பத்தி நிலையங்கள் :** மின்சார நிலையங்களில் சென்னை நகரில் விஸ்தரிக்கப்பெற்றுள்ள அனல் மின் நிலையமும், குந்தா அணைத் திட்டத்தின் மூலம் அமைந்துள்ள நீர் மின் நிலையமும், பெரியாறு அணை மூலம் அமைந்த நீர் மின் நிலையமும் குறிப்பிடத்தக்கவை. சென்னை நிலயத் திட்டத்திற்குச் செலவு ரூ. 9½ கோடி. 15,000 கிலோ வாட்டுகள் உற்பத்தி செய்யும் இரண்டு இயந்திரங்கள் முதல் திட்டக் காலத்திலேயே இணைக்கப்பட்டன. பின்னர் 30,000 கிலோ வாட்டுகள் உற்பத்தி செய்யும் இயந்திரம் பொருத்தப்பட்டு, 1958 முதல் மின்சக்தி உற்பத்தி செய்யப்படுகின்றது. நீலகிரி மாவட்டத்தில் நடைபெறும் குந்தா திட்டத்தில் அவலாஞ்சு அணை, எமரால்டு அணை, மேல் பவானி அணை, குந்தா பாலம் அணை ஆகிய நான்கு அணைகளிலும் கட்டட வேலைகள் தீவிரமாக நடைபெறுகின்றன. மேல் பவானி அணையிலிருந்து அவலாஞ்சு அணைக்கும், குந்தா பாலம் அணையிலிருந்து நீர்ச் சுழல் தேக்கம் வரைக்கும் மலையைக்

குடைந்து சுரங்க வழி மூலம் இணைப்புக்கள் அமைக்கப் பெற்றுள்ளன. முதல் மின்சார உற்பத்தி நிலையம் வேலை செய்து வருகின்றது; இரண்டாவது நிலையமும் விரைவில் முடியும். மொத்தமாக இப் பெரிய திட்டத்திற்குச் சுமார் ரூ. 35½ கோடி செலவாகும். மதுரை மாவட்டத்தில் பெரியாறு அணையில் மின்சார உற்பத்தித் திட்டம் சுமார் ரூ. 10 கோடிச் செலவில் நிறைவேறியுள்ளது. மூன்று மின் சக்தி உற்பத்தி இயந்திரங்கள் வேலை செய்து வருகின்றன.

நாடு சுதந்தரமடைந்த பொழுது 804 கிராமங்களே மின்சார வசதி பெற்றிருந்தன. 1964-65 இல் 19,393 கிராமங்கள் அப்பயனைப் பெற்றுள்ளன; இதே ஆண்டில் 2,24,362 விவசாயப் பம்பு செட்டுகள் மின்சாரத்தால் வேலை செய்கின்றன. கல்பாக்கத்தில் அனல் மின்சார நிலையமும், நெய்வேலியில் கூடுதலாக ஒரு மின்சார நிலையமும் கட்டப்பட்டால்தான் நமது மின்சாரத் தேவை ஓரளவு நிறைவுபெறும்.

## பாசனத் திட்டங்கள்

**கீழ்ப் பவானி அணை:** 1523 அடி நீளத்திற்குக் கல் கட்டடமும், 27,319 அடிக்கு மண் அணையும் அமைக்கப் பெற்று வேலைமுடிந்துவிட்டது. கோவை மாவட்டத்திலுள்ள இந்த அணைக்குச் செலவு சுமார் ரூ. 9½ கோடி. இரண்டு லட்சத்திற்கு மேற்பட்ட ஏக்கர் நிலங்களுக்கு இதனால் பாசன வசதி கிடைக்கும்.

**மணி முத்தாறு அணை:** 1957-இல் முடிந்த இந்த அணைக்குச் சுமார் ரூ. 5 கோடி செலவாகியிருக்கின்றது. இதன் மூலம் நெல்லை மாவட்டத்தில் புதிதாக 20,000 ஏக்கர் நிலங்களுக்கு நீர் கிடைக்கும்.

**அமராவதி அணை:** கோவை மாவட்டத்திலுள்ள இவ்வணை ரூ. 310 லட்சம் செலவில் அமைந்துள்ளது.

1957-இலிருந்து பாசனத்திற்குத் தண்ணீர் விடப்படுகின்றது. இதன் நீர்த் தேக்கம் பழைய நிலங்கள் ஏக்கருக்குப் பயன்படுத்துவதுடன், புதிதாக 21,000 32,000 ஏக்கரில் விவசாயம் செய்யவும் உதவும்.

**வைகை அணை :** ரூ-330 லட்சம் செலவில் அமைந்த இந்த அணை மதுரை, இராமநாதபுரம் மாவட்ட நிலங்களில் 20,000 ஏக்கருக்கு உதவியாகும்.

**சாத்தனூர் அணை :** வட ஆற்காடு மாவட்டத்தில் ரூ. 242 லட்சம் செலவில் அமைந்துள்ள இந்த அணையிலிருந்து 22 மைல் நீளமுள்ள தலைக் கால்வாயும், 55 மைல் நீளமுள்ள கிளைக் கால்வாயும் 21,000 ஏக்கர் நிலங்களுக்குப் பயன்படும் முறையில் செல்கின்றன.

**கிருஷ்ணகிரி அணை :** சேலம் மாவட்டத்திலுள்ள இவ்வணை ரூ. 172½ லட்சத்திற்குச் சற்றுக் குறைந்த செலவில் முடிந்திருக்கிறது; உத்தேசிக்கப் பெற்ற செலவு ரூ. 202 லட்சத்திற்கு மேல். தற்போது 7,500 ஏக்கர் நிலங்களும், இறுதிக் கட்டத்தில் 9,000 ஏக்கர் நிலங்களும் பயன் பெறும்.

**அரணியாறு அணை :** செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள இதில் அணைக்கட்டு 516 அடி நீளமிருந்தபோதிலும், மண் அணைப் பகுதி 2 மைல் 2 பர்லாங்குக்கு அமைந்துள்ளது. செலவு ரூ. 104 லட்சம். புதிய பாசன வசதிகள் ஏற்படுவதுடன், பருவ நிலை நன்றாக உள்ள காலங்களில் இதனால் 4,900 ஏக்கர்களில் இரண்டாம் போகமும் பயிர் செய்ய முடியும்.

**வீடூர் அணை :** தென்னாற்காடு மாவட்டத்தில் வராக நதியில் அமைந்துள்ள இந்த அணைக்குச் சுமார் ரூ. 61 லட்சமே செலவாகி யிருக்கின்றது.

**கால்வாய்கள் :** மேட்டூர் கால்வாய் கோவை, சேலம் மாவட்டங்களில் 45,000 ஏக்கர்களுக்குப் பாசன வசதி அளிப்பது. இது இரு கிளைகளாக வெட்டப்பட்டுள்ளது.

1957-58-லிருந்து 42,500 ஏக்கர் நிலங்களுக்குத் தண்ணீர் பாய்கின்றது. இதன் செலவு ரூ. 183 லட்சம்.

திருச்சி மாவட்டத்தில் ரூ. 172 லட்சம் செலவில் அமைந்துள்ள கால்வாயின் உதவியால் 8,622 ஏக்கர் புன்செய் நிலங்கள் புதிதாகப் பாசன வசதி பெறுகின்றன. ஏரிப் பாசனத்திலுள்ள நிலங்களுக்கும் இது உதவியாகும்.

**புள்ளம்பாடிக் கால்வாய்:** திருச்சி மாவட்டத்திற்கு உரியது. இதன் நீளம் 54 மைல். இதனால் 22,114 ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதியுண்டு. செலவு ரூ. 157 லட்சம்.

## சமுதாய நல வளர்ச்சி

நாட்டுப்புற மக்கள் சுதந்தரத்தின் நன்மைகளை அடையும்படி செய்வதே காந்திஜியின் கனவாக இருந்தது. அதில் ஓரளவு அரசாங்கத்தின் சமுதாய நலத் திட்டத்தால் நிறைவேறி வருகின்றது. நமது மாநிலத்திற்குரிய 374 வளர்ச்சி வட்டாரங்களில் 254-ல் வேலைகள் நடந்து வருகின்றன. ஒவ்வொரு வட்டாரத்திலும் 66,000 மக்களைக் கொண்ட 100 கிராமங்கள் உண்டு. 1963 அக்டோபர் மாதத்திற்குள் மற்ற 120 வட்டாரங்களிலும் திட்டம் அமலுக்கு வந்தது. சமுதாய நல வளர்ச்சிக்காக முதல் திட்டத்தில் ரூ. 75 லட்சமும், இரண்டாவது திட்டத்தில் சுமார் 13½ கோடியும் செலவிடப்பட்டது. நகரங்களோடு தொடர்பில்லாமல் தனித் தீவுகளாக ஒதுங்கிக் கிடந்த பல்லாயிரம் கிராமங்களில் இப்பொழுது விழிப்பு ஏற்பட்டிருக்கின்றது. சுத்தமும், சுகாதாரமும், கல்வியும், போக்கு வரத்துச் சாதனங்களும் பெருகி வருகின்றன. விவசாயத்திற்கு வேண்டிய விதைகள், இரசாயன

உரங்கள், கருவிகள் முதலியவை வழங்கப் பெறுவதுடன், முன்னேற்ற முறைகளைப் பற்றிய பிரசாரமும் நடைபெறுகின்றது.

## பெருந் தொழில்களும் சிறு தொழில்களும்

தொழிற்சாலைகள் அமைப்பதிலும், தொழில் முன்னேற்றத்திலும், இருக்கிற வாய்ப்புக்களைப் பயன்படுத்திக்கொண்டு முன்னேறி வருவதில் தமிழ் நாடு மற்ற ராஜ்யங்களுக்கு வழிகாட்டியாக விளங்குகின்றது. மத்திய அரசாங்கம் நிறுவக்கூடிய பெரிய தொழில்களில் எத்தனை இங்கு அமைய முடியுமோ அத்தனையும் அமைந்திருக்கின்றன. நெய்வேலி நிலக்கரி உற்பத்தியைப் பற்றி முன்னால் குறிக்கப் பெற்றுள்ளது. இரண சிகிச்சைக்குரிய கருவிகளைக் கிண்டியில் உற்பத்தி செய்யவும், சினிமா படங்களெடுக்க உதவும் பிலிம்களை நீலகிரியில் தயாரிக்கவும், நாட்டுப் பாதுகாப்புக்குரிய இரு பெரும் தொழில்களை ஆவடியிலும், என்னூரிலும் அமைக்கவும் தமிழ் நாட்டு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கின்றது. 1962-இல் மட்டும் தமிழகத்தில் 687 புதிய தொழிற்சாலைகள் அமைந்துள்ளன. நாள் ஒன்றுக்கு இரண்டு தொழிற்சாலைகள் வீதம் ஏற்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமே.

கூட்டுறவு முறையில் மதுராந்தகம், உடுமலைப் பேட்டை, ஆம்பூர் ஆகிய இடங்களில் 3 சர்க்கரை ஆலைகள் அமைந்துள்ளன. 1956-57-இல் 63,000 டன் சர்க்கரை தயாரிக்கப்பட்டது; 1961-62-இல் தனியார் ஆலைகளிலும், கூட்டுறவு ஆலைகளிலும் சேர்ந்து 1,32,000 டன் உற்பத்தியாகி யிருக்கிறது. காகிதம், இரசாயன உரங்களின் உற்பத்தி, குறிப்பிட்ட இயந்திரங்கள் தயாரித்தல், அலுமினியப் பொருள்கள் தயாரித்தல் முதலிய தொழில்களை மேலும் அபிவிருத்தி

செய்ய ஏற்பாடுகள் நடந்திருக்கின்றன. மோட்டார் சக்கரங்கள் முதலியவை தயாரிக்க ஒரு கோடி ரூபாய் முதலுடன் விரைவில் பெரிய தொழிற்சாலை அமையப் போகின்றது. சென்னை முதல் எட்டு நகரங்களில் 'இண்டஸ்டிரியல் எஸ்டேட்ஸ்' என்ற தொழிற்பண்ணைகள் கட்டப் பெற்றுள்ளன. இவைகளில் பலர் போயிருந்து தொழில்கள் நடத்தி வருகின்றனர்.

கூட்டுறவு மூலம் கைத்தறி நெசவாளர்களுக்கும், மற்றும் கைத்தொழில் புரிவோர்களுக்கும் பலவித உதவிகள் செய்யப்படுகின்றன.

தொழில் நுணுக்கக் கல்வியைப் பெருக்குவதற்காகப் பழைய கல்லூரிகளில் அதிக மாணவர்களைச் சேர்க்க வசதி செய்தும், நாகப்பட்டினம், சேலம், செட்டிநாடு, பொள்ளாச்சி, ஆவடி, விருதுநகர், தாழையூத்து, அண்ணாமலை நகர், காஞ்சிபுரம், வேலூர், நாகர்கோவில் ஆகிய இடங்களில் புதிய தொழிற் பள்ளிகள் தொடங்கியும் பல இளைஞர்களுக்குப் பயிற்சியளிக்கப் பெறுகின்றது.

தமிழகத்தில் தொழில்களில் முதன்மையாக விளங்குபவை ஆலைகளில் நூல் நூற்றலும், நெய்தலும், இவை மிக அதிகமான அளவில் கோவையிலும், மதுரையிலும் நடைபெற்று வந்தபோதிலும், நாடு முழுதிலும் பரவியுள்ள நடுத்தரத் தொழிற்சாலைகள் 139 இருக்கின்றன. தமிழகத்திலுள்ள நூற்புக் கதிர்கள் சுமார் 30¼ லட்சம்; இயந்திரத் தறிகள் 8,000. மேட்டுப்பாளையத்தில் ரூ. 10 கோடி செலவிட்டு, இத்தாலிய நிபுணர்களின் ஒத்துழைப்புடன், ரயான் முதலிய செயற்கை நூல் உற்பத்திக்கு ஏற்பாடாகி யிருக்கின்றது.

இந்தியாவில் உற்பத்தியாகிற சிமிண்டில் 12½% தமிழகத்தில் உற்பத்தியாகின்றது. நான்கு தொழிற்

சாலைகளில் ஆண்டுக்கு 10 லட்சம் டன் வீதம் சிமிண்டு உற்பத்தி செய்யப்படுகிறது. 1961-இல் 60,000 டன் உற்பத்தி செய்யும் புதுத் தொழிற்சாலை ஒன்றும் அமைந்துள்ளது. இதுவரையிலுமுள்ள தொழிற்சாலைகளைவிடப் பெரிதாக 2 லட்சம் டன் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை சேலத்தில் அமைந்துள்ளது. சென்ற 1963-இல் அதில் உற்பத்தி தொடங்கியது. இராமநாதபுரம், திருச்சி மாவட்டங்களில் சிமிண்டு உற்பத்திக்குரிய வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ளவும் திட்டங்கள் தயாராகின்றன.

இரசாயனப் பொருள்களையும், உரங்களையும் தயாரிக்கக் கோடிக்கணக்காக முதலீடு செய்து தொழிற்சாலைகள் நடைபெறுகின்றன. மேலும் உற்பத்திக்குப் புதிய தொழிற்சாலைகள் அமைக்கப் பெறுகின்றன.

காகித உற்பத்தி தமிழகத்திற்குப் புதிது. ஈரோடு நகருக்கு அருகில் ரூ. 6 கோடியில் ஒரு காகிதத் தொழிற்சாலை வேலை முடிந்துள்ளது. இது ஆண்டுக்கு 20,000 டன் உற்பத்தி செய்ய முடியும். வைக்கோலிலிருந்து காகிதம் செய்வதற்கு நெல்லை மாவட்டத்தில் ஒரு தொழிற்சாலைக்கு வேலை நடந்து முடிந்து, உற்பத்தியும் நடக்கின்றது. இது நாள்தோறும் 10 டன் உற்பத்தி செய்யக் கூடியது.

தோட்டங்களும் துரவுகளும் நிறைந்து அமைதியாகக் காட்சியளித்து வந்த சென்னை மாநகரிலும், சுற்றுப் புறங்களிலும் பெருந் தொழில்கள் பல அமைந்துள்ளன. ஆவடி, திருவொற்றியூர், என்னூர், பெரம்பூர், கிண்டி முதலிய இடங்களில் பற்பல தொழிற்சாலைகள் வேலை செய்து வருகின்றன.

மொத்தத்தில் தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சி அபரிமிதமானது என்றே சொல்லலாம். 1956-இல் 4,618 தொழிற்சாலைகள் இருந்தன; இப்பொழுது

6,836 இருக்கின்றன. இதனுல் அதிக மக்களுக்குத் தொழில் கிடைத்திருக்கிறது. மத்திய அரசு தமிழகத்தில் ரூ. 175 கோடி முதலீடு செய்துள்ளது. ரஷ்ய உதவியுடன் ரூ. 50 கோடி மூலதனத்துடன் 'ஆபரேஷன் கருவிகள் தொழிற்சாலை' வேலை செய்யத் தொடங்கியுள்ளது. ஆவடியில் முக்கியமான போர்க் கருவியான டாங்குத் தொழிற்சாலையும், திருச்சியில் துப்பாக்கித் தொழிற்சாலையும் நன்கு வேலை செய்து வருகின்றன. 1956-இல் 82 ஜவுளி மில்களே இருந்தன. 1961-இல் 134 மில்களாய்ப் பெருகியிருந்தன. 3-ஆவது திட்டத்தில் மேலும் 22 மில்கள் தோன்றியுள்ளன. ஆண்டுக்கு ஒரு லட்சம் டன் மிருது உருக்கைத் தயார் செய்யும் தொழிற்சாலையும், 4 லட்சம் டன்னுக்கு மேல் சிமிண்டு உற்பத்தி செய்யும் தொழிற்சாலையும் நான்காவது திட்ட ஆரம்பத்தில் உற்பத்தி தொடங்கும்.

திருச்சி அருகில் ரூ. 25 கோடி மூலதனத்துடன் 'பாய்லர்' தொழிற்சாலை வேலை தொடங்கி உற்பத்தி செய்து வருகின்றது. 3,000 ஏக்கர் நிலத்தின் நடுவில் இது திருவெறும்பூரில் அமைக்கப்பெற்றுள்ளது. இதற்காகத் தனி ரயில் பாதைகளும் அமைந்துள்ளன. பாய்லர் மின்சார உற்பத்தி செய்ய உதவும். அது பார்வைக்கு மூன்று மாடிக் கட்டடம் போலிருக்கும். ஒரு பாய்லரின் விலை ரூ. 10 கோடியாகும். அப்படி ஆண்டுக்கு 12 பாய்லர்கள் உற்பத்தி செய்யக்கூடியது திருச்சி பாய்லர் தொழிற்சாலை.

மேலும் தொழிற் பெருக்கத்திற்காக மட்டும் நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ரூ. 600 கோடி தேவையென்று தமிழ்நாட்டு அரசாங்கம் முடிவு செய்துள்ளது.

## மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் (1960-61—1965-66)

முந்திய இரண்டு திட்டங்களையும் பார்க்கினும் பெரிய அளவில் மூன்றுவது திட்டம் தயாரிக்கப் பெற்றது. அரசாங்கத்தின் பொதுத் துறையில் ரூ. 8,000 கோடியும், தனியார் துறையில் ரூ. 4,100 கோடியும் இதற்குத் தேவைப்படும். தேசிய வருமானத்தை ஆண்டுக்கு 5% உயத்துவது, விவசாய விளை பொருள்களைப் பெருக்கி உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்வதும், உருக்கு, நிலக்கரி, இயந்திரங்கள் தயாரித்தல் ஆகிய அடிப்படைத் தொழில்களை மேலும் விரிவாக்கி அமைப்பதும், கூடியவரை அதிக மக்களுக்கு வேலை வாய்ப்பளித்து அவர்களின் உழைப்புச் சக்தியைப் பயன்படுத்திக் கொள்வதும், செல்வத்திலும் வருமானத்திலும் சமுதாயத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளை மேலும் குறைத்து, பொருளாதார வசதிகள் சமமாகக் கிடைக்கச் செய்வதும் இத்திட்டத்தின் நோக்கங்கள். இந்த நோக்கங்களை நிறைவேற்ற உற்பத்திகளையும், வசதிகளையும் பெருக்க உத்தேசிக்கப் பெற்றது. அவைகளில் முக்கியமானவை :

| இனம் | 1960-61 | 1965-66 |
|---|---|---|
| | லட்சம் | லட்சம் |
| உணவுத் தானியங்கள் உற்பத்தி | 760 டன் | 1,000 டன் |
| பாசன நிலங்கள் | 700 ஏக்கர் | 9000 ஏக்கர் |
| உருக்குக் கட்டிகள் | 35 டன் | 92 டன் |
| இயந்திரங்களும் கருவிகளும் | ரூ. 550 | ரூ 3,000 |
| பெட்ரோலியப் பொருள்கள் | 57 டன் | 49 டன் |

| | | |
|---|---|---|
| ஜவுளி | லட்சம் | லட்சம் |
| மில் துணி | 51,270 கஜம் | 58,000 கஜம் |
| கைத்தறி,விசைத்தறி, கதர்த் துணி | 23,490 கஜம் | 35,000 கஜம் |

**கனிப் பொருள்கள்**

| | | |
|---|---|---|
| இரும்பு | 107 டன் | 300 டன் |
| நிலக்கரி | 546 டன் | 976 டன் |
| மின்சாரம் | 57 கி. வா. | 127 கி. வா. |
| ஏற்றுமதி | ரூ. 645 கோடி | ரூ. 850 கோடி |

ஒவ்வொரு நபருக்கும் சத்துக் கூடுதலாயுள்ள உணவுப் பொருள் கிடைக்கவும், 17-கஜத்திற்குக் கூடுதலாகத் துணி கிடைக்கவும் வழி செய்ய வேண்டும். பள்ளி செல்லும் மாணவர் தொகை 435 லட்சத்திலிருந்து 639 லட்சமாகப் பெருக்க வேண்டும். கூடுதலான கப்பல் வசதிகளும், ரயில் வாகன வசதிகளும் பெற வேண்டும்.

விவசாய அபிவிருத்திக்காகவும், சமுதாய நல அபிவிருத்திக்காகவும் ரூ. 1,068 கோடி செலவழிக்க உத்தேசிக்கப் பட்டுள்ளது. மற்ற உத்தேசச் செலவுகள்: பெரிய, நடுத்தரப் பாசன வசதிகளுக்கு ரூ. 650 கோடி, மின்சார உற்பத்திக்கு 1,012 கோடி, கிராம, சிறு தொழில்களுக்கு ரூ. 264 கோடி, பெருந்தொழில்களுக்கும், உலோகங்களுக்கும் ரூ. 1,520 கோடி, போக்குவரத்துச் சாதனங்களுக்கு ரூ. 1,486 கோடி, பொது நன்மைக்கான பணிகளுக்கு ரூ. 1,300 கோடி, இதர செலவு ரூ. 200 கோடி. ஆக மொத்தம் ரூ. 7,500 கோடி செலவிட உத்தேசிக்கப்பட்டுள்ளது.

இம் மூன்றுவது திட்டத்தில் விவசாயத்தில் 35

லட்சம் மக்களுக்கும், மற்றத் தொழில்களில் 140 லட்சம் மக்களுக்கும் வேலை வாய்ப்புக் கிடைக்குமென்று எதிர்பார்க்கப் பெறுகிறது. விவசாயத்தின் முக்கியத்தைக் கருதி, திட்டத்தில் அதற்கு முதலிடம் அளிக்கப் பெற்றிருக்கின்றது. பல வகைகளில் அதற்காக ஒதுக்கியுள்ள தொகை ரூ. 1,281 கோடி. கால்நடை பேணவும், பெரிய நகரங்களில் புதிய பால் பண்ணைகள் அமைக்கவும், மீன் வளத்தை அதிகமாய்ப் பயன்படுத்தவும், வனங்களின் பாதுகாப்புக்கும் தக்கபடி தொகைகள் ஒதுக்கப் பெற்றுள்ளன. விவசாயத்திற்கு அடுத்தபடி பெருந் தொழில்களுக்கும் சிறுதொழில்களுக்கும் பெருந்தொகைகள் செலவிடப்பெறும்.

## சீனுவால் நேர்ந்த இடையூறு

இந்தியா வெற்றிப் பாதையில் வேகமாக முன்னேறி வருவதில் மூன்ருவது திட்டம் அடுத்த பெருந் திட்டங்களுக்கு வழி திறந்துவிடுவதாக அமைந்துள்ளது. இவ்வாறு இன்னும் சில திட்டங்களை நிறைவேற்றினுல், மேற்கொண்டு அதிகச் செலவுகளின்றி நாடு நிரந்தரமான நன்மையைப் பெற்று உலகத்தில் தனக்குரிய உயர்ந்த நிலையை அடைய முடியும்.

ஆனுல் மூன்ருவது திட்டத்திற்கே இடையூருகச் சீனு படையெடுத்து வந்தது. சீனப் படையெடுப்பும், ஓயாத பயமுறுத்தல்களும் போர்க்களங்களில் போரிடுவதோடு நம்மை விடவில்லை. அவை நமது பொருளாதார நிலைமையை அடியுடன் மாற்றலாயின. அவசரத்திற்கு வெளிநாடுகளிலிருந்து சில ஆயுதங்களைப் பெற்றுக் கொண்டதுடன் நமது பிரசினை தீர்ந்துவிடவில்லை. நிரந்தரமாக நாட்டின் பாதுகாப்புக்குப் புதிய முறையில் ஏற்பாடு செய்யவேண்டியிருந்தது. கோடி கோடியாகப் பணத்தைக் கொட்டி நம்

நாட்டிலேயே பெரிய அளவில் நவீன ஆயுதங்களையும் மற்றும் போர்க் கருவிகளையும், விமானங்களையும் தயாரித்தும், லட்சக்கணக்கான வீரர்களைக் கொண்ட புதுப் படைகள் அமைத்தும், இன்னும் பல்லாண்டுகளுக்கு நாம் ஒவ்வொரு நாளும் போருக்கு ஆயத்தமாக இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இக் காலத்துப் போர்த் தளவாடங்கள் சாமானியமானவையல்ல. படைகளுக்கும் கருவிகளுக்கும் ஆகும் செலவுடன், நம் தொழில்களிலும் இடைவிடாது உற்பத்தி பெருகினால்தான் பாதுகாப்புப் பூர்த்தியாகும். தொழில்கள் வேறு, பாதுகாப்பு வேறு என்று இக்காலத்தில் பிரிக்க முடியாது. போர் வீரர்கள் போர்க் களங்களிலே போராடுகையில், நாட்டு மக்களும் விளை நிலங்களிலும், தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும், மற்ற இடங்களிலும் போராடிக்கொண்டே யிருக்க வேண்டும்.

இதுவரை எந்த வல்லரசுகளுடனும் கூட்டுச் சேராமல் ஒதுங்கியிருந்த இந்தியா, போருக்குரிய பொருளாதாரத்தை மேற்கொள்ளவேண்டி யிருந்தது. தொழில்களுக்குச் செலவாகும் பணம் பின்னால் பெரும் பயனளித்துக்கொண்டே யிருக்கும். ஆனால் போர்த் தளவாடங்களுக்குப் போடும் பணம் செலவுதான். அதிலும் வலிமை மிகுந்த எந்த எதிரியையும் சமாளிக்கக்கூடிய வல்லமையை நாம் விரைவிலேயே பெற்றாகவேண்டும்.

போரினால் நிலைமை மாறிய போதிலும், மூன்றாவது திட்டத்தில் முக்கியமான காரியங்கள் அனைத்தையும் நிறைவேற்ற வேண்டுமென்று இந்திய அரசாங்கம் தீர்மானித்துள்ளது. ஆயினும் திட்டத்தில் சில மாற்றங்கள் செய்யவேண்டியதும் அவசியமாயிற்று.

## புதிய பாரதம்

ஆங்கிலேயர் வெளியேறி, பாரதக் குடியரசு ஏற்பட்டதுடன் நம் தேசியப் புரட்சி நிறைவேறிற்று. பொருளாதார, சமுதாயப் புரட்சி அதிலிருந்து தொடங்கியுள்ளது.

அந்நிய ஆட்சிக்கு உறுதுணையாயிருந்த சுதேச சமஸ்தானங்கள் முதலில் ஒழிக்கப் பெற்றன. அடுத்தாற்போல் 1949-இலிருந்து 1955-க்குள் பல ராஜ்யங்களிலும் ஜமீன்கள் ஒழிக்கப் பெற்றன. யதேச்சாதிகார அரசாங்கங்களைப் போல் நம் அரசியல் சட்டத்தின் கீழ் நினைத்ததையெல்லாம் செய்ய முடியாது. எவருடைய சொத்தையும் காரணமில்லாமல் பிடுங்கிக் கொள்ள இயலாது; தக்க ஈடு கொடுக்காமல் அரசாங்கம் எதையும் பெறமுடியாது. மக்களுக்குப் பாதுகாப்பாக அமைந்த அச்சட்டத்தின் விதிகளைப் பல ஜமீன்தார்கள் தங்களுக்கும் காப்பாகப் பயன்படுத்திக் கொண்டு, நீதித் தலங்களிலே வழக்காடினார்கள். இதனால் அரசியல் சட்டத்தையே திருத்த நேர்ந்தது. பஞ்சாபிலிருந்து தமிழ்நாடுவரை ஜமீன்தார்களுக்கு மொத்தம் ரூ. 450 கோடி நஷ்ட ஈடு கொடுக்கத் தீர்மானிக்கப்பட்டது. அவர்களிடமிருந்து பெற்ற நிலங்கள் நேரிடையாக விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டன. அந்நிலங்களின் வரியில் ஆண்டுதோறும் ரூ. 40 கோடி வருவதைக் கொண்டு 10, 12 வருடங்களில் நஷ்ட ஈட்டுத் தொகையை ஈடு செய்து கொள்ளலாம் என்று கருதப்பட்டது. ஜமீன்தார்களுக்கு நஷ்ட ஈடு முழுவதையும் மொத்தமாக முன்னதாகக் கொடுக்காமல், முதலில் கொஞ்சம் ரொக்கமாகக் கொடுத்து, எஞ்சியதைச் சுமார் 20 ஆண்டுகளில் பெற்றுக் கொள்ளும்படி கடன் பத்திரங்களாகக் கொடுக்கப் பெற்றன.

நம் நாட்டில் நிலமில்லாது விவசாயக் கூலிகளாயுள்ள 5 கோடி மக்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒரு பகுதியினருக்கு நிலங்கள் கிடைக்கவும், தேவைக்கு மேல் மிகுதியாக நிலங்களை வைத்திருக்கும் நிலக்கிழார்கள் ஓர் அளவுக்கு மேல் நன்செய், புன்செய் நிலங்கள் வைத்திருக்கக் கூடாதென்று செய்யவும் பல ராஜ்யங்களில் நிலங்களுக்கு உச்ச வரம்பு தீர்மானிக்கப்பெற்று வருகின்றன.

தொழில்களிலும் அரசாங்கத்தின் நோக்கம் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. ஸோஷலிஸப் பாணியில் சமுதாயத்தை அமைப்பதே இலட்சியம் என்று கூறப்பட்டுள்ளது. 1956, ஏப்ரல் 30-ந் தேதி நமது பார்லிமென்டில் நிறைவேறிய தீர்மானம் பின்கண்டவாறு தெரிவிக்கின்றது.

'ஸோஷலிஸப் பாணி சமுதாய அமைப்பை இலட்சியமாகக் கொண்டிருப்பதாலும், திட்டமிட்டு விரைவில் அபிவிருத்தி செய்யவேண்டி யிருப்பதாலும், அடிப்படையான, கேந்திர முக்கியத்துவமுள்ள தொழில்கள் அல்லது ஜன நன்மைக்கான ஊழியங்கள் யாவும் பொதுத் துறையில் இருக்கவேண்டியது அவசியமாகின்றது. மற்றும் அவசியமான தொழில்களையும், தற்போதைய நிலையில் அரசாங்கம் மட்டுமே பெரிய அளவில் மூலதனமிடக்கூடிய தொழில்களாயும் இருப்பவையும் பொதுத் துறையில் இருக்க வேண்டியவை. ஆதலால் பெரிய அளவுள்ள பிரதேசத்தின் எதிர்கால அபிவிருத்திக்குரிய நேரிடையான பொறுப்பை அரசாங்கமே ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கின்றது.'

## முதலாளித்துவ முறை

இதனால் அரசாங்கம் மேற்கொள்ளாத தொழில்களையே தனியார் துறை செய்ய வேண்டியிருக்கும் என்பது தெளிவு. ஆனால் நடைமுறையில் அத்

தகைய தொழில்களே பெரும் பகுதியா யிருக்கின்றன. தனியார் துறையில் தனி முதலாளிகளின் ஸ்தாபனங்களும், சிலர் பங்காளிகளாகச் சேர்ந்து நடத்தும் ஸ்தாபனங்களும் இருக்கின்றன; குறிப்பிட்ட பங்குதாரர்களைக் கொண்ட பிரைவேட் லிமிடெட் கம்பெனிகளும், பல பங்குதாரர்களைக் கொண்ட பப்ளிக் லிமிடெட் கம்பெனிகளும் இருக்கின்றன. பலருடைய பங்குகளைப் பெற்று நடக்கும் பப்ளிக் கம்பெனிகளும் முதலாளித்துவ ஸ்தாபனங்களா எனில், இந்தியாவில் தற்போது அப்படித்தான் இருக்கின்றன. பொது மக்களிடம் பெருவாரியாகப் பங்குகள் வாங்காமல், சிலர் மட்டுமே அதிகப் பங்குகள் எடுத்துக்கொள்வதும் வழக்மாகயிருக்கிறது. சணல், நூல், ஜவுளி, சிமிண்டு, தாவர எண்ணெய், காகிதம், சர்க்கரை, சுரங்கத் தொழில்கள், மலைத் தோட்டங்களில் தேயிலை முதலியன பயிர் செய்தல் ஆகிய பல தொழில்கள் பொதுக் கம்பெனிகள் மூலம் நடந்து வருகின்றன. கம்பளி நெசவு, ஸோப்பு, கண்ணாடி, தீப்பெட்டி, உலோக வார்ப்புக்கள் முதலிய சில தொழில்களை முதலாளிகள் தனியாகவோ, கூட்டுச் சேர்ந்தோ நடத்தி வருகின்றனர்.

1961, மார்ச் 31-ந் தேதியில் இந்தியாவில் இருந்த லிமிடெட் கம்பெனிகளின் தொகை 26,108; இவைகளின் செலுத்தப்பெற்ற மூலதனம் ரூ. 1724·6 கோடி. இவைகளில் பப்ளிக் கம்பெனிகள் 6,745; செலுத்தப் பெற்ற மூலதனம் ரூ. 876·1 கோடி; பிரைவேட் கம்பெனிகள் 19,363; செலுத்தப்பெற்ற மூலதனம் ரூ. 848·5 கோடி. ரூ. 524·4 கோடி மூலதனமுள்ள அரசாங்கக் கம்பெனிகள் 137-ம் இருந்தன; இவைகளில் 34 பப்ளிக் கம்பெனிகள், 103 பிரைவேட் கம்பெனிகள். 1960-இல் நாட்டிலிருந்த பலதிறப்பட்ட

கூட்டுறவுச் சங்கங்கள் 3,13,499; புழக்கத்திலிருந்த மூலதனம் ரூ. 1,083 கோடி.

இவ்வாறு இந்தியப் பொருளாதார நிலையே மாறுதலடைந்து வருவதில் இங்குள்ள முதலாளித்துவ முறையும் மாறி வருகின்றது.

சில விதிகளின்படி வெளிநாட்டார் இந்தியாவில் முதலீடு செய்து தொழில்கள் நடத்தவும் வசதி செய்யப்பட்டிருக்கின்றது. 1953-ல் இங்கு வெளி மூலதனம் ரூ. 420 கோடி இருந்தது. பின்னும் அமெரிக்கா, ஜப்பான், பிரிட்டன் முதலிய நாடுகள் முதலீடு செய்துள்ளன. பழைய தொழில்களிலே சில இன்னும் ஆங்கிலேயர் வசம் உள்ளன. மிகப் பெரிய சணல் மில்கள் 12-இல் 10 அவர்களிடமும், இரண்டு மட்டும் இந்தியர் வசமும் இருக்கின்றன. மொத்தம் சணல் மில்கள் 76-க்கு மேலுள்ளன. தேயிலை உற்பத்தி செய்யும் முக்கியமான கம்பெனிகள் 150-இல் முதன்மையானது 12-ம் ஆங்கிலேயர் நிர்வாகத்திலுள்ளன. சுமார் 400 நிலக்கரிக் கம்பெனிகளிலும் பிரிட்டிஷாரின் பங்கு கணிசமாக உண்டு.

## அமெரிக்காவின் உதவிகள்

நம் திட்டங்களை நிறைவேற்ற அமெரிக்க ஐக்கிய நாடு கோடிக்கணக்கான பொருள் கொடுத்து உதவி வருகின்றது. 1962 ஆகஸ்ட் முடிய அதன் உதவி ரூ. 2,072 கோடி. பொருளோடு நிற்காமல், உணவுக்கான கோதுமை போன்றவைகளையும் அது அனுப்புகின்றது. 1962-இல் ரூ. 1,200 கோடி பெறுமானமுள்ள விவசாய விளைபொருள்களை அனுப்பி, அத்தொகையில் மூன்றில் ஒரு பகுதியை இந்தியாவில் கல்விக்காகவும், தொழிற் பயிற்சி கொடுப்பதற்காகவும் செலவழித்துக்கொள்ள அநுமதி யளித்தது.

உத்தரப் பிரதேசத்தில் கான்பூரிலும், வங்காளத்தில் கரக்பூரிலும் தொழிற் பயிற்சி நிலையங்களுக்கு அமெரிக்கா பலவித உதவிகள் செய்து வருகின்றது. டில்லியிலுள்ள தேசியக் கல்வி நிலையத்திற்கும், கிண்டி, புனு, ஹௌரா, ரூக்கீ முதலிய இடங்களிலுள்ள எஞ்சினியரிங் கல்லூரிகளுக்கும் நூல்கள், ஆராய்ச்சிக் கருவிகள் முதலியவைகளை அளித்து, தேர்ந்த நிபுணர்களையும் அனுப்பி யிருக்கின்றது. 1958-க்குப் பின் இதுவரை நம் எஞ்சினியரிங் கல்லூரிகளிலிருந்து 400 ஆசிரியர்கள் அமெரிக்காவில் பயிற்சி பெற்று வந்திருக்கின்றனர். பந்த்நகர், புவனேஸ்வர், லூதியானு ஆகிய இடங்களிலுள்ள விவசாயப் பல்கலைக் கழகங்களுக்கு அமெரிக்கா ஆசிரியர்களும், கருவிகளும் அனுப்பி உதவி வருகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக, மூன்ருவது திட்டத்தை நிறைவேற்றி வைக்க உதவி புரிவதற்காக 7,800 தொழில் நிபுணர்களான ஆசிரியர்களைத் தயாரிக்கப் பம்பாயிலுள்ள குர்லாவில் அமெரிக்காவும், இந்தியாவும் சேர்ந்து ஒரு மத்தியப் பயிற்சி நிலையம் அமைப்பதைக் குறிப்பிடவேண்டும். இந்த ஆசிரியர்கள் மற்றும் பல்லாயிரம் தொழில் நிபுணர்களைத் தயாரிப்பார்கள். உலகிலேயே மிகப்பெரிய ஜனநாயக நாடு இந்தியா என்பதை அமெரிக்கா அறிந்துள்ளது.

## பிரிட்டனின் உதவி

இங்கிலாந்து மூன்று வகையில் நம் தொழில் வளர்ச்சிக்கு உதவி வருகின்றது. சீமையிலே இந்தியர்களுக்குப் பயிற்சி அளிக்கின்றது; தொழில் நிபுணர்களை இங்கு அனுப்புகின்றது; பயிற்சிக்குரிய கருவிகளையும், ஆராய்ச்சி நிலையங்களுக்குத் தேவையான கருவிகளையும் அளிக்கின்றது. 1962-இல் 205 இந்தியர் சீமையிலே பயிற்சி பெற்று வந்தனர். 1950-இலிருந்து

1,500 பேர்கள் பயிற்சி பெற்றுள்ளனர். நம்முடை 27 தேசிய 'லேபரேடரிகள்' என்னும் ஆராய்ச்சி கூடங்களிலே இங்கிலாந்திலிருந்து கிடைத்துள்ள நுட்பமான ஆராய்ச்சிக் கருவிகளைக் காணலாம்.

## ஜெர்மனியின் உதவி

யுத்தத்திற்குப் பின்னுல் மேற்கு ஜெர்மனி தன் தொழில்களை வளர்த்துக் கொண்டதுடன், நமக்கும் பெரிய அளவில் உதவி வருகின்றது. மூன்ருவது திட்டத்தின் முதல் இரண்டு வருடங்களுக்கு ஜெர்மனி 4,230 லட்சம் டாலர்கள் கடன் உதவுவதுடன், உருக்கு உற்பத்தி முதலிய பெருந் தொழில்களுக்கு வேண்டிய இயந்திரங்களை அனுப்பி, அவைகளை இங்கே வந்து நிறுவி நடத்துவதற்குரிய நிபுணர்களையும் அளித்து வருகின்றது.

## ஸோவியத் ரஷ்யாவின் உதவி

1962 ஆகஸ்ட்வரை ரஷ்யாவின் நிதி உதவி ரூ. 380 கோடி. வர்த்தகத்திலும் ரஷ்ய-இந்திய உறவு வளர்ந்து வருகின்றது.

| வருடம் | ரஷ்யாவிலிருந்து இறக்குமதிப் பொருள்களின் மதிப்பு | ரஷ்யாவுக்கு ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பு |
|---|---|---|
| 1959—60 | ரூ. 17,19,00,000 | ரூ. 30,38,00,000 |
| 1960—61 | ரூ. 15,87,00,000 | ரூ. 28,81,00,000 |
| 1961—62 | ரூ. 35,32,00,000 | ரூ. 32,07,00,000 |

நம் மூன்ருவது, நான்காவது திட்டங்களுக்கு மிகுந்த கடன் உதவி செய்யவும், நிபுணர்களை அனுப்

பவும் ரஷ்யா இணங்கியது. இந்தியாவிலிருந்து ஏற்று மதியாகும் பொருள்களில் இந்திய ஆலைகளில் தயாராகும் பொருள்களும் அதிகம். 1964-இலிருந்து இந்தியாவுக்கும் ரஷ்யாவுக்கும் ஏற்பட்ட ஐந்தாண்டு ஒப்பந்தத்தின்படி ஒவ்வோர் ஆண்டிலும் 14 கப்பல்கள் இங்கிருந்து ரஷ்யாவுக்கு நிரந்தரமாகச் சென்றுவர வேண்டியிருக்கும். சுமார் 300 இந்திய மாணவர்கள் ரஷ்யாவில் தொழிற் பயிற்சி பெற்று வருகின்றனர்.

'எம். ஐ. ஜி' விமானங்களை ரஷ்யா இந்தியாவுக்கு அனுப்பியதுடன், அவைகளையும், உரிய ஆயுதங்களையும் இங்கேயே உற்பத்தி செய்ய உதவி புரியவும் இசைந்துள்ளது.

### தன் கையே தனக்கு உதவி

வெளிநாடுகளிலிருந்து கிடைக்கும் உதவிகள் இல்லாமல் நம் திட்டங்களை நிறைவேற்றுதல் எளிதன்று. ஆயினும் அந்த உதவிகளை மட்டும் நம்பி நம் அரசாங்கம் திட்டங்களைத் தயாரிக்கவில்லை. முக்கியமான மூலதனங்களை நம் மக்களே அளித்து வருகின்றனர். மத்திய அரசாங்கமும் ராஜ்ய அரசாங்கங்களும் வரிகளின் மூலம் பெருந்தொகைகள் பெறுகின்றன. கடன் பத்திரங்களின் மூலம் உள் நாட்டில் கடன்கள் வாங்கப் பெறுகின்றன. கடைசியாகக் குறை விழும் தொகை அரசாங்க வரவு செலவுத் திட்டத்தில் கூடுதல் செலவாகக் குறிக்கப் பெறுகின்றது. 1947 இலிருந்து 15 ஆண்டுகளில் நமது மத்திய, மாகாண அரசாங்கங்களின் வருமானம் வருமாறு :

| | | |
|---|---|---|
| மத்திய அரசாங்கத்தின் வருமானம் | ... | ரூ. 8,160 கோடி |
| ராஜ்ய அரசாங்கங்களின் ,, | ... | ரூ. 11,600 ,, |
| பொதுக் கடன் | ... | ரூ. 7,100 ,, |
| மொத்தம் | | ரூ. 26,860 ,, |

1962-63-இல் சீர்திருத்திய செலவுத் திட்டத்தின் படி வருமானம் சுமார் ரூ. 1,500கோடி. 1963-64-க்கு வருமானம் ரூ. 1,835 கோடி எதிர்பார்க்கப்பட்டது.

முதலாவது திட்டக் காலத்தில் மொத்தம் செல விடப்பட்ட மூலதனம் ரூ. 3,360 கோடி; இதில் 46% பொதுத் துறையிலும், எஞ்சியது தனியார் துறை யிலும் முதலீடு செய்யப்பெற்றன. இரண்டாவது திட் டக் காலத்தில் ரூ. 6750 கோடி செலவிடப்பட்ட மூல தனம்; பொதுத் துறையில் 54%; எஞ்சியது தனியார் துறை. மூன்றாவது திட்டக் காலத்தில் ரூ. 10,400 கோடி முதலீட்டுக்கு உத்தேசிக்கப்பட்டது; இதில் பொதுத் துறையில் 61%; எஞ்சியது தனியார் துறை. நான்காவது திட்டத்தில் ரூ. 22,600 கோடி முதலீட் டுக்கும் செலவுக்குமாக ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் பெருந் தொழில்களுக்காக உள்ளது ரூ. 5,600 கோடி, அதாவது மொத்தத்தில் சுமார் கால் பகுதி. இத் தொகை மூன்றாவது திட்டத்தில் ஒதுக்கப்பெற்றதற்கு இரு மடங்காகும்.

**பாரதத்தின் மறுமலர்ச்சி**

திட்டங்களின் மூலம் நாம் நெடுந்தூரம் முன்னேறி வந்துள்ளோம். ஆனால் நாம் இன்னும் செல்லவேண்டிய பாதை மிகமிக நீளமானது. 25 ஆண்டுகளில் ஐந்து திட்டங்களையும் நிறைவேற்றிய பிறகே மக்கள் அவற் றின் பயன்களை முழுதும் தெரிந்துகொள்ள இயலும். ஆயினும், அசோகர் காலத்திலிருந்து இன்றுவரை எக்காலத்திலு மில்லாத வளர்ச்சியை நாடு அடைந் துள்ளது என்பது குருடர்களுக்குக்கூடத் தெரியக் கூடிய விஷயம்.

நாட்டின் முன்னேற்றத்தைப் பற்றி இந்த அதி காரத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளதிலிருந்து நாட் டுப் பாதுகாப்புக்குரிய நம் வலிமை தெளிவாகும்.

உலகில் முன்னணியில் நிற்கும் அமெரிக்கா முதலிய ஐந்து பெரு நாடுகளுடன் போட்டியிட்டுக் கொண்டு நாம் முன்னேறி வருகிறோம். இதுதான் அடிப்படையாக நமக்குத் தேவையான வல்லமை. இதே வேகத்தில் நாம் முன்னேறிக்கொண்டிருந்தால், நாம் எந்தப் பகையையும் வெல்ல முடியும். நம் வலிமையைக்கண்டு பகைவர்களும் தாமாக அஞ்சி ஒதுங்குவர்.

# பாகிஸ்தான்

'இரு தேசிய சமூகக் கொள்கையை நாம் ஒப்புக் கொண்டு மதத்தின் அடிப்படையில் பாகிஸ்தானுக்கு விட்டுக்கொடுத்தால், அதன் பயனாக இந்தியா துண்டு துண்டாய்ப் போய்விடும். அதே கொள்கை உலகம் முழுவதற்கும் கையாளப்பட்டால், தற்கால ராஜ்யம் ஒன்றுகூட எஞ்சியிராது.'

— ஒய். பி. சவான்

---

## பிரிவினையால் வந்த வினை

இந்தியாவின் இடதுபுறத்திலும் வலதுபுறத்திலும் பாகிஸ்தானின் இரு பிரிவுகள் அமைந்திருக்கின்றன. இரண்டுக்கும் இடையில் ஆயிரம் மைல் நீளம் இந்தியப் பூமி இருக்கிறது. இவ்வளவு தூரம் பிரிந்துள்ள இரு பகுதிகளை ஓர் இராஜ்யமாக அமைத்ததே உலகில் பெரிய அதிசயமாகும். இந்தியாவின் சம்மதமில்லாமல் மேற்குப் பாகிஸ்தானிலிருந்து கிழக்குப் பாகிஸ்தானுக்கு நில மார்க்கமாகச் செல்ல முடியாது.

பாகிஸ்தான் ஏற்பட்டதிலிருந்து அதற்கும் இந்தியாவுக்கும் சில விவகாரங்கள் இருந்தன. இந்தியாவுடன் ஒட்டியிருந்த ஜுனாகாட் போன்ற சில சிறு சமஸ்தானங்களைப் பாகிஸ்தான் தன்னுடன் சேர்த்துக் கொள்ள விரும்பியதால், இந்தியா அதைத் தடுத்து

நிறுத்தவேண்டி யிருந்தது. ஆங்கிலேயர் காலத்தில் ஒரே மாகாணமாக விளங்கிய பஞ்சாபை இரண்டாகப் பிரித்து மேல் பகுதியைப் பாகிஸ்தானுக்கு அளித்ததாலும், வங்காள மாகாணத்தில் கீழ்ப் பகுதியை அதற்கு அளித்ததாலும், பாகிஸ்தான் பகுதிகளிலிருந்த இந்துக்கள், சீக்கியர் முதலியோர் லட்சக்கணக்கில் இந்தியாவுக்கு ஓடிவந்தார்கள். பாகிஸ்தான் முஸ்லிம்கள் அவர்களில் பலரை இரவும் பகலும் வதைத்துக்கொண்டிருந்தார்கள். இந்துக்களும் முஸ்லிம்களும் தனியான இரு தேசிய சமூகங்கள் என்ற முஸ்லிம் லீகின் துவேஷப் பிரசாரம், நாட்டைப் பிரித்த பிறகும், நிலைத்து நின்றது. எனவே முஸ்லிம்களின் கொடுமைகளைத் தாங்காமல் 90 லட்சத்திற்கு மேற்பட்ட அகதிகள் தங்கள் வீடு, வாசல், நிலம், கரைகள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, இந்தியாவுக்கு வந்தார்கள். அவர்கள் அனைவரையும் காப்பாற்றி, அவர்களுக்குக் குடியிருப்பு, தொழில் வசதிகள் செய்து கொடுக்க இந்திய அரசாங்கம் பல்லாயிரம் லட்சம் ரூபாய்கள் செலவழிக்க வேண்டியிருந்தது. இந்த வகையில் மொத்தம் ரூ. 420 கோடி செலவாகியுள்ளது.

நம் அகதிகள் மேற்குப் பாகிஸ்தானில் மட்டும் 48 லட்சம் ஏக்கர் விளைநிலங்களையும், ரூ. 500 கோடி மதிப்புள்ள வீடுகளையும், மனைகளையும் விட்டு வந்துள்ளனர். இந்தச் சொத்துக்கள் விஷயமாகப் பாகிஸ்தானுடன் இதுவரை பேச்சு வார்த்தை நடத்திவந்தும், அது ஒரு பைசாகூடக் கொடுக்கவில்லை. சொத்துக்கள் அனைத்தையும் அது தானே எடுத்துக்கொண்டு, அங்குள்ள முஸ்லிம்களுக்குப் பகிர்ந்து கொடுத்திருக்கிறது.

### கால்வாய்கள் பற்றிய தகராறு

நதிகளின் நீரைப் பகிர்ந்துகொள்வதிலும் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் பல ஆண்டுகளாகத் தகராறு இருந்துவந்தது. பஞ்சாப் ஒரே மாகாணமாக இருந்தபொழுது சிந்து நதி, அதன் கிளைகளான ஜீலம், சீனுப், ரவி, பியாஸ், ஸட்லெஜ் ஆகிய நதிகளின் நீரால் மாகாணம் முழுதும் விவசாயம் நடந்துவந்தது. திடீரென்று மாகாணம் இரண்டாக வெட்டப்பட்ட போதிலும், ஆறுகளை வெட்டிப் பிரித்துக்கொள்ள முடியாதல்லவா? ஸட்லெஜ், பியாஸ், ரவி நதிகளின் கால்வாய்கள் இந்தியாவில் தொடங்கினாலும் பாகிஸ்தானிலேயே பெரும்பகுதி ஓடுகின்றன. 25 கால்வாய்களில் இரண்டு மட்டுமே இந்தியாவில் இருக்கின்றன. பஞ்சாபை இரு பிரிவுகளாக்கியதில், இந்தியப் பகுதியில் 50 லட்சம் ஏக்கர் நிலங்களுக்கு மட்டும் பாசன வசதி இருக்கின்றது. பாகிஸ்தான் பகுதியில் 180 லட்சம் ஏக்கர் நிலங்களுக்கு அவ்வசதி இருக்கின்றது. இந்தியப் பகுதியிலுள்ள நிலங்கள் சாதாரணமானவை, பாகிஸ்தான் பகுதியிலுள்ள பஞ்சாப் நிலங்கள் வளம் மிகுந்தவை; பாசன வசதிகள் அதிகமுள்ளவை. சிந்து நதியையும் அதன் கிளைகளையும் பாசனத்திற்காக நம்பியிருக்கும் 850 லட்சம் ஏக்கர் நிலங்களில் 40 லட்சம் ஏக்கர் நிலங்கள் இந்தியப் பகுதியில் இருக்கின்றன. ஆறுகளின் நீரைப் பிரித்துக்கொள்வது பற்றிப்பாகிஸ்தான் நெடுநாளாகப் பூசல் செய்துவந்த போதிலும், 1960, செப்டம்பர் மாதம் 'சிந்து நீர் ஒப்பந்தம்' ஒன்று செய்துகொள்ளப் பெற்றிருக்கிறது.

### நிதி உதவி

பாகிஸ்தான் நம்முடன் பிணங்கி ஓயாமல் தொந்தரவு கொடுத்துவந்த போதிலும், நாம் அதனிடம்

நல்லெண்ணம் கொண்டுள்ளோம் என்பதற்கு அறிகுறியாக, நாடு பிரிவினை செய்யப்படுகையில் அரசாங்கக் கையிருப்புத் தொகையாக மிஞ்சியிருந்த பணத்தில் பாகிஸ்தானுக்கு ரூ. 55 கோடி கொடுக்கப்பெற்றது. இரு ராஜ்யங்களிலும் இந்துக்களும், முஸ்லிம்களும், சீக்கியர்களும் பயமில்லாமல், ஒற்றுமையுடன் வாழ வேண்டும் என்பதற்காக மகாத்மா காந்தி உண்ணுவிரதமும் இருந்தார்.

## சமாதான சக வாழ்வு

இந்தியா அண்டை ராஜ்யமான பாகிஸ்தானுடன் அமைதியாக வாழ்வதற்கு ஆதாரமாக, இரு நாடுகளும் எக்காரணத்தாலும் ஒன்றோடொன்று போர் புரிவதில்லை என்று ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென்று பல சமயங்களில் தெரிவித்துவந்தது. 1949-இல் இந்தியாவிலிருந்த பாகிஸ்தானின் ஹை கமிஷனரிடம் முதலில் இவ்விஷயமாக அறிவிக்கப்பட்டது. அதே ஆண்டில் பிரதம மந்திரி நேரு பாகிஸ்தானின் பிரதம மந்திரிக்குக் கடிதமும் எழுதினார். பின்னும் அவர் 1956-இலும் 1962-இலும் முயற்சிகள் செய்தார். நேருவுக்குப் பின்னால் நம் பிரதம மந்திரி லால் பகாதூர் சாஸ்திரியும் 1964-இல் பாகிஸ்தானின் சம்மதத்தை வேண்டினார். நம் வேற்றுமைகளைப் பொறுமையுடனும், விடாமுயற்சியுடனும் நாம் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று அவர் 1964, ஜூன் 15-ந் தேதி பாகிஸ்தானின் ஜனாதிபதி அயூப்கானுக்குக் கடிதம் எழுதினார். அவ்வாண்டுச் சுதந்தர தினத்திலும் சமாதான உடன்படிக்கைபற்றி அவர் மீண்டும் பேசினார். ஆனால் திமிர் கொண்ட பாகிஸ்தான் இது வரை அதற்கு இடம் கொடுக்கவேயில்லை.

ஆரம்பம் முதலே பாகிஸ்தான் இந்தியாவைத்

துவேஷித்து வருகின்றது. உலகில் அதற்குப் பகை நாடாகத் தோன்றுவது இந்தியா ஒன்றுதான். பாகிஸ்தான் அதிபர்களும் இந்தியாவுக்கு விரோதமாகச் சென்ற 18 ஆண்டுகளாகவே அனல் கக்கிப் பேசி வருகின்றனர். பாகிஸ்தான் பத்திரிகைகள் யாவும் இந்தியாவைப்பற்றிப் பொய்களையும் புரட்டுக்களையும் எழுதித் துவேஷப் பிரசாரம் செய்து வருகின்றன. அங்குள்ள இந்துக்களை அடிக்கடி துன்புறுத்தலும், விரட்டுதலும் இடைவிடாது நடந்துகொண்டேயிருக்கின்றன. பாகிஸ்தான் அமெரிக்காவுடன் நட்புறவு கொண்டு, ஆயுதங்களையும் பணங்களையும் பெற்றுக் கொண்டிருப்பது இந்தியாவைத் தாக்குவதற்காகவே. அது பிரிட்டனுடன் உறவாடுவதும் அதற்காகவே. ஸீட்டோ, ஸென்டோ முதலிய இராணுவக் கூட்டுக்களில் அவைகளுடனும், சில மத்திய ஆசிய நாடுகளுடனும் சேர்ந்திருப்பதும் இந்தியாவுக்கு எதிராகத்தான். இந்தியாவைத் தாக்குவதுதான் அதன் கனவாகவும் நினைவாகவும் இருக்கின்றது. இவைகளுக் கெல்லாம் காரணம் என்னவென்று கேட்டால், 'காஷ்மீர் எங்களைச் சேரவேண்டும்; அங்கே பெரும்பகுதியினராக முஸ்லிம்களே இருக்கின்றனர்' என்று பாகிஸ்தான் தலைவர்கள் கூறிவருகிறார்கள்.

**காஷ்மீர்**

காஷ்மீர் பற்றி முதல் அதிகாரத்திலேயே சிறிது குறித்துள்ளோம். இப்பொழுது இந்தியா-பாகிஸ்தான் விவகாரத்திற்கு அதுவே அடிப்படையாக விளங்குவதால், அதைப்பற்றிச் சற்று விவரமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

ஜம்மு-காஷ்மீர் என்பது இந்தியாவின் வடக்கு எல்லையாக விளங்கும் இராஜ்யம். அதன் பரப்பளவு

84,471 சதுர மைல். அது மூன்று பகுதிகளைக் கொண்டது. எல்லைப்புற மாவட்டங்கள், காஷ்மீர், ஜம்மு ஆகியவை அப்பகுதிகள். அதன் வடகிழக்கில் திபேத்தும், வடக்கில் சீன மாகாணமாகிய ஸிங்கியாங்கும், வடமேற்கில் ஸோவியத் குடியரசான துருக்கிஸ்தானும், ஆப்கானிஸ்தான் நாடும், மேற்குப் பக்கம் பாகிஸ்தானும் இருக்கின்றன. எனவே அதன்மூலம் இந்தியா சீனுவுடனும், ஸோவியத் ரஷ்யாவுடனும், ஆப்கானிஸ்தானுடனும், பாகிஸ்தானுடனும் தொடர்பு கொண்டுள்ளது. எனவே காஷ்மீர் சர்வதேச உறவுமுறையில் எவ்வளவு முக்கியமாக இடம் பெற்றிருக்கிறது என்பது இதிலிருந்து விளங்கும். காஷ்மீர் இராஜ்யத்தில் (1941-ஆம் ஆண்டுக் கணக்குப்படி) 40, 21, 616 மக்கள் இருந்தனர். அவர்களில் முஸ்லிம்கள் 30,73,540 (77·11%) பேர்கள்; இந்துக்கள் 8,07,549 (20·12%) பேர்கள்; கிறிஸ்தவர்கள் 3,079 பேர்கள்; மலைஜாதியினர் 29,374 பேர்கள். முக்கியமாகப் பௌத்த சமயத்தினரைக் கொண்ட பிறர் 1,08,074 பேர்கள். 1957-இல் ஜனத்தொகை 44·1 லட்சம் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது; இப்பொழுது அதிகமாய்க் கூடியிருக்கவேண்டும்.

காஷ்மீரில் முஸ்லிம்களே பெரும் பகுதியினர் என்று பாகிஸ்தான் பறை சாற்றிக்கொண்டிருக்கின்றது. அது உண்மைதான். ஆனல் வரலாற்று முறையாகப் பார்த்தால் காஷ்மீர் இந்துக்களின் நாடேயாகும். காஷ்மீரின் வரலாறே இந்துச் சக்கரவர்த்தியாகிய அசோகர் ஆட்சியிலிருந்துதான் தொடங்குகின்றது. கி. பி. 1339-இல் முஸ்லிம்கள் அங்கே ஆட்சியைக் கைப்பற்றும்வரை அங்கு 28 தலைமுறைகளாக இந்து மன்னர்களே ஆட்சி புரிந்துவந்தனர். 1719-இல் ரஞ்சித்சிங் தலைமையில் சீக்கியர்கள்

அதைக் கைப்பற்றிக்கொண்டனர். கடைசியாக 1947-இல் காஷ்மீர் இந்தியாவுடன் இணைந்துகொண்ட காலத்திலும் அதை ஆண்டுவந்தவர் ஹரிசிங் என்ற இந்து மகாராஜாவேயாவார். முஸ்லிம்களின் ஆட்சிக் காலத்தில் பெரும்பாலான இந்து மக்கள் முஸ்லிம்களாக்கப்பட்டனர்.

காஷ்மீர் முஸ்லிம்கள் நிறைந்த ராஜ்யம், அது பாகிஸ்தானையே சேரவேண்டும் என்று அயூப்கானும், வெளியுறவு மந்திரி பூட்டோவும் அலறிக்கொண்டேயிருக்கின்றனர். சேருவதற்கு ஒரு சட்டம், முறை, காரணம் ஏதாவது இருக்கவேண்டாமா? இந்தியாவிலிருந்த 600-க்கு மேற்பட்ட சமஸ்தானங்கள் 1947-இல் இந்திய ராஜ்யத்திலேயே சேர்ந்துகொண்டன. அதாவது, அவைகளின் அதிபர்களான ராஜாக்களும் மகாராஜாக்களும் சேர இசைந்துவிட்டனர்; இதைப் போலவே காஷ்மீர் மகாராஜாவும் காஷ்மீர் இந்தியாவுடன் சேரும் பத்திரத்தில் கையொப்பமிட்டு, அதைச் சேர்த்துவிட்டார். அத்துடன் மக்களின் கருத்தைத் தெரிவிக்கும் அந்த ராஜ்யத்தின் முதன்மையான தேசிய மகாநாடும், அதன் தலைவர்களும் இசைவு தெரிவித்தனர். அங்கிருந்த யதேச்சாதிகார ஆட்சி முறையை மாற்றி இந்தியா தன் மற்ற ராஜ்யங்களைப் போல அங்கும் ஜனநாயக அரசியலை அமைத்துள்ளது. மூன்று பொதுத் தேர்தல்களும் நடந்துவிட்டன. நிலைமை இவ்வாறிருக்க, காஷ்மீருக்கும் பாகிஸ்தானுக்கும் என்ன சம்பந்தம் இருக்கின்றது?

முஸ்லிம்கள் அதிகமாயுள்ள நாடுகளெல்லாம் பாகிஸ்தானுடன் சேர்ந்து ஐக்கியமாகிவிட வேண்டுமானால், ஆப்கானிஸ்தான், ஈரான், துருக்கி போன்ற நாடுகளையும் பாகிஸ்தான் சேர்த்துக்கொள்ள முயலட்டுமே!

காஷ்மீர் மகாராஜா இந்தியாவுடன் இணைவதா, சுதந்தரமா யிருப்பதா என்று ஆலோசனை செய்து வரும் தருணத்தில்தான் பாகிஸ்தான் ஆயிரக்கணக் கான மலைவாசிகளைச் சேர்த்து, தன் படையினரையும் கூட அனுப்பிக் காஷ்மீர்மீது படையெடுக்கச் செய் தது. அவர்கள் காஷ்மீரின் தலைநகராகிய ஸ்ரீநகர் வரை வந்துவிட்டனர். அப்பொழுதுதான் மகாராஜா இந்தியாவுடன் சேர இசைந்தார். உடனே இந்திய அரசாங்கம் தன் படையினரை விமானங்கள் மூலம் அங்கு அனுப்பி, எதிரிகளை ஓட ஓட விரட்டும்படி ஏற் பாடு செய்தது. அப்பொழுது நம் படையினர் மிகுந்த உற்சாகத்தோடு பாகிஸ்தானின் தலைநகர்வரை சென் றிருப்பர். ஆனால் ஐக்கிய நாடுகளின் தலையீட்டால் நாம் போரை நிறுத்த நேரிட்டது. போரை நிறுத்த வேண்டுமென்றும், பாகிஸ்தானியர் பிடித்து வைத் துக்கொண்டிருந்த 'சுதந்தரக் காஷ்மீர்' என்ற பகுதி யைக் காலிசெய்துவிட வேண்டுமென்றும் ஐ. நா. தீர் மானம் செய்தது. போர் நின்றது; போர் நிறுத்த எல்லையும் வகுக்கப்பெற்றது. இருதிறத்துப் படைக ளும் போர் நிறுத்த எல்லையின் இரு பக்கங்களிலும் நின்றுகொண்டன. 18 ஆண்டுக் காலமாக அப் படை கள் அவ்வண்ணமே நின்று வருகின்றன. ஆனால் பாகிஸ்தான் பிடித்த பகுதியை இதுவரை காலி செய்ய வேயில்லை. போர் நிறுத்தத்தின்போது பாகிஸ்தான் காஷ்மீரிலிருந்து வெளியேறியபின், அங்குப் பொது மக்களின் வாக்கெடுப்பு நடைபெறவேண்டு மென்றும் கூறப்பட்டது. பாகிஸ்தான் வெளியேறவுமில்லை, வாக்கெடுப்புக்கு அவசியம் ஏற்படவுமில்லை.

போரை நிறுத்திய பிறகு ஐ.நா. 18 ஆண்டுக் கால மாகப் பாகிஸ்தானின் ஆக்கிரமிப்புக்குப் பரிகாரம் ஒன்றுமே கூறுமலிருந்துவிட்டது. காஷ்மீரில் போர்

நிறுத்த எல்லை 470 மைல் நீளமுள்ளது. அந்தக் கோட்டுக்கு அப்பாலிருந்து பாகிஸ்தான் படைகள் அடிக்கடி அத்துமீறி உள்ளே நுழைந்து, சுடுவதும், கொள்ளையிடுவதும், கொலைகள் செய்வதும் வழக்கமாக நடந்து வருகின்றன. 1949 ஜனவரியிலிருந்து 1965 ஆகஸ்டுவரை 17 வருடங்களில் பாகிஸ்தான் 6,058 முறை போர் நிறுத்த எல்லைக்கு இந்தப் பக்கம் ஆக்கிரமிப்புச் செய்துள்ளது. மொத்தம் நாட்கள் 6,000.தான். ஆனால் ஆக்கிரமிப்பு 6,058! ஆக்கிரமிப்புகள்பற்றி இந்திய அரசாங்கம் அவ்வப்பொழுது ஐ. நா.வுக்குத் தகவல் கொடுத்துக்கொண்டே வந்துள்ளது.

## கட்ச் ஆக்கிரமிப்பு

மேற்கு இந்தியாவில் குஜராத்தில் கட்ச் மாவட்டம் இருக்கின்றது. அது முன்னால் ஒரு சுதேச சமஸ்தானமாக இருந்தது. அந்தச் சமஸ்தானம் இந்தியாவுடன் இணைந்துவிட்டது. அது கடலோரத்தில் இருப்பதால் சதுப்பு நிலமாகவுள்ளது. பருவக்காலங்களில் அங்குக் கடல்நீர் தேங்கி நிற்பதும் உண்டு. அந்தச் சதுப்பு நிலத்தின் வடகோடியில் சிந்து மாகாணம் இருந்தது. அதற்கும் சிந்துவுக்கும் இடையில் பிரிட்டிஷார் காலத்திலேயே எல்லை தெளிவாக வகுக்கப்பெற்றிருந்தது. எல்லை முழுவதிலும் தூண்களும் நிறுத்தப்பட்டிருந்தன. சிந்து மாகாணம் பாகிஸ்தானுடன் சேர்த்துப் பிரிக்கப்பட்ட பின்பும் முந்திய எல்லைப் பாகுபாடு அப்படியே யிருந்தது. இந்த எல்லைக்கு ஆதரவாகப் பிரிட்டிஷார் தயாரித்துவைத்த தஸ்தாவேஜுகளே ஏராளமா யிருக்கின்றன. எனினும் கட்ச் பாகிஸ்தான் எல்லைக்கோடு சரியானதன்று என்பது பாகிஸ்தானின் வாதம்.

ஆனல் திடீரென்று பாகிஸ்தான் ஏராளமான டாங்குகளுடனும், பீரங்கிகளுடனும், பெரும்படையுடனும் 1965, ஏப்ரல் 24-ந்தேதி காலை 7 மணிக்குக் கட்ச் மீது படையெடுத்து வந்தது. கட்ச் எல்லையில் நமது பக்கத்தில் சில போலீஸ்காரர் மட்டுமே யிருந்தனர். எனவே பாகிஸ்தானின் படை வேகமாக முன்னேறி வந்தது. உடனே நம் படையினர் அங்கே சென்று எதிர்த்து விரட்டத் தொடங்கினர். 'போர், பெரிய போர்!' என்று பாகிஸ்தான் கூக்குரல் எழுப்பிற்று. அப்பொழுது பிரிட்டனில் நடந்த காமன்வெல்த் முதன்மந்திரிகள் மகாநாட்டில் கட்ச் பிரசினை பற்றி ஆலோசிக்கப்பெற்றது. பிரிட்டிஷ் பிரதம மந்திரி திரு. ஹாரோல்ட் வில்ஸனின் முயற்சியால் போர் நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்யப்பெற்றது. எப்படியாவது அமைதி நிலவட்டும் என்று இந்தியா மத்தியஸ்தப் பேச்சுக்கு இசைந்தது.

கட்ச் ஆக்கிரமிப்பு பாகிஸ்தானல் விளையாட்டுக்காகச் செய்யப்பட்டதன்று. பின்னல் ஆகஸ்டு-செப்டம்பரில் அது காஷ்மீர் மீது படையெடுப்பதற்காக நடத்திய ஒத்திகையே அது.

## பாகிஸ்தானின் போர்

காஷ்மீருக்காகப் போர் தொடுக்கவேண்டும் என்று பாகிஸ்தான் முன்கூட்டியே தீர்மானித்துக் கொண்டது. அங்குப் படையெடுத்து, இந்தியத் துருப்புகள் மேற்கொண்டு வடக்கே வராதபடி தடுத்து, முன்பு அங்கே ஆங்காங்கு தங்கியிருந்த துருப்புகளையும் வளைத்துப் பிடித்து அழித்துவிட வேண்டும் என்பது அதன் திட்டம். காஷ்மீரைப் பலாத்காரமாகப் பிடித்துக்கொண்டு, பின்பு வெற்றிக் கொடியுடன் டில்லிவரை ஒய்யார நடைபோட்டுச்

செல்லவேண்டும் என்றும் அது கருதியிருந்தது. ஆனல் இந்த எண்ணங்களை நேரடியாக, வெளிப்படையாக நிறைவேற்றாமல், சதி செய்து முடித்துக் கொள்ள வேண்டும் என்று அது துணிந்தது. மலைவாசிகளையும், 'சுதந்தரக் காஷ்மீர்' என்ற தன்வசமிருந்த பகுதியில் வசித்த மக்களில் பலரையும், பாகிஸ்தானின் பட்டாளத்திலிருந்த வீரர்கள், அதிகாரிகள் பலரையும் ஒன்ருகச் சேர்த்து, சுமார் 5,000 பேர்களுக்குப் பல மாதங்களுக்கு முன்பே பயிற்சி யளித்துவந்தது. ஊர்களுக்குத் தீ வைத்தல், தங்களுக்கு உதவி செய்யாத மக்களைக் கூட்டம் கூட்டமாக வதைத்தல், பாலங்களை உடைத்தல், முக்கியமான தொழிற்சாலைகளையும், மின்சார நிலையங்கள் போன்ற கேந்திர ஸ்தானங்களையும், அரசாங்கக் காரியாலயங்களையும் அழித்தல், மக்களை அச்சுறுத்தி அடக்கிவைத்தல் போன்ற வேலைகளில் தேர்ச்சி பெறும்படி செய்தலே அந்தப் பயிற்சி. பயிற்சியளித்தவர்கள் சீனுக்காரர்கள். இந்த வேலைகளுக்கு வேண்டிய வெடிகுண்டுகள், துப்பாக்கிகள், இயந்திரத் துப்பாக்கிகள், வெடிமருந்து, ஏவுகணைகள், பாகிஸ்தானில் தலைமை நிலையத்திலிருந்து செய்திகளைப் பெறவும், அதற்குச் செய்திகளை அனுப்பவும் ஏற்ற 'டிரான்ஸிஸ்டர்' கருவிகள் முதலியவைகளும் அவர்களுக்கு அளிக்கப்பட்டன. அவர்கள் இருவர், மூவர் என்று சிறு சிறு குழுவினராகப் போர் நிறுத்த எல்லைக் கோட்டைத் தாண்டி, காஷ்மீருக்குள் நுழைந்து, இராஜ்யம் முழுதிலும் தங்கள் நாச வேலைகளை மறைந்திருந்து செய்யவேண்டுமென்று கட்டளையிடப்பட்டது. ஆயிரக்கணக்கான இந்த ஊடுருவிகளைக்கொண்டே காஷ்மீரின் ஆட்சியைக் கவிழ்த்து, இராஜ்யத்தைக் கைப்பற்றிவிடலாம் என்பது பாகிஸ்தானின் சதித்திட்டம். அதாவது ஊடுருவிகளைத்

தொடர்ந்து பெரும் படைகளை அனுப்பித் தன் நோக்கத்தை நிறைவேற்றிவிடலாம் என்பது பாகிஸ்தானின் கருத்து. 1965, ஆகஸ்டு 5-ந் தேதியிலிருந்து அவர்கள் காஷ்மீருக்குள் நுழைந்து வந்தனர்.

ஆனல் பெரும்பாலும் முஸ்லிம்களாயிருத்த காஷ்மீர் மக்கள் அந்த ஊடுருவிகளுடன் ஒத்துழைக்க மறுத்துவிட்டனர். அதற்கு மாருக அவர்கள் ஊடுருவிக் கூட்டங்களை இந்திய இராணுவத்திடமும், போலீஸாரிடமும் காட்டிக் கொடுத்தார்கள். ஊடுருவிகள் பல கிராமங்களுக்குத் தீவைத்தும், மக்களை அழித்தும் கொலைபாதகங்கள் செய்துவந்தார்கள். இந்திய ராணுவ வீரர்கள் மிக வேகமாக அவர்களை எதிர்த்து அழித்தும், சிறைப்பிடித்தும் இடைவிடாமல் போராடினர்கள். அவர்களில் பலர் இறந்தனர். ஏராளமான ஆயுதங்களும், வெடிமருந்தும், ரேடியோ செட்டுகளும், உணவுப்பொருள்களும், அவர்களிடமிருந்து கைப்பற்றப்பட்டன. எஞ்சியிருந்த ஊடுருவிகள் காடுகளிலும் மலைகளிலும் மறைந்திருந்து திடீர் திடீரென்று வந்து அழிவு வேலைகள் செய்துவந்தனர். எனினும் பாகிஸ்தானின் முதல் நோக்கத்தில் மண் விழுந்தது.

பிறகு 1965, செப்டம்பர் மாதம் முதல் தேதியன்று பாகிஸ்தான் 70 டாங்குகளுடனும், பெரும் படையுடனும் காஷ்மீரைச் சேர்ந்த சாம்ப்-ஜாரியன் பகுதியில் படையெடுத்துவந்தது. மாபெரும் உபகண்டமாகிய இந்தியாமீது சுண்டைக்காய் ராஜ்யமான பாகிஸ்தான் போர் தொடுக்க எப்படித் துணிந்தது?

## பாகிஸ்தானின் வலிமை

இந்தியாவுடன் போராடுவதற்கென்றே பாகிஸ்தான் படை அமைக்கப்பெற்றுள்ளது. நிபுணர்களின்

கணக்குப்படி பாகிஸ்தானிடம் இருக்கும் மொத்தம் ஆயுதம் தாங்கிய படைவீரர்கள் 2,53,000 பேர்கள். இவர்கள் ஆறு டிவிஷனுக வகுக்கப்பெற்றுள்ளனர். இந்த டிவிஷன்களில் ஒன்று மட்டும் கிழக்குப் பாகிஸ்தானில் இருக்கின்றது. எல்லைப்புறப் படையில் 25,000 பேர்கள் இருக்கின்றனர். 'சுதந்தரக்காஷ்மீர்' பகுதியில் 20,000 போர் வீரர்கள் இருக்கின்றனர். பாகிஸ்தானின் கடற்படையில் 8,250 நபர்கள் உள்ளனர். பத்துப் பதினைந்து கப்பல்களும் இருக்கின்றன. கடலோரப் பாதுகாப்புக்காக 1,500 பேர்களும் உள்ளனர். விமானப்படையில் 17,000 முதல் 20,000 வீரர் வரை இருக்கின்றனர். 200 விமானங்களும் இருக்கின்றன.

## இரவல் தளவாடங்கள்

1954 முதலே பாகிஸ்தான் அமெரிக்காவிலிருந்து ஏராளமான ராணுவ உதவிகள் பெற்றுவந்தது. பரஸ்பரப் பாதுகாப்பு ஒப்பந்தப்படி இவ்வுதவிகள் அளிக்கப்பெறுகின்றன. பாகிஸ்தானின் 5½ டிவிஷன் படைகளுக்கு நவீன ஆயுதங்கள் முதலியவைகளை அளிப்பதற்கும், மேற்கொண்டு 40,000 வீரர்களுக்குப் பயிற்சியளித்துத் தயாரிப்பதற்கும், படையினர் தங்கும் இடங்களையும், விமான தளங்களையும், வெடிமருந்துக் கிடங்குகளையும் இலவசமாக அமைத்துக்கொடுக்கும் பொறுப்பையும் அமெரிக்கா ஏற்றுக்கொண்டது. பணம் வாங்காமல் அமெரிக்கா பாகிஸ்தானுக்கு அளித்துள்ள கருவிகள், ஆயுதங்களில் முக்கியமானவை வருமாறு: பேட்டன், ஷெர்மன், சேஃபி டாங்குகள் 650; தற்காலப் பீரங்கிகள், இயந்திரத் துப்பாக்கிகள் முதலியவை; நான்குவகை விமானங்களில் 19-

'ஸ்குவாட்ரன்கள்'; ஹெலிகாப்டர்கள் 30; அக்கினிக் குண்டுகள் உள்ளிட்ட பலரக வெடிகுண்டுகள்.

அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்து ஆயுத உதவிகள் கிடைத்திராவிட்டால் பாகிஸ்தான் படையெடுத்திருக்க முடியாது. ஆனால் இந்தியாவுடன் போராடவா அமெரிக்கா ஆயுத உதவி செய்தது? இல்லை. கம்யூனிஸ்ட் சீனாவை எதிர்ப்பதற்காகவும், கம்யூனிஸம் பரவாமல் தடுக்கவுமே உதவி செய்யப்பெற்றது. பாகிஸ்தான், ஆயுதங்களைத் தந்திரமாகப் பெற்றுக்கொண்ட பின்பு, சீனாவுடன் உறவுகொண்டு, இரகசிய உடன்படிக்கைகளும் செய்து கொண்டிருக்கின்றது. சீனாவுடன் சேர்ந்தே அது இந்தியாமீது போர் தொடுக்க ஏற்பாடு செய்தது. அமெரிக்கா ஆயுதங்களை அளிப்பதுபற்றி 1954 முதலே நாம் ஆட்சேபித்து வந்ததில், அவைகள் இந்தியாவுக்கு எதிராக உபயோகிக்கப்படமாட்டா என்று அது உறுதியளித்தது. ஆனால் 1965 போரில் அந்த உறுதி மொழியை அமெரிக்கா காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. பாகிஸ்தானுக்கு உறுதிமொழி, உடன்படிக்கையெல்லாம் வெறும் கழிவுக் காகிதங்களே.

## படையெடுப்பின் பலன்கள்

சாம்ப் பகுதியில் நம் படையினர் பெரும் போர் செய்தனர். அங்கு மட்டும் எதிர்த்துக் கொண்டிராமல், நம் இராணுவம் மேற்குப் பாகிஸ்தானுக்குள்ளும் நுழைந்து, சியால்கோட், லாகூர் பகுதிகளில் கடும் தாக்குதல்களை நடத்தி வந்தது. மொத்தம் 22 நாட்கள் போர் நடந்தது. ஐ. நா. பாதுகாப்புக் கவுன்சிலின் தலையீட்டின் பேரில் செப்டம்பர் 23-ந் தேதி போர் நிறுத்தம் செய்யப்பட்டது. இந்தப் போரில் நம்

படை வீரர்கள் காட்டிய சாகசத்திற்கு அளவேயில்லை. அனல் கக்கிக்கொண்டு வந்த பேட்டன் டாங்குகளை அவர்கள் தகர்த்தெறிந்ததும், பாகிஸ்தானின் பெரிய 'சேபர் ஜெட்' விமானங்களைப் பங்களூரில் தயாரான நம் சிறிய 'நாட்' விமானங்கள் சுட்டுத் தள்ளியதும், நம் ஜவான்களின் அசகாய சூரத்தனங்களும் ஓர் இதிகாசமாகவே எழுதத் தக்கவை. பாகிஸ்தானின் படை வல்லமை மிக்கதுதான். ஆனால் நம் படை அதன் பல்லைத் தட்டிவிட்டது. போரிலும். போர் நிறுத்த நேரத்திலும் பாகிஸ்தான் விமானங்கள் அமிர்தசரஸ் முதலிய நகரங்களின் மீது குண்டுகள் எறிந்து சாதாரண மக்களின் உயிர்களைப் பலி வாங்கியது. ஆனால் நம் விமானங்கள் சார்கோடா, பெஷாவர் முதலிய பாகிஸ்தானின் விமான தளங்களையும், இராணுவ இலக்குகளையும் மட்டுமே தாக்கி வந்தன.

22 நாள் போரில் பாகிஸ்தானின் 472 டாங்குகளும், 75 விமானங்களும் அழிக்கப்பட்டன. போர் ஆரம்பத்தில் பாகிஸ்தானிடம் 104 சேபர் ஜெட் விமானங்களும், 24 வெடிகுண்டு விமானங்களும் இருந்தன. 4,802 பாகிஸ்தான் ஜவான்கள் மடிந்தனர். 450 பேர்கள் சிறை பிடிக்கப்பட்டனர். பாகிஸ்தானில் மொத்தம் 470 சதுர மைல் பிரதேசத்தை நம் படையினர் பிடித்துக்கொண்டனர். சியால்கோட் பகுதியில் 180 சதுர மைலும், லாகூர் பகுதியில் 140 சதுர மைலும், ராஜஸ்தான் பக்கத்தில் 150 சதுர மைலும் பிடிக்கப்பட்டதாக நம் சேனாபதி சௌதரி தெரிவித்திருக்கிறார். பாகிஸ்தான் பஞ்சாபில் 20 சதுர மைல் பிரதேசத்தை மட்டும் பிடித்துக்கொண்டிருக்கிறது. ஜம்மு-காஷ்மீரில் முன்பு பாகிஸ்தான் வசமிருந்த பிரதேசத்தில் டித்வால் பகுதியில் 20 சதுர மைலும், பூஞ்ச் பகுதியில் 200 சதுர மைலும் உள்ள

பிரதேசங்களை நம் படையினர் மீட்டுக் கைப்பற்றிக் கொண்டிருக்கின்றனர்.

இந்த யுத்தத்திலிருந்து பாகிஸ்தான் இந்திய ராணுவத்தின் வல்லமையை நன்ருகத் தெரிந்து கொண்டுவிட்டது. ஆயினும் பாகிஸ்தானை இப்பொழுது ஆள்பவர்கள் உள்நாட்டிலும், அமெரிக்க ஐ. நா. மன்றத்திலும் மேலும் போர்புரியப் போவதாகப் பிதற்றி வருகிருர்கள். மந்திரி பூட்டோ காஷ்மீருக்காக ' 1,000 ஆண்டுகள் ' வேண்டுமாயினும் போரிடத் தயாரென்று கர்ச்சனை செய்து வருகிருர். போரில் தோற்ருேடியவர்கள் இப்படி யெல்லாம் ஏன் பேசுகிருர்கள் ? ஏனென்ருல், அவர்கள் இத்தகைய பேச்சுக்களால்தான் பாகிஸ்தானி மக்களை ஏமாற்றி அடக்கி வைக்க முடியும். அயூப்கான் ஆட்சியில் மக்களின் அவதிகள் பல. நாட்டின் முன்னேற்றத்திற்கான வேலைகளில் ஈடுபடாமல், அயூப் கூட்டத்தினர் இந்தியாமீது பாய்ந்து வெற்றிக் கொடி நாட்டி மக்களை மயக்கி வைக்க எண்ணிஞர்கள். ஆயுதங்களையும், வீரத்தையும், மானத்தையும் களத்திலே இழந்த பின்னும், அவர்கள் மீசையை முறுக்கிக் கொக்கரித்துக் கொண்டிருந்தால்தான் மக்கள் இன்னும் சிறிது காலம் ஏமாந்திருப்பார்கள்.

## இறுதி முயற்சிகள்

போரிலே வெற்றிபெருத பாகிஸ்தான் அரசியலில் சூதாடி வெற்றிபெறலாம் என்று கருதுகின்றது. தன்னிடம் நட்புக் கொண்டுள்ள அமெரிக்காவையும், பிரிட்டனையும் தூண்டி, அது காஷ்மீர் சம்பந்தமாகத் தான் ஏதாவது வெற்றி பெற்றதாகக் காட்டிக் கொள்ள விரும்புகின்றது. வல்லரசாகிய அமெரிக்காவும், பல்லிழந்த கிழவி போன்ற பிரிட்டனும்

அதற்கு ஏற்றபடி தாளம் போட்டு வருகின்றன. விவகாரம் ஐ. நா. பாதுகாப்புக் கவுன்சிலில் நடந்து வருகின்றது. அந்தக் கவுன்சிலின் தீர்மானப்படி முதலில் போர் நிறுத்தப்பட்டுள்ளது. அடுத்தாற்போல் இருதிறத்துப் படைகளும் வாபஸாக வேண்டும். மூன்ருவதாக இந்தியாவும் பாகிஸ்தானும் தம் அரசியல் பிரசினைகளைத் தீர்த்துக் கொள்ளக் கூடிப் பேசவேண்டும். இடையிலேயே கர்ஷ்மீரில் பொது மக்கள் வாக்கெடுப்புக்கு இந்தியா இணங்க வேண்டுமென்று பாகிஸ்தான் தனக்குத் தெரிந்த தந்திரங்களையெல்லாம் பயன்படுத்தி வருகின்றது.

பாகிஸ்தானே இந்தியா மீது படையெடுத்தது என்று அமெரிக்காவோ, பிரிட்டனே, ஐ. நா. வோ இன்னும் வெளிப்படையாகக் கூறவில்லை. கண்முன்பு நடந்த விஷயங்களைக் கூட அவை ஒப்புக்கொள்ள ஏன் மறுக்கின்றன? பாகிஸ்தானுக்கு அநுகூலமாக அவை ஏன் நடந்து வருகின்றன? ஏனெனில் ஒவ்வொரு நாடும் தன் சுயநலத்தையே கவனிக்கின்றது. அமெரிக்காவுக்கு விமான தளங்கள் முதலியவற்றைக் கொடுத்துப் பாகிஸ்தான் அதனுடன் உடன்படிக்கையும் செய்துகொண்டிருக்கிறது. அது பாகிஸ்தானைக் கைவிடவும் விரும்பவில்லை, விமான தளங்களை விட்டுவிடவும் விரும்பவில்லை. பிரிட்டன் பாகிஸ்தான் மூலம் இந்தியாவுக்கு நஷ்டங்கள் ஏற்படுவதை விரும்புகின்றது. ஆதியிலேயே காஷ்மீர் இந்தியாவுடன் சேராமல் தனித்திருக்கச் செய்வதற்கு அது பல முயற்சிகள் செய்து தோல்வியுற்றது. அதனல்தான் இந்தியாவே பாகிஸ்தான் மீது படையெடுத்ததாக அது சிறிது காலம் சொல்லிவந்தது. மற்ற நாடுகளில் பலவும் தத்தம் சுயநலத்திற்காகவே பேசுகின்றன. ரஷ்யா மட்டும் ஆரம்பத்திலிருந்து

இதுவரை ஒரேபடியாக, ஒரே கொள்கையுடன், இந்தியாவை ஆதரித்து நிற்கின்றது.

இந்த விஷயங்களெல்லாம் நமக்கு ஒரு விஷயத்தைக் கற்பிக்கின்றன. நாம் நம்முடைய கால்களிலேயே நிற்கவேண்டும், மிகுந்த வல்லமையோடு விளங்கவேண்டும், பிறரையே எதிர்பார்த்திருக்கக் கூடாது என்பதுதான் அது. வெற்றி பெற்ற நாட்டையே உலகம் மதிக்கும்.

18 ஆண்டுகளாகக் 'காஷ்மீர் பிரசினை, காஷ்மீர் பிரசினை' என்று பாகிஸ்தான் ஓயாமல் கூறி வருகின்றது. அது காஷ்மீர் மீது படையெடுக்காமலிருந்தால், ஒரு பிரசினையுமே கிடையாது. காஷ்மீர் இந்தியாவுடன் இரண்டறக் கலந்துவிட்டது; அது இந்தியாவின் ஒரு மாகாணம். அது இனி வேறு எந்த நாட்டுடனும் சேருவது, அல்லது தனித்துச் சுயேச்சையாயிருப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. ஓர் இராஜ்யத்தைச் சேர்ந்த தனி மாகாணங்களுக்குச் சுயநிர்ணய உரிமை கிடையாது. முன்பு அமெரிக்காவில் மத்திய ஆட்சியை எதிர்த்துக் கிளம்பிய தென் ராஜ்யங்களைப் படைகள் கொண்டு ஜனாதிபதி லிங்கன் அடக்கி ஒடுக்கியது வரலாற்றிலே சிறப்பாக இடம் பெற்றிருக்கிறது. மாகாணங்களின் விஷயம் அந்தந்த நாட்டின் உள் விவகாரமாகும். கடமையும் உரிமையும் ஆகும்.

காஷ்மீரில் முஸ்லிம்கள் பெரும் பான்மையர் என்றால், அவர்கள் தனித்திருக்கவில்லை; இந்தியாவிலுள்ள ஐந்து கோடி முஸ்லிம்களுடன் சேர்ந்துதான் இருக்கின்றனர். ஐந்து கோடி இந்திய முஸ்லிம்களும் மதச்சார்பற்ற இந்திய அரசாங்கத்தின் கீழ் அமைதியுடன் இன்பமாக வாழ்ந்து வருவதை உலகம் அறியும்.

எக்காலத்திலும் காஷ்மீர் இந்தியாவுடனேயே இருக்கும் என்று இந்தியப் பிரதம மந்திரி திரு. லால் பகாதுர் சாஸ்திரி இறுதியாக அறிவித்துவிட்டார். 'பாகிஸ்தான் ஆயிரம் ஆண்டுகள், அல்லது உலகமுள்ளவரை, போராடிக் கொண்டிருக்கட்டும்; அது நம்மிடமிருந்து காஷ்மீரை எடுத்துக் கொள்ள முடியாது!' என்று அவர் 17-10-'65 இல் பம்பாயில் பத்து லட்சம் மக்கள் கூடியிருந்த மகாசபை முன்பு கூறியுள்ளார்.

பாகிஸ்தான் போரில் சீனுவும் கலந்து கொள்ளப் போவதாக நமக்கு எச்சரிக்கை அனுப்பிற்று, ஆனல் எக்காரணத்தாலோ, அது ஒதுங்கி யிருந்துவிட்டது. ஆனல் பாகிஸ்தானின் பக்கபலம் சீனுதான்.

## பாரத நாட்டின் பாதுகாப்பு

'படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண்
உடையான் அரசருள் ஏறு.'*

—திருவள்ளுவர்

---

**உலகம் சுருங்கிவிட்டது!**

மிகப் பெரிதான நமது உலகம் இப்பொழுது சுருங்கி விட்டது எனலாம். அது அளவில் குறையா விட்டாலும், தூரம் சமீபமாகிவிட்டது. கண்டத்திற்குக் கண்டம் சென்று வருதல் எளிதாகிவிட்டது. கடல்களை மக்கள் ஏரிகளைப் போல் வேகமாகத் தாண்டிச் செல்ல வசதியிருக்கின்றது. தபால், தந்தி, தொலை பேசி, கம்பியில்லாத் தந்தி, ரேடியோ, டெலிவிஷன், விமானம் ஆகியவை உலக மக்கள் அனைவரையும் ஒன்று சேர்த்துள்ளன. அணுவின் ஆற்றலையும் பயன் படுத்த நாம் தெரிந்துகொண்டிருக்கிறோம். வான மண்டலத்தில் பல கோளங்களுக்கும் பாய்ந்து செல்ல

---

* படைகள், சிரத்தையுள்ள குடிமக்கள், (உணவுப் பொருளுற்பத்தி, தளவாடங்களுக்கு ஏற்ற) நிதி நிலைமை, நல்ல அமைச்சர்கள், நேச நாடுகள், பாதுகாப்பு அரண்கள் ஆகிய ஆறு அங்கங்களையுடைய அரசன் அரசர்களிலே ஆண் சிங்கம் போன்றவன்.

வும் வழி பிறந்துவிட்டது. தனி நாடுகளும், தனி இராஜ்யங்களும் இனி தனித்தனியாக முன்னேறவோ, பின் தங்கி நிற்கவோ முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது. எந்த நாட்டின் விஷயமும் உலக விஷயமாகின்றது; எந்த மக்களின் நிலைமையும் மனித சமுதாய நிலையாகின்றது. உலக நாடுகளின் பொதுச் சபையாக ஐக்கிய நாடுகளின் சபை அமைந்துள்ளது. அதன் கிளைகள் பல உலக மக்களின் சுகாதாரம், கல்வி, நிதி வசதிகள் முதலியவற்றையெல்லாம் கவனித்து வருகின்றன.

உலகில் மூன்றில் ஒரு பகுதியான நாடுகள், தொழில்கள் பெருகி, செல்வம் கொழித்து வளர்ந்துள்ளன; மூன்றில் இரு பகுதியான நாடுகள், தொழில் வளர்ச்சியின்றி, அறியாமையும் நோயும் பெருகித் தேங்கி நிற்கின்றன. ஐக்கிய நாடுகளின் சபை மேலும் வலுப்பெற்று, மேலும் அதிகாரங்கள் அடைந்து, எல்லாத் துறைகளிலும் உலகை அளாவிய திட்டங்களை மேற்கொண்டு நிறைவேற்ற வேண்டும் என்பது பல அறிஞர்களுடைய கருத்து. இன்றுள்ள நிலையில் எந்தப் போரும் தனித்த சில நாடுகளுக்குள் நீடித்து நடக்க முடியாது, எதுவும் உலகப் போராகவே மூளும். அதே போலச் சில நாடுகள் மட்டும் அமைதியாக வாழவும் முடியாது. சமாதானமும் உலகனைத்திற்கும் பொதுவாகவே நிலவி நிற்கும். மக்களின் ஆரோக்கியம், கல்வி முதலியவையும் அப்படியே.

## அபாயகரமான ஆயுதக் குவிப்பு

இந்நிலையில் 1962-ஆம் ஆண்டில் மட்டும் உலக நாடுகள் போர்த் தளவாடங்களுக்கு 15,000 கோடி டாலர் செலவிட்டிருக்கின்றன. அதே சமயம் ஆக்க வேலைகளுக்கு மிக மிகச் சொற்பமாகவே செலவாகியுள்ளது. உலகில் பெரும் பகுதியினரான மக்கள்

போதிய உணவு, உடை முதலியவைகூடக் கிடைக்காமல் தவித்துக்கொண் டிருக்கும்பொழுது, இத்தனை கோடி டாலர்களை வெடி மருந்துக்கும், குண்டுகளுக்கும், வேறு பல கொலைக் கருவிகளுக்குமாக வீணாகக் கொட்டுவதைக் கண்டு அறிஞர்கள் மனக் கொதிப் படைகின்றனர்.

மேலும் அணுகுண்டுகளும், ஹைட்ரஜன் குண்டுகளும், ஆயிரக்கணக்கான மைல்கள் பாய்ந்து அழிக்கக் கூடிய ஏவுகணைகளும் இப்பொழுது சில பெரிய நாடுகளிலே மட்டும் இருக்கின்றன. போரில் இவைகளை உபயோகிக்க நேர்ந்தால், உலகமே நாசமுறும். மக்கள் மட்டுமின்றி, உயிரினமே அழியவும் கூடும். அத்தகைய நிலையில் மனித சமுதாயம் தானாகவே தற்கொலை செய்துகொண்டு மடியுமா, அல்லது மேலே விவரித் துள்ளபடி உலக மக்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து வாழ்ந்து வளர்ச்சி யடைவார்களா? இந்த இருபதாம் நூற்றாண்டில், நம் காலத்தில், இதற்கு முடிவு தெரியும்.

சர்வநாசம் விளைக்கும் குண்டுகளும், கணைகளும் இப்பொழுது எவர்களுடைய பொறுப்பில் இருக்கின்றன? சில அரசியல் தலைவர்களுடைய காப்பில் இருக்கின்றன. வல்லரசுகள் அமெரிக்காவின் தலைமையிலும், ரஷ்யாவின் தலைமையிலும் இரு பிரிவுகளாக நிற்கின்றன. இரண்டு முகாம்களிலும் உலகை அழிக்கும் ஆற்றலுள்ள ஆயுதங்கள் பெருக்கமா யுள்ளன. இதுவரை அவைகளை அந்த முகாம்கள் ஏன் உபயோகிக்கவில்லை? உலகமே நாசமுறும் என்ற ஐயத்தினால்தான் உபயோகிக்கவில்லை. சுருக்கமாய்ச் சொன்னால், அணுகுண்டு முதலியவற்றின் ஆற்றலே அவைகள் பயன் படாமல் தடுத்து வைத்திருக்கின்றது. இந்தத் தடுப்புக்கும் ஓர் எல்லையுண்டு. இதை நம்பி உலக சமா

தானம் நிலைத்திருக்கும் என்று கனவு காண இயலாது. தாங்க முடியாத வேதனையினுலோ, ஆத்திரத்தினுலோ, வேறு வழியின்றியோ ஒரு கூட்டம் அவைகளை உபயோகித்தால், சில நிமிட நேரத்தில் எதிர்க் கூட்டமும் அவைகளைப் பயன்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, போதிய காரணங்கள் இல்லாமலே, அவைகள் தவறுதலாகவும் உபயோகமாகி விடக்கூடும். அணு ஆயுதங்களையும், மற்றப் போர்க் கருவிகளையும் ஒழிப்பதற்குப் பல நாடுகளும் சம்மதித்து, தத்தம் படைகளையும் கலைத்துவிட முன் வந்தால்தான், உலக அமைதி நிலைபெறும். உள் நாட்டு அமைதிக்கு வேண்டிய பாதுகாப்பைத் தவிர, வெளி நாடுகளிடையே அமைதியைக் காக்கச் சர்வதேசப் போலீஸ் படை ஒன்றே போதும் என்பது அறிஞர்களின் கருத்து. இக் கருத்து எப்பொழுது நிறைவேறும் என்பதை எவரும் யூகித்துச் சொல்ல இயலவில்லை. ஆனுல் மனித சமூகம் வாழ்வதற்கு இதைத் தவிர வேறு வழியுமில்லை.

## அணு ஆயுதங்களும் மாமூலான போர்க் கருவிகளும்

இந்த நிலையில் நம் பாரத நாட்டின் பாதுகாப்பைப் பற்றிக் கவனிப்போம். இக் காலத்தில் தற்காப்புக்குத் தேவை யென்று கருதக்கூடிய அமிசங்களிலே பலவும் இங்கே இருக்கின்றன. பல அரங்கங்களிலே நின்று போராடவும், படைகள் சுற்றி வளையவந்து வெவ்வேறு முனைகளில் தாக்கவும், சில பகுதிகள் எதிரி வசமானுலும், மற்றப் பகுதிகளில் வல்லமையைப் பெருக்கிக்கொள்ளவும் விசாலமான பெரிய நாடுகளே தற்காப்புக்கு ஏற்றவை. இந்தியா அத்தகைய நாடு. படைகள் நிறுவவும், எந்த நிலையிலும் அவைகளுக்குத் தேவையான பொருள்களை அனுப்பிக் கொண்டிருக்க

வும், நாட்டினுள்ளே ஆங்காங்கு பாதுகாப்பு அணிகள் வகுத்து நெடுநாள் தாக்குப்பிடிக்கவும் மக்கள் தொகையும் அதிகமா யிருக்கவேண்டும். அதிலும் இந்தியாவில் குறைவில்லை. மற்றும் இக்காலத்துப் போரில், பெரிய கனரகத் தொழில்கள், மக்களுடைய உபயோகத்திற்கான பொருள்களை உற்பத்தி செய்து குவிக்கக்கூடிய ஆலைத் தொழில்கள் முதலியவை பெருகிய நாடே நீடித்து நின்று வெற்றிபெற முடியும். நம் நாடு இந்த வழியிலும் வேகமாக முன்னேறி வருகின்றது. நம் நாட்டிற்குத் தேவையான படைகள், கருவிகள், தளவாடங்கள், விமானங்கள், போர்க் கப்பல்கள், பாதுகாப்பு அமைப்புக்கள், தளவாட உற்பத்திக்குரிய புதிய தொழிற்சாலைகள் ஆகியவை பற்றி யெல்லாம் பெரிய நிபுணர்களே ஆராய்ந்து கூற முடியும். அத்தகைய ஆராய்ச்சிகள் நடந்திருக்கின்றன. அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய நாடுகளிலிருந்து இராணுவக் குழுக்கள் வந்து பார்த்துச் சென்றுள்ளன. நம் நிபுணர்களும் அவைகளுடன் கலந்து விரைவிலே முடிவு செய்து வருகிறார்கள். ஆனால் பொது மக்கள் தெரிந்துகொண்டு சிந்திக்க வேண்டிய சில முக்கியமான விஷயங்களை மட்டும் இங்கே குறிப்பிடுதல் அவசியம்.

நாட்டுப் பாதுகாப்பு விஷயத்தில் நம்முடைய உண்மையான நிலைமை என்ன? நம்மிடம் அணு ஆயுதங்களில்லை. பிறர் கொடுத்தால் சிலவற்றை வாங்கிக்கொள்ளலாம் என்பதைத் தவிர, வேறு எளிதான வழி எதுவுமில்லை. தற்காலப் போருக்கு அணு ஆயுதங்கள் இன்றியமையாதவையா என்றால், இல்லையெனலாம். அணு ஆயுதங்கள் எதிரிகளுக்குப் பெரிய எச்சரிக்கையாகப் பயன்படுகின்றனவே யன்றி அவைகளால் மட்டுமே போரில் வெற்றி தோல்விகளைத் தீர்மானிக்க முடியாது. முடியுமானால், பெரிய வல்லரசு

கள் கோடி கோடியாய்ச் செலவு செய்து நிலப்படை, கடற்படை, விமானப் படைகளையும் வைத்துக்கொண்டிருக்கும் காரணம் என்ன? இதைப் புரிந்துகொண்டால், அணு ஆயுதங்கள் முதற் கருவிகளாகவும், கடைசிக் கருவிகளாகவும் பயன்படலாமே யன்றி, பெரும்பாலான சண்டைகள் முற் காலத்தைப்போல் போர் வீரர்களாலேயே முடிவு செய்யப் பெறவேண்டும் என்பது தெளிவாகும். முதலில் அணு ஆயுதங்களினால் வெற்றி பெற்ற நாடும் பின்னும் பல நாள் நிலத்திலும், நீரிலும், வானிலும் போராடியே இறுதியான வெற்றிபெற முடியும். ஆகவே அணு ஆயுதங்கள் இல்லாதபோதிலும், நாம் மற்றைப் படைகளைக் காலத்திற்கு ஏற்ற நிலையில், ஏற்ற அளவில், நிறுவிக் கொள்ளல் அவசியமாகின்றது.

## கம்யூனிஸ்ட் சீனு கற்பித்த பாடம்

1962-ஆம் வருடத்திய சீனப் படையெடுப்பு நம் கண்களை நன்ருகத் திறந்து வைத்துவிட்டது. இந்த விழிப்பு ஏற்பட்டிராவிட்டால், இன்னும் நெடுங்காலம் நாம் துயில் கொண்டிருப்போம். பின்ஞல் மீளமுடியாத பெரிய அபாயங்களில் நாம் சிக்கி யிருக்கும்படி நேர்வதைச் சீனப்போராட்டம் தவிர்த்துள்ளது எனலாம். கனவு உலகத்திலிருந்து பிரத்தியட்ச உலகுக்கு நம்மைக் கொண்டுவந்து சேர்த்தது அதுவேயாகும்.

சீனப் படை யெடுப்பினுல் பாரதப் பொது மக்களுக்கு நாட்டுப் பாதுகாப்பில் அதிக அக்கறை ஏற்பட்டுள்ளது. பஞ்சசீலக் கொள்கையே பேசிக்கொண்டிருந்த நம் அரசாங்கத்திற்கு, ஒருதலைப் பஞ்சசீலம் அபாயமானது என்றும், இருதிறத்தாரும் உண்மையாக அக்கொள்கையைக் கடைப்பிடிக்காவிட்டால், முடிவு போர்தான் என்றும் அது அறிவுறுத்தியுள்ளது.

பொதுவாகப் போர் வாசனையே இல்லாத 'சாதுக்க' ளான இந்திய மக்களையும் போர் வெறிகொள்ளச் செய்துள்ளது. பாதுகாப்பெல்லாம் சரியா யிருக்குமென்று எச்சரிக்கைக் குறைவா யிருந்த பார்லிமென்டும், மற்றச் சட்ட மன்றங்களும் விழிப்படையச் செய்ததும் அதுதான். தன் நிலையைச் செம்மையாக நிலைநிறுத்திக் கொள்ளாமல், இந்தியா, உலக சமாதானம் பற்றியும், மூன்றாவது உலகப் போர் தோன்றி விடாமலிருக்க வேண்டுமே என்பது பற்றியும் கவலை கொள்வது வீணென்றும் அது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாக்கி விட்டது. அடுத்த உலகப் போரைத் தடுத்து நிறுத்தும் பொறுப்பை ஆண்டவன் இந்தியாவின் தலைமீது மட்டும் சுமத்தி யிருக்கவில்லை!

சீனப் போராட்டத்தினால் நம் நண்பர்கள் எவர்கள், பகைவர்கள் எவர்கள், இந்தியாவின் உதவிகளை முன்னால் பெற்றுக் கொண்டு, ஆபத்து வேளையில் அதற்கு அநுதாபம்கூடக் காட்டாதவர்கள் எவர்கள் என்பதையெல்லாம் நாம் கற்றுக் கொண்டிருக்கிறோம். நமது உண்மையான நிலையை நாம் உணர்ந்து, நம் குறைகளை நீக்கிக்கொள்ள வாய்ப்பு ஏற்பட்டிருக்கின்றது. முன்னால் நம் உதவியையும், அநுதாபத்தையும் பூரணமாகப் பெற்றிருந்த சீனாதான் முதுகுப்புறமாக நம்மைக் குத்தியது. நம் உதவிகளைப் பெற்று வந்த சுகர்ணோக்களும், நக்ருமாக்களும், சிரிமாவோக்களும், 'சீனாதான் அக்கிரமமாகப் படையெடுத்தது!' என்று கூடச் சொல்லத் துணியவில்லை. பாண்டுங் மகாநாட்டிலும், மோஷி மகாநாட்டிலும் 'ஆப்ரோ-ஆசிய நாடுகள்' என்று நாம் உறவு கொண்டாடிய நாடுகளிற் பலவும் மௌனமா யிருந்துவிட்டன. பொதுவாகவே நம் அண்டை நாடுகள் சிலவற்றிடம் நம்மீது அன்போ, மதிப்போ இல்லையென்பதை நாம் நினைவில் கொள்ளு

தல் நலம். சிறிய தீவான இலங்கை அங்கு குடியேறி யுள்ள இந்திய மக்களுக்குப் பலவிதத்தில் இடையூறு செய்யத் தயங்குவதில்லே. பர்மா அங்கு ஏராளமான நிலங்களேப் பெற்றிருந்த நம் மக்களிடமிருந்து அவை களேப் பிடுங்கிக்கொண்டு, அவர்களே விரட்டிவிட்ட தோடு, நம்மிடம் விசேடமான அன்பு கொண்டிருப்ப தாகவும் தெரியவில்லே. ஜப்பானே நாம் முன்பு பல முறை கண்டித்து வந்தோம். அந்நாடும் சீன ஆக்கிர மிப்பை வன்மையாகக் கண்டிக்க முன்வரவில்லே. இந்தோனீஷியாவில் மிகப் பெரிய கம்யூனிஸ்ட் கட்சி இருக்கிறது; சீனர்களும் பலர் உளர். அந்நாடு சீன அநுதாபமுள்ள நாடாகியிருந்து, சீனுவின் கைக்கருவி யாகிவிட்டது. அது தாளுகச் சீனுவின் வாய்க்குள் போகிறதா, அல்லது சீனுவே அதை விழுங்குகிறதா என்பதைத்தான் இனி பார்க்க வேண்டும். அமெரிக் காவும், பிரிட்டனுமே ஆபத்து வேளேயில் முன்வந்து நம் மானத்தை ஓரளவு காப்பாற்றின; சில பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளும் நேசப்பான்மையுடன் உதவி யளித்தன. இந்தியா முழுதும் 'திக்குவிஜயம்' செய்து விட்டுச் சென்ற குருஷ்சேவின் ஸோவியத் ரஷ்யா நம் முடன் சேராவிட்டாலும், சீனுவுடன் சேராமலிருந் ததே நம் பாக்கியம்தான்!

## இந்திய வெளிநாட்டுக் கொள்கைகள்

இந்த நிலேயில் இந்தியா உடனேயே அமெரிக் காவைத் தலேமையாகக்கொண்ட வல்லரசுக் குழுவுடன் சேர்ந்துவிட வேண்டும் என்று நம்மில் ஒரு கூட்டத்தார் கூறுகின்றனர். அமெரிக்காவுடன் சேர்ந்தால், மீண்டும் சீனு நம் நாட்டின்மீது படையெடுக்கவே அஞ்சும் என்பதும் உண்மைதான். இந்தியாவை அமெரிக்கா வுடன் சேரும்படி செய்வதே சீனுவின் நோக்கமாயிருந்

தால் அந்த நோக்கத்தை நாமாகவே நிறைவேற்ற வேண்டுமா என்ற கேள்வி எழும். அமெரிக்காவுடன் சேர்ந்தே தீரவேண்டும் என்று இடைவிடாமல் செல்லிக்கொண்டிருக்கும் சிலருக்கு, போரில் வெற்றி தோல்விகள் ஒருபுறமிருக்க, முதலில் இந்தியாவில் கம்யூனிஸமோ, ஸோஷலிஸமோ இல்லாமல் ஒழிவதற்கு அது ஏற்றவழி என்பதும் இலட்சியமாயிருக்கும்.

சீனுவைத் தவிர, ரஷ்யாவும், கிழக்கு ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகளும் நமக்கு விரோதமாக இல்லை; சீனுவின் போக்கையும் போர் வெறியையும் அவைகள் கண்டித்திருக்கின்றன. அவைகளுடன் ஆண்டுதோறும் நமக்குப் பொருளாதாரத் தொடர்பு அதிகரித்து வருகின்றது. சில நாடுகள் நம் தொழில்களை நிறுவுவதற்கு நிபுணர்களை அனுப்பியும் உதவிவருகின்றன. இவைகளைக் கைவிட்டுவிட்டு, நாம் எதிர் வல்லரசுக் குழாத்துடன் ஒரேயடியாய்ச் சேர்ந்துவிடுவது நலமா? எது எப்படியிருந்தாலும், இந்தியா ஏதேனும் வல்லரசுக் குழாத்துடன் சேருவதா யிருந்தால் அது அமெரிக்கக் குழாமாய்த்தான் இருக்கவேண்டுமென்று பலர் கூறுவர். ஏனெனில் அமெரிக்காவும், மேலை நாடுகளுமே இந்தியாவைப் போன்ற ஜனநாயகக் கொள்கையுள்ளவை. இந்தியாவுக்கும் மேலைநாடுகளுக்குமே அதிகத் தொடர்புண்டு. அமெரிக்காவின் நட்பையும் ரஷ்யாவின் நட்பையும் விடாமலிருப்பதே இந்தியாவுக்கு நலம்.

சீனு இந்திய எல்லைப்புறத்தில் போர் தொடங்கியவுடன், முதற் களபலியாகச் சுட்டுவீழ்த்தப்பட்டது கம்யூனிஸம்தான். சத்தியமே போரில் முதற் களபலியாகும் என்று ஆங்கிலத்தில் சொல்லுவதுண்டு. சத்தியம் என்பது கம்யூனிஸ்ட் சீனுவின் அகராதியிலேயே இல்லாத ஒன்று. ஆதலால் கம்யூனிஸத்தையே அது சுட்டுத் தள்ளிவிட்டது எனலாம். இதையே நமது

புதிய பாதுகாப்பு மந்திரி திரு. சவான், முதற் களபலி 'மார்க்ஸிஸம்-லெனினிஸம்' என்று வேறு மொழியில் சொல்லியிருக்கிறார். இதுவரை இந்தியாவில் பல படிப்பாளிகளும், தீவிரவாதிகளும், தத்துவ பூர்வமாகக் கம்யூனிஸம் பற்றிப் படித்தும், பேசியும் வந்தனர். சீனப்படையெடுப்பைப் பார்த்ததும், நடைமுறையில் கம்யூனிஸம் என்ன என்பதைக் கண்டு, அவர்கள் வெறுப்படைந்து விட்டனர்.

நமது வெளி நாட்டுக் கொள்கையை அநுசரித்தே நம் பாதுகாப்பும் அமையும் என்பதால், நாம் உறவு கொள்ள வேண்டியவர்களையும், விட்டு நீங்க வேண்டியவர்களையும் பற்றி மேலே கூறப்பட்டது. அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் பொதுவான அடிப்படைகள் பல இருக்கின்றன. இரண்டும் ஜனநாயக முறையிலுள்ள அரசாங்கங்களைப் பெற்றிருக்கின்றன. கீழ்த்திசையிலும், தூரக் கீழ்த் திசையிலும் கம்யூனிஸ்ட் சீனு மேலோங்கி வளர்ந்தால், உலகுக்கே தீங்கு அதிகரிக்கும் என்பது இரண்டுக்கும் பொதுவான கொள்கை. இந்தியாவின் தொழிற் பெருக்கத்திற்கு அமெரிக்கா பெரும் பொருளை வழங்கியிருப்பதோடு, நிபுணர்களையும் அனுப்பியுள்ளது. இந்தியப் பாதுகாப்புக்கு உடனடியாகத் தேவையான விஷயங்களிலும், பின்பு நிரந்தரமாகத் தேவைப்படும் விஷயங்களிலும், அமெரிக்கா அநுதாபத்துடன் அக்கறையும் கொண்டுள்ளது. கிழக்கே இந்திய நாடு வல்லமை பெற்று விளங்கினால்தான், சீனுவைச் சமாளித்து நிறுத்த முடியும் என்பது அமெரிக்காவின் நம்பிக்கை. சீனுவின் கை ஓங்கிவிட்டால், அமெரிக்காவுக்கும் நஷ்டம்தான்.

இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் உள்ள வேற்றுமை ஸோஷலிஸம் ஒன்றுதான். ஆயினும் நாம் 'ஸோஷலிஸம்' என்ற பெயரில் செய்யும் சில காரியங்கள்

அமெரிக்காவிலும், பிறநாடுகளிலும், அந்தப் பெயர் இல்லாமலே நடந்திருக்கின்றன. அமெரிக்கா தொழில் வளம் பெருகிய நாடு. இந்தியா புதிதாகத் தொழில் வளர்த்து வரும் நாடு. இங்கு ஏழைகள் அதிக ஏழைமையில் அழுந்திவிடாதபடியும், செல்வர்கள் மட்டுமே மேலும் செல்வத்தைப் பெருக்கிக் கொண்டிராதபடியும், வெகு வேகமாகத் தொழில்களைப் பெருக்கி உற்பத்தி செழிக்கும்படியும் செய்வதற்கு ஸோஷலிஸம் இன்றியமையாததாகும். இதை ஓரளவு முக்கியமான அமெரிக்க அரசியல்வாதிகளும் அறிந்திருக்கின்றனர். மேலும் ரஷ்யா முதலிய கம்யூனிஸ்ட் நாடுகளுடன் இந்தியா உடனே உறவுகளை அறுத்துக்கொள்வதும் நலமில்லையென்று அவர்களிலே பலரும் ஒப்புக்கொள்கின்றனர்.

இதுவரை இந்தியா நடுநிலைமைக் கொள்கை—அதாவது கட்சி சேராக் கொள்கையைக் கடைப்பிடித்து வந்தது. ஆனால் சீனப் படையெழுச்சி காரணமாக ஒரு கட்சியிடம் கை நீட்டி ஆயுதங்களைப் பெற்றுகி விட்டது; இன்னும் பெறப் போகின்றது. மேலும் சீனு, தனக்கு நட்பா யில்லாத நாடு விரோதிதான் என்று, ஆயுதம் தாங்கித் தாக்கவும் முற்பட்டது. 'இனியும் என்ன நடுநிலைக் கொள்கை?' என்பது முறையான கேள்விதான். ஆயினும் பூரணமாக ஒரு கட்சிச் சார்பாக இறங்குவதைப் பார்க்கினும், இந்தியா போன்ற சில நாடுகளாவது தனித்திருந்தால், உலகப் போரைத் தடுக்க முயலலாம் என்றும், போர் தோன்றிவிட்டால் அதை நிறுத்த உதவலாம் என்றும் நம் பிரதமர் நேரு நெடுங்காலம் நம்பி வந்தார். இத்துடன் ஒரு கட்சியுடன் இரண்டறக் கலந்துவிடுவதால், ஆயுத உதவிகள் பெறுவது மட்டுமின்றி, நம் நாட்டிலே பிற நாட்டாருடைய விமான தளங்களும்,

போர்ப் படைகள் தங்கு மிடங்களும் அமைக்க நேரும். நம் வெளிநாட்டுக் கொள்கையும், ஓரளவு உள்நாட்டுக் கொள்கையும், அக்கட்சியின் நோக்கத்திற்கே இசைவாயிருக்கும்; நம் நோக்கப்படி அவைகளை வைத்துக் கொள்ள இயலாமற் போகும் என்றும் நேரு அஞ்சினர். அமெரிக்காவோ, பிரிட்டனே, 'எங்களுடைய இராணுவ முகாமில் சேர்ந்தால்தான் உதவி செய்வோம்' என்று சொல்லவுமில்லை. அவைகள் செய்கிற உதவிகள் யாவும் நம் எல்லோருடையபொது விரோதியை ஒழிப்பதற்கே பயன்படும் என்பதை அவைகளும் நன்குணர்ந்திருக்கின்றன. ரஷ்யா முதலிய ஐரோப்பியக் கம்யூனிஸ்ட் நாடுகளும் இந்தியா அமெரிக்கக் குழாத்துடன் ஒரேயடியாக இணைந்து விடாமாலிருப்பதில் சிரத்தை கொண்டுள்ளன. உலகின் இரு வல்லரசுக் குழாங்களில் ஒவ்வொன்றும் இந்தியா எதிர்க் குழாத்துடன் சேர்ந்துவிடாமல் இருக்கவேண்டுமே என்பதில் சிரத்தை கொண்டிருக்கின்றது. இந்த நிலை நமக்கு ஒரு வலிமையாக விளங்குகின்றது.

இனி நம் இராணுவ வலிமை பற்றிப் பார்ப்போம். போரில் சீனவுடன் நாம் எதிர்த்து நிற்க முடியும், அது நம்மிடம் பறித்துக் கொண்டுள்ள பிரதேசங்களையும் நாம் திரும்பப் பிடித்துக் கொள்ள முடியும் என்று நாம் நம்புகிறோம். நாட்டில் ஏற்பட்டுள்ள தேசிய உணர்ச்சி வெள்ளத்தை நல்ல முறையில் நாம் பயன்படுத்திக் கொண்டால், விரைவிலே நாம் நமது இலட்சியத்தை அடைய முடியும். ஆனல் சீனவுக்குப் பதிலாக ஸோவியத் ரஷ்யா படையெடுப்பதாக வைத்துக் கொண்டால், நாம் சமாளித்து வெற்றி காண்பது கடினம். ஏனெனில் ரஷ்யா அவ்வளவு வல்லமை பெற்றுள்ள நாடு; அதன் இராணுவம் நவீன வசதிகள், ஆயுதங்கள் அனைத்தையும் பெற்றுள்ளது. சீனவுடன்

ரஷ்யாவும் சேர்ந்து நம்மை எதிர்த்தால், அது நமக்கு மேலும் பலவீனமான நிலை. ரஷ்யா எதிர்த்து வந்தாலும், சீனாவுடன் வேறொரு வல்லரசு சேர்ந்து வந்தாலும், நாம் வெளிநாட்டாரின் உதவியையே நாட வேண்டியிருக்கும். அந்த உதவி வந்து சேரும்வரை, எதிரியை நாம் மடக்கி வைத்துக் கொண்டிருக்க மட்டும் முடியும். எந்த நாடும் தனியே நின்று ஒரு வல்லரசையோ, கூட்டுச் சேர்ந்துவரும் பகைவர்களையோ எதிர்த்து வெல்ல இக்காலத்தில் இயலாது; பிறநாடுகளின் உதவி ஒவ்வொரு நாட்டுக்கும் அவசியம். போர்களில் எப்பொழுது என்ன நேருமென்று முன்னதாக எதிர்பார்க்க முடியாததால், உண்மையாக நமக்கு உதவக் கூடிய நாடுகளை இனி நாம் உதாசீனம் செய்யக் கூடாது. அவைகளோடு இப்பொழுதே அந்தரங்கமான சில ஏற்பாடுகளையும் செய்துகொள்வதுதான் அறிவுடைமையாகும். கோட்டைக்குள் எதிரி புகுந்துவிட்ட பிறகு துருப்பிடித்த வாள்களைத் தேடிப்பிடித்துப் பயிற்சி செய்யத் தொடங்குவது போன்ற செய்கைக்கு இனி இடமிருக்கக் கூடாது. நண்பர்களைத் தூற்றுவதும், பகைவர்களை ஆர்வத்தோடு அணைத்துக் கொள்வதும் ஒழியவேண்டும் என்பது கம்யூனிஸ்ட் சீனா நமக்குக் கற்பித்த முதற் பாடம். மொத்தத்தில், பலகோடி மக்கள் வாழும் பாரத நாட்டைப் போன்ற மாபெரு நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்புடைய பீடத்திலுள்ளவர் ஒவ்வொருவரும், இதய உணர்ச்சியின் வசப்பட்டு முடிவுகள் செய்யாமல், ஆழ்ந்த அறிவையும் பயன்படுத்தி ஆராய்ந்தே செய்ய வேண்டும்.

## தற்காலப் போர்முறைகள்

மனித சமூகம் மாறுவதற்கு ஏற்ப, போர் முறைகளும் மாறிக்கொண்டே வருகின்றன. விஞ்ஞானம்

வளர வளர, போர்க் கருவிகளும் வளர்ந்து வருகின்றன. முற்காலத்தில் போர் என்றால், சில தளபதிகளும், படைகளுமே கவனித்துக்கொள்ளும் விஷயமா யிருந்தது. இந்த நிலைமை யெல்லாம் மாறி, இக்காலத்தில் ஒவ்வொரு நாட்டிலுமுள்ள மக்கள் சமுதாயம் முழுதுமே போரில் ஈடுபடும்படி நேர்ந்திருக்கிறது. யுத்த காலத்திற்கேற்ற ஆட்சி, சட்டம், பொருளுற்பத்தி முதலிய யாவுமே தனியாக உள்ளன. போர்க்களங்களிலே மட்டும் குண்டுகள் வெடிப்பது மாறி, இக்காலத்தில் பெரிய நகரங்கள், தொழிற்சாலைகள் நிறைந்த பிரதேசங்கள், ஆயுதச்சாலைகள், அரசாங்கத் தலைமைக் காரியாலயங்கள் முதலியவைகளி லெல்லாம் குண்டுகள் வீசப்படுகின்றன. போர்க்கருவிகளும் எண்ணற்ற வகைகளாகப் பெருகியுள்ளன. துப்பாக்கிகள், குண்டுகள், அணுகுண்டுகள் முதலியவற்றோடு, நச்சுக் காற்று, விஷக் கிருமிகளைப் பரப்பிச் சமூகத்தையே நிர்மூலமாக்கும் விஞ்ஞானப் படைப்புக்கள் முதலியன இராணுவத்தார்களுக்கு உதவியாக வந்துள்ளன. நிலத்திலும், நீரிலும், நீரினுள்ளும், வானவெளியிலும் எதிரிகள் வருவதால், இவை எல்லாவற்றையும் பாதுகாத்துக் கொள்ளும் வழிவகைகளை மக்கள் கண்டுபிடித்துக் கையாண்டு வருகின்றனர். இந்த நிலைமையும் இப்பொழுது மாறியுள்ளது. ஆளில்லாமல், வாகனமில்லாமல், ஏவுகணைகள் கண்டங்களையும் கடல்களையும் தாண்டிவந்து அழிக்கக் கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. இதை எதிர்த்து நிற்கக்கூடிய வழிகள் போதிய அளவில் இன்னும் கண்டுபிடிக்கப் பெறவில்லை.

அணுகுண்டுகள் முதலியவை பற்றி மேலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தக் கருவிகள் வந்தபிறகு, வீட்டில் ஒரு பொத்தானை அழுத்தினால் மின்சார விளக்குகள் எரிவதுபோல், ஒரு பொத்தானை அழுத்தியே

யுத்தம் நடத்திவிடலாம் என்ற அளவுக்கு விஞ்ஞானம் மனிதனுக்கு வசதி செய்துள்ளது. ஆயினும் இந்தக் கருவிகளை வைத்திருக்கும் இடத்தில், 'இவைகளின் உபயோகம் இவைகளை உபயோகிக்காமல் இருக்கும் வரைதான்' என்று எழுதி ஒட்டிவிடலாம். ஒரு பக்கத்தார் உபயோகிக்கத் தொடங்கினாலும், உலக நாசம் நெருங்கிவரத் தொடங்கிவிடும். அணுகுண்டு சகாப்தம் தொடங்கி, 1965, ஜூலை 16-ந்தேதியுடன் 20 ஆண்டுகள் முடிந்து, 21-ஆவது ஆண்டு துவங்கியுள்ளது.

அணு ஆயுதங்களல்லாத மற்ற மாமூலாக உபயோகிக்கப்பெறும் ஆயுதங்களும் எல்லா நாடுகளிலும் நிலைத்திருக்கின்றன. விஞ்ஞான வளர்ச்சிக்குத் தக்கபடி அவைகள் அவ்வப்போது சீர்திருத்தித் தயாரிக்கப் பெறுகின்றன. இந்த ஆயுதங்களை வைத்துக்கொண்டு போராடக்கூடிய படைகளும் நாடுதோறும் ஆயிரக் கணக்கில் இருக்கின்றன. படைகளிலும், பாதுகாப்பு முறைகளிலும் கவனமில்லாத நாடு இன்றைய நிலையில் அழிந்துபோன நாடாகவே கருதப்படும். வல்லரசுகள் ஆயுதங்களை வேண்டாமென்று விட்டெறியும் வரை, ஆயுத உற்பத்திப் போட்டி நடந்துகொண்டிருக்கும்வரை, ஒவ்வொரு நாடும் தன்னைத்தான் காத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றது.

மேலை நாடுகளில் தோன்றிய நவீனப் போர்முறைகள், போர்த் தத்துவங்கள் முதலியவைபற்றிப் பற்பல ஆசிரியர்கள் அரிய பல நூல்கள் எழுதி வைத்திருக்கின்றனர். சில உள்நாட்டுப் போர்கள் நீங்கலாக, பழங்காலத்துப் போர்கள், முதல் உலகப்போர், இரண்டாம் உலகப் போர் முதலியவைகளைப் பற்றியெல்லாம் இராணுவங்களுக்குத் தலைமை வகிப்போர் அனைவரும் தெரிந்துகொள்வது அவசியம். அவர்கள் மட்டுமன்றிப் பொதுமக்களும் போரைப்பற்றி ஓரளவு தெரிந்து

கொள்ளல் இன்றியமையாதது. கல்லூரி மாணவர்களுக்கு இராணுவக் கல்வி அளிக்க வேண்டியதும் மிக மிக அவசியம். மாணவர்கள் பயில்கின்ற பூகோளம், சரித்திரம், விஞ்ஞானம், சமூகநூல் முதலியவற்றேடு மிகவும் பொருந்துவதாயுள்ள போர்க் கல்வி அவர்களுடைய மனப்பான்மையே நன்கு உருவாகி வளர்வதற்கு உதவியாகும். இம்மாணவர்களிலே மேலும் இராணுவ விஷயங்கள் தெரிந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள், அவ்வாறே கற்றுக்கொண்டு, இராணுவப் பயிற்சி பெறலாம்; அல்லது பயிற்சி பெருமலே, இராணுவ வரலாறுகளை ஆராய்ந்து புதிய புதிய தத்துவங்களை வகுக்க உதவி செய்யலாம்.

தற்காலத்துப் போர்முறைகள் பற்றிய ஆராய்ச்சிகளுக்குத் 'தந்தையர்' என்று கருதப்பெறும் கிளாஸ்விட்ஸ், ஜொமினி முதலியோர் எழுதியுள்ள நூல்களைப் படித்தால்கூட இளைஞர் எழுச்சி பெறுவர். கார்ல் வான் கிளாஸ்விட்ஸ் (1780-1831) ஜெர்மானியத் தளபதியாயிருந்தவர்; யுத்த சாஸ்திரம்பற்றி அவர் எழுதியுள்ள 10 தொகுதிகளாயுள்ள நூலே இப்பொழுது பல நாடுகளிலும் இராணுவப் படிப்புக்கு அடிப்படையாயுள்ளது. சுவிட்ஜர்லாந்தில் தோன்றிய ஹென்றி அண்டாஸின் ஜொமினி (1779-1869) ரஷ்யச் சக்கரவர்த்திக்கு இராணுவ ஆலோசகராக இருந்தவர். இராணுவத் தந்திரங்களை விளக்கிச் சொல்வதில் இவர் நிபுணர். இவர்களுக்குப் பின்னல் ஹெண்டர்ஸன், ஃபாக், காலின், மாரிஸ், லிட்டெல் - ஹார்ட், பர்ன், மாண்ட்கமெரி, மாக்லின் முதலிய பலர் போர்த் தத்துவங்கள் பற்றி நூல்கள் எழுதியுள்ளனர். இந்நூல்களிலே பெரும்பாலானவை இந்திய மொழிகளிலே பெயர்க்கப்பட வேண்டும். உயர்தர இராணுவ விஷயங்களைக் கற்கும் இளைஞர்களுக்கு இவையெல்லாம் உற்ற துணையாகும்.

கிளாஸ்விட்ஸ் முதலியோர் கூறியுள்ள தத்துவங்கள், மேயச் செல்லும் மாட்டுக்குக் கொம்பிலே புல்லைக் கட்டியனுப்புதல் போலில்லாமல், இராணுவ வீரர் சந்தர்ப்பத்திற்கும், இடத்திற்கும் ஏற்றபடி திட்டம் வகுத்துக்கொள்ளும் ஆற்றலையும், அறிவையும் அளிப்பவை. 'போர் என்பது விஞ்ஞான முறையில் அமைந்த வேடிக்கையன்று, அது பல நாட்டாருக்குள் நடைபெறும் விளையாட்டுமன்று, அது பலாத்காரம்' என்று கிளாஸ்விட்ஸ் கூறியுள்ளார். 'போரில் மிதமானது பரோபகாரமானது என்பதே கிடையாது. உதிரம் சிந்தாமல் வெற்றியடைந்த தளபதிகளைப் பற்றி நாம் கேள்விப்பட விரும்பமாட்டோம். குருதி வெள்ளம் பாயும் போர் பயங்கரமான காட்சி என்றால், அதனால்தான் அதை அதிகமாய்ப் போற்றி, நம் வாள்களின் முனை நாளடைவில் மழுங்கிப் போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்; ஜீவகாருண்யத்தால் அப்படிப் போக நேர்ந்தால், வேறொருவன் வந்து கூர்மையான வாளால் நம் கைகளை உடலிலிருந்து வெட்டியெறிந்துவிடுவான்' என்றும் அவர் எச்சரிக்கை செய்துள்ளார். கூட்டுச் சேர்ந்து எதிரிகளுடன் போரிடுதல், பொருதிப் பொருதி அவர்களை அழித்தல், போர்த் தந்திரத்தால் அவர்களை நிர்மூலமாக்கிவிடுதல் முதலிய பல போர் முறைகளைப்பற்றி அவர் விவரித்திருக்கிறார். 'மனோதத்துவப் போர்' பற்றியும் அவர் அந்தக் காலத்திலேயே குறிப்பிட்டிருத்தல் வியப்பானது. பிரசாரம் முதலியவற்றால் எதிரிகள் உளவலி குன்றிப் போகும்படி செய்யும் மனோதத்துவப் போரை, ஆயுதப் போருக்கு முந்தியோ, போரினிடையிலோ, தொடங்குதல் அவசியம் என்பதோடு, ஆயுதப் போர் இல்லாமலே எதிரிகள் மனமுடைந்து ஓடும்படி செய்யலாம் என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

மொத்தத்தில் கிளாஸ்விட்ஸிலிருந்து, நெப்போலியன், இரண்டு உலகப் போர்களின் தளபதிகள், சர்ச்சில் முதலிய அரசியல்வாதிகள்வரை யுத்தங்களைப்பற்றி எழுதி வைத்திருக்கும் நூல்கள் நவீனப் போரில் ஈடுபடுகிறவர்களுக்கு இன்றியமையாதவை. படைகளின் உற்சாகமும் உறுதியும் ஆயுத பலத்தைப்போல் மும்மடங்கு வலிமையுள்ளவை என்று நெப்போலியன் கூறியுள்ளார். போர்த் தலைவர்களுக்கு அரசாங்கத் தலைவர்கள் பக்கபலமாக இருப்பதுடன், அவர்களுக்கு வழிகாட்டிகளாகவும் இருக்கவேண்டும் என்பதைப்பழைய பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார். எந்த நாடும் தற்காப்பு மட்டும் செய்துகொண்டு, எதிரிகளை வெல்லமுடியாது. முதலில் அவசியப்படும் காலத்தில் பாதுகாப்புப் போரில் நின்றுகொண்டு, எதிரிகளைப் பலவீனப்படுத்தி அவர்கள்மீது படையெடுத்துத் தாக்கினால்தான் இக்காலத்துப் போர்களில் அவர்களை அழிக்கமுடியும். இதை அமெரிக்கத் தளபதியான பேட்டன் என்பவர் பின்கண்ட முறையில் விளக்கியிருக்கிறார்: 'எவரும் தற்காப்பின் மூலம் எதையும் காத்துக் கொண்டது கிடையாது. எதிரிகளை முன்னேறித் தாக்கவேண்டும், திரும்பத் திரும்பத் தாக்கவேண்டும். இதுதான் வெற்றிகரமான போராட்டமுறை. இத்தகைய கருத்துக்கள், அபிப்பிராயங்கள், தத்துவங்களையெல்லாம் தெளிவாகப் புரிந்துகொண்டால்தான், நவீனப் போரை நன்கு நடத்த முடியும்.'

இராணுவ வல்லமையுள்ளது என்று ஒரு நாட்டைக் கூறவேண்டுமானால், அதற்கு மூன்று ஆற்றல்கள் அமைந்திருக்க வேண்டும். முதலில், போருக்கு வேண்டிய உற்சாகமும் உறுதியும் வேண்டும். அரசாங்கத்தை முறையாக நிர்வகித்துக்கொண்டு, நிலம்,

நீர், வானம் மூன்றிலும் பேராடும் முப்படைகளுக்கும் தேவையான பொருள்கள் அனைத்தையும் தட்டாது அனுப்பிவரும் சக்தி வேண்டும். புகழ்பெற்ற ஜெர்மானியத் தளபதியான ரோமல் என்பவர் இதை மிகவும் வற்புறுத்திச் சொல்லியுள்ளார். 'தலைசிறந்த தீரர்கள் கூடப் பீரங்கிகள் இல்லாவிட்டால் ஒன்றும் செய்ய முடியாது. வெடிமருந்தும் குண்டுகளும் மிகுதியாயில்லாவிட்டால், பீரங்கிகளும் ஒன்றும் செய்ய இயலாது. போரில் துப்பாக்கிகள் சுடுவதற்குத் தொடங்கு முன்பே படைகளுக்குரிய சாமக்கிரியைகளை மேற்பார்த்து வரும் அதிகாரிகளே போரில் வெற்றி தோல்விகள் பற்றி முடிவு செய்து விடுகின்றனர்' என்பது அவர் வாக்கு. மூன்ருவதாக, தொழில் வளர்ச்சி குன்ருமல் பெருகிவரவேண்டும்.

இக்காலத்துப் போர்களில் படைகளின் வலிமையை அவற்றின் அளவைக் கொண்டு மட்டும் மதிப்பிட்டுவிட முடியாது; அதிகமான எண்ணிக்கையுடன், ஆற்றலும் அதிகம் வேண்டும். அந்த ஆற்றல், படைவீரர்களின் உள்ள வலிமையாலும், ஏராளமான தளவாடங்களாலும், சிறந்த போர்த் தந்திரங்களாலும் ஏற்படுவது. சென்ற உலகப் போரில் இவைகளைப் பெற்றிருந்த ஜெர்மனி 1940, 1941-இல் நேசநாடுகளின் படைகளைப் பல இடங்களில் முறியடித்து விரட்ட முடிந்தது. அப்பொழுது அதனிடம் 136 டிவிஷன் படைகளும், 2,800 டாங்குகளுமே இருந்தன. நேசநாடுகளிடம் 156 டிவிஷன் படைகளும், 4,000 டாங்குகளும் இருந்தன. ஆனல் ஜெர்மனியிடம் விமானப்படையின் வலிமை அதிகம். அத்துடன் திடீர் திடீரென்று வேகமாகத் தாக்கும் ஆற்றலும், சிறந்த இராணுவ அமைப்பும், படைகளுக்கு முன்னல் பற்பல டாங்குகளை அனுப்பி எதிரிகளைத் தகர்க்கும் முறையும்

அதன் வெற்றிகளுக்கு உதவியாயிருந்தன. அதன் தாக்குதலைக் கண்டு பிரெஞ்சுத் துருப்புகள் பல இடங்களில் செயலற்றுப் போயின.

1905-ஆம் ஆண்டில் 4½ கோடி ஜனத்தொகை கொண்ட ஜப்பான், 14 கோடிக்குமேல் மக்களைக் கொண்டிருந்த ரஷ்யாவை முறியடித்த வரலாறும் ஆராய்ந்து பார்க்கத் தக்கதாகும்.

போரிலே அரசாங்கத்தின் கவனம் முழுதும் வெற்றி காண்பதிலேயே இருக்கவேண்டும்; நாட்டு மக்கள் அனைவரும் தாங்களே அரசாங்கம், அரசாங் கமே தாங்கள் என்று எண்ணிப் பொறுப்புடன் நடக்க வேண்டும். முதல் உலகப் போர் தொடங்கு முன்னால் ஜெர்மன் சக்கரவர்த்தியான இரண்டாவது கெய்ஸர் தமது நாட்டிலிருந்த 'ஸோஷியல் டெமாக்கிரட்' கட்சி யைச் சேர்ந்தவர்களைப் பற்றி, 'அவர்களுக்குத் தாய் நாடு என்பதே கிடையாது. அந்த அற்பர்கள் ஜெர் மானியர் என்றுகூட அழைக்கப்பட அருகதையற்றவர் கள்' என்று கூறினார். 'எனக்கு எந்தக் கட்சியைப் பற்றியும் தெரியாது; ஜெர்மானிய மக்களை மட்டுமே நான் அறிவேன்!' என்றும் அவர் முழங்கினார். சக்கர வர்த்தியே இப்படிப் பேசியதால், நாட்டில் தேசிய உணர்ச்சி வெள்ளமிட்டுப் பெருகிற்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

### பாரதத்தின் படை வலிமை

இந்தியா, பாகிஸ்தான் பிரிவினை நடந்த காலத்தில் (1947), இந்திய அரசாங்கத்திடம் இருந்த படைகளும் இரு கூறுகப் பிரிக்கப்பட்டன. தரைப்படைகளில் இந்தி யாவுக்கு 15-ம், பாகிஸ்தானுக்கு 8-ம், கவசம் பூண்ட வாகனப் படைகளில் இந்தியாவுக்கு 12-ம் பாகிஸ்தா னுக்கு 6-ம், பீரங்கிப்படைகளில் முறையே 19-ம், 9-ம்,

[illegible] எடுத்துக் கொள்ளப்பட்டன. எஞ்சினியர்களில் இந்தியாவுக்கு 61 பேர்களும், பாகிஸ்தானுக்கு [illegible] பேர்களும் எடுத்துக்கொள்ளப் பெற்றனர். போர் விமானப் படைகளில் இந்தியாவுக்கு 7-ம், போக்குவரத்துக்குரிய விமானப்படையில் 1-ம் கிடைத்தன. படைவீரர்களில் முஸ்லிம்கள் பெரும்பாலும் பாகிஸ்தான் படைகளுடன் போய்ச் சேர்ந்துகொள்ள அநுமதிக்கப் பட்டனர்.

சீனப்படையெடுப்பிற்கு முன்னல் நம் தரைப்படைகளில் 5 லட்சம் வீரர்கள் இருந்துவந்தனர். விமானப் படையும், கப்பற்படையும், ஆண்டுதோறும் விஸ்தரிக்கப் பெற்று, வளர்ந்து வருகின்றன. சீனப்படையெடுப்புக்குப் பின்னல், நம் தரைப்படைகளை இரட்டிப்பாகப் பெருக்க அரசாங்கம் ஏற்பாடு செய்துள்ளது. போர்த் தளவாடங்களின் உற்பத்தியும் பெருகிவருகின்றது. போர் விமானங்களை விரைவிலே தயாரிக்கவும் ஏற்பாடாயிற்று. நம்புதிய ஆயுதங்களும், விமானங்களும் எப்படிச் செயலாற்றுகின்றன என்பதை நாம் பார்க்கவும் வாய்ப்பு வந்துவிட்டது. பாகிஸ்தான் போரில் அவைகளைக் கண்டு மக்கள் பெருமகிழ்ச்சி கொண்டுள்ளனர்.

நமது முதல் எதிரியான சீன, கடந்த 13 ஆண்டுக் காலத்தில் மாபெரும் படைகளைத் தயாரித்துக் கொள்ள முடிந்தது என்றல், இந்தியாவும் அதேபோல் செய்து கொள்ள முடியும். ஆனல் சீன போருக்காகவே எல்லாவற்றையும் தயாரித்துக் கொண்டிருந்தது; இந்தியாவோ போரே வராதென்று நம்பிக்கொண்டிருந்தது. மக்களுக்கு வேண்டிய வசதிகளைக்கூடத் தியாகம் செய்து சீன படைகளையே பெருக்கிக்கொண்டிருந்தது. நம் நாட்டில் படைகளுக்காகச் செலவிடப்பட்ட தொகைகளே அதிகம் என்று நாம் குறை சொல்லிக் கொண்டிருந்தோம்.

உடனடியாகச் சீனப் படைகளின் அளவுக்கு நம் படைகளையும் பெருக்கிக் கொள்ளாவிட்டாலும், நம் படைகளின் வலிமையைப் பன்மடங்கு பெருக்கிக் கொண்டே யிருக்க வேண்டும்.

### நாட்டிலுள்ள வசதிகள்

பல நாடுகளில் கட்டாய இராணுவ சேவை நடந்து வருகின்றது. இந்தியாவுக்கு அது அவசியமில்லை யென்று பொதுவாகக் கருதப்படுகின்றது. கட்டாயப் படுத்தாமலே இலட்சக் கணக்கில் வீரர்கள் இராணுவத்தில் தாமாகவே சேர்வதால், கட்டாயச் சட்டத்திற்கு இங்கே அவசியமில்லை யென்று சிலர் கூறுவர். ஆயினும் இப்பொழுதுள்ள நிலைமையைப் பார்த்தால், பெரிய அளவில் மக்களுக்குக் கட்டாய இராணுவப் பயிற்சியாவது கொடுத்து வரவேண்டியது அவசியமாகின்றது. நாட்டு மக்கள் அனைவருமே இராணுவ விஷயங்களில் ஆர்வம் கொள்ளவும், உடற்பயிற்சியும், ஆயுதப் பயிற்சியும் பெறவும் கட்டாய இராணுவ சேவைச் சட்டம் இருந்தால் நலம். பயிற்சி பெற்றவர்கள் அனைவரையும் பட்டாளங்களிலே சேர்த்துக்கொள்ளாவிட்டாலும், தேவையானவர்களை மட்டும் பொறுக்கியெடுத்துக்கொள்ளலாம்.

நமது ஜனத் தொகையில் இராணுவ சேவைக்குரிய வயதுடையவர்கள் ஏராளமாக உள்ளனர். விவரம் வருமாறு :

| வயது | மொத்தம் ஆடவர் தொகை | திருமணமாகாத ஆடவர் தொகை |
|---|---|---|
| 15-முதல் 24-வரை | 3,83,37,500 | 2,07,85,000 |
| 25- ,, 34 | 3,48,43,750 | 46,26,250 |
| மொத்தம் | 7,31,81,250 | 2,54,11,250 |

கொஞ்சம் கொஞ்சமாகப் படைகளைப் பெருக்கிக் கொண்டு போவதற்கு இது காலமில்லை. சீனப் பகைவர்கள் நம் நாட்டிலேயே தங்கியிருக்கின்றனர். நாள் தோறும் சவால் விடுத்துக்கொண்டு நம்மை அவமானப் படுத்தி வருகின்றனர். அவர்கள் பிடித்துக் கொண்ட பகுதிகள் அவர்கள் வசமே இருக்கின்றன. திடீரென்று மேற்கொண்டு பாய்ந்து வரவேண்டுமானாலும், அவர்கள் வரலாம். நேப்பாளம், சிக்கிம், பூடான் நாடுகளைப் பிடித்துக்கொண்டு, நேபாவுக்குத் தெற்கே பிரம்மபுத்திரா நதியைக் கடந்து அஸ்ஸாமிலும், மேற்கு வங்காளத்திலும் அவர்கள் புகுந்துவிட முடியும். இந்தியாவின் கிழக்குப் பகுதிகளை அவர்கள் பிடித்துக் கொள்ள முயற்சி செய்யலாம். நேபா போராட்டத்தின்போதே சீனர்கள் அஸ்ஸாம், வங்காளம் வரை ஏன் செல்லவில்லை என்பதே ஆச்சரியம் தான். நேபாவில் நாம் அடைந்த தோல்விகளையும், காட்டிய பலவீனங்களையும் அவர்களே ஒரு வேளை எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். மேலும் இந்தியாவுக்குள் நெடுந்தூரம் நுழைந்துவிட்டால், நீண்டகாலப் போரில் தப்பித்துக்கொண்டு மீண்டு செல்வது அவர்களுக்குக் கஷ்டமாகத் தோன்றி யிருக்கலாம். சீனாவின் உள்நாட்டு நிலைமை பெரும் போருக்கு ஏற்றதாயில்லையோ என்னவோ? ஆகையால் நாம் நீண்ட காலத்திற்கு ஏற்ற திட்டம் வகுத்து, விரைவிலே நம் தரைப் படைகளையும், விமானப் படைகளையும் பெருக்கிக்கொள்ள வேண்டும்; கடற் படையையும் விரிவாக்கிக்கொள்ள வேண்டும்.

பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கு மிடையில் 3,000 மைல் நீளமுள்ள எல்லையையும், சீனாவுக்கும் இந்தியாவுக்கு மிடையில் 2,500 மைல் நீளமுள்ள எல்லையையும் பாதுகாக்கும் பொறுப்பு சுதந்தர

இந்தியாவுக்கு ஏற்பட்டுள்ளது. பாகிஸ்தான், கார்ஷ்மீரில் முன்னல் 40,000 சதுரமைல் பிரதேசத்தைப் பிடித்து வைத்துக் கொண்டிருப்பதுடன், எஞ்சியுள்ள காஷ்மீர் பள்ளத்தாக்கு என்று சொல்லப்பெறும் 40,000 சதுரமைல் பிரதேசத்தையும் தனக்கே கொடுத்துவிடும்படி கேட்கின்றது. கொடுத்து விட்டால், இந்தியா வசம் ஜம்மு (15,000 சதுரமைல் பகுதி மட்டுமே இருக்கும்! காஷ்மீர் பள்ளத்தாக்கையே நாம் பாகிஸ்தானுக்கு அளிப்பதானலும் அது திருப்தியடைந்து ஒதுங்கி நிற்குமா ? சிறிது காலத்திற்குப் பின் வேறு பிரசினைகளைக் கிளப்பாமலிருக்குமா ? மேலும் இப்பொழுது பாகிஸ்தான் நம் எதிரியான கம்யூனிஸ்ட் சீனவுடன் மிக நெருக்கமான உறவுகொண்டு இரகசிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கின்றது. இந்த உறவை உடனே அறுத்துக் கொண்டு, இந்தியா, பாகிஸ்தான் இரண்டுக்குமே ஆபத்தாக விளங்கும் சீனவுக்கு எதிராக அது நம்முடன் சேர்ந்து அணிவகுத்து நிற்குமா ? பாகிஸ்தான் பொய்யும் ஏமாற்றுமே அரசியல் என்று நம்பி நம்மைப் பலமுறை ஏமாற்றிவிட்டது. 18 ஆண்டுக் காலமாக அது புரிந்த அக்கிரமங்களுக்கு அளவேயில்லை. நம் எல்லைப் புறங்களில் அது அட்டூழியம் செய்யாத நாளேயில்லை. அதை நம்பி நாம் என்ன உறவுகொள்வது? மேலும் காஷ்மீர் யாருடைய சொத்து ? யார் யாருக்குக் கொடுக்க முடியும் ?

இப்பொழுது பாகிஸ்தான் இந்தியாவுடன் போரே தொடுத்து விட்டது. சீன பின்புறத்தில் நின்று கொண்டு தூபம் போட்டு வருகிறது. இப்பொழுதும் இந்த இரண்டு நாடுகளையும் சமாளித்து நிற்க நாம் தக்க ஏற்பாடுகள் செய்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.